# தமிழ் நூல் விவர அட்டவணை

பொதுப் பதிப்பாசிரியர் :
கொண்டல் சு. மகாதேவன், பி.எஸ்ஸி., எம்.ஏ.

தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்கக வெளியீடு
1977

தமிழ்நாடு அரசினருக்காக தமிழ்நாடு எழுதுபொருள்-அச்சுத் துறை இயக்குநரால் பதிப்பிக்கப்பெற்று வெளியிடப்பட்டது.

விலை ரூ. 13-35




# தமிழ்நூல் விவர அட்டவணை

# The Madras State Tamil Bibliography

## 1911—1915

மூன்றும் தொகுதி—முதல் பகுதி

(Volume III—Part I)

பொதுப் பதிப்பாசிரியர் :

கொண்டல் சு. மகாதேவன்,

பி. எஸ்ஸி., எம். ஏ.

தமிழ்நாட்டு அரசினர் தமிழ் வளர்ச்சி இயக்கக வெளியீடு

1974

முதற் பதிப்பு 1974

## பதிப்பாசிரியர் குழு

1 புலவர் திரு. த. பெரியாண்டவன்

2 புலவர் திரு. க. கு. சம்பத்
தேர்வு நிலைத் தமிழாசிரியர்.

3 புலவர் செல்வி அரங்க. சோதி.

4 திரு. டி. சி. சந்திரபாபு, எம். ஏ.,
பி. எஸ்ஸி., பி. லிப். எஸ்ஸி., டி. ஆந்த். நூலகர்.

தமிழ்நாடு அரசினருக்காக தமிழ்நாடு எழுதுபொருள் அச்சுத் துறை
இயக்குநரால் பதிப்பிக்கப்பெற்றது.

# பதிப்புரை

இந்நூல் தமிழ்நூல் விவர அட்டவணையின் மூன்றும் தொகுதியின் முதல் பகுதியாகும். இதன் கண் 1911 ஆம் ஆண்டு முதல் 1915 ஆம் ஆண்டு வரையுள்ள காலப் பகுதியில் தமிழ்நாட்டில் அச்சிடப்பெற்று, உரிமை பதிவு செய்யப் பெற்ற நூல்களுள், ஆவணக் காப்பகத்தில் கிடைக்கப் பெற்ற நூல்களுக்குரிய விளக்கங்கள் கொடுக்கப் பட்டுள்ளன.

இப் பகுதியில் டியுவி பொருட்பாகுபாட்டின்படி 700 எண் பகுதிகள் வரையில் குறிக்கப்பட்டுள்ள பொருள்கள் அடங்கியுள்ளன. 1,262 நூல்கள் விளக்கங்களுடன் பொருட்பாகுபாட்டின்படி பிரிக்கப்பட்டு ஆசிரியர் அகர வரிசைப்படி அமைக்கப் பட்டுள்ளன.

இதன் அமைப்பு முறை முதலிரு தொகுதியின் அமைப்பு முறையினை அடியொற்றியே அமைந் துள்ளது. ஒரு நூலோடு இணைந்துள்ள பிற நூல் களுக்குரிய வடிவளவும், விலையும் அவை இணைந் துள்ள முதல் பகுதி நூல்களுக்கு உரியவாம். ஆகலின் ‘பார்க்க’ எனச் சுட்டப்பெற்ற சேர்க்கை நூல்களுக்கு இவ்விரண்டு விவரங்களும் கொடுக்கப் படவில்லை.

இரண்டாம் பகுதியில் இலக்கிய நூல்களும், இவ்விரு பகுதிகளுக்கும் பொருளகராதி, நூல்களுக் குரிய ஆசிரியர் அகர வரிசை, நூல் அகர வரிசை ஆகியவை வெளிவரும்.

பதிப்பாசிரியர் குழு.

# பொருள் அட்டவணை

## 000 பொது நூல்கள்



## 040 பொதுக் கட்டுரைகள்



## 133 சித்தியல்



## 170 அற நூல்கள்

## 200 சமயம்

## 300 சமுதாய சாத்திரங்கள்

## 500 விஞ்ஞானம்

## 600 தொழில் நுட்பமும் பயனுறு கலைகளும்



## 700 கலை



## 780. இசைக்கலை

# குறியீடுகளும் அவற்றின் விளக்கமும்.

| | | |
|---|---|---|
| உ. ப. | .. .. | உரைநடை நூல் பக்கங்கள். |
| உ. ப. | செ. மூ. எ. .. | உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| உ. ப. | செ. மூ. ப. .. | உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் பக்கங்கள் (அல்லது) உரைநடையும் செய்யுளும் சேர்ந்து பக்கங்கள். |
| செ. மீ. | .. .. | சென்டி மீட்டர். |
| செ. மூ. எ. | .. .. | செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| செ. மூ. உ. எ. | .. .. | செய்யுள் மூலமும் உரையும் எண்ணிக்கை. |
| தொ. எ. | .. .. | தொடர் எண். |
| தொ. து. | .. .. | தொகுத்தது. |
| மொ. து. | .. .. | மொழி பெயர்த்தது. |
| i. | .. .. | நூலின் பெயர். |
| ii. | .. .. | பதிப்பாசிரியரின் பெயரும் பதிப்பகமும். |
| iii. | .. .. | நூல் பதிப்பித்த ஆண்டு. |
| iv. | .. .. | நூலின் அளவு (உள்ளடக்கம்). |
| v. | .. .. | நூலின் வடிவ அளவு. |
| vi | .. .. | விலை. |
| vii. | .. .. | விளக்கம். |
| viii | .. .. | நூலின் பதிவு எண் குறிப்பு. |
| [ ] | .. .. | இவ்விதம் பகர அடைப்புக்குள் உள்ளவை ஒரு நூலோடு இணைந்துள்ள வேறு நூல்களின் பெயர்கள். |
| .. | .. .. | இவ்விதம் புள்ளி இட்ட இடங்கள் விவரம் தெரிய இயலாத பகுதிகளும் விளக்கம் எழுதப்பெறாத பகுதிகளும் ஆகும். |
| ,, | .. .. | ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகங்களைக் காட்டும். |

# கோலன் பகுப்பு முறையில் பொருள் அட்டவணை

| | | | |
|---|---|---|---|
| z | பொதுவியல். | L | மருத்துவம். |
| 1 | பொது அறிவியல். | M | பயனுறு கலைகள். |
| 2 | நூலக இயல். | Δ | சித்தியல் |
| 3 | புத்தக இயல். | N | அழகுக் கலைகள். |
| 4 | செய்தித் தாளியல். | O | இலக்கியம். |
| A | அறிவியல். | P | மொழி இயல். |
| B | கணிதம். | Q | சமயம். |
| C | பௌதிகம். | R | தத்துவம். |
| D | பொறியியல். | S | உள நூல். |
| E | இரசாயனம். | T | கல்வி. |
| F | தொழிலியல். | U | நில நூல். |
| G | உயிர் நூல். | V | சரித்திரம். |
| H | புவியியல். | W | அரசியல். |
| HZ | சுரங்கவியல். | X | பொருளியல். |
| I | தாவரயியல். | Y | சமூகவியல். |
| J | விவசாயம். | Z | சட்டம். |
| K | விலங்கு நூல். | | |

4. i. பொது அறிவு என்னும் போதனு முறைப் பாடங்கள்; ii. வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர், கயத்தாறு; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி; iii. ஜனவரி, 1915; iv. உ.ப 76; v. 17×12 செ.மீ.; vi. 3 அணு; vii. இந்நூல புதிய பயிற்சி முறைப் பாடங்களைக் கொண்டது. மூன்றும் வகுப்பு மாணவர்க்குப் பயன்படுவது. பொது அறிவு தொடர்பான பல பொருள்களை விளக்கமாகத் தருகின்றது. viii. 514/1915/I.

P

## 040 பொதுக் கட்டுரைகள்

## 049·94811 சொற்பொழிவு

**சுப்பிரமணிய அய்யர், ஜி. (மொ.து.)**

5. i. அலகாபாத் உபந்நியாசங்கள்: முதற் பதிப்பு; ii. ஜி. சுப்பிரமணிய அய்யர், சுதேசமித்திரன் பிரஸ், சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. 1+158; v 18×13 செ.மீ.; vi. 0-6-0; vii 1910-ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் நடந்த பல மாநாடுகளில் ஆசிரியர் ஆற்றிய உரைகளின் தொகுப்பு. அலகாபாத் பொருட்காட்சி, காங்கிரஸ் மகாசபை. 'தொழிலாலோசனைச் சங்கம், முதலிய மாநாடுகளின் உரைகளைத் தருவதாகும். viii. 175/1911/III.

B

## 133 சித்தியல்

## 133 [1] சித்தர் பாடல்கள்

**அழுகணி சித்தர்**

6. i. அழுகணி சித்தர் பாடல்: முதற் பதிப்பு; ii. சுப்பிரமணிய தேசிகர் & எஸ். அய்யாசாமி பிள்ளை, மதுரை; மகமதியன் அச்சாபீஸ், மதுரை; iii. மார்ச், 1914; iv. செ.அ.எ. 32; v. 15×12 செ.மீ.; vi. 0-0-6; vii. பல தத்துவச் செய்திகளை எளிய முறையில் அமைத்துப் பாட்டில் வெளியிடுவது. பிறப்பின் நிலைமையும், வாழ்க்கை நிலையாமையும் குறித்து அறிவுரை தரப்படுகின்றது. viii. 1141/1914/I.

△28

**இடைக்காட்டுச் சித்தர்**

i. இடைக்காட்டுச் சித்தர் பாடல்—130: முதற் பதிப்பு (தொ. எ. 1097 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எட். ஆர். குருசாமி கோனார், மதுரை; ராமச்சந்திர விலாச

அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1+130 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இறை உருவத்தின் நிலைமையும், எல்லா உயிர்களும் இறை வடிவமென்பதையும், மனமொடுங்கினால் எல்லாம் ஒடுங்குமென்பதையும், இதற்குரிய காயசித்தி விளக்கங்களையும் இந்நூல் விளக்குகின்றது. இந்நூலின் காப்புச் செய்யுள் கலித் துறையைச் சேர்ந்தது. இந்நூலில் கட்டளைக் கலித்துறை, நேரிசை வெண்பா, கண்ணிகள் முதலிய பாடல் வகைகள் அமைந்துள்ளன. மதுரை தலைவிரித்தையா மடம் நரசிங்கஞ் சேர்வைகாரரென்ற கருததச சேர்வைகார ரவர்களிடமிருந்த பிரதியின்படி இது அச்சிடப் பட்டது. viii. 737/1914/II.

Δ28x14

**கஞ்சமலைச் சித்தர்**

i. கஞ்சமலைச் சித்தர் கலைக்கியானம் (தொ.எ. 1098 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.ப 23 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இடகலை, பிங்கலை, சுழிமுனை, மதியமுதம், ஐம்புள் எழுத்து, அடிநடுமுடி, ஞாலத் தொகுதியிலுள்ளவை கருவிலுண்டென்ற விளக்கங்கள் முதலியவற்றை இந்நூல் விளக்குகிறது. மதுரை மேலமாசி வீதியிலிருக்கும் பார்த்திபனூர் அலுவலர் சொக்கலிங்கம் பிள்ளை குமாரர் நாடக ஆசிரியர் சங்கிலியா பிள்ளை அவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

Δ28

i. கஞ்சமலைச் சித்தர் பாடல் (தொ.எ. 1098 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே. 1914 ; iv. செ.மூ.ப. 25 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. மாயை நீக்கி, மனம், சொல்லுக்கெட்டாத இறையுடன் இரண்டறக் கலக்கவேண்டுமென்பதையும், அதற்குரிய கலையாராய்ச்சி வேண்டுமென்ற குறிப்புகளையும் இந்நூல் விளக்குகின்றது. திருப்பழனி மலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீ போக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆசிரம மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

Δ28

**கடுவெளிச் சித்தர்**

i. கடுவெளிச் சித்தர் பாடல் - 35 ஐந்தாம் பாகம் (தொ.எ. 1100 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.ப. 35 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இவ்வுலகு நிலையில்லாதது என்றும், இறையொன்றே நிலையானது என்றும், அவ்விறையுடன் சேருதற்குரிய செய்திகளை இந்நூல் விளக்குகிறது. 'பாபஞ் செய்யாதிரு மனமே—நாளைக் கோபஞ் செய்தே யமன் கொண்டோடிப் போவான்' என்னும் எடுப்பைக் கொண்டு அமைந்தது இந்நூல். viii. 740/1914/II.

△28

**கல்லுளிச் சித்தர்**

i. கல்லுளிச் சித்தர் பாடல்—16 (தொ.எ. 1098 பார்க்க): முதற் பதிப்பு : ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. உலகு பொய்யென்றும். இறையொன்றே மெய்யென்றும் உணர்த்தும் நூல். எண் வகை செயல்கள், வாசிநிலை முதலிய செய்திகளையும் இந்நூல் விளக்குகிறது. திருப்பழனி மலையிற் சிறப்புற்றோங்கிய போகமகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

△28

**குதம்பைச் சித்தர்**

i. குதம்பைச் சித்தர் பாடல்—26 (தொ.எ. 1097 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை : iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1+246 ; v. 22×14 செ.மீ; vi. 0–12–0; vii. உலகு கனவென்றும், பேரின்பமே ஞானநிலை யென்றும், எல்லாம் இறைமயமென்றும் சொல்லிய செய்திகளை இந்நூல் விளக்குகிறது. பொருளுக்கேற்ற தலைப்புக்கள் இடையிடை கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலின் காப்புச் செய்யுள் வெண்பாவால் ஆனது. மதுரை திண்டுக்கல் சாலை, பங்காரு சுவாமியவர்கள் குமாரர் முத்தியாலு நாயுடு அவர்களுடைய பிரதியின்படி அச்சிடப்பட்டது. viii. 737/1914/II.

△28x31

**சத்தியநாதரென்ற ஞானச் சித்தர்**

**i.** சத்தியநாதரென்ற ஞானச்சித்தர் பாடல்—35, பாகம்—4 (தொ. எ. 1099 பார்க்க) : முதற் பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனூர், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; **iii.** மே, 1914 ; **iv.** செ.மூ.எ. 35 ; **v.** 22×14 செ. மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** 'சிவயோக ஞான பிரம நிலை' செய்திகளை இந் நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதி இராமாயணச் சாவடித் தெருவிலிருக்கும் 'அஷ்டாங்க யோகி சுந்தர மகாலிங்க சுவாமி' களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. இதில் உள்ள பாடல்கள் கண்ணியில் அமைந்துள்ளன. viii. 739/1914/II.

△28

**திரிகோணச் சித்தர்.**

**i.** திரிகோணச் சித்தர் பாடல் (தொ.எ. 1100 பார்க்க): முதற் பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனூர், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; **iii.** மே, 1914 ; **iv.** செ.மூ.எ. 92 ; **v.** 22×14 செ. மீ.; vi. 0–12–0 ; **vii.** சரியை கிரியை யோக ஞான சித்தியையும், அதற்குரிய செய்திகளையும் இந்நூல் விளக்குகிறது. திருமங்கலம் அருணாசலம் பிள்ளையவர்கள் குமாரர் வைத்தியம் குமர குருபரம் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. இந்நூலில் உள்ள பாடல்கள் கலிவெண்பாவால் அமைந்தவை. viii. 740/1914 II.

△28

**பாம்பாட்டிச் சித்தர்**

**i.** பாம்பாட்டிச் சித்தர் பாடல்—130, பாகம்—4 (தொ. எ. 1099 பார்க்க): முதற் பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனூர், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; **iii** மே, 1914 ; **iv.** செ.மூ.எ. 129+4 ; v. 22×14 செ.மீ.; **vi.** ........ ; **vii.** உலகு பொய்யென்றும், இறையொன்றே மெய்யென்றும் அவ்விறையைச் சாரும் செய்திகளையும் இந்நூல் விளக்குகிறது. வளம் பொருந்திய நாட்டை ஆண்டு வந்த அரசன் இறந்த காலத்தில் அந்நாட்டு மக்களும், அரசன் மனைவியும் அழுது புலம்புவதைக் கண்ட ஒரு சித்தர், தமது உடம்பை ஆலமரப் பொந்தில் மறைத்து மாணவரைக் காவல் வைத்துச் சிலநாளைக்குள் வருவேனென்று கூறி அவ்வேந்தன் உடலில் புகுந்தார். நெடு நாளாகியும் வராதது கண்டு, மாணவர்கள் பாம்பாட்டிகளைப் போல் வேடமணிந்தும், வெட்டியான் போல் வேடமணிந்தும் சென்று, நான்கு வெண்பாக்களைப் பாடி, ஆசானை மீண்டும்

அழைத்துச் சென்றனர் என்பது வரலாறு. இதில் பாடல்களுக்கேற்ற தலைப்புகள் அமைந்துள்ளன. வை. சிவகுருநாத மூப்பனாரிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii 739/1914/II.

△ 28x26

**புண்ணாக்குச் சித்தர்**

i. புண்ணாக்குச் சித்தர் பாடல்—20 (தொ.எ. 1097 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை அண்டு எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 20; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. புண்ணாக்குச் சித்தர் பாடல் இருபதில் மனோமணியாள் மலரடி காணும் வகையும், உலகம் மாயையின் வடிவமென்ற விளக்கங்களும் உணர்த்தப்பட்டுள்ளன. மதுரையைச் சேர்ந்த சாமநத்தம் சிற்றூர் மடத்திலிருக்கும் செல்லச் சாமியாரவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 737/1914/II.

△ 28

**மதங்கநாதர்**

i. மதங்க நாதரென்ற சங்கிலிச் சித்தர் பாடல்—36 (தொ.எ. 1100 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 36; v. 22×14; vi. 0–12–0; vii. ஊமை எழுத்து, ஐம்பெரும் பொருட்கள் நிலை, யோக சித்தி முதலியவைகளை இந்நூல் விளக்குகிறது. கும்மி மெட்டில் அமைந்துள்ளது. ஒவ்வொரு செய்யுளும் "ஆனந்தம் பெண்ணே" என்று முடிகிறது. வில்லிப் புத்தூரைச் சேர்ந்த சுந்தர பாண்டியம் சங்கரலிங்க மூப்பனார் குமாரர் சாமியப்ப மூப்பனாரிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின் படி இது அச்சிடப்பட்டது. viii. 740/1914/II.

△ 28x46

**வகுளிநாதர் (மவுன சித்தர்)**

i. வகுளிநாதரென்னும் மவுன சித்தர் பாடல்—12: முதற் பதிப்பு; (தொ.எ. 1098 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை அண்டு எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 12; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. யோகப் பயிற்சிக்குரிய செய்திகளை இந்நூல் விளக்குகிறது. வில்லிப்புத்தூர் வாழைக் குளம் வெங்கடாசலமையரவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின் படி இது அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

△ 28x45

## 133·4 [1] மாந்திரீகம், ஜாலவித்தை

**அகத்தியர்**

**7. i.** மலையாள மாந்திரீக அரிச்சுவடி ; முதற் பாகம்: முதற் பதிப்பு ; **ii.** திருவேங்கட முதலியார், மயிலை ; கலைக்கியான முத்திராக்ஷரசாலை, சென்னை ; **iii.** ஜனவரி, 1913 ; **iv.** உ. ப. 60; **v.** 18×11 செ. மீ.; **vi.** 0–4–0 ; **vii.** தெய்வ பூசைச் சக்கரங்களும், சிறு தெய்வங்களை ஆட்படுத்தும் சக்கரங்களும், மந்திரங்களின் பயன் முதலியனவும் தெரிவிக்கப்பட்டுள்ளன. வேலாயுத சுவாமிகள் எழுதியது. இது அகத்தியரின் முதல் நூலா அல்லது அதனை அடியொற்றியமைந்த புதிய நூலா என்பது விளக்கமாக இல்லை. **viii.** 426/1913/III.

△87

**வேலாயுத சுவாமி (மொ. து.)**

**8. i.** மலையாள மாந்திரீக ரத்னாகரம்—எட்டாம் பாகம் : முதற் பதிப்பு ; **ii.** எஸ். பொன்னையா பிள்ளை, மதுரை ; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; **iii.** டிசம்பர், 1912 ; **iv.** உ. ப. 126; **v.** 22×14 செ. மீ.; **vi.** 1–0–0 ; **vii.** தேவதாசித்தியென்னும் மலையாள மாந்திரீக ரத்னாகரம் என்பது இதன் முழுப் பெயர். எட்டுப் பகுதிகளும் ஒரே நூலாகச் சேர்த்துத் தரப்பட்டிருக்கின்றன. தன்வந்திரி பகவான் எனற தத்தாத்திரிரேய மாமுனி வட மொழியில் செய்த நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. விநாயகர் உள் வழிபாட்டு மந்திரம், கன்னித் தெய்வ உளவழிபாட்டு மந்திரம், பிடாரி உளவழிபாட்டு மந்திரம், சிந்தாந்த தெய்வ வழிபாட்டு மந்திரம், ஆறுமுகன் உள்வழிபாட்டு மந்திரம், ஐம் பொருள் உள வழிபாட்டு மந்திரம், எல்லாப் பொருள் வழிபாட்டு மந்திரம், சூலினி உள்வழிபாட்டு மந்திரம் ஆகியவை உள்ளன. மந்திரங்களடங்கிய சக்கிரப் படங்களும் அவற்றைப் பூசை செய்யும் விதிகளும் அதனால் ஏற்படும் நலன்களும் விளக்கப் பட்டுள்ளன. **viii.** 710/1912/IV.

△87

## 133·5 சோதிடம்

**அப்பாயி ராஜா, என்.(தொ.து.)**

**9.** அதிர்ஷ்ட வாக்கியம் என்னும் ஆரூட சாத்திரம் : முதற் பதிப்பு ; **ii.** நா. அப்பாயிராஜா, விஜயபுரம் ; பத்மநாப விலாச அச்சுக்கூடம், சென்னை ; **iii.** மார்ச், 1911 ; **iv.** உ.ப. 63 ; **v.** 16×12 செ.மீ. ; **vi.** 0–4–0; **vii.** நமக்கு நேரும் நன்மை தீமைகளைத் நாமே அறிந்து கொள்வதற்குப் பழைய நூல்களி லிருந்து தொகுக்கப்பட்டது. இதில் முதலில் ஐந்தெழுத்து

அடங்கியுள்ளது. வாய்ப்புச் சக்கரமும் அதைப் பார்க்கும் விதம், பலன் முதலிய செய்திகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. பலரும் அகக் கொள்ளவேண்டிய சிலபொது விதிகள், உணவு கொள்ளும் போது உட்கார வேண்டிய பக்கம், எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதலின் பயன், பல்லி சொல்லுதலின் பயன், ஆடை உடுக்கும் விதி, விருந்துண்ணும் விதி, வெற்றிலைப் பாக்கு போடும் முறை முதலியன தரப்பட்டுள்ளன. உடலுறுப்புகளின் இலக்கண நலன்களை விரித்துரைத்திருக்கிறார். பாண்டா நரசய்யாவின் வரலாறு சொல்லப்பட்டிருக்கிறது. நூல் இறுதியில் 60 வருடம் பலன் உரைக்கும் பாடல்கள் உள்ளன. viii. 770/1911/I.

△2:864

**அய்யாசாமிப் பிள்ளை, டி. எஸ். (தொ.து.)**

10 i. சுந்தர சேகரம்: முதற் பாகம்: மூன்றும் பதிப்பு; ii. டி. சபாபதி பிள்ளை; கமலநாயகி பிரஸ், சென்னை & சித்தி விநாயகர் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ. ப. 92; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. 'ஜாதக விளக்கச் சோதிட அரிச்சுவடி' என்றும் இதற்குப் பெயருண்டு. சோதிடம் கற்றுக்கொள்ள விரும்புவோர்க்குப் பயன்படும் பொருட்டு அகத்தியர், இடைக்காடர், குமாரசுவாமி தேசிகர், ரோமரிஷி, புலிப்பாணி, ஆதி சங்கராச்சாரியார், நந்தி தேவர் முதலான பெரியோர்களின் நூல்களிலிருந்து திரட்டி எழுதப்பெற்றது. நூலாசிரியர் தமது தந்தையார் சுந்தரம் பிள்ளையின் நினைவாக இதற்குச் 'சுந்தர சேகரம்' என்ற பெயரை அமைத்துள்ளார். viii. 507/1913/IV.

△2:864

**இலட்சுமண பிள்ளை (மொ.து.)**

11. i. புட்ப பந்தம்: முதற் பதிப்பு; ii. சு. ஏ. குமாரசாமி ஆசாரி, பரங்கிப்பேட்டை & ப. அ. கிருஷ்ணசாமிப் பிள்ளை, பரங்கிப்பேட்டை; மதுரை தமிழ்ச் சங்க முத்திராட்சர சாலை, மதுரை; iii. ஜூலை, 1913; iv. உ.ப. 4+29; v. 22×14 செ.மீ.; vi. 0–4–0; vii. வடமொழியிலுள்ள ஒரு சோதிட நூலின் மொழி பெயர்ப்பு. உமாமகேஸ்வரர் உமாதேவிக்கு உரைத்தது. இது திங்கள், நாள், விண்மீன், கோள்கள் ஆகியவற்றின் கூட்டுறவால் உண்டாகும் மழையின் அளவைக் கூறுவது. viii. 230/1913/III.

△2:864

**ஏகாம்பர முதலியார், செஞ்சி**

12. i. சர்வ ஜாதக சந்தேக நிவர்த்தி: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. எஸ். பி. கிஸன்லால், சென்னை; சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1914; iv. உ.ப. 99;

v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. சோதிடம் பற்றிய ஐயங்களை நீக்கும் நூல். ஆண்டு, திங்கள், நாள், விண்மீன் முதலியவற்றின் பெயர்களை முதலில் தொகுத்துரைத்து, பின் அவை ஒவ்வொன்றிலும் பிறந்தவனுக்கு நிகழும் பலன்களையும் விளக்குவது. viii. 70/1915/I.

△ 2:864

13. i. **களத்திர பாவகம்**: முதற் பதிப்பு....; ii. எம். சுப்பிரமணிய பிள்ளை; நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை, சென்னை; iii. மார்ச், 19 3; iv. செ.மூ.எ. 659; v. 22×13 செ.மீ.; vi. 1-0-0; vii. சங்கராச்சாரியம் பன்னீராயிரத்தில் இது துணைவியைப் பற்றி உரைக்கும் பகுதி. வீடுகளின் பலன் களைத் திட்டவட்டமாக கூறும் நூல். viii. 266/1913/II.

△ 2:864

**குப்புசாமி நாயுடு, த., மதுரை.**

14. i. **சோதிட விளக்க வினா-விடை என்னும் பெரிய சுந்திர சேகரம்**: முதற் பதிப்பு; ii. கே. பி. சிங்காரவேலு முதலியார்; வித்வ சிரோமணி விலாசம் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1913; iv. உ.ப. 120; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. சோதிடத்தைப் பற்றிய வினா-விடை நூல். ஏலேலசிங்கர் என்பார் கேட்கும் வினாக்களுக்குத் திருவள்ளுவர் விடை கூறுவதாக அமைந்துள்ளது. பிறப்புக் குறிப்பின் பலனை ஆண்டு, திங்கள், நாள், விண்மீன், யோகம், கரணம் முதலிய வற்றைக் கொண்டு காணும் வகை உரைப்பது. 'குமாரசாமியம்' என்னும் சோதிட நூலை இதன் முகவுரை குறிப்பிடுகின்றது. சிவபெருமான் உமாதேவியாருக்கு உரைத்ததை திருவள்ளுவர் ஏலேலசிங்கருக்குக் கூறுவது. viii. 348/1913/IV.

△ 2:864

15. i. **கௌசிக சிந்தாமணி**: மூன்றும் பாகம்: முதற் பதிப்பு; ii. நாராயணசாமி ஜோதிஷர் & வி. கேசவலு நாயுடு, சித்தூர்; கோல்டன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மூ.எ. 1+431; v. 22×14 செ.மீ.; vi. 1-0-0; vii. தர்க்க சோதிடம் என்றும் இதற்குப் பெயர் உண்டு. வசிட்டர், விசுவாமித்திரர் இவர்களின் உரையாடலாக அமைந்தது இந்நூல். பெண்களுடைய பிறப்புக் குறிப்பின் சிறப்புக்களைப் பேசுவது. பிறந்த வார பலன், விண்மீன் பலன், இலக்கின பலன், வாழ்நாள் பகுதி ஆகியவற்றைத் தெளிவாக உரைப்பது. viii. 814/1914/I.

△ 2:864

16. i. **சகோதர பாவகம் :** முதற் பதிப்பு ; **ii. எம். சுப்பிரமணிய** பிள்ளை, நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலே, சென்னை ; **iii.** மார்ச், 1913 ; **iv.** செ.மூ.எ, 267 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0–8–0 ; **vii.** ஆதி சங்கராச்சாரியார் அருளிய சங்கராச்சாரியம் பன்னீராயிரத்தில் ஒரு பகுதி. உடன்பிறந்தார் பகுதிக்குரிய இடம், பார்வை, தொடர்பு, ஐவகை வலிவு முதலியவைகளைக் குறித்துத் திட்டமான முடிவுகளை உரைப்பது. இந்நூலின் முதல் நூல் பற்றி "சோதிடச் சங்கராச்சாரி சொற் பன்னீராயிரத்தில் ஒதிடர் பிறவி பாகத்து உண்மையை உரை செய்வோமே" என்று இந்நூலாசிரியர் குறிக்கின்றார். இவ்வகை வரிசையில் வரும் வெளியீடுகளுக்கெல்லாம் நூல் வந்த வழி இவ்வாறே கூறப்பட்டிருக்கிறது. **viii. 265/1913/II.**

△2:864

17. i. **சந்திர காவியம் :** மூலமும் உரையும் : முதற் பதிப்பு ; ii. எம். சுப்பிரமணிய பிள்ளை & த. குப்புசாமி நாயுடு : நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலே, சென்னை ; **iii**. அக்டோபர், 1913 ; iv. செ.மூ.உ.ப. 80 ; **v.** 22×14 செ.மீ. ; **vi. 0–8–0 ;** **vii.** இந்நூலுக்குச் "ஜாதகச் சந்திரிகா என்றும் பெயருண்டு ; "சோதிடம் என்னும் ஒரு பூட்டுக்குத் திறவுகோல் போன்றது இந் நூல்" என்கிறார் பதிப்பாசிரியர். "ஜாதகப் பலன்களுக்கு நங்கூரம் போன்றது" என்கிறார் ஆசிரியர். உரிமை பலன், தொடர்பு பலன், கூடுதல் பலன் முதலியவற்றை விரிப்பது. ராக்கப் பிள்ளை என்பவர் எழுதிய உரையுடன் கூடியது. பிறப்புக் குறிப்பின் பலன்பார்த்துச் சொல்வதற்கு இது துணை செய்வது. இதனை மைசூர் சூர்யநாராயணராவ் என்பார் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, 'ஜாதக சந்திரிகா' என்னும் பெயரால் அச்சிட்டிருக்கிறார். நூலைப்பற்றிய பல செய்திகள் முகவுரையில் விளக்கப்பட்டிருக்கின்றன. **viii. 132/1913/IV.**

△2: 864

**தியாகராஜ பிள்ளை, டி., திருச்சிறுப்பள்ளி**

18. **i.** தியாகராஜ ஜோதிட ஆனந்தக் களிப்பு : இரண்டாம் பதிப்பு ; **ii.** கோவிந்தசாமி பிள்ளை & தி.ச. வெங்கடாசலம் பிள்ளை ; மகமதியன் அச்சுக்கூடம், மதுரை ; **iii.** ஜனவரி, 1913 ; **iv.** செ.மூ.எ. 680 ; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–8–0 ; **vii.** பிறப்புக் குறிப்பில் கோள்கள் நின்ற பலன்களை யாவரும் எளிதில் உணரும் பொருட்டு ஆனந்தக் களிபபு மெட்டில் பாடியுள்ளார். ஆக்கியோன் பெயரால் இது 'தியாகராஜ சோதிட ஆனந்தக் களிப்பு' என்று வழங்கப்படுகிறது. இதனோடு பிறர் நாடகத் தமிழ்ப் பாவால் 'ஐக்கிய ஆனந்தக் களிப்பு', 'நொண்டி', 'உடற்கூறு', 'திருப்புகழ்', 'தூது', 'கப்பல்', 'வண்ணம்', கண்ணி', எசல் ஆகியவைகளில் பாடிய சோதிட நூல்கள் சிலவற்றையும் சேர்த்துப் பதிப்பித்துள்ளார். **viii. 110/1914/I.**

△2: 864

19. i. **நவக்கிரக சூக்ஷ்ம துருவநாடி (கிரந்தம்)**: முதற் பதிப்பு ii. சுப்பிரமணியஜோஷியர், தஞ்சாவூர், டி.வி. பஞ்சாபகேச பாகவதர்; வித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை; iii. மே, 1914; iv. உ.ப. 32+15; v. 22×14 செ.மீ.; vi. 0—12—0; vii. ஒன்பது கோள்கள், உடுக்கைகள் ஆகியவைகளின் தொடர்புகளைக் கொண்டு வாழ்க்கை நிலையினை வரையறுக்கும் சோதிட நூல். இத்துடன் சங்கராச்சாரியாரின் வரலாறும் 'பஞ்சதசி'யும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 690/1915/II.

△2:864

**பாலகிருஷ்ண முதலியார், வி. எஸ்., இராயவேலூர்**

20. i. **பஞ்சபூத ரகசியமென்னும் பஞ்ச பக்ஷி ரத்தினம்**: முதற் பதிப்பு; ii. வி. எஸ். பாலகிருஷ்ண முதலியார், இராயவேலூர்; சுந்தரவிலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1912; iv. உ.ப. 6+80; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. 'பஞ்சபட்சி சாஸ்திரத்தை' ரோமரிஷி, போகர், மச்சமுனி முதலியோர், எழுதிய நூல்களை ஆதாரமாக்கிக்கொண்டு தெளிவாக ஆசிரியர் எழுதியுள்ளார். பல்லி சொல்லின் பயன்களும் விரிக்கப்பட்டிருக்கின்றன. சில எந்திர சக்கரங்களும் கொடுத்து விளக்கம் தந்துள்ளார். நூன்முகத்தில் அகத்தியர் முதலியோர் எழுதிய நூல்களைப் பற்றிய திறனாய்வும் கொடுத்துள்ளார். இவற்றுள் "ஞானவெட்டியான்" என்னும் நூல் வள்ளுவர் செய்தது அன்று என்பதை, அந்நூலில் திருவள்ளுவ நாயனாரைப் பற்றிய துதியும், கிறித்துவ, மகமதியரைப் பற்றிய பழிப்புரைகளும் இருப்பதை எடுத்துக்காட்டி மறுத்துள்ளார். "ஞானவெட்டியான்" ஆசிரியர் 'துரைசாமி' என்பவர் ஆவர் என்று குறித்துள்ளார். viii. 976/1912/II.

△2:864

21. i. **பிதிர் பாவகம்**. முதற் பதிப்பு; ii, எம். சுப்பிரமணிய பிள்ளை; நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1913; iv. செ.மூ.ப. 496; v. 22×14 செ. மீ.; vi. 0–12–0; vii. பிறப்புக் குறிப்பில் காணப்படும் தந்தை வழி பகுதியின் பலனைப் பற்றித் தெளிவாக உரைப்பது. இது கூறும் பலன்கள் திட்டவட்டமாக உள்ளன. ஆண்டியார்பிள்ளை என்பார் விருப்பபத்தின்படி இது அச்சிடப்பட்டது. இவ்வரிசை வெளியீடுகளில் பதிப்பாசிரியர்க்குத் துணை புரிந்த எட்டயபுர அரசரின் உருவப்படம் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 264/1913/II.

△2 : 864

**புஜண்டர்**

22. i. புஜண்டர் நாடி: முதற்பாகம்: முதற்பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சூளை; மதருஸ் டைமண்ட் அச்சுக்கூடம், மதருஸ்; iii. பிப்ரவரி, 1913; iv. செ.மூ.ப. 56; v. 21×14 செ.மீ.

vi. 0–5–0 ; vii. 'சர்வ ஜாதக உபயோகம்' என்றும் இதற்குப் பெயருண்டு. பன்னிரண்டு ராசிகளின் போக்கும் அதனால் விளையும் நன்மை தீமைகளையும் உரைப்பது. ராசி குணகர பாவகம்,' 'மகாதிசை பாவகம்,' 'துவாதச வகுப்பு,' 'ஜனன வகுப்பு,' 'மரண வகுப்பு' என நான்கு பகுதிகளாக இந்நூல் உள்ளது. viii. 925/1913/I.

△ 2:864

23. i. **மாதூர் பாவகம்.** முதற் பதிப்பு; ii. எம். சுப்பிரமணியப்பிள்ளை நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii மார்ச், 1913 ; iv. செ.மூ.எ. 3+513 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. ஆதிசங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய சோதிடம் பன்னீராயிரத்தில் 'மாதுர் பாவகத்தின் செய்யுள் மொழி பெயர்ப்பு. ஒவ்வொருவரின் பிறப்புக் குறிப்பிலுள்ள தாய்வழி பகுதியின் பலன்களை இது திட்டமாய்ச் சொல்லும். viii. 263/1913/II.

△ 2:864

24. i. **யோக பாவகம்.** முதற் பதிப்பு; ii. எம். சுப்பிரமணியப் பிள்ளை, நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலை. சென்னை ; iii. மார்ச், 1913 ; செ.மூ.எ. 9+659; vi. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. ஆதிசங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய சோதிடம் பன்னீராயிரத்தில் 'யோக பாவகம் பற்றிய பகுதி இந்நூல். இதனைப் பாடலாகத் தமிழில் மொழி பெயர்த்தார் பெயர் தெரியவில்லை; ராசிபலன்களைத் திட்டமாய் அறுதியிட்டு சொல்வது இந்நூல். தமிழில் உள்ள சோதிட நூல்களைப்பற்றிய பல செய்திகள் 'இந்நூல், அச்சிட்டவரின் கருத்து' எனக் காணும் முற்பகுதியில் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 262/1913/II.

△ 2:864

**வடிவேலு ஜோதிஷர் (தொ.து.)**

25. i. சோதிடக் களஞ்சியம் ; ii. சிதம்பர முதலி ; வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 184 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. பற்பல நூல்களிலிருந்து தொகுத்துப் பாடல்களாகவும், உரைநடையாகவும், 'வருவது உரைத்தல்' பற்றிக் கூறப்பட்டுள்ளது. பன்னிரண்டு பிரிவுகள் உள்ளன. கோள், விண்மீன் ஆகியவற்றின் இயல்பினை நன்கு விளக்குவது. viii. 592/1915/VI.

△ 2:864

**வெங்கிடரமணையங்கார், நா., நடுப்பட்டி**

26. i. சாதக சாரம்ஸ ரத்தினகரம் ; ii. பா.ஆ. இரங்கசாமி ஆச்சாரியார், கோயம்புத்தூர்; நித்ய கல்யாண சுந்தரம் பிரஸ், ஈரோடு ; iii. ஜனவரி 1915 ; iv. செ.மூ.ப. 48 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-10-0 ; vii பல முனிவர்கள் இயற்றிய நூற்களை நன்காராய்ந்து தெள்ளத் தெளிவுற ஒருங்கு சேர்த்து எளிதாகப் பிறப்புக் குறிப்பின் பலன்களறியும் பொருட்டுச் செய்யுள் வடிவில் பன்னிரு பிரிவுகளில் அமைக்கப் பெற்ற நூல். viii. 482/1915/I.

△2:864

**ஸ்ரீனிவாச அய்யங்கார், வி., பெருங்குளம்.**

27. i. ஜாதகப்ரகாசிகை; முதற் பதிப்பு ; ii. சீனிவாஸ அய்யங்கார்: கானவித்தியா பிரஸ், பெருங்குளம் ; iii. 1915 ; iv. உ.ப. 100 ; v. 22×15 செ.மீ. ; vi. 1-8-0 ; vii. பிறப்பு குறிப்புகளைப்பற்றி விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. இந்நூல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதற் பிரிவில் ராசிகளின் பண்புகளும், கோள்கள் தனிமையாகயிராமல் ஒன்ருெடொன்று சேர்ந்தும் ஒன்றையொன்று பார்த்துமிருந்தால் ஏற்படும் விளைவுகளும் விரிக்கப்பட்டிருககின்றன ; இரண்டாம் பிரிவில் சாதகங் கணிக்க வேண்டிய முறையையும் , அதற்குக் கோள்களின் ஆட்சிக் காலத்தில் தெரிந்து கொள்ளவேண்டிய பலன்களையும் சிறப்பாக விரிக்கின்றது. சில சாதகச் சக்கரங்களைச் சான்றுகளுடனும் எடுத்துக்காட்டியுள்ளார். viii. 913/1915/IV.

△2:864

## 133-5 [1] ஆரூடம்

28. **கன்னைய நாயுடு, வே.**

i. ஸ்ரீ கணேச ஆரூட தீபிகை (மூலமும் உரையும், முதல் பதிப்பு) ; ii. யம்.பி.ஆர். குருநாத நாயுடு ; ஜீவகாருண்ய விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1912 ; iv. செ.மூ.உ.ப. 98; v. 21×13 செ.மீ. ; vi. 0-12-0 ; viii முதல் வீட்டின் பலன் முதல் 225-வது வீட்டின் பலன் வரை உள்ளன. 226 விருத்தங்கள் உள்ளன. viii. 544/1912/I.

△2:864

## 133·5 [1] தொடு குறி சாத்திரம்

29. **சகாதேவன்**

i. தொடுகுறி சாஸ்திரம் ; ii. கே.எஸ். நாராயண கோனார்' மதுரை ; மகமதியன் பிரஸ், மதுரை ; iii. 1914 ; iv. செ.மூ.உ.ப. 24 ; v. 21×13 செ.மீ.; vi. ..........; vii. நன்மை தீமை அறியும் சக்கரம் தந்து பலன்களும் தரப் பட்டுள்ளன. உத்தம மத்திப சாஸ்திரமும் உள்ளது. viii. 1176/1914/III.

△2 : 864

30. i. **மலையாள பகவதி தொடுகுறி சாஸ்திரம்** ; ii. ஜீ.ஆர், பாலைய நாயுடு, சென்னை ; பாலவிர்த்தி போதினி பிரஸ், சென்னை ; iii. 1912 ; iv. செ.மூ.உ.ப. 44 ; v. 21×13 செ.மீ. ; vi. ..........; vii. நன்மை தீமையறியும் நாகசக்கரம் முதலியன தரப்பட்டுள்ளன. முன்னுரை விரிவாக உரைநடையில் உள்ளது. viii. 51/1913/II.

△2 : 864

31. i. **நந்திவாக்கியம்—ஸ்திரிகள் ஜனன–ருது ஜாதகம்** ; ii. தி. வெங்கடாசலம் பிள்ளை, திருச்சினாப்பள்ளி ; அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், சென்னை ; iii. 1911 ; iv. செ. மூ. ப. 160 ; v. 21×13 செ.மீ. ; vi. 1–8–0; vii. நந்திவாக்கிய ஸ்திரீகள் ஜாதகம், நந்திவாக்கிய ஸ்திரீகள் ருது ஜாதகம் என இரு பாகங்களாக உள்ளன. மேட முதலோரையின் பலன் தொடங்கி ரேவதி நாலாங்கால் பலன் வரையில் உள்ளது. 931 பாடல்கள் உள. viii. 610/1911/I.

△2:864

## 134 மனோவசியம்

32. i. **அநுபவ ஹிப்னாடிசம், மெஸ்மரிஸம் முதலிய மனோவசிய ரகசியங்கள்** (முதற்பாகம்) ; ii. இந்தியன் ஸைகிக் இன்ஸ்டி-டியூட், தஞ்சாவூர் ; கலியாணசுந்தரம் பவர் பிரஸ், ஜி. எஸ். மணியா அண்டு கோ, பவர் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர் ; iii. 1913 ; iv. உ. ப. 57 ; v. 24×16 செ.மீ.; vi. .... .. ; vii. காந்த சக்தி என்ற வசிய சக்தி முதல் போஸ்டு—ஹிப்னாடிக் மந்திரங்கள் வரையில் உள்ளன. viii. 1138/1914/I.

S:851

33. i. **மனோவஸ்ய உண்மை** ; ii. மனோவஸ்ய உண்மைச் சங்கம், திருநெல்வேலி பாலம், தர்பார் பிரஸ், திருநெல்வேலி பாலம் ; iii. 1914 ; iv. உ.ப. 46 ; v. 24×16 செ.மீ. ; vi. ....... ; vii. யோகநித்திரை அல்லது மனோவசீகர நித்திரை, வசீகரம், திருக்கண் சக்தி, பிராணம் முதலிய பல தலைப்புகளில் கருத்துகள் கூறப்பட்டுள்ளன. viii. 8/1914/IV.

S:851

34. i. ஞான விநோத அஷ்டமா சித்தென்னும் மெஸ்மரிஸம் முதற் பதிப்பு ; ii. பி. கே. மைதீன் பாக்ஷா, வத்தலகுண்டு ; கல்விப் பிரகாஸம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப. 95 ; v. 20×13 செ.மீ. ; vi. 2-0-0 ; vii. மெஸ்மரிஸம், ஒளியுடைய பிரிவுகள் முதல் 15-ஆவது சுற்றுப் பாஸ் ஈறாக பல தலைப்புகளில் இது விளக்கப்பட்டுள்ளது. viii. 38/1913/IV.

S : 851

தாஉத்ஸா, ந. பா

35. i. மனோவசிய தத்துவம் மூன்றும் பாகம் அல்லது பண்டிதை மெஸ்மெரிஸா (முதற் பதிப்பு) ; ii. எம். ஏ. பிரஸ், சென்னை ; iii. 1912 ; iv. உ.ப. 214+2 ; v. 20×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. 'மெஸ்மரிஸாவைப் பற்றிக் கேள்வியுற்றேன்' என்பது முதல் "மணம் முடிந்தபின் தீவுக்குச் சென்றோம்" என்பதீறாக 16 அத்தியாயங்கள் கொண்டது. கதை அமைப்பில் மெஸ்மரிஸத்தைப் பற்றிக் கூறுவது. viii. 825/1913/I.

S : 851

தாவுத் ஸாகிபு, ந. பா

36. i. பர்ஸனல் மாக்னடிஸம் ; ii. ஹக்கீம், பா. முகம்மது அப்துல்லா சாகிபு ; முஸ்லிம் அபிமானி பிரஸ், சென்னை ; iii. 1914 ; iv. உ.ப. 166+2 ; v. 18×12 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. 30 பாடங்கள் கொண்ட நூல். 'பர்ஸனல் மாக்னடிசம்' என்பது முதல் "நட்பை உறுதிப் படுத்தல்" என்பதீறாக 30 தலைப்புகளில் விழிப்பு நிலையில் மனிதரை வயப்படுத்துதற்குரிய வழிகள் கூறப்பட்டுள்ளன. viii. 255/1914/III.

S : 851

37. i. ஹிப்னாடிஸம் என்னும் மனோவசிய தத்துவம்—இரண்டாம் பாகம் அல்லது மானிட வசியம் ; ii. எம். ஏ. பிரஸ், சென்னை ; iii. 1911 ; iv. உ.ப. 395+5 ; v. 18×12 செ. மீ.; vi. 2–8-0 ; vii. "சொப்பனம் சுழுத்தி என்னும் தூக்க நிலைகள் முதல் "ஹிப்னாடிஸ வைத்தியம்" என்பதீறாகப் பத்து அதிகாரங்கள் கொண்டது. அநுபந்தம் ஒன்று உள்ளது. viii. 409/1911/IV.

S : 851

தேவேந்திரநாத பண்டிதர்

38. i. பீஜாக்ஷர யந்திரங்களடங்கிய சர்வ தேவதாவசியம் முதற் பாகம்: முதற் பதிப்பு ; ii. சு. வி. கிருஷ்ணசாமி முதலியார் கணேச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1912; iv. செ.மூ.ப. 64; v. 20×13 செ. மீ.; vi. 0–8-0 ; vii. இதில் விக்கினேஸ்வரர் மந்திரம், பூசை விபரம், விநாயகர் அகவல், விநாயகர்

கவசம், சுப்பிரமண்யர் உபாசனு மந்திரம், திருட்டு பிடிக்க தேங்காய் மந்திரம், நீலகண்டன் மந்திரம் முதலியன உள்ளன. எந்திரப் படங்களும் தரப்பட்டுள்ளன. viii. 703/1912/III.

S:851

39. i. பீஜாக்ஷர யந்திரங்களடங்கிய சர்வ தேவதாவசியம் (இரண்டாம் பாகம்). (முதற் பதிப்பு) ; ii. ஸ்ரீ சித்தி விநாயகர் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 64 ; v. 20×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. கணபதி வசிய மூலமந்திரம், அஷ்டதிக்கு பந்து, சாப நிவர்த்தி மூலமந்திரம், காட்டேரி மந்திரம், வசிய மந்திரம், வசிய சக்கரம் முதலியன உள்ளன. பல நட்சத்திரங்களில் தோன்றிய சுரம் எவ்வளவு நாட்களில் நீங்கும் என்பதும் கூறப்பட்டுள்ளது. viii. 135/1914/I.

S:851

பார்த்தசாரதி நாயுடு, பா.

40. i. கலியுக விஸ்வாமித்திர பிரம்ம கல்ப வித்யா தர்பணம் ; ii. சாமராஜா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப. 74+7 ; v. 17×11 செ.மீ.; vi. 1–0–0 ; vii. ஆகர்ஷண சக்தியை உபயோகிக்கும் விதம், மந்திரித்து கொடுக்கும் தீர்த்தம் முதலிய பல தலைப்புகளில் பிரம்ம வித்தையை உணர்த்தும் நூல். இறுதியில் 1000 வருஷத்திய பஞ்சாங்கம் தரப்பட்டுள்ளது. viii. 1108/1913/III.

S:851

41. i. மனேவஸ்ய உண்மை (இரண்டாம் பாகம்); ii. மனேவஸ்ய உண்மை சங்கம், திருநெல்வேலி பாலம் ; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 37 ; v. 21×13 செ.மீ. ; vi. . . . . . ; vii. ரோக நிவாரணம், மற்றவர் நினைப்பதை அறிதல், மானஸ தந்தி, தூரதிருஷ்டி—ஞான திருஷ்டி முதலியன ஆராயப்பட்டுள்ளன. viii. 577/1915/I.

S:851

42. i. மெஸ்மரிஸ பாடங்கள் ; ii. ஹக்கீம்பா—முஹம்மது அப்துல்லா சாஹிபு ; முஸ்லிம் அபிமானி பிரஸ், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப. 104+24 ; v. 17×11செ.மீ ; vi. 1–0–0 ; vii. விழச் செய்தல், தூங்கச் செய்தல், ஹப்னுடிஸ வைத்தியம், மேல் நாட்டு ஹப்னுடிஸம், காட்டு மிருகங்களை வசப்படுத்தும் முறை, தூரதிருஷ்டி முதலிய 20 தலைப்புக்களில் விளக்கம் தரப்பட்டுள்ளது. viii. 393/1913/II.

S:851

ராமசாமி, கே. டி., திருநெல்வேலி

43. i. ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம், 1வது கரஸ்பாண்டென்ஸ் பாட புத்தகம். (அங்கம்–1 திடசித்தப் பயிற்சி—அங்கம்–2 மனோவசியம்) ; ii. இந்தியா சாஸ்திரக் கல்விச் சாலை, திருநெல்வேலி ; எக்ஸெல்ஸியர் பிரஸ், கீழநத்தம் ; iii. 1913 ; iv. உ.ப. 25+32 ; v. 21×17 செ.மீ.; vi. . . . . . ; vii. 'திடசித்தம்' முதல் 'ஜெயம் பெறுவதற்கான மார்க்கங்கள்' ஈறாக 20 பாடங்கள் உள்ளன. viii. 784/1913/IV.

S:851

44. i. ஆத்மயோக மனோவஸிய சாஸ்திரம் (3வது கரஸ்பாண்டென்ஸ், பாடபுத்தகம். 1, 2, 3 அங்கங்கள் மானஸ தந்தி, ஆத்மயோக உபாஸனை, தூரதிருஷ்டி தூரசிரவணம்) ; ii. இந்திய சாஸ்திரக் கல்விச் சாலை, எக்செல்சியர் பிரஸ், கீழநத்தம் ; iii. 1915 ; iv. உ.ப. 14+8 ; v. 19×13 செ.மீ.; vi. . . . . . ; vii. மானஸ தந்தி, மானஸ தந்தி அப்பியாசம், தூரதிருஷ்டி, தூரசிரவணம் ஆகிய கட்டுரைகள் உள்ளன. இறுதியில் ஆத்மயோகம், ஆஞ்சநேயர் உபாஸனை என்ற கட்டுரையும் உள்ளது. viii. 653/1915/II.

S:851

45. i. ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம்—திடசித்தப் பயிற்சி—மனோவசியம் (2-ம் பதிப்பு) ; ii. இந்திய சாஸ்திர கல்விச் சாலை, திருநெல்வேலி ; எக்செல்சியர் பிரஸ், கீழநத்தம் ; iii. 1915 ; iv. உ.ப. 46 ; v. 15×11 ; செ.மீ.; vi. . . . . . ; vii ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம், திடசித்தப் பயிற்சி, மனோவசிய சாஸ்திரம் முதலிய கட்டுரைகள் உள்ளன. viii. 340/1915/IV.

S:851

46. i. ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம்—மானஸ தந்தி, ஆத்மயோக உபாஸனை, தூரதிருஷ்டி, தூரசிரவணம்—(2-ம் பதிப்பு) ii. இந்தியா சாஸ்திர கல்விச்சாலை, திருநெல்வேலி ; எக்செல்சியர் பிரஸ், கீழநத்தம் ; iii. 1915 ; iv. உ.ப. 23 ; v. 13×11 செ.மீ.; vi. . . . . . ; vii. மானஸ தந்தி, தூரதிருஷ்டி–தூர சிரவணம், ஆஞ்சநேயர் உபாஸனை முதலிய கட்டுரைகள் உள்ளன. viii. 1018/1915/IV.

S:851

47. i. ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம்—(2வது கரஸ்பாண்டென்ஸ் பாடபுத்தகம் ஹிப்னாட்டிஸம், மெஸ்மரிஸம்) ; ii. இந்திய சாஸ்திர கல்விச்சாலை, கீழநத்தம் ; எக்செல்சியர் பிரஸ், கீழநத்தம் ; iii. 1914 ; iv. உ.ப. 64 ; v. 20×16 செ.மீ. ; vi. . . . . . ; vii. உள்மனம், புறமனம் ஆனந்த மனம் தூக்க நிலையைப் பரீக்ஷிப்பது, தீக்குழி பாய்வது முதலிய தலைப்புக்களில் கட்டுரைகள் உள்ளன. viii. 1017/1914/II.

S:851

170 அற நூல்கள்.

## 170 [1] பொது அறநூல்கள் : கவிதை

**அகத்தியர், மு., பரமக்குடி**

48. i. ஸௌகைங்கர்ய சரிது : முதற் பதிப்பு ; ii. மு. அகத்தியர், பரமக்குடி ; ii. விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1913 ; iv. செ.மூ.உ.ப. 8 ; v. 21×14 செ.மீ.; vi. 0–0–9 ; vii. தமிழிலிருந்தும், வடமொழியிலிருந்தும் எடுக்கப்பட்ட அறவுரைப் பாடல்களும், பத்திப்பாடல்களும், அவற்றிற்கான சௌராஷ்டிர மொழிப் பொருளும், இந்நூலில் உள்ளன. viii 453/1913/IV.

R4

**இராமானந்த சுவாமிகள், கௌமார மடாலயம், சிரவணபுரம்**

49. i. பெண் விஷய வெண்பா : (தொ. எ. 133 பார்க்க) முதற் பதிப்பு ; ii. டி. எம். செந்திநாயகம் பிள்ளை ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ.மூ. எ. 11 ; v. 14×11 செ.மீ.; vi. 0–4–0 ; vii. பெண் ஆசையில் ஆழ்ந்துவிடுதல் அழகன்று என்று எடுத்துக்காட்டுவது. ஔவையாரின் 'பெட்டக' நூலையும் கவிதையில் எடுத்துக் காட்டுகிறார். நிலத்தியல்பால் நீர் திரிந்தற்று என்னும் வள்ளுவர் வாக்கையும் சான்றாகக் காட்டுகிறார். பெண்மையை அருள் ஆற்றலாகக் கருதவேண்டும் என்று அறிவுறுத்துகிறார். viii. 657/1913/III.

R4

i. விந்தின் பெருமை வெண்பா : (தொ. எ. 133 பார்க்க) முதற் பதிப்பு ; ii. டி. எம். செந்திநாயகம் பிள்ளை ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ.மூ.எ. 11 ; v. 14×11 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. 'விந்தே தெய்வம்' என்று காரண காரியத்துடன் விளக்குகிறார். விந்து நிலை கெட்டால் வாழ்வு பாழாகும் என்று சுட்டிக் காட்டுகிறார். "விந்து கெட்டால் சக்தி கெடும், சத்தி கெட்டால் புத்தி கெடும், புத்தி கெட்டால் பத்தி கெடும், பத்தி கெட்டால் சித்தி கெடும் ; சித்தி கெட்டால் முத்தி கெடும்" என்று விந்தின் பெருமையை உரைநடையாலும் முடித்துக்காட்டுகிறார் ; viii. 657/1913/III.

R4

**கதிர்வேல், கே. எஸ்.**

49அ. i. தறுதலை புராணம்; முதற் பதிப்பு; ii. கே. எஸ். கதிர்வேல்; விஜயவிகடன் பிரஸ், மதராஸ் ; iii. எப்ரல், 1913 ; iv. செ.மூ.ப. 36; v. 18×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. தீய செயல்

களில் செல்லும் கட்டுக்கடங்காக் கீழ் மகனைப் பற்றிய வசைப் பாட்டு. கீழ் மகன் செய்யும் தீயச் செயல்களைச் சுட்டிக்காட்டி, அது கடியத்தக்கது என்பதை எதிர்மறைமுகத்தால் உணர்த்துவதால் இதுவும் அறநூலேயாம். தறுதலையின் நடத்தைகளும், பேச்சுகளும் படிப்படியாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இதனோடு 'சுருமகவித்திரட்டு', 'சீட்டுக்கவிகள்' என்பவையும் உள. கொசுவின்மீதும் சிற்பெறும்பின் மீதும் இரு இரங்கற்பாக்கள் உள்ளன. சீட்டுக்கவி கோவேறு கழுதைகளுக்கு எழுதப்படுகிறது. இவையும் வேடிக்கைப் பாடல்களே, இதன் ஆசிரியர் க. ரா. நமச்சிவாய முதலியாரின் மாணவராவர். இப்புராணம் முதலியன 'விஜய விகடன்' பத்திரிகையில் முதலில் வெளிவந்தனவாகும். viii. 1104/1913/III.

R4

**கபிலர்**

50. i. கபிலரகவல் : முதற் பதிப்பு ; ii. ம. ரா. குமாரசாமி பிள்ளை ; புஷ்பாலயம்பா விலாஸ அச்சுக்கூடம், திருக்கோவலூர் ; iii. ஏப்ரல், 1913 ; iv. செ.மூ.ப. 7 ; v. 15×11 செ.மீ. vi. இலவசம் ; vii. எளிய தமிழில் மக்களுக்கு அறிவுரை கூறும் நூல். வாழ்வின் நிலையாமையை எடுத்துக்காட்டி அறவழியில் செல்லத் தூண்டுவது, ஜாதி வேற்றுமையைக் கடிந்துரைப்பது. சிறப்பும் ஒழுக்கமும் மட்டுமேயன்றி பிறப்பினால் மட்டும் பெருமை இல்லை என்பதை எடுத்துக் காட்டுவது. 'உலகத்தீரே உலகத்தீரே' என்று உலகத்தாரை நோக்கி ஆசிரியர் இந்நூலில் பேசுகிறார். viii. 289/1913/II.

R4

**கிருஷ்ணசுவாமி ஐயர், திருநெல்வேலி**

51. i. பாலநீதியென்னும் இல்லற விளக்கம் : முதற் பதிப்பு; ii. த. கனகசபேச பிள்ளை, திருத்தவத்துறை & அ. நாராயண சரணர், திருப்பரங்குன்றம் ; வித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை ; iii. ஏப்ரல், 1911 ; iv. செ.மூ.எ. 324 அடிகள் ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 , vii. இது மூன்று பகுதிகளாக உள்ளது. கொன்றை வேந்தன் நூலைப் போன்று அகர வரிசையில் அறிவுரைகள் அமைந்துள்ளன. viii. 313/1911/II.

R4

**குமார பாரதியார்**

52. i. திருத்தொண்டர் மாலை ; ii. மெ. அரு. ந. இராமநாதன் செட்டியார், தேவக்கோட்டை; மீனலோசனி முத்திராட்சரசாலை, தேவக்கோட்டை ; iii. ஜனவரி, 1912 ; iv. செ.மூ.உ.எ. 100; v. 16×13 செ.மீ. ; vi. ... ..; vii. திருத்தொண்டர் வர

லாற்றை முன்னிரண்டு அடியிலும் தெய்வப் புலமைத் திருவள்ளு வனார் திருக்குறள் வெண்பாவைப் பின்னிரண்டு அடியிலும் அமைத்துப் பாடப்பெற்ற நூல் இதனைப் பாடியவர் குமார பாரதி என்பது சிறப்புப்பாயிரச் செய்யுளால் தெரிய வருகிறது. தில்லைவாழ் அந்தணர் முதலிய சைவ நாயன்மார்கள் பற்றிய குறிப்புகள் உள. இதற்கு வா. மகாதேவ முதலியார் என்பார் குறிப்புரை எழுதியுள்ளார். viii. 127/1912/I.

R4

53. i. திருத்தொண்டர் மாலை—மூலமும் உரையும்: முதற் பதிப்பு; ii. விவேகபானு அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1913; iv. செ.மூ.உ.எ. 107; v. 23×15 செ.மீ.; vi. 0–3–0; vii. வள்ளுவர் அருளிய ஒழுக்கங்கள் திருத் தொண்டர் வரலாறுகளிலும் அமைந்துள்ளன என்று காட்டும் நூல். திருத்தொண்டத் தொகையில் சிவனடியார்களைக் குறித்த வண்ணமே தில்லை வாழந்தணர் தொடக்கமாக ஒவ்வொரு நாயனாரையும் பற்றி உரைக்கின்றார் ஆசிரியர். பாடல்களின் முன்னிரண்டு அடியில் நாயனார் பெருமைகளும் பின்னிரண்டு அடியில் அவர்தம் ஒழுக்கததிற்குப் பொருத்தமான திருக்குறள் பாவும் அமைந்திருக்கின்றன. பெரிய புராணத்தில் சருக்கம் தோறும் சுந்தரர்க்குச் சேக்கிழார் வணக்கம் கூறிச் செல்வது போல் இந்நூலிலும் சுந்தரர் வரலாற்று நிகழ்ச்சிகள் அங்கங்கே கூறப்பட்டிருக்கின்றன. இந்நூல் உரையாசிரியரின் பெயர் தெரியவில்லை. ஆ. முத்துசாமி பிள்ளை என்பார் இதற்கு முக வுரை எழுதியுள்ளார். viii. 948/1913/I.

R4

**சங்கரபாண்டியம் பிள்ளை, எம். எஸ்.**

54. i. மாதர் மதி மாலை—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. எம். எஸ். சங்கர பாண்டியம் பிள்ளை; சுந்தர விலாச அச்சியந் திர சாலை, இராஜபாளையம்; iii. மார்ச், 1913; iv. செ.மூ.ப. 1+12; v. 19×14 செ.மீ.; vi. 0–2–0; vii. இது உலகப் பொது இல்லற நூல். பெண்களின் நடை, உடை, உடல், கணவன், மக்கள், பெற்றோர், செய்கை, செல்வம், அறம் முதலானவைகளைப் பற்றிக் கூறுகிறது. இந்நூல் "பெரியவர்கள் சொன்ன பெண்மதி நூல் நான் கேட்டுத் தெரியும்படி யாகச் செப்புகிறேன். கேட்டிருங்கள், வாச்குக்கு லேசான மாலையாய்ப் பாடுகிறேன்" என்று ஆசிரியர் சொல்லுகிறபடி அம் மானைப் பாடல் நடையில் அமைந்துள்ளது. ஐந்தாம் ஜார்ஜ் மன்னனுக்கு அடங்கி நாட்டுப் பற்றுடன் நங்கையரே வாழவேணும் என்றும் கூறுகிறார். viii. 926/1913/I.

R4

**சண்முகம் பிள்ளை, அ., சோழவந்தானூர்**

**55.** i. இன்னிசை இருநூறு : முதற் பதிப்பு ; ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயர் ; விவேகபாநு பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1913 ; iv. செ.மூ.எ. 200 ; v. 16×13 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. ஆசிரியர் அவ்வப்பொழுது தம்மனத்துட் தோன்றிய அறக் கோட்பாடுகளைப் பல இன்னிசை வெண்பாக்களாக எழுதி இருந்தனர். அவற்றுள் இருநூறு பாடல்களைத் தொகுத்து அதிகாரப் பாகுபாடு செய்து 'விவேகபாநு' நாலாவது தொகுதியில் முதலில் வெளியிட்டார். அதனையே தனி நூலாக இப்பொழுது அருஞ்சொற் பொருளுடன் பதிப்பித்திருக்கிறார். இருபது அதிகாரங்களும், அதிகாரத்துக்குப் பத்துப்பாடல்களும் உள்ளன. ஆசிரியர் அதிகாரப் பகுப்பைக் கருதி இயற்றாமையாலும் தாம் பொருத்தம் நோக்கிப் அதிகாரப்பாகுபாடு செய்தமையாலும் சிற்சில கவிகள் வலிந்து பொருள் காணும்படி அமைந்திருக்கும் என்று பதிப்பாசிரியர் கூறுகிறார். viii. 161/1913/III.

R4

**சபாபதி முதலியார், காஞ்சிபுரம்**

i. பச்சையப்ப முதலியார் நீதிமாலை : (தொ.எ. 2610 பார்க்க): இரண்டாம் பதிப்பு ; ii. வி. சுந்தர முதலியார், திருமயிலை & எஸ். சிவசங்கர செட்டியார் ; ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. செ.மூ.எ. 70 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. பொருட்பால் பற்றிய பகுதி உள்ளது. திருக்குறள் பொருட்பாலில் இறைமாட்சி முதல் கயமை ஈறாக வரும் எழுபது அதிகாரப் பெயர்களைக் கொடுத்து, ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பாடல் இதில் தரப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாடலிலும் பச்சையப்ப முதலியாருடைய புகழும் பேசப்படுகிறது. கச்சியில் தோன்றிய பச்சையப்பரை முன்னிலைப் படுத்தியே இப்பாடல்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு பாடலிலும் அந்தந்த அதிகாரத்தமைந்த ஒரு திருக்குறளை விளக்கி உரைக்கின்றார். 'பச்சையப்ப முதலியார் நீதிமாலை முற்றிற்று' என்று இறுதியில் காணும் குறிப்பினால் திருக்குறளில் வரும் பொருட்பால் ஒன்றே இவ்வாறு பாடப்பட்டிருக்கிறது என்று தெரிய வருகிறது. மழவை மகாலிங்கையரவர்கள் பாடிய சிறப்புக் கவியும் இதில் உள்ளது. viii. 29/1911/III.

R4

**சிதம்பரம் பிள்ளை, வ. உ.**

**56.** i. மெய்யறிவு : ii. வ. உ. சிதம்பரம் பிள்ளை ; எஸ். வி. என். பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.உ.எ. 100 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஒழுக்க நெறிகளைக் கூறும் நூறு பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலுக்கும் சொற்பொருள், கருத்து முதலியன கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கில், இன்பம் தவிர மற்றைய மூன்றையும் உணர்த்தாநின்ற நூல்களின் சுருக்கம். அறத்தைச் செய்ய அவாவி நிற்கின்ற ஓர் ஆண்மகனை நோக்கி, அவனுடைய ஆசிரியன் கூறுவதுபோல இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. இது சில புதிய கோட்பாடுகளையும் கூறு கின்றது. "உரை கோளாளர் ஒருவரால் இதன் உரை எழுதப் பட்டது. அவர் பெயரை வெளியிட அவர் விரும்பாததால் அதனை யான் இங்குக் கூறவில்லை" என்று ஆசிரியர் தமது பாயிரத்துள் கூறியுள்ளார். இவ்வுரை ஆசிரியரின் மேற் பார்வையில் வெளியிடப் பெற்றமையால் இவ்வுரை ஆசிரியரின் கருத்திற்கு இயைந்ததாகும் எனப் பெறப்படும். viii. 791/1915/III.

R4

**சிவசிதம்பரம் பிள்ளை, ஏ.**

57. i. நிஜநீதி : முதற் பதிப்பு ; ii. எம். ஏ. பச்சையப்ப முதலியார், சரஸ்வதி பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. செ. மூ. எ. 66 ; v. 14×11 செ.மீ.; vi. 0–1–6 ; vii. தமிழில் பதினெண்கீழ்க்கணக்கோடு மேலும் சுமார் முப்பத்திரண்டுக்கு மேற்பட்ட அறநூல்கள் உள. அவை சற்றுக் கடின நடையால் இருத்தல் கருதி, மிகவும் எளிய நடையில் அறவுரைகள் உள்ளது உள்ளபடியே தெள்ளத் தெளிய இந்நூலில் உரைக்கப்பட்டிருக்கின்றன. "ஆதியிலே தமிழ்ப்பாஷை படிக்கவேண்டும் வேண்டும். அரிச்சுவடி பெயர்ச் சுவடி பயில வேண்டும் வேண்டும்" என்றிவ்வாறாக ஒவ்வொரு அறிவுரை கருத்தையும் 'வேண்டும், வேண்டும்' என்று இரு முறை வலியுறுத்திக் கூறுகிறார். ஒவ்வொரு பாடலின் முடிவிலும் "கணபதியின் பெருங் கருணையினால் இவை செய்யப்பட வேண்டும்" என்று முடிக்கிறார். viii. 333/1913/III.

R4

**செல்லப்ப முதலியார், களம்பூர்**

58. i. மாதர் அநீதி: முதற் பதிப்பு ; ii. ம. இராஜகோபால பிள்ளை, சச்சிதாநந்த அச்சியந்திர சாலை, சென்னை, கோமளேசு வரன் பேட்டை ; iii. மார்ச் 1915 ; iv. செ.மூ.எ. 6+120+1 ; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0 ; vii. தீய பண்புகளுடைய பெண்களைக் கண்டித்து உரைக்கும் நூற்றியிருபது வெண் பாக்கள் கொண்ட தொகுப்பே இந்நூல், வித்வான் கா. இராமசாமி நாயுடு, கோ. வடிவேலு செட்டியார் முதலிய பலர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளனர். பெண்களின் நலத்தை முன்னிட்டு அவர்களது அருமை பெருமைகளையும் அவற்றில் கவலையற்றபோது நேரக்கூடிய தீமைகளையும் பல எடுத்துக் காட்டுகளால் விளக்கி உரைப்பது இந்நூல். பாடல்களுக்கு

எளிய நடையில் பொழிப்புரையும் ஆசிரியர் எழுதிச் சேர்த்துள்ளார். viii. 873/1915/I.

R4

**தெய்வசிலையா பிள்ளை**

59. i. மநுநீதி காதல் ; ii. மு. கிருஷ்ணப் பிள்ளை & பி. என். சிதம்பர முதலி, வித்யாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை; iii. 1915 ; iv. செ.மூ.ப. 77 ; v. 21×13 செ.மீ.; vi. 0–1–0; vii. ஆதி மநு நூலையும், வள்ளுவர் முதலானோர் இயற்றிய அற நூல்களையும ஆராய்ந்து இதனைச் செய்துள்ளார். 'வள்ளுவனார் ஔவை முதல் வழுத்து மநுநீதி, தெள்ளு தமிழ்க் கடலிற் சிற்றகப்பை முகந்தாற்போல் 'பண்ணும் பல நூலிற்பாடும் பொருளதனை எண்ணி' இந்நூலைச் செய்துள்ளார். எனவே இது அற நூல்களிற் சொல்லிய செய்திகளின் சுருக்கமாகவுள்ளது. பொருள் அட்டவணை நூல் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 588/1915/IV.

R4

**நடேச நாட்டார், கு. நா, பெருங்கடம்பனூர்**

60. i. நீதிமாலை, மூலமும் பொழிப்புரையும் : முதற் பதிப்பு ; ii. கு. நா. நடேச நாட்டார், பெருங்கடம்பனூர். சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. நவம்பர், 1913 ; iv. செ.மூ உ எ. 30 ; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0 ; vii. வடமொழி அறநூலை ஆராய்ந்து எழுதப்பட்டது. எழுசீர், அறுசீர், ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம் முதலிய பப்பது விருத்தப் பாக்களைக் கொண்டது. பொழிப்புரையும் கொடுக்கப் பட்டிருக்கிறது. முன்னோர் அறநூல்களின் கருத்துக்களைப் பெரும்பாலும் இது தழுவியது. viii. 631/1913/IV.

R4

**மாதவையர், அ.**

61. i. பொது தர்ம சங்கீத மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. சீனிவாச வரதாசாரி அண்டு கம்பெனி, சென்னை , தமிழ்ச் சங்கம் பிரஸ், மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. ப. 4+48 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. நாடு, பேரூர் மக்கள் முதலியோர்க்குரிய பொது அறங்களைக் கூறும் பாடல் தொகுதி. தமிழ்நாட்டு நாடோடி மெட்டுக்களில் அமைந்தது. இதிலுள்ள பாட்டுக்கள் நாகரிக வாழ்க்கை, நாட்டுப்பற்று, தொழில் வளர்ச்சி, திருமணச் சீர்திருத்தம், கீழ்வகுப்பாரை மேம்படுத்துதல் முதலிய பல பகுதிகளைப் பற்றி அமைந்துள்ளன ஆங்கிலப் பாடல்களும், திருக்குறளைப்பின்பற்றிப் பாடிய பாடல்களும் இதில் சில உள்ளன. இதில் உள்ள 'இந்தியக் கும்மி என்னும் பாட்டிற்காக 'இரண்டே தலைப்பரிசை' இவ்வாசிரியர் பெற்றுள்ளார். "நாங் கொடுக்கும் வரிகொண்டு, நமக்குநலன்

கொடுத்தற் கென்றே சம்பளமும் வாங்கும் பலரையும் தாங்கியே, லஞ்சமும் என் கொடுப்போமினி மாதரரே" என்று அக்காலத்தில் லஞ்சம கொடுத்தல் தவறு என்று கண்டனம் தெரிவித் துள்ளார் இந்நூலாசிரியர். viii. 1039/1914/II.

R4

**முஹம்மது அப்துல் ஸலாம் ஆலீம் மஸ்தான் சாகிபு**

62. i. *மாதர் நீதி மனதுவல்லியம்: முதற் பதிப்பு* ; ii. ஆலீம் சாகிபு, திருச்சிணுப்பள்ளி, வென்ஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; iii. நவம்பர், 1914 ; iv. செ. மூ. எ. 160 ; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. பெண்களுக்குரிய அறம் 160 கண்ணிகளாகக் கூறப்பட்டுள்ளது: viii. 229/1915/I.

R4

**வைத்தியனுதய்யர், எம்.**

i. *மாந்தர் நீதி* (தொ. எ. 2412 பார்க்க) ; ii. சி. எ. செங்கல்வராய நாயுடு, தனியாம்பாள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1915 ; iv. செ.மூ.ப. 4 ; v. 21×14 செ.மீ.; vi. அணு 12 ; vii. மனிதர்க்கு உரிய உலக நீதிகளை உணர்த்துவது. அகர வரிசையில் அறத் தொடர்கள் உள்ளன. 'அரனடி வணங்கிற் பரமெனப்படுவாய், ஆவினைத் தேவமாய் சேவை செய்வாயே' என்று பாடல்கள் அகர வரிசையில் அமைந்துள்ளன. viii. —/1915/II.

R4

## 170 [1] பொது அறநூல்கள் : உரைநடை

**அசலாம்பிகையம்மாள், சென்னை**

63. i. *நீதித்தொகுதி: முதற் பதிப்பு* ; ii. ஜி. ராமசாமி நாயுடு அண்டு சன்ஸ் & அசலாம்பிகையம்மாள், சென்னை, கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ. ப. 43; v. 22×14 செ.மீ ; vi. 0–6–0 ; vii. பள்ளி மாணுக்கர்களுக்கு அறங்களை எளிய இனிய நடையில் புலப்படுத்தும் பொருட்டு எழுதப்பட்டது. கல்வி முதல் ஊக்கம் ஈருகப் பதினேரு பொருள்களின் விளக்கம் இந்நூலில் அடங்கும். சில மேற்கோள் பாடல்களும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. viii. 279/1914/I.

R4

**இராமலிங்கசுவாமிகள், சிதம்பரம்**

64. i. *ஜீவகாருண்ய வொழுக்கம் : முதற் பதிப்பு* ; ii. இந்து மதாபிமான சங்கத்தார், நாகப்பட்டினம் ; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. மே, 1914 ; iv. உ. ப. 26 ;

v. 21×14 செ.மீ.; vi. ......; vii. 'சன்மார்க்க விளக்கம்' என்று வேறொரு பெயரும் உண்டு. நூல் முழுவதும் வினாவும் விடையுமாக விளக்கப்பட்டுள்ளது. உயிர்களின் பசியைப் போக்கு வதே சிறந்த அறம் என்று வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளது. நாகப்பட்டினம் இந்து மதாபிமான சங்கத்தாரால் மேற்படி சங்கத்தின 23-வது ஆண்டு விழாக் காலத்தில் பலருக்கும் பயன்படுமாறு வெளியிடப் பெற்றது. viii. 203/1914/III.

R4

**இராமஸ்வாமி ஐயங்கார், எஸ். வி., தஞ்சை**

65. i. நல்லொழுக்க போதம்—முதற் பகுதி: முதற் பதிப்பு; ii. எஸ். வி. இராமஸ்வாமி ஐயங்கார், கும்பகோணம்; கமர்ஷியல் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ. ப. 106; v. 18×13 செ.மீ.; vi. 0–5–0; vii. மாணவர்க்கு நல்லொழுக்கம் உணர்த்த இயற்றப்பட்டது. மாணவர்கள், பழக்க வழக்கங்கள், ஒழுக்கம், உடலோம்பல் முதலியவற்றில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்று விளக்கியுரைக்கிறது. அன்புடைமை, பெற்றோரைப் பேணல், உடன்பிறந்தாரிடத்தில் அன்பு, குருபக்தி, உயிர்களிடம் அன்பு, பிறர் நலம் பேணல் ஆகிய சீரிய பண்புகளைப் பற்றிய பல எடுத்துக்காட்டுகளும், கதை நிகழ்ச்சிகளும் கொண்டு விளக்குவது. viii. 118/1913/I.

R4

66. i. நல்லொழுக்க போதம்—முதற் பகுதி: இரண்டாம் பதிப்பு; ii. கே. நாராயணசாமி ஐயர், கும்பகோணம்; இண்டியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 106; v. 18×12 செ.மீ.; vi. 0–5–0; vii. பள்ளி மாணவர்க்கு நல்லொழுக்கத்தைச் சமய நெறியுடன் கற்பிக்கும் நூல்; ஒழுங்குடைமை, அன்புடைமை என்னும் இருபெரும் பகுதிகள் உள. ஒழுங்குடைமையில் பழக்க வழக்கங்கள், இடவொழுங்கு, காலவொழுங்கு, தூய்மை உடைமை என நான்கு பொருள்கள் பேசப்பட்டுள்ளன. அடுத்துவரும் அன்புடைமையில் பெற்றோரைப் பணிதலும், பேணுதலும், உடன் பிறந்தாரிடத்தில் அன்புடைமை, ஆசிரியர் பற்று, உயிர்களிடம் அன்பு, பிறர் நலம் பேணல் என்னும் ஐந்து பொருள்களும் அடங்கியுள்ளன. viii. 463/1915/III.

R4

67. i. நீதிவாக்கியக் கதைகள் (ஆத்திச்சூடி): முதற் பதிப்பு; ii. கே. நாராயணசாமி ஐயர், கும்பகோணம்; சாரதா விலாஸ பிரஸ், கும்பகோணம்; iii. ஜனவரி, 1913; iv. உ. ப. 40; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0; vii. நல்லொழுக்க போத வர்க்கம் என்னும் தொடர் வரிசையில் இது ஒன்று. பள்ளி

மாணவர்க்கு அறம் உணர்த்த எழுதப்பட்டது. 32 ஆத்திச்சூடித் தொடர்களின் கருத்தை விளக்கும் கதைகள் இதில் உள்ளன. இக்கதைகள் எல்லாம் இதிகாச புராணங்களி லிருந்து எடுக்கப் பெற்றவை. viii. 136/1913/I.

R4

68. i. நீதி வாக்கியக் கதைகள்: இரண்டாம் பதிப்பு; ii. கே. நாராயணஸ்வாமி ஐயர், கும்பகோணம்; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ. ப. 24; v. 18×13 செ.மீ.; vi. 0-1-6; vii. நல்லொழுக்கம் கற்பித்தற் கேற்ற நூல். 'உலக நீதி' நூலிலிருந்து 20 தொடர்களைத் தேர்ந்தெடுத்து ஒவ்வொன்றுக்கும் ஏற்ற ஒரு கதை தரப் பட்டிருக்கிறது. viii. 452/1913/IV.

R4

69. i. நீதிவாக்கியக் கதைகள்: கொன்றை வேந்தன்; ii. கே. நாராயணசாமி ஐயர், கும்பகோணம்; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 36; v. 19×13 செ.மீ.; vi. 0-2-0; vii. முப்பது நீதிக் கதைகள் இதில் அடங்கியுள்ளன. இவை 'கொன்றைவேந்தன்' நூலில் அமைந்த முப்பது அறங்களுக்கு உரியனவாகும். இதில் குறித்த கதைகளுள் பெரும்பாலனவும் இதிகாச புராணங்களிலிருந்து தெரிந்தெடுக்கப் பெற்றனவாம். viii. 1078/1915/IV.

R4

**இலக்குமணப் போற்றிகள், தச்சநல்லூர்**

70. i. நல்லொழுக்கம்: முதற் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; ராமய்யர் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1914; iv. உ. ப. 93; v. 21×14 செ.மீ.; vi. 0-6-0; vii. சாமுவேல் ஸ்மைல்ஸ் எழுதிய "கேரக்டர்" (Character) என்ற நூலின் மொழி பெயர்ப்பு இந்நூல். 'பிரேரக சக்தி', 'இல்லத்தின் சக்தி', 'இணக்கமும் நிதர்சனமும்' என்ற மூன்று பகுதிகளாசப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. பிழை திருத்தப்பட்டியல் ஒன்றும் உண்டு. viii. 32/1914/IV.

R4

**காசி விஸ்வநாத முதலியார், சைதாபுரம் (மொ. து.)**

i. பிராயச்சித்த நிருணய சாத்திர சங்கிரகம். (தொ. எ. 409 பார்க்க); ii. இராஜகோபாலப் பிள்ளை, கோமளபுரம்; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ. ப. 133; v. 21×13 செ. மீ.; vi. 0-12-0; vii. மக்கள் அறிந்தும் அறியாதும் செய்துவிடுகின்ற தீய செயல்களினின்றும் விடுதலை அடைவதற்கு ஏற்ற விதிமுறைகளை விளக்குவது. சாதி

அடிப்படையில் ஒரு தீவினையைப் போக்க வெவ்வேறு வழிகளை இது கூறுவதும் கவனிக்கத் தக்கது. viii. 656/1915/IV.

R4

**இருஷ்ணஸ்வாமி அய்யர், ஏ.**

**71.** i. ஆர்ய மத உபாக்யானம் : நான்காம் பதிப்பு ; ii. ஜெனரல் சப்ளைஸ் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 12+85 ; v. 19×12 செ.மீ.; vi. 0-4-0 ; vii. அறம் உணர்த்த ஏற்ற ஒரு பாட நூல். மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. முதல் பகுதி குடும்பக் கடமைகளைப் பற்றியும், இரண்டாவது அறங்களைப பற்றியும், மூன்ருவது மறங்களைப் பற்றியும் விளக்குகிறது. அறிவுரைகளுக்கு எடுத்துக் காட்டாகப் புராண இதிகாசங்களிலிருந்து 54 கதைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கதையும் எந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டது என்ற குறிப்பும், அக்கதை உணர்த்தும் அறக் கருத்தும் அந்தந்தக் கதை முடிவில் உள்ளன. சில விளக்கப் படங்களும் உள்ளன. viii. 539/1911/II.

R4

**சாமுவேல், ஜி. தாமஸ்.**

**72.** i. நீதி கதா ஆரம் : முதற் பதிப்பு ; ii. சாமுவேல் ஜி. தாமஸ், வேளச்சேரி ; போனிக்ஸ் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ. ப. 105 ; v. 17×13 செ. மீ. ; vi. 0-6-0 ; vii. பள்ளி மாணவர்களுக்கு இது எழுதப் பட்டது. அறமுணர்த்தும் கதைகளைக் கொண்ட இதில் குறள் முதலியவற்றிலிருந்து தொடர்கள் நிறைய வருகின்றன. மற்றும் ஐந்து பெரியவர்களின் வாழ்க்கை வரலாறுகளும் இதில் உள்ளன. viii. 93/1914/IV.

R4

**சாமுவேல் ஐயர், ஞா., தரங்கை**

**73.** i. பெற்றோர் ஒழுக்கம் : முதற் பதிப்பு ; ii. ஞா. சாமுவேல் ஐயர், தரங்கை ; போனிக்ஸ் பிரஸ், மதராஸ் ; iii. செப்டெம்பர், 1913 ; iv. உ. ப. 50 ; v. 14×11 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. பெற்றோர்கள் குழந்தைகளை எவ்வகையில் வளர்க்க வேண்டும் என்று தாய் தந்தையர்க்கு அறிவுரை கூறும் நூல். பிள்ளைப்பேறு பெரிய பேறு, சிறுவர் வளர்ப்புக்கு வழிபாடு அவசியம், தந்தை கடமை சொற்பமல்ல, பெற்றோர் அறிவுரை பிள்ளைக்கு அணிகலம் முதலிய பன்னிரெண்டு தலைப்புகளில் ஒழுக்க நெறியை விரிக்கிறது இந்நூல். viii. 1097/1913/III.

**சுந்தர சுப்பிரமணிய அய்யர், மயில்ரங்கம்**

74. i. திருக்குறள்—நீதிக்கதைகள்: முதற் பாகம்: முதற் பதிப்பு ; ii டி. வி. சுந்தரேச சாஸ்திரியார், சென்னை; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ. ப. 3+128 ; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. திருக்குறளின் இல்லற இயலில் அமைந்துள்ள இருபத்து நான்கு அதிகாரங்களிலிருந்தும் ஒவ்வொரு பாடலைத் தெரிந்தெடுத்து, அவற்றிற்குப் பரிமேலழகர் தரும் விளக்கத்தையும் கொடுத்து, அதன் பின்னர் ஓர் எடுத்துக்காட்டுக் கதையை எழுதுகிறார். இதிலுள்ள கதைகள் இருபத்து நான்கு. viii. 298/1914/II.

R4

**சுப்பைய நாடார், சி. ச., விருதுப்பட்டி**

75. i. இருவர் குடும்ப சம்பாஷணைகள் : முதற் பதிப்பு ; ii. வே. வ. சண்முக நாடார், விருதுப்பட்டி ; சச்சிதானந்தம் அச்சியந்திர சாலே, விருதுப்பட்டி; iii. ஏப்ரல், 1914 ; iv. உ. ப. 16 ; v. 22×14 செ.மீ.; vi. 0–6–0 ; vii. ஒரே பள்ளியில் படித்த ராமன், கோவிந்தன் என்னும் இருவரும் இரயிலில் சென்றபோது நிகழ்ந்த உரையாடலைக் கூறுகிறது. கோவிந்தன் சீரும் செட்டுமான வாழ்க்கையும், இராமன் பொறுப்பற்ற வாழ்க்கையும் உடையவனாக இருத்தல் உரையாடல்கள் வழி தெரிகின்றன. உலகியல் வாழ்க்கைக்கு ஒரு எடுத்துக்காட்டான உரையாடல் இது. இதனால் தெரியவரும் உண்மைகளும் பழமொழிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 205/1914/II.

R4

**தாமஸ் பிள்ளை, டி.**

76. i. மாதரைப் பழியேல் ; ii. பிராக்ரஸிவ் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 32 ; v. 19×13 செ. மீ.; vi. 0–3-0; vii. பெண் குலத்தினை இழிவாகப் பேசும் ஆண்களுக்கு அறிவு புகட்டும்படி அமைந்துள்ளது. பெண் பாலாருடைய இயற்கைப் பண்புகளும் அவர்களால் ஆண்பாலோர் அடையும் நன்மைகளும் இதில் நன்றாகக் கூறப்பெற்றுள்ளன. இடையிடையே மேற்கோள்களாகச் சில பழமொழிகளும், பாடல்களும் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 680/1915/III.

R4

**நாராயண ஐயர், ப. (மொ. து.)**

77. i. ஸந்மார்க்க முறையில் ஹிதோபதேசம்: முதற் பதிப்பு ; ii. ப நாராயண அய்யர், மதுரை; தமிழ்ச் சங்கம் பவர்ப்பிரஸ், மதுரை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 73 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. ‘சன்மார்க்க நெறி இது’ என்றும், அதைக் கடைப்பிடிக்கும் முறை இது என்றும் விளக்கியுரைப்பது.

ஹெலினும்பாள் அம்மையார், தம்முடைய மாணவர்கள் நாள் தோறும் கடைப்பிடிக்கும்படி அருளியவைகளின் சுருக்கம். பொருத்தமான மேற்கோள்கள் அங்கங்கே கொடுக்கப்பட்டுள்ளன. viii. 559/1914/I.

R4

78. i. நீதிப்பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1913 ; iv. உ.ப. 32 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சிறுவருக்கேற்ற அறிவுரைக் கதைகளின் தொகுப்பு: நட்பின் பெருமை, பக்தியின் பெருமை முதலிய பல தலைப்புக்களில் சிறு கதைகள் உள்ளன. இவை பெரும்பாலும் புராண வரலாறு களும், செவி வழிக் கதைகளுமாகும். ஒவ்வொரு கதையின் முடிவிலும் கதையின் கருததை விளக்கும் அறத் தொடர்களும், திருக்குறள் பாடல்களும் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கதையின் தலைப்பும் ஆங்கிலத்திலும் தமிழிலும் கொடுக்கப் பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. நாட்டுப்பற்றை வளர்க்கும் பாடம் ஒன்றும் இதில் அமைந்துள்ளது. ஐந்தாம் ஜார்ஜ் பேரரசருக்கு வாழ்த்து கூறப்பட்டிருக்கிறது. viii. 852/1914/III.

R4

**மீனாக்ஷி அம்மாள்**

79. i. இல்லற ஒழுக்கம் : முதற் பதிப்பு ; ii. மீனாக்ஷி அம்மாள் ; நாடியம்மன் பிரஸ். பட்டுக்கோட்டை ; iii. செப்டம்பர் 1913 ; iv. உ.ப. 95 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. பெண்கள் குடித்தனத்தைச் சீராய் நடத்தவும், பிள்ளைகளை நல்ல முறையில் வளர்க்கவும் பல அறிவுரைகள் தரும் நூல். குடித்தன முறை, குழந்தைகளின் வளர்ப்பு, ஒற்றுமை வேண்டும் முதலிய பதினைந்து பொருள்களை இதில் விளக்கியுள்ளார். ஒவ்வொரு பொருளையும் எடுத்துக்காட்டுகள் பல தந்து விளக்கியுள்ளார். viii. 210/1913/IV.

R4

**முத்துசுவாமி நாயுடு, ஆர்., காஞ்சிபுரம்**

80. i. மாதரொழுக்க நீதி போதினி : முதற் பதிப்பு ; ii. ஆர். முத்துசுவாமி நாயுடு; டார்லிங் அச்சியந்திரசாலை, பாளையங் கோட்டை ; iii. செப்டம்பர், 1912 ; iv. உ.ப. 54 ; v. 22×15 செ.மீ. ; vi. 0–4–0 ; vii இந்து அற நூல்களின் சிறப்புக்களைத் தொகுத்து இம் 'மாதரொழுக்க நீதிபோதினி' எழுதப்பெற்றிருக் கிறது. பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பொருளையும் நன்கு விளக்கியுள்ளார். உடலுறுப்பிலக்கணம், திருமணம் பற்றிய செய்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. "மாதர் ஆடவர் ஒழுக்க இயல்", "மாதர் ஆடவர் நீதி", "மாதர் ஆடவர் தருமம்" என்னும் பகுதிகள் ஆண், பெண்களின் ஒழுக்க நெறிகளை விவரித்துரைக்கின்றன. viii. 43/1912/IV.

R4

**முத்துசுவாமி பிள்ளை, டி., உடன்குடி**

81. i. ஒழுக்க விளக்கம்—1 ; முதற் பதிப்பு ; ii. பு. முத்து சுவாமி பிள்ளை, உடன்குடி ; ரா. விவேகானந்தா பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 35 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–2–0 : vii. பெரியாரைத் துணைக்கோடல், பொறை, வாய்மை என்னும் மூன்று ஒழுக்க நெறி பற்றிய கட்டுரைகள் இதில் உள்ளன. சான்றுகளாக ஆங்காங்குச் சில இனிய பழம் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாசிரியர் தமிழாசிரியர்களான யாழ்ப்பாணத்து நல்லூர் சா. பொன்னம் பலப் பிள்ளை, சிதம்பரம் வே. தில்லை நாயக முதலியார் இரு வரையும் முகவுரையில் சுட்டி, அவர்கள் தந்த ஊக்கத்திற்கு நன்றி தெரிவித்துள்ளார். viii. 100/1914/III.

R4

**ராஜகோபால் அய்யங்கார், வி.**

82. i. கதைக்கொத்து—மலர் 1; ii. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1915 ; iv. உ.ப. 40 ; v. 19×13 செ. மீ.; vi. 0–2–0 ; vii. பல அறக் கதைகள் அடங்கிய நூல். 'உலக நீதி' என்னும் அற நூல் தொடர்கள் இருபதிற்கு, ஏற்ற கதைகள் இதில் உள்ளன. படங்களுடன் கூடியது. viii. 731/1915/III.

R4

83. i. கதைச்கொத்து—மலர் 2 ; ii. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1915 ; iv. உ. ப. 66 ; v. 18×12 செ.மீ.; vi. 0–3–0 ; vii. அறக் கதைகள் பலவற்றைக் கூறுகின்றது இந்நூல். 'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்' போன்ற அற நூல்களில் அமைந்த சில தொடர் களுக்கு ஏற்ற கதைகள் இதன் கண் உள. படங்களுடன் கூடியது. viii. 729/1915/III.

R4

**ரோச், டி. (தொ.து.)**

84. i. நல்லொழுக்கம் : எட்டாம் பதிப்பு ; ii. ஜோசப் ஐயர்; செயின்ட் ஜோசப் இன்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 91+2 ; v. 13×19 செ.மீ.; vi. 0–1–6 ; vii. பள்ளிக்கூடங்களிலும் மடங்களிலும் பயின்று வரும் பிள்ளைகளுக்காக எழுதப்பட்டது. நல்லொழுக் கத்துக்கு மாறுபட்டு பிள்ளைகள் செய்யும் குற்றம் குறைகளை எடுத்துக் காட்டி, அவற்றைத் தவிர்க்கும் வழிகளையும் உரைக் கின்றார். 'சுகவழி' 'அன்னபானம்', 'நித்திரை', 'நடையுடை பாவனை, முதலிய பதினொரு பொருள்கள் பற்றி உரைப்பது இந்நூல் இறுதியில் நல்லொழுக்கப் பூங்கொத்து என்னும்

தலைப்பில் உலக நீதி, நல்வழி, முதுமொழிக் காஞ்சி முதலிய அறநூல் பாடல்கள் சில தொகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 363/1913/IV.

R4

**வெங்கடேச்சுவர அய்யர், எம்.ஏ., மேலாறுகோடு**

85. i. பார்வதீயம் என்னும் பாலிகா பூஷணம்: முதற் பதிப்பு; ii. கெ. எ. வெங்கடாசல சாஸ்திரிகள் & எம். ஏ. வி. ஐயர் & கம்பெனியார், மேலாறு கோடு; கார்டியன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. செப்டெம்பர், 1911; iv. உ.ப. 12+117: v. 18×12 செ.மீ.; vi. 0-8-0; vii. இல்லறத்தைப்பற்றி எடுத்துரைப்பது. இந்நூல் இளம் பெண்களும், ஆடவர்களும் பொதுவாய் நடந்துகொள்ளவேண்டிய நடவடிக்கைகளையும், அறவழிகளையும் விவரிக்கிறது. பெண்கள் தம் கணவனிடத்திலும், வீட்டிலும், பொதுவாகபிறரிடத்திலும், சுற்றத்தாரிடத்திலும் நடந்து வரவேண்டிய முறைகளையும், கற்புடைய பெண்கள், தீய பெண்கள், தீய இளைஞர்கள் ஆகிய இவர்களுடைய பண்புகள் செய்கைகள், முதலியவற்றையும், மாமியார்கள் மாட்டுப் பெண்களைக் கொடுமைப்படுத்தும் தன்மை முதலிய பல அரிய செய்திகளையும் செந்தமிழ் நடையில் கூறும் நூல். viii. 199/1911/IV.

R4

**வேதாந்த இராமானுஜாசாரி, (மொ. து.)**

86. i. சேஷதருமம்—முதற் பதிப்பு; ii. தி. சாமிநாத சாஸ்திரி; சாஸ்திர சஞ்சீவினி அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்டு, 1913; iv. உ. ப. 299; v. 22×14 செ. மீ.; vi. 1-8-0; vii. மகாபாரதத்தின் சில பருவமாகிய ஸ்ரீ ஹரிவம்சத்தின் ஈற்றிலுள்ள 'சேஷதருமம்' என்பதன் தமிழ் மொழி பெயர்ப்பு. ஆகொடை, நிலக்கொடை முதலிய கொடைப் பெருமையும், குலவொழுக்க நியதிகள், தீச் செயல்கள், நரகத்தின் தன்மைகள், விளைவுகள், கழுவாய்கள், பல கோயில் குலத்தின் பெருமைகள், சிவ விஷ்ணு விழாக்கள், பெரியோர்களின் வரலாறுகள் ஆகியவற்றையும் விளக்கியுரைப்பது. 57 உட்பிரிவுகள் கொண்டது. viii. 605/1913/III.

R4

## 170 [1] குழந்தைகட்கான அறநூல்கள்

**அதிவீரராமபாண்டியர்**

87. i. வெற்றி வேற்கை—முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. செ.மு.உ.எ. 74; v. 18×13 செ. மீ.; vi. 0-0-6 vii. இந் நூலுக்கு நறுந்தொகை என்றும் ஒரு

பெயருண்டு. கொன்றை வேந்தனைப் போன்று அமைந்த பாடல் முறை இதில் உள்ளது. பாடல்களுக்கு உரிய சொற் பொருளும், கருத்துரையும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ் பதிப்பகத்தார் சிறுவர்களுக்காக வெளியிட்ட கதை நூல்களின் பட்டியலொன்று இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 835/1914/II.

R4

i. வெற்றி வேற்கை—மூலமும் உரையும் ; (தொ. எ. 93 பார்க்க): முதற் பாகம்; ii. மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம் ; சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ. மூ. உ. எ. 2+84 ; v. 17×13 செ. மீ. ; vi. 0–1–0 ; vii "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" முதலிய 84 பாடல்களை உரையுடன் கொண்டுள்ளது இந் நூல். இதற்கு "நறுந் தொகை" என்றும் ஒரு பெயர் உண்டு. இதன் முடிவில் 'தமிழ்' என்னும் தலைப்பில் வட மொழி தென் மொழி ஆகியவற்றின் சிறப்புக்களும் விளக்கப் பட்டுள்ளன. viii. 635/1915/I. R4

**உலகநாதன்**

i. உலகநீதி—முதற் பதிப்பு ; (தொ.எ. 1380 பார்க்க) ii. சித்தி விநாயகர் அச்சுக்கூடம் ; iii. செப்டம்பர், 1913 ; iv. செ.மூ. எ. 13 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. எளிமையாக அறங்களை உரைக்கும் ஒரு நூல். 'உலக நீதி புராணம்' என்றும் "உலகநாதன் உண்மையாய்ப் பாடிவைத்த உலக நீதி" என்றும் இந் நூற் பெயர் காணப்படுகின்றது. இதில் உள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் "மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே" என்று முடிவுறுகின்றது. 'ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம்' எனத் தொடங்கி இவை இவை செய்யக்கூடாது என விளக்குகின்றது. viii. 13/1913/IV.

R4

**ஔவையார்**

88. i. விவேகானந்தம்–I : ஆத்திச்சூடி [விவேகானந்தம்–II கொன்றைவேந்தன்] ; ii. டி. எஸ். இராமசுப்பையர், மதுரை ; விக்டோரியா அச்சுக் கூடம், மதுரை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ.மூ.உ.எ. 1+108 ; v 20×15 செ. மீ., vi. 0–1–9 ; vii. சிறு பிள்ளைகளுக்குக் கல்வியையும், ஞான நெறியையும் எளிதில் அறியுமாறு புலவர்கள் செய்த நூல்களை உரையுடன் தொகுதி தொகுதியாக வெளியிடும் நூல் தொடருக்கு 'விவேகானந்தம்' என்று பெயர் சூட்டியுள்ளார். இவற்றுள் முதல் நூலில் ஆத்திச்சூடியும் ஔவையார் வரலாற்றுச் சுருக்கமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதற்குச் சொற் பொருளும் கருத்துரையும் எழுதியவர் பதிப்பாசிரியராகிய டி. எஸ். இராமசுப்பையர் என்பவராவர். viii. 331/1912/IV.

R4

89. i. ஆத்திச்சூடியும் காண்டிகையுரையும்: முதற் பதிப்பு; ii. கோவிந்தராஜ முதலியார் & பெ. ஆதிமூலம் செட்டியார்; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1913; iv. செ. மூ. உ. எ. 109; v. 19×13 செ. மீ.; vi. 0-4-0; vii. ஆத்திச்சூடிக்கு இயற்றமிழ் ஆசிரியர் இராமானுஜக் கவிராயர் எழுதிய காண்டிகையுரையும் தரப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பாடலுக்கும் ஒத்த திருக்குறள் பாடல்கள் இவ்வுரையில் எடுத்தாளப்பட்டிருக்கின்றன, மேலும், இராமானுஜக் கவிராயர், கொன்றைவேந்தன், வெற்றி வேற்கை நூல்களுக்குக் காண்டிகை யுரையும், நன்னூலுக்கு விருத்தியுரையும் செய்துள்ளார் என்ற குறிப்பும் இந்நூலால் தெரியவருகிறது; viii. 742/1913/I.

R4

i. ஆத்திச்சூடி—மூலமும் உரையும்: (தொ. எ. 93 பார்க்க); ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ உ.எ. 1+108; v. 17×13 செ. மீ.; vi. 0-6-0; vii. "அறஞ்செய விரும்பு" முதலிய 108 பாடல்கள் உரையுடன் தரப்பட்டுள்ளன. இப் பாடல்கள் அகர வரிசையில் அமைந்தவை. இதன் இறுதியில் 'விவேக விளக்கம்' என்னும் தலைப்பில் உரை நடையில் 30 அறவுரைத் தொடர்கள் கொடுக்கப் பட்டுள்ளன; viii. 635/1915/I.

R4

i. விவேகாநந்தம்—II: கொன்றை வேந்தன் (தொ. எ. 88 பார்க்க); ii. டி. எஸ். இராமசுப்பையர், மதுரை; விக்டோரியா அச்சுக்கூடம், மதுரை; iii. அக்டோபர், 1912; iv. செ.மூ.உ.எ. 1+91; v. 20×15 செ.மீ.; vi. 0-1-9; vii. விவேகாநந்தம் நூல் தொடர் வரிசையில் இது இரண்டாவது. இதற்குச் சொற்பொருளும், கருத்துரையும பதிப்பாசிரியர் டி. எஸ். இராம சுப்பையர் எழுதியுள்ளார்; viii. 331/1912/IV.

R4

i. கொன்றைவேந்தன்—மூலமும் உரையும்: (தொ.எ. 93 பார்க்க); ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. டிசம்பர், 1914; iv. செ மூ. உ. எ. 1+91; v. 17×13 செ.மீ.; vi. 0-6-0; vii. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" தொடங்கி "ஓதாதார்க்கில்லை உணர்வொடு ஒழுக்கம்" என்பது ஈறாக 91 பாடல்களை உரையுடன் தருகிறது இந் நூல். இதன் இறுதியில் "பெரியோரைப் பேணல்" என்பது பற்றிய உரை நடையும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் தாய் தந்தை முதலான பெரியோர்களை எவ்வாறு பேணவேண்டும் என்பது பற்றி ஆசிரியர் பற்பல சான்றுகள் காட்டி விரித்துள்ளார்; viii. 635/1915/I.

R4

90. i. நல்வழி—மூலமும் உரையும்—முதற் பதிப்பு ; ii. டி. எஸ். இராமசுப்பையர், மதுரை ; விக்டோரியா அச்சுக்கூடம், மதுரை ; iii ஜூலை, 1911 ; iv. செ.மூ.உ.எ. 40 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. ஔவையார் அருளிய அறநூல்களில் இது ஒன்று. இதில் உள்ள 37, 38, 39 பாட்டுகள் வேதாந்த, தத்துவப் பொருள் அமைந்து சிறுவர்களின் அறிவிற்கு எட்டாதவைகளாய் இருப்பதால் அவற்றைப் பதிப்பில் விடுத்துள்ளார். ஔவையார் வரலாறு முதலில் உள்ளது. மதுரை கல்லூரி டி. எஸ். இராமசுப்பையர் என்பார் இயற்றிய உரை இதற்கு அமைந்துள்ளது; viii. 288/1911/III.

R4

i. நல்வழி—மூலமும் உரையும் : (தொ. எ. 93 பார்க்க) ; ii. மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம் ; iii. 1914 ; iv. செ.மூ.உ.எ. 1+40 ; v. 17×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. வாழ்க்கைக்குப் பயன்படும் பல கருத்துகளை 40 வெண்பாக்களில் தருகிறது இந்நூல்; viii. 635/1915/I.

R4

91. i. நல்வழி ; ii. ஆர். வெங்கடேஸ்வர் ; ஆநந்தா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ. மூ. உ. எ. 40; v. 18×12 செ. மீ. ; vi. 0–0–6 ; vii. வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத அறிவுரைகளும், நன்னெறி விளக்கங்களும் 40 பாடல்களில் விளக்கப்பட்டுள்ளன. பாடல்களுக்குப் சொற்பொருளும் கருத்துரையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன; viii. 314/1915/IV.

R4

92. i. மூதுரை : மூன்றாம் பதிப்பு; ii. நாகு அய்யர், மதுரை, விவேகபானு அச்சியந்திர சாலை, மதுரை ; iii. ஜூலை, 1911; iv. செ.மூ.உ.ப. 17+47; v. 16×13 செ.மீ ; vi. 0–2–0; vii. ஔவையார் அருளிய அற நூல்களில் இது ஒன்று. பதிப்பாசிரியர் மதுரை, திரிசிரிபுரம், திருநெல்வேலி முதலிய மாவட்டங்களில் இருந்து கிடைத்த பழைய ஏடுகளை ஆய்ந்து வெளியிட்டுள்ளார். சரவணப் பெருமாளையர், ஆறுமுக நாவலர் ஆகியோர்கள் பாடமாகக் கொண்ட செய்யுட்களையே இவரும் கொடுத்துள்ளார். ஏடுகளில் காணப்பட்ட வேறு பாடல்களில் எல்லா ஏடுகளிலும் உள்ள திருந்திய வடிவுள்ள மூன்று பாடல்களைப் பிற்சேர்க்கையாகக் காட்டியுள்ளார். ஏடுகளில் காணும் பாட மாறுபாடுகளையும் அங்கங்கே கொடுத்துள்ளார். ஔவையார் வரலாற்றுச் சுருக்கம் நூல் முகப்பில் தரப்பட்டிருக்கிறது. அரியூர் எஸ். சாமிநாத அய்யர் இயற்றிய இதன் உரை, கருத்துரையும் சொற்பொருளுமாய் அமைந்துள்ளது. viii. 283/1911/III.

R4

i. மூதுரை என்று வழங்குகின்ற வாக்குண்டாம்—மூலமும் உரையும் (தொ. எ. 93 பார்க்க); ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.உ.எ. 1+30; v. 17×13 செ.மீ; vi. 0–6–0; vii. பல அறக்கோட்பாடுகளைக் கொண்டுள்ளது இந்நூல். 30 வெண்பாக்களால் ஆகியது. இதன் இறுதியில் காலப் பிரமாணம், பற்றிய விளக்கமும் கொடுக்கப்பட்டிருக்கிறது; viii. 635/1915/I.

R4

**ஔவையார் முதலியோர்**

93. i. *நீதி நூற்* கொத்து—மூலமும் உரையும்: முதற் பாகம்; [ஆத்திச்சூடி முதல் நன்னெறி ஈறுக 6 நூல்கள்]; ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.உ.எ. 401; v. 17×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இதில் ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை, மூதுரை—நல்வழி, நன்னெறி ஆகியவை அடங்கியுள்ளன. உரையுடன் ஆசிரியர் குறிப்பும் தரப் பட்டுள்ளன; viii. 635/1915/I.

R4

**குமரகுருபர சுவாமிகள்**

94. i. *நீதி நெறி* விளக்கம்: மூலமும் உரையும்: முதற் பதிப்பு; ii. கா.ர. கோவிந்தராஜ முதலியார், ரிப்பன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1914; iv. செ.மூ.உ.எ. 102; v. 17×13 செ.மீ; vi. 0–5–0; vii. நீதி நெறி விளக்க மூல பாடமும் அதனுடைய பொருளும், குறிப்புக்களும் அடங்கிய நூல் ஒழுக்க நெறியைப் பற்றிய இலக்கியப் படைப்பாகும். ஒவ் வொரு பாட்டுக்கும் ஏற்ற தலைப்பு அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் உரை, சொற்பொருளாகவும், விரிவுரையாகவும் எழுதப் பட்டிருக்கிறது. இவ்வுரையை ஆக்கியவர் கோமளபுரம் இராச கோபாலப்பிள்ளையாவர். இவர் வரலாறும், இவர் காலத்து விளங்கிய பிற புலவர்களின் பெயர்களும் முகவுரையால் தெரியவருகின்றன. இதில் கொடுக்கப்பட்டிருக்கும் குமரகுருபரர் வரலாற்றை எழுதியவர் பொம்மபுர ஆதீனம் இராமலிங்க சுவாமிகளாவர்; viii. 1015/1914/III.

R4

**சிதம்பரம் பிள்ளை, வ. உ.**

95. i. மெய்யறம்: முதற் பதிப்பு; ii. வ.உ. சிதம்பரம் பிள்ளை; புரொக்ரஸிவ் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1914; iv. செ.மூ.எ. 1250; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. உலகியல் பொதுவறங்களை ஓரடிக் கவிதையால் தரும் அற நூல். 'வள்ளுவர் மறையின் வழி நூல் மெய்யறம்' என்று

ஆசிரியர் கூறுகிறார். எனவே இது திருக்குறளைப் பின்பற்றிய வழிநூல் என்பது புலனாகும். திருக்குறளைப் போன்றே ஓர் அதிகாரத்துக்குப் பத்துப் பாடல்களாக அமைத்துள்ளார். 'மாணவர் கடமை' முதல் 'மெய்நிலை அடைதல்' ஈறாக 125 அதிகாரங்கள் உள்ளன. அருஞ்சொற்பொருள் சேர்க்கப் பட்டிருக்கிறது. சகஜாநந்தன் என்பார் இதற்குச் சிறப்புப் பாயிரம் அமைத்துள்ளார். ஆசிரியர் கண்ணனூர்ச் சிறை யிலிருந்த காலத்தில் இது எழுதப்பட்டது என்பதை 'விரோதி இருதுவில் விளம்பப் பெற்றது. கண்ணனூராரணமனை யெண்ணி யாத்தகளம்' என்ற அடிகள் விளக்குகின்றன; viii. 457/1914/III.
R4

**சிவப்பிரகாச சுவாமி, துறைமங்கலம்.**

i. நன்னெறி—மூலமும் உரையும் : (தொ. எ. 93 பார்க்க); ii. மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர்; 1914 ; iv. செ.மூ.உ.எ. 1+40 ; v. 17×13 செ.மீ. ; vi. 6–1–6 ; vii. பல சீரிய கருத்துக்களைக் கொண்ட 40 வெண்பாக்களை உடையது இந்நூல். 'மின்னெறி சடாமுடி விநாயகன் அடி தொழ, நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே' என்னும் காப்புச் செய்யுளால், இந்நூல் 40 வெண் பாக்களைக் கொண்டது எனத் தெரிகிறது; viii. 635/1915/I.
R4

**முத்துக்குமார பிள்ளை, தி. கும்பகோணம்**

96. i. ஆத்திச்சூடி அந்தாதி : முதற்பதிப்பு ; ii. பொன்னுசாமி ஆழ்வார், கும்பகோணம் ; ஸ்டாண்டர்டு அச்சுக்கூடம், கும்ப கோணம் ; iii. ஜூலை, 1912 ; iv. செ.மூ.உ.எ. 108 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஒளவையார் அருளிய அற நூல்களுள் ஒன்றாகிய ஆத்திச்சூடியிலுள்ள அறத்தொடர் கள் ஒவ்வொன்றிற்கும் தக்க உவமை எடுத்துக் கூறி விளக்கம் தந்து, ஒவ்வொரு தனிப்பாடலாகச் செய்துள்ளார். பாரதம், இராமாயணம், பெரியபுராணம், திருக்குறள், அரிச்சந்திர புராணம் முதலிய பல நூல்களிலிருந்து ஆசிரியர் தக்க எடுத்துக்காட்டுகள் அமைத்துத் தமது கவியுள் காட்டியுள்ளார். பாடல்களுக்குக் கருத்துரையும் தரப்பட்டிருக்கிறது. ஒளவையார் அறத்தொடர்கள் ஈற்றில் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 421/1912/III.
R4

## 170 [1] அறநூல் : சதகம்

**அம்பலவாணக்கவிராயர், தில்லையாடி**

97. i. அறப்பளீசுர சதகம் ; ii. பு. க. ஸ்ரீநிவாஸாசாரியார், வேலூர் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. ஜூலை, 1912 ; iv. செ. மூ. உ. எ. 51 ;

v. 18×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இது உலகியல் அறங்களை எடுத்துக் காட்டும் நூல். சதுரகிரி என்ற இடத்திலுள்ள அறப் பளீசுரம் என்னும் கோயிலுள் விளங்கும் சிவபெருமானது திருப்பெயர்களைச் செய்யுள் தோறும் அமைத்துப் பாடப்பெற்ற நூறு பாடல்கள் கொண்ட நூல். சிறுவர் கற்றற்கு ஏற்காத காதற் சுவை செய்திகளும் மற்றும் சில இடக்கர்களும் அடங்கிய பாடல்களைப் பதிப்பாசிரியர் விலக்கி, அருஞ்சொல்வுரையும் எழுதி இதனை வெளியிட்டுள்ளார். மாணவர்களின் பொருட்டாகவே இப்பதிப்பு வெளியிடப் பெற்றிருக்கிறது. இதன் ஆசிரியர் சீகாழி அருணைசலக் கவிராயரது மூத்த புதல்வர் என்றும், 160 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் என்றும் குறிக்கப் பெற்றிருக்கிறது; viii. 336/1912/III.

R4

98. i. அறப்பளீசுர சதகம் (சிறுவர்க்கென்று தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுள்களின் திரட்டு—அரும்பதவுரையுடன்—2-ம் பதிப்பு) ; ii. பு.க. ஸ்ரீநிவாஸாசாரியார், அப்பாஸ் அண்டு சன்ஸ் அச்சுக் கூடம், வேலூர் ; iii. 1914 ; iv செ.மூ.உ.ப. 50 ; v. 18×12 செ.மீ ; vi. 0–2–0; vii..........; viii. 506/1914/IV.

R4

**அரங்கசாமிக் கவிராயர், ப.**

99. i. பழனிமலை முருகேசர் சதகம் ; ii. நித்ய கல்யாண சுந்தரம் பிரஸ், ஈரோடு, iii. 1913 ; iv. செ.மூ.ப. 31 ; v; 21×13 செ.மீ. ; vi............; vii. 'பத்தர் குண நேசனே நித்த மண வாசனே பழனிமலை முருகேசனே' என மகுடமிட்ட பாடல்களைக் கொண்டது. பலவகை அறமுரைப்பது; viii. 633/1913/II.

R4

**அரிதாசர், புஸ்பகிரி**

100. i. ஸ்ரீ வேங்கடேச சதகம்; ii. பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1913 ; iv. செ.மூ.ப. 31+1; vi. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. 'ஜகதலந் தொழுமடியார் மனதிலுறை பகவனே ஸ்ரீ வெங்கடேச குருவே' என்ற மகுடமுடைய பாடல்களைக் கொண்டது. இறுதியில் ஸ்ரீ அலர்மேன் மங்கையந்தாதி 7 கட்டளைக்கலித் துறைகளில் அமைந்து உள்ளது. மணிமங்கலம் திருநாவுக்கரசு முதலியாரால் ஆராயப்பட்டது ; viii. 74/1915/II.

R4

**குருபாததாசர், திருபுல்வயல்**

101. i. குமரேசர் சதகம் ; ii. சுவாமிநாத பண்டிதர்; வண்ணை நகர்; சைவ வித்தியானுபாலன யந்திரசாலை, சென்னை ; iii. 1911 iv. செ. மூ. ப. 62 ; v. 14×10 செ. மீ.;

vi. 0–2–0; vii. 'மயிலேறி விளையாடு குகனே, புல் வயனீடு மலைமேவு குமரேசனே' என்ற ஈற்றடியைக் கொண்ட பாடல்கள் அமைந்துள்ளன. பல்வேறு அறம் உரைப்பது; viii. 155/1911/III.

R4

102. i. குமரேச சதகம்: (சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுட்டிரட்டு) (அரும் பதவுரையுடன்); ii. பு.க. ஸ்ரீநிவாஸாசாரியார்; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1912; iv. செ.மூ.உ. 75; v. 18×12 செ.மீ.; vi. 0-2-6; vii......; viii. 124/1912/IV.

R4

103. i. குமரேச சதகம் (சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுட்களின் திரட்டு) (அரும் பதவுரையுடன்); ii. பு.க. ஸ்ரீநிவாஸாசாரியார்; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1914; iv. செ.மூ.உ.ப. 73; v. 18×12 செ.மீ.; vi.0-2-6; vii.....; viii. 215/1914/III.

R4

**சிதம்பரப் பிள்ளை, சேலம்**

104. i. கயிலாச நாதர் சதகம்; ii. ரிப்பன் அச்சியந்திர சாலை, மதராஸ்; iii. 1913; iv. செ.மூ.உ.ப. 66; v. 16×12 செ.மீ.; vi. 0–2–0; vii.......; viii. 461/1913/IV.

R4

**திருவேங்கடம் பிள்ளை, பொம்மணப்பாடி**

105. i. மாந்தை நகராதிபதி சதகம்; ii. கொ. கன்னியப்பாச்சாரி, சென்னை, விஸ்வகுலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை; iii. 1913; iv. செ.மூ.உ.ப. 168; v. 16×10½செ.மீ.; vi.0–6–0; vii. மாந்தை நகர் வேந்தனை முன்னிலைப்படுத்திப் பாடப்பட்ட சதகம். பலவகை அறம் உரைப்பது. அருக மதக் கோயில், கிறிஸ்துவரும் முகமதியரும் முதலிய தலைப்புகளிலும் பாடல்கள் உள. ம. இராஜகோபாலப் பிள்ளையர்வகள் உரையெழுதியுள்ளார்; viii. 941/1913/I.

R4

**நமசிவாய நாவலர்**

106. i. மயிலாசல சதகம்; ii. மஹாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1911; iv செ.மூ.ப. 36; v. 21×13 செ.மீ; vi........; vii. 'மயிலை கண்படு கமலவயலைகண்டுறை நாரை மயிலை சண்முக தேவனே' என்ற ஈற்றடி அமைந்த பாடல்களைக்கொண்ட நூல், உறங்கி விழித்த பின்னர் வழிப்

பட வேண்டிய தெய்வங்கள், எவ்வெத் தெய்வங்களை எவ் வெப் பொருள்களைக் கொண்டு வழிபட வேண்டும் முதலிய செய்திகள் கூறப்பட்டு உள்ளன; viii. 258/1911/IV.

R4

**நாராயண பாரதி, வெண்மணி**

107. i. திருவேங்கட சதகம் (சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுட் டிரட்டு—அரும் பதவுரையுடன்); ii. பு. க. ஸ்ரீநிவாஸா சாரியர்; வாணிநிகேதன், அச்சியந்திர சாலை, வேலூர்; iii. 1912 ; iv. செ.மூ. உ. ப. 47 ; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0 ; vii. ''மணவாள நாராயணன் மனதிலுறையலர்மேலு மங்கை மணவாளனே வரதவேங்கட ராயனே'' என்ற ஈற்றடி கொண்ட பாடல்களை உடையது; பலவகை அறம் உரைப்பது; viii. 236/1912/II.

R4

**பகீர் முகம்மது புலவர்**

108.. i. திரு முகம்மது நபி சதகம் (முதல் பதிப்பு) ;ii. முகம்மது மாதார்சா மரைக்காயர்; கிருஷ்ணவிலாச அச்சுக்கூடம், திருப்பாதிரிப்புலியூர்; iii. ......; iv. செ.மூ.ப. 52 ; v. 21×13 செ.மீ.; vi. 0–2–0; vii. "மாதவர்களாதி துதிவோது ஒரு நீதி திரு தூதர்" மகுமூது நபியே, என்ற ஈற்றடி கொண்ட பாடல் கள் அமைந்தது. ஆக்கை நிலையாமை, உயிரிலிழிவு, வேசிகள் நடவடிக்கை, கயவர் குணம் முதலிய பலவகைச் செய்திகளைப் பற்றி உரைப்பது; viii. 88/1911/III.

R4

**முத்தப்ப செட்டியார், நேம நகரம்**

109. i. ஜெயங்கொண்டார் சதகம்; ii. நாராயணஞ் செட்டியார், நேம நகரம், ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1913 ; iv. செ.மூ.ப. 36+26 ; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0; vii. இதன்கண் ஜெயங்கொண்டார் சதகம், ஏழு நகரத்தார் பெயராற் பாடிய திருமுக விலா சம் ஆகிய இரு நூலகள் உள்ளன. நேமநகர் செயங்கொண் டாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பெற்றது. வான்மீகர் கதை முதல் வரரிஷி கதை ஈறாக நூறு கதை களைக் கூறி அறம் உரைப்பது ; viii. 463/1913/IV.

R4

**முத்துஸாமிக் கவிராயர்**

110. i. வடிவேலர் சதகம் (பாயிரம், குறிப்புரை அநுபந்தம் முதலியவைகளுடன்); ii. ஆதர்ஸ் அண்ட் பப்ளிஷர்ஸ் ஏஜன்ஸி, சென்னை; பி. எம். ராமையர் அண்டு கோ பிரிண்

டர்ஸ், சென்னை; iii. 1915 ; iv. செ.மூ.உ.ப. 91 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-8-0 , vii. பலவகை மாந்தர் இயல்பும், தரும வகைகளும், தீயபெண்டிர், பண மகிமை முதலிய பலவகைச் செய்திகளும் கூறப்பட்டுள்ளன; viii. 402/1915/IV.

R4

**ரெங்கசாமி அய்யங்கார், காண்டூர்**

**111.** i. *திருநெல்வாயிலரத் துறை என்று வழங்கும் திருவரத் துறை நாத சதகம்*; **ii.** ரெங்கசாமி அய்யங்கார், காண்டூர், சண்முக சுந்தர விலாச அச்சியந்திர சாலை, சிதம்பரம்; **iii.** 1911; **iv.** செ. மூ. ப. 26; **v.** 21×13 செ.மீ; **vi.** 0–4–0; **vii.** இல்லறத்தானுக்கு ஆசிரம பலன், கலியுக வியல்பு, சிவ தரிசன பலன் முதலிய பலவகைச் செய்திகளைப் பற்றிக் கூறுவது; **viii.** 368/1911/II.

R4

**லாட முத்துடையார், அ., எடையூர்**

**112.** i. *நல்லூர் நல்ல நாயகீஸ்வரர் சதகம்* ; ii. விநாயக சுந்தர விலாசம் பிரஸ், சிதம்பரம்; iii. 1914; iv. செ. மூ. ப. 26; v. 21×14 செ. மீ. ; vi...... ; vii. பலவகை மாந்தரியல் பும், இராகு காலமறியும் விதி, குளிகை காலமறியும் விதி, தாசியுறவு முதலிய பலவகைச் செய்திகளும் கூறப்பட்டுள்ளன; viii. 1005/1914/I.

R4

## 170 [1] திரட்டு நூல்கள்

**அப்பாதுரை முதலியார், சோ. ப**

**113.** i. *இகபர ரகசியம் என்னும் இல்லற பூஷணம் (முதற் பாகம்)* ; ii. சூ. இராஜரத்தினம் ; வாணி நிலைய அச்சுக்கூடம், சென்னை ; iii. 1914 ; iv. செ.மூ.உ.ப. 124 ; v. 18×12 செ. மீ.; vi. 0–6–0 ; vii. மனதின் சிறப்பு கூறல், இன்சொல், அறிவு உள்ளோர் தன்மை, புல்லர் குணம் முதலிய பலவகைச் செய்திகளைப் பற்றி உரைப்பது. பலவகைப் பாடல்கள் பயின்று வந்துள்ளன. இறுதியில் கயிலாசநாதர் சதகமும், தாயுமானவர், பட்டினத் தார் ஆகியோர் பாடல்களும் கொடுக்கப்பட்டு உள்ளன ; viii. 62/1915/I.

R4

**கோவிந்தராஜ முதலியார், கா. ர. (தொ. து.)**

**114.** i. *நீதிச் செய்யுட் டிரட்டு (இரண்டாம் பதிப்பு)* ; ii. கா. ர. கோவிந்தராஜ முதலியார், கலாரத்நாகரம் அச்சுக்கூடம் ; iii. 1913 ; iv. செ.மூ.ப. 22 ; v. 18×12 செ மீ.; vi. 0-2-0 ;

vii. கடவுள், பெற்றோரைப் பேணல், ராஜ பக்தி, மாணவர் கடமை, பொருட் சிறப்பு முதலிய 20 தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. பாடல்கள், குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, கம்பராமாயணம், வளையாபதி, குசேலோபாக்கியானம் முதலிய பல நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை; viii. 405/1913/III.

R4

**சுந்தர முதலியார், மு. (தொ. து.)**

115. i. இராமாயண நீதி கவித் திரட்டு; ii. சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1913; iv. செ.மூ.ப. 30+5; v. 18×12 செ.மீ.; vi 0–2–0; vii. சிறியோர் பெண்ணுரை நீக்கார், எற்பதிகழ்ச்சி, கற்புக்கு நிகர் வேறொன்று மில்லை முதலிய 110 தலைப்புகளில் 110 கம்பராமாயணச் செய்யுட்கள் திரட்டித் தரப்பட்டுள; viii. 106/1913/I.

R4

116. i. **விவேக சிந்தாமணி**—(சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுட்டிரட்டு—அரும்பதவுரையுடன்); ii. சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1912; iv. செ.மூ.உ.ப. 32; v. 18×12 செ. மீ.; vi. 0–1–6; vii. 45 விவேக சிந்தாமணிச் செய்யுட்கள் உரையுடன் தரப்பட்டுள்ளன. 4 கம்ப ராமாயணச் செய்யுள்களும், ஸ்ரீநிவாசாரியார் இயற்றிய 3 பாடல் களும் சேர்க்கப்பட்டுள்ளன. பு.க.ஸ்ரீநிவாசாரியார் உரை இயற்றி யுள்ளார்; viii. 149/1912/II.

R4

117. i. **விவேக சிந்தாமணி**—(சிறுவர்க்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்யுள் திரட்டு—அரும்பதவுரையுடன்—இரண்டாம் பதிப்பு); ii. சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. 1913; iv. செ.மூ.உ.ப 33; v. 18×12 செ. மீ.; vi. 0–1–6; vii. ......... ..........; viii. 630/1913/IV.

R4

118. i. **விவேக சிந்தாமணி**: மூலமும் உரையும்; முதற் பதிப்பு; ii. எம்.கே. சந்தானகிருஷ்ண கோன், மதுரை; கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, திருமங்கலம்; iii. மே, 1914; iv. செ மூ. உ.எ. 1+135; v. 22×15 செ.மீ.; vi. 0–4–0; vii. விவேக சிந்தாமணி என்னும் இந்நூலின் பாடல்கள் பல நூல்களி னின்றும் திரட்டப் பெற்றவை. 135 செய்யுட்கள் உரைகளுடன் தரப்பட்டுள்ளன. பல நன்மொழிகளைக் கொண்ட பாடல்களும் பல தத்துவப் பாடல்களும் இதில் உள்ளன; viii. 205/1914/III.

R4

119. i. **விவேக சிந்தாமணி**— மூலமும் உரையும்; ii. எஸ். கிருஷ்ணசாமிப் பிள்ளை; கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. செ.மூ.உ.ப. 60; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0; vii. ஒழுக்கம், நன்னெறி இவற்றை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்பட்ட செய்யுட்களின் தொகுப்பு. ஒவ்வொரு செய்யுளுக்கு உரைநடை விளக்கமும் தரப்பட்டுள்ளது. இதில் உள்ள செய்யுட்கள் யாவும் பலரால் பாடப்பெற்ற தனிப்பாடல்களாகும். viii. 98/1915/IV.

R4

## 170 [1] திருக்குறள் வெண்பாக்கள்

**திருநாராயணையங்கார் (தொ. து.)**

120. i. திருப்புல்லாணி மாலை; ii. நாராயணையங்கார்; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை; iii. 1915; iv. செ.மூ.எ. 133; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. திருப்புல்லாணியின்கண் எழுந்தருளியிருக்கும் தெய்வச்சிலைப் பெருமாள் பேரிற் பாடிய புகழ்மாலை. ஒவ்வொரு பாட்டிலும் ஒரு திருக்குறட்பா இணைத்துப் பாடப்பட்டிருப்பதைக் காணலாம். 'முப்பாலில்' உள்ளதுபோலவே அறம், பொருள், இன்பமாகப் பிரித்து, கட்டளைக் கலித்துறைச் செய்யுளால் இயற்றப்பட்டிருக்கிறது. சோமேசர் முதுமொழி வெண்பா, சிவசிவ வெண்பா, இரங்கேச வெண்பா, வடமலை வெண்பா போன்ற நூல்களின் அமைப்பு முறையை ஒத்துள்ளது; viii. 540/1915/IV.

R4

## 181·43 தருக்கம்

**சுப்பைய சுவாமிகள் (மொ. து.)**

121. i. தர்க்காமிர்தம் [பிரஸ்தான பேதம்]: முதற் பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டியார் & சண்முக முதலியார், மங்கலம்; சச்சிதானந்த அச்சியந்திர சாலை, சென்னை; iii. ஜனவரி, 1914; iv. உ.ப. 63; v. 14×11 செ.மீ.; vi. 0–8–0; vii. வடமொழியில் ஜகதீச பட்டாசாரியார் என்பவரால் செய்யப்பட்ட 'தர்க்காமிர்தம்' என்னும் நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு. இந்நூலில் விளங்காத செய்திகளுக்கு அடிக்குறிப்பில் அங்கங்கே விளக்கம் தந்துள்ளார். இதனோடு மது சூதன சரஸ்வதி வடமொழியில் செய்த 'பிரஸ்தான போதம்' என்னும் நூலின் மொழி பெயர்ப்பும் உள்ளது; viii. 405/1914/I.

R625

## 181·48 வேதாந்த தத்துவம்

**அகத்தியர்**

**122.** **i.** சுப்பிரமணியர் ஞானம்—200 ; **ii.** கே. வடிவேலு முதலியார் & சிதம்பர முதலி ; வித்யா ரத்னகர அச்சுக் கூடம், சென்னை ; **iii. 1915 ; iv.** செ.மூ.எ. 201 ; **v. 22×14** செ.மீ. ; **vi.** 0–0–9 ; **vii.** வேதாந்தக் கொள்கைகளை விளக்கும் பாக்களின் தொகுப்பு. இது சுப்பிரமணியரால் அகத்தியருக்கு உரைக்கப்பட்டது என்பர். "கேளடா அகத்தியனே கிருபையாக" (3) என்றும், "அகத்தியனே ஞானம் இருநூறும் முற்றே" (201) என்றும் வருவன இதனைப் புலப்படுத்தும். **viii.** 586/1915/IV.

**R65**

**அப்பாசாமி முதலியார், எஸ், சி.**

**123.** **i.** வேதாந்த சித்தாந்த சமரச ஞான தீபிகை : முதற் பதிப்பு; **ii.** வேலு தேசிகர், பாலூர் ; கணேச அச்சியந்திர சாலை, சென்னை ; **iii.** பிப்ரவரி, **1912 ; iv.** உ.ப. 172 ; **v. 22×14** செ.மீ. ; **vi.** இலவசம் ; **vii.** அறிவு நூற்களின் உண்மைப் பொருளைக் கதை வாயிலாக விளக்கிக் காட்டுவது. அறியாமை ஐம்புல ஆசை, நிலையற்ற இன்பத்தில் வீழ்ந்து தடுமாறுதல் ஆகிய இருளில் இருந்து விடுவிக்கும் ஒளிபோல் உள்ளது இந்நூல். பத்துக் கதைகளின் வாயிலாகத் தத்துவ உண்மைகள் விளக்கப்பட்டிருக்கின்றன. பல பெரியார்களின் அருளுரைகளும் அற உரைகளும் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. **viii.** 543/1912/I.

**R65**

**அலமேலு அம்மாள், என்., சென்னை.**

**124.** **i.** ஜீவன் பிராது : முதற் பதிப்பு ; **ii.** என். அலமேலு அம்மாள், சென்னை ; ஸௌத் இந்தியன் பிரஸ், சென்னை ; **iii.** ஏப்ரல், **1914 ; iv.** உ.ப. 1+16 ; **v. 18×13** செ.மீ. ; **vi.** 0–4–0 ; **vii.** ஆன்மாவை, ஞான நெறியில் செல்லவிடாது தடுக்கும் காமம், பகை முதலிய தீய பண்புகளை நீக்கி, இறைவன் அருளைப் பெறும் வழியை உணர்த்துவது இச்சிறு நூல். உயிர், அறங்கூர் அவையில் வழக்குத்தொடுக்கும்போது தீய பண்புகளைக் கேட்டு சான்றுகளையும் ஆராய்ந்து முடிவு கூறுவது போல் எழுதப்பட்டுள்ளது. வீடு என்கிற எரை ஒட்டி வீடு என்கிற சித்தியைக் கொடுத்துப் பழமைபோல் பயன் அய்த்து வர ஆன்மாவிற்குக் கட்டளை இடப்படுகிறது. **viii.** 891/1914/II. **R65**

**i.** ஆத்ம வித்தியா விலாசம் : (தொ. எ. 192 பார்க்க) முதற் பதிப்பு ; **ii.** கோ. வடிவேலு செட்டியார் அண்டு எம். ஷண்முக முதலியார் ; சச்சிதானந்தா பிரஸ், கோமளேஸ்வரன் பேட்டை,

சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 2+62+5; v. 12×8 செ.மீ. ; vi. 0–2–0 ; vii வடமொழியில் ஸ்ரீ சதா சிவப் பிரஹ்மேந்திரர் அருளிச் செய்த 'ஆத்ம வித்யா விலாசம்' என்னும் நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு : இத் தமிழ் நூலைச் செய்தவர் பரம சமேந்திரர் சுவாமிகளின் மாணவர் என்று நூல் குறிப்பிலிருந்து தெரிய வருகிறது. viii. 221/1911/IV.

R65

**ஆல்கியோனி (ஜே. கிருஷ்ணமூர்த்தி)**

125. i. ஸத்குருபாதங்களில் : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். லக்ஷ்மி நாராயண அய்யர் ; கல்யாண சுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 104 ; v. 15×12 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. ஆசிரியர் தமது ஆசிரியரிடத்தில் கேட்ட அறவுரைகளை இதில் தொகுத்து எழுதியுள்ளார். வீடு பெறுதற்கு உரிய கருவிகளாகிய பகுத்தறிவு, ஆசை இன்மை, நல்லொழுக்கம், அன்பு என்னும் நான்கையும் விளங்கக் கூறியுள்ளார். அன்னிபெசன்ட் அம்மையார் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். 'ஆல்கியோனி' என்ற புனை பெயர் கொண்ட இவரது இயற்பெயர் ஜே. கிருஷ்ணமூர்த்தி என்பது. இவரது ஆங்கில நூலை (At the Feet of the Master) டி. எஸ். லக்ஷ்மி நாராயண அய்யர் என்பார் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். viii. 645/1911/II.

R65

**இசக்கியாடும்பெருமாள் பிள்ளை**

126. i. கர்மம் : மறுபதிப்பு ; ii. ஏ. ரங்கசுவாமி அய்யர், மதுரை ; விவேக பாநு பிரஸ், மதுரை ; iii. டிசம்பர், 1913 : iv உ.ப. 19 ; v. 22×14 செ.மீ. ; vi.... ; vii. எஞ்சிய வினை, எதிர் வினை, முன் வினை என்னும் மூன்று வினைகளைக் குறித்து விளக்கியுள்ளார். ஒவ்வொருவரும் தத்துவ ஞானத்தை அடைந்து மூவகை வினைகளையும் எரிக்க வேண்டும் என்கிறார், viii. 113/1914/I.

R65

**இரத்தினவேல் அப்பாவு, எஸ்., செஞ்சி.**

127. i. மௌன நிலை : முதற் பதிப்பு ; ii. எஸ். இரத்தினவேல் அப்பாவு ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஏப்ரல், 1913 ; iv. உ.ப. 9 ; v. 23×15 செ.மீ. ; vi....; vii. 'மோனம் என்பது ஞானவரம்பு' என்னும் ஆன்றோர் உரையின் மேன்மையை விவரிப்பது. ஞானவாசிட்டம், கிருஷ்ணனுபூதி, சுருதிசாரம் திருமந்திரம் முதலிய பல நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி இப்பொருளை விளக்கியுள்ளார். சென்னை ஆனந்தா ஆசிரம சாது மகா சங்கத்தின் நாலாவது ஆண்டு விழாவில் (18—3—1913) இது வெளியிடப்பட்டது. viii. 589/1913/II.

R65

**இராதாகிருஷ்ணய்யர், ஸி. எஸ்., கும்பகோணம்**

128. i. *தத்துவஞான போதினி* : முதற்பதிப்பு ; ii. சி. எஸ். இராதா கிருஷ்ணய்யர், கும்பகோணம் ; லெக்ஷ்மி விலாஸ அச்சுக் கூடம், கும்பகோணம் ; iii. ஜூலை, 1914 ; iv. உ.ப. 84 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. பரஞானம், பதிஞானம், பாசஞானம் என்னும் மூன்று தத்துவங்களை விவரிக்கும் தொகுப்பு நூல். முதல் பகுதியின்கண் இந்து சமயத்தின் தத்துவக் கருத்துக்களும், இரண்டாம் பகுதியில் இந்து சமயக் கடவுள்களைப் பற்றிய ஆராய்ச்சியும், மூன்றும் பகுதியில் தத்துவ நெறி உணர்ந்த பெரியார்களைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. நாகை. ஸி. கோபாலகிருஷ்ணன் என்பார் எழுதிய முகவுரையில் இந்நூற் பெயரை விளக்கும் முகமாகத் தத்துவ விளக்கம் தருகிறார். viii. 620/1914/III.

R65

**இராமகிருஷ்ணானந்த சுவாமிகள் (மொ. து.)**

129. i. *சிவானந்தம்* : முதற் பதிப்பு ; ii. சாது கருணாநந்தா ; பிரீமியர் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1912 ; iv. உ.ப. 4 ; v. 17×11 செ.மீ. vi. இலவசம்; vii. சாது சங்க மகா சபையின் சார்பில் செய்யப்பட்ட சொற்பொழிவு. இச்சங்கம் 1902–ம் ஆண்டு நிறுவப்பட்டது. இராமகிருஷ்ணானந்த சுவாமிகள் 13–5–1908-ல் சிவானந்தத்தைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றினார். சிவானந்தமே நாளும் நிலையான இன்பம் என்பதைப் பல சான்றுகளால் விளக்கியுள்ளார். viii. 1019/1912/I.

R65

**இராமசாமி சாஸ்திரி, கே. எஸ்.**

130. i. *தேக தேகி விவேகம்* : முதற் பதிப்பு ; ii. சைவ சபை, பாளையங்கோட்டை ; பெத்தாச்சி பிரஸ், பாளையங்கோட்டை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ.ப. 52 ; v. 14×11 செ.மீ.; vi. 0–2–0 ; vii. ஆன்மாவின் இயல்பையும், உடலுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பையும், இறைவனுடைய இன்ப வடிவினை அடையும் வழியையும் கூறுவது. பாளையங்கோட்டை சைவ சபையில் வாசிக்கப்பெற்ற உரை. வடமொழி, தென்மொழி மேற்கோள்கள் காட்டித் தத்துவச் செய்திகளைத் தெளிவாக விளக்கியுள்ளார். டென்னிசன், ஷேக்ஸ்பியர், மாக்ஸ் முல்லர், வேர்ட்ஸ்வொர்த் முதலிய ஆங்கிலக் கவிஞர்களின் உரைகளும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. viii. 140/1913/III.

R65

**இராமரிஷி**

i. இராமரிஷி சிவயோக ஞானம்—18 (தொ. எ. 1098 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; & எப். ஆர். குருசாமிக்கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ. எ. 18 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. 'சத்தி மூலமும்' 'பூரண சோதிப் பிரகாசமும்' 'நந்தி தெரிசனமும்' வாசியால் ரேசக, பூரக, கும்பகமும் அதற்குரிய மூலாட்சர விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. வில்லிபுத்தூர் மம்மது சாயபுரம் தலைமையாசிரியரும், அஞ்சலகக்கிளையின் தலைவருமான எம்.ஆர். இராக்கப்ப பிள்ளையவர்களிடமிருந்த ஏட்டுப்பிரதியின் படி இது அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

**R65**

**இராமலிங்கையா**

131. i. சந்நியாச ஆஸ்ரம தர்ம விளக்கம் [யோகம்] ; ii. தி.ம. பொன்னுச்சாமி பிள்ளை ; மட்டுவார் குழலாம்பாள் பிரஸ், திரிசிரபுரம் ; iii. 1915 ; iv. உ.ப. 52 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. துறவு நிலையின் இன்றியமையாமையும் யோகத்தின் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளன. இதில் குலவொழுக்கங்கள் கூறியிருப்பினும் நான்கு இனங்கள் மூன்று நிலைகள் ஆகியவைகளை விளக்கி, துறவறத்தைச் சிறப்பாகவும் இந்நூல் எடுத்து ஓதுகின்றது. viii. 148/1915/III.

**R65**

**இராமஸ்வாமியா பிள்ளை**

132. i. தத்துவ பிரகாசம் : முதற் பதிப்பு ; ii. வைத்தியம் நெ. திருமலைக் குமாரு பண்டிதர் ; ஆரியப் பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலிப் பாலம் ; iii. மே, 1915 ; iv. உ.ப. 60; v. 22×14 செ.மீ. ; vi. 0–4–0; vii. மறை நூல் நுட்பக் கருத்துக்கள் அடங்கிய நூல். இத்தத்துவ விளக்கம் ஆசிரியர் மாணவர் உரையாடல் வாயிலாக வெளிப்படுவது போல விளக்கப் பட்டுள்ளது. நூலாசிரியரின் வரலாறும், அவரைப் போற்றிப் பாடப்பெற்ற சாற்றுக் கவிகளும் இதில் இடம்பெற்றுள்ளன. கைவல்லிய நவநீதம், சொரூப சாரம், குமார தேவர் வரலாறு, வள்ளலார் வரலாறு முதலியவற்றினின்றும் மேற்கோள்காட்டி விளக்கம் தந்துள்ளனர் ஆசிரியர். viii. 796/1915/II.

**R65**

**இராமானந்த சுவாமிகள், கௌமார மடாலயம், சிரவணபுரம்**

133. i. ஆத்துமராம சரித்திரம்: [பெண் விஷய வெண்பா, விந்தின் பெருமை வெண்பா] : முதற் பதிப்பு ; ii. டி. எம். செந்தி நாயகம் பிள்ளை ; கலாரத்நாகரம் அச்சுக் கூடம், சென்னை ;

iii. ஆகஸ்ட், 1913 ; iv. உ. ப. 15 முதல் 31 வரை ; v. 14×11 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஆசிரியரிடத்துக் கேட்டு அறிதற்கரிய 'அநுபூதி' நிலைமையைக் கொடுக்கத்தக்க ஞான நூல். படிப்போர்க்குக் கதை போலத் தோன்றினும், உண்மையில் தன்பட்டறிவின் விளக்கமாகும். இவ்வாசிரியர் பாடிய 'பெண் விஷய வெண்பா', 'விந்தின் பெருமை' என்னும் பாடல் நூல்கள் இதனோடு சேர்ந்துள்ளன. ஷண்முகமாலை என்னும் துதி நூல் ஒன்றும் அச்சிட்டுள்ளார். 'திருவுந்தியார்' 'கணேசர் வெண்பா மாலை', 'சந்தப் பதிகம்' முதலிய பல நூல்கள் வெளிப்படாமல் உள்ளன என்பது முகவுரையால் தெரிய வருகிறது. செந்தில் நாயகம் பிள்ளை, பழனியப்ப சுவாமிகள் முதலியோர் இதற்குச் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்கள். இராமானந்த சுவாமிகளின் உருவப்படமும் உள்ளது. viii. 657/1913/III.

R65

### இராமானந்த சுவாமிகள் (தொ.து.)

134. i. சிவராம சாயுஜ்ய பக்தியோக ஞானத் திரட்டு: முதற் பதிப்பு ; ii. இ. மா. கோபாலகிருஷ்ண கோனார், மதுரை ; மீனாம்பிகை பிரஸ், மதுரை ; iii. மே, 1915 ; iv. செ. மூ. எ. 118 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இறைவனை நினைந்து அவனுடன் தொடர்பு கொள்வதால் உண்டாகும் பேரின்பத்தைப் பற்றி விளக்குகிறது இந்நூல். இதில் பக்தியைப் பற்றியும், அற நெறிகளைப் பற்றியும், யோகநிலை பற்றியும் விளக்கும் பாடல்கள் அடங்கியுள்ளன. இதில் இறைவனிடம் ஒன்றுபடும் வழிகள் உள்ளன என்பது ஆசிரியரது முகவுரையிலிருந்து தெரிகிறது. பட்டினத்தார், தாயுமானவர் முதலிய ஞானிகளின் உரைகளிலிருந்து தெரிந்தெடுத்துத் தொகுக்கப் பட்டிருக்கிறது. viii. 434/1915/II.

R65

### இராமானந்த சுவாமிகள், நிச்சல

135. i. பரமார்த்த நியாயத் தீர்ப்பு [அக்ஷர மாலிகை]: முதற் பதிப்பு ; ii. கோ. வடிவேலு செட்டியார் ; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 166+8 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. சங்கராச்சாரியர் வழங்கிய தசக நூலில் கூறிய 'சிவோகத் தீர்ப்பை' பற்றி விவரிப்பது இந்நூல். உபநிடதம் முதலிய நூல் மேற்கோள்கள் காட்டி, "சித்தாந்த பிந்து" என்னும் அரிய நூலின் பொருளை விளக்குவதாய், "பஞ்சதசி" "விசார சாகரம்" முதலிய வேதாந்த நூல்களைத் துணையாகக் கொண்டு எழுதப் பெற்றது. 35 உட்பிரிவுகள் கொண்டது. இந்நூலாசிரியரைக் குறித்து கா. சொரூபானந்த மணி என்பார் இயற்றிய 'அக்ஷர மாலிகை' என்னும் கவிதையும் இந்நூல் இறுதியில் உள்ளது. நூலுள்

எடுத்துக் காட்டப்பட்ட மேற்கோள் செய்யுட்களுக்கு முதற் குறிப்பு அகராதி கொடுக்கப்பட்டிருக்கிறது. வேலுசாமிப் பிள்ளை முதலிய பலர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 126/1913/III.

R65

**ஊர்வசி**

i. ஊர்வசி இரத்தினச் சுருக்கம்—19 : (தொ. எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு : ii. தா. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 19 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. 'ஜீவான்மா' 'பரமான்மா' 'யோக' "ஞான" வழிகளுக்குரிய கால வரையரை குறிப்புகளை இந்நூல் விளக்குகிறது. இந்நூலில் உள்ள சில பாடல்கள் கட்டளைக் கலித்துறையாலும் வெண்பாவாலும் ஆனது. வில்லிபுத்தூர் வத்திராயிருப்பைச் சேர்ந்த தம்பிபட்டி கிருஷ்ணபுரம் மாரி முத்துத் தேவர் மகன் அங்கப்பத் தேவரிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 740/1914/II.

R65

**கடுவெளிச் சித்தர்**

i. கடுவெளிச்சித்தர், சிவராஜயோகம்—18 : பாகம்-5 : (தொ.எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு : ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ.எ. 18 ; v. 22+14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. 'தச தீட்சை," 'குரு' கற்ப முறை, சிவயோகம் முதலியனவற்றை இந் நூல் விளக்குகிறது. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த சுந்தர பாண்டிய குருவமூப்பனார் மகன் வைகுண்டமூப்பனாரிடம் வாங்கிய எட்டுப்பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பட்டது. viii. 740/1914/II.

R65

**கடைப் பிள்ளை**

i. கடைப்பிள்ளை கலைக் கியானம் : (தொ.எ. 1098 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை , ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. ப. 1+120 ; v. 22×14 செ.மீ. vi. 0–12–0 ; vii. மண்டலம் மூன்றும், மந்திர மூலம் 'நவகோண சக்கரம்' பூசை வரிசை, வாசியோகம் விசுவரூப தெரிசனம், காய கற்ப அமுதம் முதலிய செய்திகளை இந்நூல் விவரிக்கிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும்

உண்கல வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

R65

i. கடைப்பிள்ளை சிவயோக ஞானம்—100. (தொ. எ. 1098 பார்க்க) முதற் பதிப்பு ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ எ. 3+100 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. 'சிவயோக மூலமும்' 'காயகற்ப குளிகையும்' 'சாகாத்தலை' 'வேகாக்கால்' 'போகா புனல்' என்பதும், 'வாதம்', மதியமுதம் முதலியவைகளையும் இந்நூல் விளக்குகின்றது. மதுரை, திண்டுக்கல் ரோட், சிவராஜ யோகி பங்காரு சாமியார் அவர்கள் குமாரர் முத்தியாலு நாயுடு அவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பட்டது. viii. 738/1914/II.

R65

i. கடைப்பிள்ளை ஞானக் கக்கிஷம்—80 : (தொ.எ. 1098 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. எ. 1+80 ; v. 22×14 செ.மீ. , vi. 0–12–0 ; vii. அரிமூல மந்திரம் நவக்கிரக சக்கரம், 'கருக்குரு" தேக சுத்தி 'நித்திய கர்மா னுஷ்டானம்', 'தசநாதம்', 'புருவநடு நாட்டம்', 'தசதீட்சை' 'நந்தி தெரிசனம்', 'கெற்ப ரோக நிவர்த்தி' முதலிய செய்தி களை இந்நூல் விளக்குகிறது. திருச்செந்தூர் வைத்திய ஞானனந்தானந்தேந்திர சரஸ்வதியதி அவர்கள் கொடுத்த ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

R65

i. கடைப்பிள்ளை ஞான சமாதி தீட்சை 17 : முதற் பதிப்பு ; (தொ. எ. 1098 பார்க்க), ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூஎ. 17 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. அருள் பெருகு 'மந்திரமும்', அரிய 'சமாதி தீட்சையும்', குருவிருக்கும் பதியும், 'சுழிமுனை தீப சோதியும்', 'துரியம்', 'துரியாதீதம்', "கேசரி பூசை', 'சத்தம் பிறந்த இடம்' முதலியவைகளை இந்நூல் விவரிக்கின்றது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வணிகர் ந. ரா. ம. கணபதியாபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.

R65

i. கடைப்பிள்ளை ஞானசைதன்யம்–7 : (தொ. எ. 1098), பார்க்க முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.ப. 1+7 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. அறிவே குருவாய் விளங்கும் அரிய செயலினையும் ' அஞ்சுபூதம் ', ' ஆருதாரம் ' ' வேதாந்த சித்தாந்தம் ' ஆகியவைகளின் நுட்பங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந. ரா. ம. கணபதியாபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.
R65

i. கடைப்பிள்ளை ஞானத்தண்டகம்-50 : (தொ.எ. 1098 பார்க்க), முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமிநாயுடு; i மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ· 1+51 ; v. 22×14 செ·மீ.; vi. 0–12–0 ; vii. உந்திக்கமலத்திலிருந்து மேலாதாரம் வரையுள்ள சோதி சொரூப நிலையும், ரவிமதி சுழிமுனையும், சிவயோக நிருவி கற்ப சமாதி, அதற்குரிய மூலாட்சரங்களும், பூஜா, விதி, தீட்சா விதி, அமுதரச கற்பம், 'குளிகை' ' ஜெபமணி ', முதலியவைகள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன, மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந. ரா. ம. கணபதியாபிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.
R65

i. கடைப்பிள்ளை ஞான தீட்சாவிதி—16 : (தொ. எ. 1098 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1+16 ; v, 22×14 செ.மீ ; vi. 0-12-0 , vii. ' பூரண தீட்சை ', ' அறுகோணம் ', ' நந்திதெரிசனம் ', 'ரவிமதி சுழிமுனை ' முதலியவைகளை இந்நூல் விளக்குகிறது. இப்பதிப்பாசிரியரிடம் கடைப்பிள்ளை ஞான சாஸ்திரங்கள், பல ஏட்டுப் பிரதிகளிருப்பினும் இதுபோது சில மட்டும் அச்சிட்டிருக்கிறார். வில்லிபுத்தூரைச் சேர்ந்த சுந்தரபாண்டியம் சாலி மகாரிஷி கோத்திரம் வை. சிவகுருநாத மூப்பனாரிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 738/1914/II.
R65

i. கடைப்பிள்ளை பஞ்சாட்சரச் சுருக்கம்—32 ; (தொ. எ. 1100 பார்க்க), முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு. மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914; iv. செ. மூ. எ. 32 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. ' ஆருதாரம் ' ' சடாட்

சரம்', 'கற்ப செந்தூரம்', வாசி மூல மந்திரம், சோதி சொரூப தெரிசனம் முதலியவைகளை இந்நூல் விவரிக்கின்றன. திருச்சி மேட்டுச்சிந்தாமணி, வைத்தியம், சுப்பிரமணியபிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 740/1914/II.

R65

i. கடைப்பிள்ளை மவுன தீட்சை—12 : (தொ. எ. 1100 பார்க்க), முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. ப. 12 ; v. 22×14 ; செ.மீ. ; vi. 0–12–0 ; vii. மணிவாசல் திறப்பும், பிரணவ மூலமும், நாசிமுனை நாட்டமும், யோகஞான சித்திக்குரிய விவரங்களையும் இந்நூல் விவரிக்கிறது. viii. 740/1914/II.

R65

கணநாதர்

i. கணநாதர் ஞானோபதேசம்—16 : (தொ. எ. 1096 பார்க்க), ; முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு & எப். ஆர். குருசாமிக்கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1+16 ; v. 22×14, செ.மீ ; vi. 0–12–0 ; viii. கதிர்மதி சுழிமுனையைக்கண்ட காட்சி, களிப்புற்று அடிமுடி காணும் 'பிரம்ம நிஷ்டை', முதலியவைகளை இந்நூல் விளக்குகிறது. மதுரை, திண்டுக்கல் ரோடு, ஜடா முனி கோவிலுக்கு மேற்புறம் வீட்டிலிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவராஜயோக சாமியார் பங்காரு சுவாமி அவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. vii. 736/1914/II.

R65

கணபதி முதலியார், ஆர். எம்.

136. i. ஆயுள் வேத ஜோதி : முதற் பாகம் ; முதற் பதிப்பு ; ii. கணபதி முதலியார், பழையனூர் ; முராஹரி பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 47 ; v. 21×14 செ.மீ, vi. 0–4–0 ; vii. இது ஒரு தத்துவ நூல். இது ஏட்டுப் பிரதிகளிலிருந்தும், அச்சுப் பிரதிகளிலிருந்தும் ஆசிரியரால் தொகுத்து எழுதப்பட்டுள்ளது. 'ஆயுள் வேத ஜோதி' என்னும் நூலின் வரலாற்றை ஆசான் வழி மாணவன் தெரிந்து கொள்வதுபோல் எழுதப்பட்டுள்ளது. கதைகள் மூலமாய்த் தத்துவக் கருத்துக்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன. "திரிபுரை அகவல்" என்னும் துதிப் பாட்டு இதன் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 828/1914/III.

R65

**ஜெய முனிவர்**

i. **முனிவர்** திருமந்திர ஞானம்—37 ; முதற் பதிப்பு (தொ.எ. 1098 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை, & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீ ராமசந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1+37 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-12-0; vii. யோக பயிற்சி மறைவு செய்திகளும், போலிகளின் தீச்செயல்களும், எண்வகை கணபதியின் மந்திரசித்தி முதலிய விவரங்களும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது. திருப்பழனி மலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீ போக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின் படி இந்த நூல் அச்சிடப்பட்டது ; viii. 738/1914/II.

**R65**

**ஸ்ரீநிவாஸய்யங்கார்**

i. சுவானுபவ விளக்கம் : (தொ. எ. 534 பார்க்க) ; ii. ஸ்ரீ மீனாம்பிகை அச்சியந்திர சாலை பெரியகுளம் ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 237 ; v. 21×14 செ.மீ. ; vi. ............ ; vii. அத்துவித நிலையை அடையும் வழியைக் கற்பிப்பது. சங்கரர், இராமநுஜர், மத்துவாசாரியர் உரைகளாலும், ஞான வாசிட்டம், பகவத் கீதை, பிரம சூத்திரம், வேதாந்த சூடாமணி விசார சாகரம், கைவல்லிய நவநிதம் முதலிய நூல்களாலும் அறியும் வல்லமையில்லாதார் பொருட்டு இயற்றப் பட்டது. இந் நூலாசிரியரின் மாணுக்கர் காமயம நகரம் சென்னைய ஸ்வாமிகள் இதற்கு முகவுரை எழுதியுள்ளார்; viii. 640/1915/IV.

**R65**

**ஸ்ரீநிவாஸ சர்மா, மு. ரா.**

200. i. சற்குரு கீதை : முதற் பதிப்பு ; ii. ஆர். சுப்பிரமணிய வாத்தியார், ராமநுதபுரம் ; சாரதா விலாஸ பிரஸ், கும்பகோணம் ; iii. ஜனவரி, 1914 ; iv. செ.மூ.ப. 86 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ஸ்காந்த மஹா புராணம், உத்திரகாண்டத்தில் உமா மகேஸ்வர உரையாடல்களாக அமைந்த வடமொழி நூலைத் தமிழ் செய்யுட்களில் மொழி பெயர்த்துள்ளார். குருவின் பெருமை, குருவைக் காணல் முதலிய சற்குருவின் தன்மைகள் விரிக்கப்பட்டிருக்கின்றன. தஞ்சை வே. குப்புசுவாமி ராஜு என்பார் மொழி பெயர்ப்பை மூலமாகக் கொண்டு இந் நூல் செய்யப்பட்டுள்ளது. இதன் பிற்பகுதியில் "தக்ஷிணாமூர்த்தி சோடச கலா மாலை" முதல் "திருவடி புகழ்ச்சி" ஈறாக எழு குரு துதிப்பாடல்கள் இந் நூலில் உள்ளன ; viii 225/1914/I.

**R65**

**ஸ்ரீலிங்க மூர்த்தி குரு மூர்த்தி (நிச்சல இராமாநந்த சுவாமிகள் காஞ்சிபுரம்), (மொ.து.)**

**201.** i, சீதா ராமாஞ்சநேய சம்வாதம் : முதற் பதிப்பு ; ii. அலர் மேலம்மையார் ; யுனிடெட் அச்சுக்கூடம், காஞ்சிபுரம்; iii. நவம்பர், 1914 ; iv. உ.ப. 22+308 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. அத்வைத வேதாந்தத்தைப் பற்றித் தெலுங்கு மொழியில் இலிங்கமூர்த்தி குருமூர்த்தி மகான் அருளிய நூலின் தமிழ் மொழி பெயர்ப்பே இந் நூல். திரு. பூ. இராஜ ரத்தின முதலியார் முதலியோர் பலர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள். நிச்சல இராமாநந்த சுவாமியின் படம் ஒன்று இடம் பெற்றுள்ளது ; viii. 554/1914/IV.

**R65**

**ஸுந்தர ராஜு ஐயர், ஆர். (மொ.து.)**

202. i. உதாஹி நஸாது ஸ்தோத்ரம் : முதற் பதிப்பு ; ii. V நாராயண அய்யர் ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜூலை, 1913 ; iv. செ.மூ.உ.ப. 41 ; v. 21×14 செ.மீ. vi. 0–6–0 ; vii. வேதாந்தமாகிய பெருங்கடலின் சிறப்புகளைச் சுருக்கமாகக் குருபக்தி வாயிலாக உலகத்தோர்க்கு விளக்கிக் காட்டும் நூல். பாம்பின் நடையெனப் பொருள் தரும் "புஜங்கப்ரயாதம்" என்னும் வட மொழிச் சந்தத்தில் இருபது பாடல்களையுடையது. தேவதீர்த்தர் என்னும் ஒரு துறவியால் இயற்றப்பெற்றது. இவர் வழியில் வந்த "ப்ரஹ்மானந்த எண்டார் இதற்கு ஒரு விரிவான உரை எழுதி இருக்கிரு சங்கர பகவத் பாதர் கருத்தைத் தழுவி அத்வைத நூல்கள் பகவத் கீதை, பாரதம், பாகவதம் முதலிய பல நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி எழுதியுள்ளார். வட மொழியிலுள்ள மூலமும் உரையும் ஆசிரியரால் தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. வட மொழிப் பாடல்கள் கிரந்த எழுத்தில் கொடுக்கப் பட்டுள்ளன ; viii. 377/1913/III.

**R65**

## 181·48[1] சைவ சித்தாந்த சாத்திரம்

**அருணந்தி சிவாசாரியார், திருத்துறையூர்**

**203.** i. சிவஞான சித்தியார் - பரபக்ஷம் – மூலமும்—தத்துவப் பிரகாசருரையும் : இரண்டாம் பதிப்பு ; ii. ஆ. சிங்காரவேலு முதலியார் & மயிலை அழகப்ப முதலியார் ; சிவஞான போத யந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. செ.மூ.உ.ப. 301 ; v. 17×12 செ.மீ. ; vi. -8-0 ; vii. சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கினுள் மிக விரிவாயும் தெளிவாகவும் அமைந்த சாத்திரம் சிவஞான சித்தியார். "சிவத்திற்கு மேல் தெய்வம்

இல்லை, சிவஞான சித்திக்கு மேல் சாத்திரம் இல்லை" என்னும் ஒரு பழமொழியும் நம் நாட்டில் வழங்கி வருகிறது. பரபக்ஷத் திற்குத் திருவொற்றியூர் ஞானப் பிரகாசர், அவர் மாணாக்கர் தத்துவப் பிரகாசர், வேலப்ப பண்டாரம் ஆகியோர் உரைகள் உள்ளனவாகத் தெரியவருகிறது. இந்த நூல் தத்துவப் பிரகாசர் உரையுடன் கூடியது. கௌமார மாநகரம் சண்முக சுந்தர முதலியாரால் அச்சிடப்பட்ட பிரதிக்கிணங்க வெளியிடப் பட்டது இதன் முகவுரையில் நூலாசிரியர், உரையாசிரியர் ஆகியோரது வரலாறுகள் தரப்பட்டிருக்கின்றன. viii. 78/1911/I.

R673x2,1,1

204. i. சிவஞான சித்தியார்—சுபக்கம் ; ii. பொ. முத்தையா பிள்ளை விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1914; iv. செ.மூ.உ.ப. 328 ; v. 22×15 செ.மீ. ; vi. 1–8-0 ; vii. சைவ சித்தாந்தத்தை விளக்கிடும் நூல். செய்யுட்களுக்கு உரையும் விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த உரையை ஆக்கியவர் தூத்துக்குடி பொ. முத்தையா பிள்ளை ஆவர். இவர் திருக் கைலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத்துத் திராவிட மாபாடிய கர்த்தராகிய மாதவச் சிவஞான யோகிகளின் உரையைத் தழுவித் தமது உரையை அமைத்துள்ளார். சைவ சமயத்தின்உண்மைகளும் பேரின்பமாம்முக்தியைஅடைவதற்கான வழி வகைகளும் விளக்கப்பட்டுள்ளன. நூலாசிரியர் வரலாறும், 'அவதாரிகையின் அகராதி' 'விஷய அகராதி' 'இயல் அகராதி' 'அதிகார அகராதி' 'பாட்டு முதற் குறிப்பகராதி' என்னும் அகராதிகளும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 868/1914/III.

R673x2,1,1

## 181·48[1] சைவ சித்தாந்த தத்துவம்

**ஆண்டாளம்மாள், ஏ. (மங்கையர்க்கரசியார்)**

205. i. சிவலிங்க மகத்துவம் : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். ஏகாம்பர முதலியார், பெங்களூர்ப்பேட்டை, தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 48 ; v. 22×14 செ.மீ; vi. 0–4–0 ; vii. சிவலிங்க வழிபாட்டின் உண்மையை விளக்கி உரைக்கின்றது. இந்த அம்மையார் சைவ சித்தாந்த சாஸ்திரங் களையும், தோத்திரங்களையும் நன்கு கற்றவர். இது இவ்வம்மை யாரால் செய்யப்பட்ட சொற்பொழிவாகும். இவரது புலமையைக் குறித்தும், இந்நூலின் சிறப்பைக் குறித்தும் ஜே. எம். நல்ல சாமி பிள்ளை என்பார் பாயிரத்தில் விரிவாக எழுதியுள்ளார். 1911ஆம் வருடம் டிசம்பர் திங்கள் 'சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில்' கூடிய சைவ சித்தாந்த மஹா சமாஜத்தில் பேசப் பட்டது viii. 1029/1913/IV.

R673

**ஆநந்த ஷண்முக சரணாலய சுவாமி, திருச்செந்தூர்**

**206.** i. பேரின்ப விளக்கம் : முதற் பதிப்பு ; ii. ஆநந்த ஷண்முக சரணாலய சுவாமி & டி. பி. ரங்கசாமி பிள்ளை ; எட்வர்ட் அச்சுக் கூடம், திருவாரூர் ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 8 ; v. 17×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சிவாநந்தமாகிய பேரின்பத்தின் தன்மையை விளக்கி அதுவே யாவரும் அடையற் பாலது என்று எடுத்துக்காட்டுகிறார். 1912 ஆம் ஆண்டு வடலூரில் நடைபெற்ற தைப்பூச பெருவிழாக் காலத்தில் கூடும் அன்பர்களுக்காக இயற்றி வெளியிடப்பெற்றது. viii. 607/1912/I.

R 673

**207.** i. முக்தி சோபானம் : முதற் பதிப்பு ; ii. ஆனந்த ஷண்முக சரணாலய சுவாமி, திருச்செந்தூர் & டி; பி. ரங்கசாமிப் பிள்ளை ; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 12 ; v. 16×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. முக்தி என்னும் பெருநிலையை அடைவதற்குப் படிகளாக உள்ள சரியை, கிரியை முதலிய பல்வேறு நிலைகளையும் விளக்குவது. சென்னையில் 1911 ஆம ஆண்டு டிசம்பர் திங்கள் நடைபெற்ற சைவசித்தாந்த மகாசமாஜத்துக்கு மேற்படி சமாஜ செயலாளர் இ. ஆதிமூல முதலியாரவர்கள் விரும்பிய வண்ணம் ஆசிரியரால் இக் கட்டுரை எழுதப்பெற்றது. viii. 400/1912/I.

R 673

**இராதாகிருஷ்ண ஐயர், ஸி. எஸ்.**

**208.** i. பக்தி விளக்கம் : முதற் பதிப்பு ; ii. ஸி. எஸ். இராதா கிருஷ்ண ஐயர், கும்பகோணம் , கார்டியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப. 156 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-10-0 ; vii. இந் நூலில் உள்ள ஒவ்வொரு வரலாறும் பக்தியையே முக்கியமாகக் கொண்டுள்ளதால் பக்தி விளக்க மென ஆசிரியர் பெயரிட்டுள்ளார். இந் நூலில், இறைவனது தோற்றத்தின் பெருமைகள், மூர்த்திகளின் பெருமைகள், இறை வனின் அடியார்கள், ஆசான் மாணாக்கர் பக்தி, முனிவர்களின் வரலாறுகள் முதலியவைகள் அடங்கியுள்ளன. இது பக்தியைப் புகட்டக்கூடிய நூல். விநாயகர், சுப்பிரமணியர், நடராசர், தட்சிண மூர்த்தி, எனும் மூர்த்திகளின் உருவம் பற்றிய உண்மை உரைகள் விளக்கப்பட்டுள்ளன. viii. 589/1914/III.

R 673

**இராமலிங்க சுவாமிகள் முதலியோர்**

**209.** i. சிவகாருணிய சாரத் திரட்டு : ii. ம அப்பாசாமி செட்டியார் & மு. பார்த்தசாரதி செட்டியார் ; அருட்பெருஞ்சோதி சபை, பெங்களூர் ; விஸ்வ குலோத்தாரண அச்சுக்கூடம ; iii. 1912 ; iv. உ. ப. + செ.மூ.ப.22 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—4—0;

vii. இராமலிங்க அடிகள் இயற்றிய சீவகாருண்ய விளக்கம், சமரச வேத சன்மார்க்க சங்க வித்வான்கள் இயற்றிய குருதுதி கொலை மறுத்தல் வசனம், மனுமுறை கண்ட வாசகம் திருவருட்பா, இரங்கல் முதலியவை உள்ளன. viii. —/1912/III.

R673

**இராஜயோகாநந்த ஸ்வாமிகள்**

210. ஸர்வ வியாபக பஞ்சாக்ஷர மகிமை : ii. மஹாலட்சுமி விலாச அச்சியந்திரசாலை, iii. 1911 ; iv. உ.ப.+செ. மூ. ப. 10 ; v. 16×11 செ. மீ. ; vi. ...... ; vii. பஞ்சாட்சர மகிமை, பஞ்சாட்சரப் பிரிவின் விவரம் ஆகிய இரு பகுதிகள் உள்ளன. viii. 256/1911/IV.

R673

**கணபதி தாசர்**

211. i. நெஞ்சறி விளக்கம் ; ii. இரத்தின விலாசம் அச்சியந் திரசாலை, பிறையாறு ; iii. 1911 ; iv. செ. மூ. ப. 16 ; v. 21×14 செ. மீ. ; vi. ...... ; vii. நெஞ்சை விளித் துச் சைவ சமயத் தத்துவங்களை அறிவிக்கும் நூல். 100 பாடல் களைக் கொண்டது. viii. 820/1911/III.

R673

**கணேச சாஸ்திரியார், மருவூர்., (மொ. து.)**

212. i. மஹேதி ஹாஸமாகிய சிவரஹஸ்யம்—(முதலிரண்டாம் அம் சங்களும் மூன்றும் அம்சத்தின் பூர்வ பாகமும்) ; ii. சதாசிவ செட்டியார் ; கயப்பாக்கம் ; இச்சினர் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1910 ; iv. உ. ப. 412–525 ; v. 22×15 செ. மீ. ; vi. 0—4—0 , vii. சிவ பக்தர் மஹிமையுரைத்தது, சீர்த்தேசலிங்க மஹிமையுரைத்தது, கமலலோசனையின் சிவோ பாசனை; சிவக்ஞான ஹேது கூறியது. முதலிய தலைப்புகளில் சைவ சமய தத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளன. viii. 304/1911/II.

R673

**காந்திமதிநாத பிள்ளை, வி. பி.,**

213. i. சன்மார்க்கம் ; சைவசித்தாந்த மகாசமாஜம் ; மெய்கண் டான் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1911 ; iv. உ. ப. 26 ; v. 16×12 செ. மீ. ; vi. ...... ; vii. சத்துப் பொருளை அடை வதே சன்மார்க்கம் என்றும், அதனை அடைவது என் என்பதற் குரிய விளக்கமும், சைவ சமயத்தின் கொள்கைகளும், பிறவும் விளக்கப்பட்டு உள்ளன. viii. 333/1912/I.

R673

**குமரகுருதாச சுவாமிகள், பாம்பன்**

**214.** i. பரிபூரணானந்த போதமும் சிவசூரியப் பிரகாசமெனு முரையும்: ii. வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை; iii. 1914; iv. செ.மூ.உ.ப. 288; v. 21 × 14 செ.மீ.; vi. 2-0-0: vii. பாயிரம், பதி, பசு, பாசயதார்த்த விளக்கப் படலம், துறவற விளக்கப் படலம் ஆகிய பகுதிகளில் சைவ சமய உண்மைகள் விளக்கப்பட்டுள்ளன. viii. 1172/1914/III.

**R673**

**சபாரத்தின முதலியார், எஸ். & இராமலிங்க முதலியார்**

**215.** i. கன்மம் திரிபதார்த்த நிர்ணயம் என்னும் இரண்டு உபந்நியாஸங்கள்; ii. சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி; சைவப் பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி; iii. 1914; iv. உ.ப. 31; iv 21 × 14 செ.மீ.; vi. 0-1-6; vii. தூத்துக்குடி சைவ சித்தாந்தச் சபையின் 30 ஆம் ஆண்டு நிறைவு விழாவில், யாழ்ப்பாணம் எஸ். சபாரத்தின முதலியார் 'கன்மம்' என்பது பற்றியும், அரியநாயகபுரம் இராமலிங்க முதலியார் 'திரிபதார்த்த' நிர்ணயம் என்பது பற்றியும் ஆற்றிய சொற்பொழிவுகளின் தொகுப்பு இந்நூலாகும். viii. 164/1924/I.

**R673**

**சிதம்பர சுவாமிகள், திருப்போரூர்**

**216.** i. பஞ்சாதிகார விளக்கமூலம்: ii. சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார், மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை; iii. 1912; iv. செ.மூ.ப 21; v. 16 × 12 செ.மீ.; vi. ......; vii. 'பஞ்ச கிருத்தியம்' 'சிவ கரணத்தின் செய்கை', 'பரமசிவன் திருவடியைச் சேரும் உபாயம்', 'திருவருள் நிற்கும் நிலைமை' முதலிய சைவ சமய கருத்துக்கள் பலவற்றை உணர்த்தும் நூல். 52 செய்யுட்களைக் கொண்டது. viii. 629/1912/I.

**R673**

**சிவஞான யோகிகள், விருதை.**

**217.** i. வேதாகம உண்மை; ii. சா. ராம.மு. சித. பெத்தாச்சி செட்டியார், கானாடுகாத்தான்; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை; iii. 1911, iv. உ.ப. 28; v. 16 × 12 செ.மீ.; vi. 0-1-0; vii. மூண்டகோப நிடதம் 1-5, யஜூர், சாம 3-4, கேநோப நிடதம் 3-12, சுவேதா -11 முதலிய பல தலைப்புகளில் வடமொழிப் பாடல்களும், விளக்கங்களும் உள்ளன. தமிழ் வேதாகமங்கள் என்ற தலைப்பில் பிற்பகுதியில் தேவாரம், கம்பராமாயணம் முதலியவற்றிலிருந்து விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. viii. 441/1911/III

**R673**

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்**

**218.** i. சித்தாந்த சிகாமணி ; ii. குருபசவ அண்டு கம்புனி, சென்னை ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1910 ; iv. செ.மூ.உ.ப. 344+24 ; v. 24×16 செ.மீ. ; vi. 2–8–0; vii. அங்கஸ்தலம், லிங்கஸ்தலம் என்ற இருபெரும் பிரிவுகளை உடையது. பத்தத்தலம், மாகேசத்தலம் முதலிய 6 பிரிவுகள் அங்கஸ்தலத்திலும், ஆசாரலிங்கத்தலம், குருலிங்கத்தலம் முதலிய 6 பிரிவுகள் லிங்கஸ்த்தலத்திலும் உள்ளன. பிண்டத் தலம் முதல் ஞானசூனியத்தலம் ஈறாக 101 சிறு பிரிவுகளை உடையது. உபோதகாதம், சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு ஆகியவையும் உள்ளன. செ. நாகி செட்டி உரை எழுதி உள்ளார். viii. 275/1911/I.

R673

**சுப்பிரமணிய பிள்ளை**

**219.** i. சர்வாத்ம முத்தி நிர்ணயமும், பொ. மு. தச காரிய விளக்க மறுப்பின் மறுப்புக் கண்டனமும் ; ii. சைவப் பிரகாச அச்சியந்திரசாலை ; iii. 1914 ; iv. உ.ப. 11 ; v. 16 × 12 செ.மீ. ; vi. ...... ; vii. ஆணவ மலம், தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பின் முகவுரைக் கண்டனம் என்ற இரு தலைப்புகளில் விளக்கம் உள்ளன. viii. 219/1914/IV.

R673

**220.** i. சைவ சித்தாந்த விளக்கம் ; ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1913; iv. உ. ப. 131; v. 21×13; செ.மீ. ; vi. ....; vii- பதியியல்பு, பசுவியல்பு, ஆணவமல வியல்பு, கன்ம மல வியல்பு, சுத்த மாயையின் இயல்பு, அசுத்த மாயையின் இயல்பு ஆகிய தலைப்புகளில் சைவ சமயக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. மகிபாலன்பட்டி மு. கதிரேசன் என்பவர் முன்னுரை எழுதியுள்ளார். viii. 191/1913/IV.

R673

**சுவாமிநாத உபாத்தியாயர், தி. மு.**

**221.** i. முப்பொருள் விளக்கம் ; ii. கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1911; iv. உ. ப. 28; v. 17×12 செ.மீ.; vi. ...... vii. பசு மகிமை, விபூதி மகிமை, உருத்திராக்க மகிமை ஆகிய மூன்று தலைப்புகளில் கட்டுரைகள் உள்ளன. viii. 736/1911/II.

R673

**222.** **i.** ஞானுமிர்தக் **கட்டளை** ; **ii.** தமிழ்ச் சங்க முத்திராசாலே, மதுரை ; **iii.** 1911 ; **iv.** உ. ப. 28 ; **v.** 21×14 செ. மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** பதி இலக்கணம், பசுவிலக்கணம், பாச விலக்கணம் முதலிய சைவ சமயத் தத்துவங்களை விளக்கிக் கூறும் நூல். **viii.** 271/1911/II.

**R673**

**தாயுமானசுவாமி, ஆ. ரு.**

**223.** **i.** சைவ சமய கோளரி—(முதற் பாகம்—முதற் பதிப்பு) ; **ii.** விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர் ; **iii** 1915 ; **iv.** செ.மூ.ப. 26 ; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0–8–0 ; **vii.** விருத்தம், பராபரக்கண்ணி, எக்காலக்கண்ணி முதலிய பலவகைப் பாக்களும், இசைப்பாடல்களும் நிரம்பிய நூல். அனைத்தும் பக்திப் பாடல்கள். **viii.** 1007/1915/I.

**R673**

**தேவகுஞ்சரியம்மாள், சௌ.**

**224.** **i.** சூத சங்கிதாஸாரம்ருத வசனம் ; **ii.** ஸ்ரீபாலசுப்பிரமணியன் கம்பெனி, சென்னை ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலே, சென்னை ; **iii.** 1912 ; **iv.** உ.ப. 202 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 1–0–0; **vii.** சிவ மான்மிய காண்டம், ஞானயோக காண்டம், முக்தி காண்டம், எக்ஞ வைபவ காண்டம் ஆகிய 4 காண்டங்களும், பல அத்தியாயங்களும் கொண்டது. தேவர்கள் ஜகத்திற்குக் காரணப் பொருளை உணர்ந்து கொண்டது முதல் சர்வ வேதாந்த சங்கிரகம் உரைத்தது ஈறாகப் பலவாறாகச் சிவனின் பெருமையை உணர்த்துவது. **viii** 324/1912/III.

**R673**

**225.** **நாகலிங்கம் பிள்ளை, இரா. இர.**

**i.** பக்தி விளக்கம் ; **ii.**.......; ஸ்ரீ ஜீவரத்திந விநாயக சம்பந்தர் அச்சுக் கூடம், சென்னை ; **iii.** 1911 : **iv.** உ.ப.+ செ.மூ.ப. 3+1 ; **v.** 21×14 செ.மீ.; **vi.** ......... ; **vii** பக்தி இன்னதென்று விளக்கிக் கூறும் நூல். இறுதியில் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பதிகம் ஒன்று உள்ளது. இது மயூர வக்கிரப் பெருமானைத் துதிப்பது. **viii.** 753/1911/I.

**R673**

**226.** **பிரஹம உத்ஸவம்** (2–ம் பதிப்பு) ; **ii.** மதுரை ஹால் ஆப் தியாசபி டிராக்ட் நெ. 11 ; விவேகபாநு பிரஸ், மதுரை; **iii.** 1912 ; **iv.** உ.ப. 4; **v.** 21×14 செ.மீ.; **vi.**..........; **vii.** திரிபுர தகனம் அதன் தத்துவம் என்ற தலைப்பில் விளக்கம் அமைந்த நூல். **viii.** 342/1912/I.

**R673**

**227. முத்தையா பிள்ளை, பொ.**

i. ஆன்ம போதம் ; ii. சிவாநுபூதிச் சித்தாந்த சங்கம், தூத்துக்குடி; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. 1912 ; iv. உ.ப 8 ; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. 'ஆன்ம போதம்' என்ற தலைப்பின் இலக்கணமும், ஆன்ம சப்தம், பரமான்மா ஜீவான்மா இரண்டிற்கும் பொது என்பதூஉம் உவ்வாறு கூறுவதுமுறையே வேதாந்தமும் சித்தாந்தமுமாமென்பதூஉம் முதலிய தத்துவ விளக்கம் கூறுவது இது, "பிரசங்கம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. viii. 381/1912/III.

R673

**228.** i. தசகாரிய விளக்க மறுப்புக்கு மறுப்பு; ii. விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1912; iv. உ.ப. 40; v. 16×12 செ. மீ.; vi.........;vii. தசகாரிய விளக்கம் என்று ஆசிரியர் எழுதிய நூலுக்கு தெ.ச. சுப்பிரமணிய பிள்ளை, "சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தே விடும்" என்ற தலைப்பில் மறுப்பு நூல் ஒன்று எழுதினார். அதற்கு மறுப்பாக இந்நூல் எழுதப்பட்டது. முற்பகுதியில் அபிப்ராயங்கள் என்ற தலைப்பில் மு. ரா. கந்தசாமிக் கவிராயர், கதிரேசஞ் செட்டியார் முதலியோர் எழுதிய கருத்துரைகள் உள்ளன. viii. 74/1913/I.

R673

**வலங்கை மீகாமனூர்**

**229.** i. அறிவானந்த சித்தியார்: ii. கோ. வடிவேலு செட்டியார் & சண்முக முதலியார், சத்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1909; iv. செ. மூ. ப. 68; v. 18×12 செ.மீ; vi. 0–4–0; vii. ஐயந் தெளிவத்தல், ஆசிரியரிலக்கணம், சீடசாரம், சரீரகம், சித்தாந்தத்துண்மை, பிறவி விரும்பல் முதலிய பல தலைப்புகளில் பாடல்கள் உள்ளன. viii. 220/1911/IV.

R673

**230.** ஸ்ரீஸூத ஸம்ஹிதை; ii. என். எஸ். இராஜாராமய்யர்; அடிசன் பிரஸ், சென்னை; iii. 1914; iv. உ.ப. 75; v. 21×14 செ.மீ; vi. 0–8–0 ; vii. சூத சங்கிதையின் முதல் காண்டமாகிய "சிவ மஹாத்மிய கண்டம்" தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பசுபத வாதம், நந்தீச்வர் விஷ்ணுஸம்வாதம், ஈச்வர பூஜை விதானம் முதலிய 13 அத்தியாயங்கள் கொண்டது. viii. 923/1914/II.

R673

## 181.48 [1] வைணவ தத்துவம்

### அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்

231. i. அர்த்தபஞ்சக ஸாராம்ருதம்; ii. ஆர்பனேஜ் அச்சுக் கூடம், சென்னை, iii. 1913; iv. உ.ப. 130; v. 18×12 செ.மீ.; vi........; vii. ஆத்ம ஸ்வரூப ப்ரகரணம் முதல் விரோதி ஸ்வரூப ப்ரகரணம் ஈறாக ஐந்து பகுதிகளைக் கொண்டது. வினா விடையாக அமைந்தது; viii. 393/1914/III.

R672

232. i. சதுர்த்தஸாப்த பிரகாசிகை ii. அரங்கசாமி முதலியார், செஞ்சி; சக்சிதானந்தம் பிரஸ், சென்னை; iii. 1913; iv. உ. ப.+செ. மூ. ப. 35; v. 18×11 செ. மீ.; vi. 0—2—0; vii. இதன்கண் இராமனின் பெருமை கூறும் ஸ்ரீராமப்பிரபாவம் வான்மீகி இராமாயணச் சுருக்கம், கம்பராமாயணம் யுத்த காண்டச் சுருக்கம், ஸ்ரீராம நாம மகிமை, இராமாயண நிகழ்ச்சிகள் இன்னின்ன திதிகளில் நடந்தன என்று கூறும் ஸ்ரீராமாயண சார சங்கிரகம், முகுந்தமாலை முதலியன உள்ளன. viii. 756/1914/I.

R672

233. i. நித்யாநுஷ்டாந விதியென்னும் திருவாராதநக்ரமமும் ஸாலக்ராம தத்தவதீப முக்தாவலியும்; ii. கா. வெ. திருக் கச்சி நம்பிதாஸர்; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை; iii. 1910; iv. உ. ப.+செ. மூ. ப. 34+4; v. 21×14 செ. மீ.; vi. 0—3—0; vii. நித்யாநுஷ்டாந விதிச் சுருக்கம், திருவாராதந க்ரமம், ஸ்ரீஸாலக்ராம தத்வதீப முக்தாவலி முதலியன உள. viii. 564/1911/I.

R672

### பிள்ளை லோகாசார்யர்

234. i. அஷ்டாதஸ ரகஸியம்; ii. கா. வெ. திருக்கச்சி நம்பி தாஸர்; வைஷ்ணவ ஸம்ப்ரதாய புஸ்தகசாலை, சென்னை; ஆநந்த அச்சுக்கூடம்; iii. 1911; iv. உ. ப. 362+4; v. 24×15 செ. மீ.; vi. 2—0—0; vii. திருமந்த்ர ப்ரகரணம், வயப்ரகரணம், சரம சுலோகப் ப்ரகரணம் முதலியன உள்ளன. viii. 409/1911/II.

R672

235. i. முமுக்ஷிப்படியும், திருமந்தரார்த்த மென்கிற வ்யாக்கியாந மும் பிரமாணத்திரட்டும்; ii. கா. வே. திருக்கச்சி நம்பிதாஸர் பிரஸிடென்சி அச்சுக்கூடம், சென்னை; iii. 1911; iv. செ. மூ. உ. ப. 128; v. 21×14 செ. மீ.; vi. 1—0—0;

**vii.** திருமந்த்ரப்ரகரணம் முதல் சரம சுலோகப்ரகரணம் ஈருக உள்ளன. முமுக்ஷுப்படி விளக்கத்தில் எடுத்தாளப்பட்ட திவ்வியப் பிரபந்தப் பாடல்கள் இறுதியில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. **viii.** **265/1911/IV.**

**R672**

**i.** முமுக்ஷுப்படி (தொ. எ. **236** பார்க்க) : முதற் பதிப்பு ; **ii.** செ. முத்துகிருஷ்ண நாயுடு, உ. வே. கிருஷ்ணமாச்சார்ய சுவாமி & அரங்கசாமி முதலியார் ; சச்சிதானந்த அச்சியந்திர சாலே, சென்னே ; **iii.** டிசம்பர், **1909** ; **iv.** உ. ப. **17** முதல் **58** வரை (**42**), **v.** **12×9** செ. மீ.; **vi.** **0—2—0**; **vii.** முமுக்ஷு என்ருல் வீடுபேற்றில் இச்சையுள்ளவன் என்று பொருள். இவர்கள் அறிய வேண்டிய மூன்று செய்திகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. அவையாவன : திருமந்தரப் பிர கரணம், த்வய பிரகரணம், சரமஸ்லோகப் பிரகரணம், மணிப் பிரவாள நடையில் உள்ளது. நாராயணனுக்கு அடிமை செய்து உய்யும் வழியைக் காட்டுவது; **viii.** **127/1911/I.**

**R672**

**235.** **i.** முமுக்ஷீப்படி வியாக்கியாநம் : முதற் பதிப்பு ; **ii.** ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி & திருக்கச்சி நம்பிதாசர், திருவல்லிக்கேணி, சென்னே ; பிரிஸிடென்சி அச்சுக்கூடம், சென்னே ; **iii.** செப் டம்பர், **1911** ; **iv.** செ. மு. உ. ப. **128** ; **v.** **22×14** செ. மீ.; **vi.** **1—0—0** ; **vii.** திருமந்த்ரப்ரகரணம், த்வயப் பிரகரணம், சரமஸ்லோக ப்ரகரணம் என்னும் மூன்று பகுதி கள் உள்ளது. இதற்கு மணவாள மாமுனிகள் அருளிச்செய்த திருமந்த்ராத்தம் என்கிற விரிவுரையும், பிரமாணத் திரட்டும் உள்ளன. முமுக்ஷுப்படி விரிவுரையில் அடங்கிய தமிழ்ப் பாடல்கள் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. **viii.** **265/1911/IV.**

**R672**

**பெரியவாச்சான் பிள்ளே**

**236.** **i.** நிகமநப்படி (முமுக்ஷுப்படி அர்த்த பஞ்சகம்): முதற் பதிப்பு ; **ii.** செ. முத்துகிருஷ்ண நாயுடு, உ. வே. கிருஷ்ண மாச்சார்ய ஸ்வாமி & அரங்கசாமி முதலியார் ; சச்சிதானந்த அச்சியந்திரச்சாலே, சென்னே ; **iii.** டிசம்பர், **1909** ; **iv.** உ. ப. **16** ; **v.** **12×9** செ. மீ.; **vi.** **0—2—0** ; **vii.** இது மணிப்ரவாள நடையில் அமைந்தது. பெண்களும், பேதை களும் அறியும் வகையில் உரைநடையில் அருளிச் செய்யப் பெற்றது. நிகமனப் படியில் திருமந்த்ர பிரகரணம் ; த்வய பிரகரணம் ; சரமஸ்லோக பரகரணம் என மூன்று பிரிவுகள் உள; **viii.** **127/1911/I.**

**R672**

## 181. 48 [1] துவைதம்

**ரங்கநாதாசாரியார், பாகவத, கும்பகோணம்**

237. i. துவைத மத விளக்கம் : முதற் பதிப்பு ; ii. பாகவத ரங்கநாதாசாரியார், கும்பகோணம்; வைதீக வர்த்தினி பிரஸ், கும்பகோணம் ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 1+40 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. தமிழ்நாட்டில் உள்ள மாத்துவ சமயத்தாருக்குப் பயன்படும் பொருட்டு எழுதப்பட்டது. யுக்தி மல்லிகை, மகாபாரத தாத்பர்ய நிர்ணயம், மத்துவ விஜயம், பிரம்ம சூத்திர பாஷியம், இவைகளின்றும் சில செய்திகளை மட்டும் எடுத்துச் சுருக்கி எழுதப்பட்ட நூல். இதிலுள்ள செய்திகளையே விரிவாக்கி 'மத்துவ விஜயம்,' என, ஒரு நூலை எழுதி வருவதாகவும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்: viii. 791/1914/I.

R65

## 181.48 [2] சங்கராச்சாரியர் நூல்கள்

i. தசகம் : முதற் பதிப்பு ; (தொ.எ. 653 பார்க்க) ; ii. ச. சோமசுந்தர தேசிகர், வைத்தீஸ்வரன்கோயில், ஸ்ரீ குஞ்சித சரண அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ.ப. 10+1 ; v. 18×11 செ.மீ. ; vi ...........; vii. சங்கராச்சாரியர் செய்த வடமொழிப் பாடலின் தமிழ்மொழி பெயர்ப்பு; viii. 463/1911/II.

R66

238. i. பிரஹ்மா நந்த லஹரி : முதற் பதிப்பு ; ii. எம். சண்முக முதலி, சென்னை ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 24 ; v. 19×11 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. அத்வைத தத்துவங்களின் பல சிறந்த தத்துவங்களைத் தொகுத்து, தருவதே இந்நூல். வடமொழியிலிருந்து இராமகிருஷ்ண சுவாமிகளால் தமிழாக்கம் செய்யப்பட்டது. சொற்களைப் பிரித்து சொற்பொருள், பொழிப்புரைகளுடன் தமிழில் இயற்றப்பட்டிருக்கிறது. வடமொழியில் முதல் நூல் செய்தவர் சங்கர பூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகள் ஆவர்; viii. 763/1915/I.

R66

239. i. மநீஷா பஞ்சகம் : முதற் பதிப்பு ; ii. டி. ஏ. சுவாமிநாத அய்யர், திருவையாறு ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை; iii டிசம்பர், 1912 ; iv. செ.மூ.உ.ப. 1+56 ; v. 21×14 செ.மீ. ; vi. 0 8 0 ; vii. சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய வடமொழிப் பாடல்களும், அதற்குப் பதஞ்சலி முனிவர் இயற்றிய விரிவுரையைப் பின்பற்றி திருவையாறு அ. சுவாமிநாத அய்யர் என்பார் எழுதிய தமிழ்ச் சொற்பொருள், பொழிப்புரை கருத்துரைகளும் அடங்கியுள்ளன; viii. 785/1912/IV.

R66

i. விவேக சடகம்: முதற் பதிப்பு; (தொ.எ. 653 பார்க்க,) ii. ச. சோமசுந்தர தேசியர், வைத்தீஸ்வரன் கோயில், ஸ்ரீகுஞ்சிதசரண அச்சுக்கூடம், சிதம்பரம்; iii. ஏப்ரல், 1911; iv. செ.மூ.ப. 6; v. 18×11 செ.மீ.; vi. ........; vii. சங்கராச்சாரியார் செய்த வடமொழிப் பாடலின் தமிழ் மொழி பெயர்ப்பு. viii. 463/1911/II.

R66

## 200 சமயம்

### 212·5 பிரம்ம ஞானம்

**நாராயண அய்யர், ப.**

240. i. சந்மார்க்க தீபம்: முதற் பதிப்பு; ii. ப. நாராயண அய்யர், மதுரை; விவேகபாநு அச்சியந்திரசாலை; iii. அக்டோபர் 1911; iv. உ.ப. 60+2; v. 13×11 செ.மீ.; vi 0–2–0; vii. ஹைலேரியன் என்பவர் கிரேக்க மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, மேபல் காலின்ஸ் அம்மையின் மூலம் குறிப்புரையுடன் பதிப்பித்து வெளியிட்டார். இதற்கு முன் இந்நூலை 'மார்க்க விளக்கம்' என்னும் பெயரால் இராமசாமி அய்யர் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். அப்புத்தகம் இல்லாமை கருதியும், அதன் நடை தெளிவில்லாமை கண்டும் திருந்திய முறையில் இந்நூலை ஆசிரியர் வெளியிட்டிருக்கிறார்; viii. 116/1911/IV.

QM

241. i. பிரஹ்மஞான சபையின் யந்திரம்: முதற் பதிப்பு: ii. ப. நாராயண அய்யர்; விவேகபாநு பிரஸ், மதுரை; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப. 4; v. 23×15 செ.மீ.; vi. இலவசம்; vii பிரம்மஞான சபையார் ஏற்றுக்கொண்டுள்ள யந்திர முத்திரை பற்றிய விளக்க நூல். உயர் நலமமைந்த "தர்ம முறைகள்" என ஈற்றில் காணும் பகுதி பிரம்ம ஞானத்தை அடைவதற்குரிய படிகளாம்; viii. 558/1911/I.

QM

**ராமசந்திர நாயுடு, வி.**

242. i. ***அதிக சமீபத்தில் வருங்கால விசேஷம்***: முதற் பதிப்பு; ii. ப. நாராயண அய்யர்; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூலை 1911; iv. உ.ப. 14; v. 23×15 செ.மீ.; vi. இலவசம்; vii. பெரியகுளத்தில் நடைபெற்ற பிரம்மஞான சபையின் கூட்டத்தில் படிக்கப்பட்ட செய்தியுள். முற்காலத்தும், இக்காலத்தும் பிற்காலத்தும் உலகில் என்னென்ன நேர்தல் கூடும் என்ற திட்டத்தைப் பற்றிய ஒரு ஆய்வுரை; viii. 149/1911/III.

QM

**ராமசுப்பய்யர், பி. எஸ். (தொ.து.)**

**243.** i, பிரஹ்மக்ஞான மந்திரம்; ii. பி. எஸ். ராம சுப்பய்யா, மதுரை; வி. பி. பிரஸ், மதுரை; iii. மார்ச், 1915; iv. உ.ப. 4; v. 22×14 செ.மீ.; iv. இலவசம்; vii இது டன சமய நெறிகளைத் தொகுத்துக் கூறும் சிறு வெளியீடு; viii. 901/1915/I.

QM

**ஜேசிங், பி. எஸ்.**

**244.** i பிரஹ்ம ஞானம் என்பதென்ன; முதற் பதிப்பு; ii. பி. எஸ். ஜேசிங்; நீமாபிரஸ், திருப்பாதிரிப்புலியூர்; iii. ஜூலை, 1911; iv. உ.ப. 8; v. 18×12 செ.மீ.; vi. 0-0-6; vii. பிரம்ம ஞானத்தைப் பற்றி விளக்கும் ஒரு சிறுநூல். இமயமலையில் வசிக்கும் பெரியார் ஒருவரால் சொல்லப்பட்ட கருத்துக்களின் மொழி பெயர்ப்பு. இதனுடன் ஆரிய சமய நீதிமுறை, உயர் நலம் அமைந்த தர்ம முறைகள் ஆகியவைகள் விளக்கப்பட்டிருக்கின்றன; viii. 367/1911/III.

QM

## 220-284 கிருத்துவம்

## 220·3 விவிலிய நூல் அகராதி

**கிலேற்றன் அய்யர், ஏ. சி.**

**245.** i. வேத அகராதி; முதலாம் பாகம்; முதற் பதிப்பு; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை; எஸ். பி.ஸி கே. பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1911; iv. உ. ப. 3+200; v. 25×17 செ.மீ.; vi. 0-8-0; vii. வேத பண்டிதராகிய ஹேஸ்டிஸ் ஐயரும், மற்றும் பல வேத சாஸ்திரிகளும் ஆங்கிலத்தில் எழுதிய வேத அகராதி, வேத வியாக்கியானம் முதலிய நூல்களைத் துணையாகக்கொண்டு இந்தத்தமிழ் வேத அகராதி எழுதப்பட்டிருக்கிறது. பவர் ஐயர் எழுதிய வேத அகராதியில் கண்ட அகுஸ்தீன், அச்சினி, அரியானர், அவஸ்தை பூசுதல், அழைப்பு, ஆத்துமா, ஒலிவம் என்னும் பெயர் கொண்ட நிபந்தங்கள் திருத்தஞ் செய்யப்பட்டு, இந்த வேத அகராதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மற்றத் தொள்ளாயிரம் நிபந்தங்களும் ஆசிரியரால் எழுதப்பட்டன. தமிழில் முழு வேதாகம சொல்லகராதி இல்லாததனால் அதைப் போல உதவுமாறு அநேக சொற்கள் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. தமிழ் வேதாகமத்தில் ஒரே ஆளின் பெயர் அல்லது ஒரே இடத்தின் பெயர் வெவ்வேறு நடைகளில் மாறுபட்ட எழுத்தினால் எழுதியிருக்கிறதினால் அவை எல்லாம் தமிழ் எழுத்துக்களின் அட்டவணையின்படி இதில் எழுதப்பட்டிருக்கின்றன. (உ-ம்) ஏகு, யெகு, எசேர், எத்சேர், எசேர், ஏசேர், ஏத்சேர், ஆனைக்கிம், ஏனைக்கீம், உசியா, ஊசியர் முதலியனவாம்; viii. 396/1911/II.

Q6k

246. i. வேத அகராதி—2-ம் பாகம் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, மதராஸ்; எஸ்.பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. 201-352-(152 ; v. 25×17 செ.மீ.: vi. 0-8-0; vii. முதல் பாகம் வெளி வருவதற்குத் துணையான நூல்களே இதற்கும் பயன் பட்டன. மேலும், இரண்டு பாகங்களில் இந்த அகராதி முடிவாகும் என்று ஆசிரியர் குறித்துள்ளார்; viii. 397/1911/II

Q6k

## 220.4 விவிலிய நூல் மூலம்

**கார் அய்யர், இ. எஸ்.**

247. i. வேத பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. இ.எஸ். கார் அய்யர், பாளையங்கோட்டை ; சி. எம். எஸ். பிரஸ், பாளையங்கோட்டை: iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 12; v. 19×11 செ. மீ.; vi. இலவசம்; vii. திருநெல்வேலி சி. எம். எஸ். கவுன்சிலைச் சேர்ந்த சிற்றூர்ப் பள்ளிகட்காக எழுதப்பட்ட நூல். சிறுவர் வகுப்பு முதல் நான்காம் வகுப்பு வரையில் பயிலும் மாணவர்களுக்கு ஏற்ற விவிலிய நூல் செய்திகள் இதில் எளிமையாகத் தரப் பட்டுள்ளன; viii. 67/1913/IV.

Q6:21

248. i. சத்திய வேதம்—பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடும் : ii. சத்தியவேத சங்கத்தார், சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ் , வேப்பேரி, சென்னை; iii. 1914 ; iv உ.ப. 1,151 ; v. 27×18 செ.மீ.; vi........; vii. சத்திய வேதத்தி பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் அடங்கி இருக்கின்றன. இது இங்கிலாந்து முதலிய சர்வதேச சத்திய வேத சங்கத்தாருடைய அனுமதியின்படி மூல மொழிகளிலிருந்து தமிழ்மொழி மொழி பெயர்க்கப்பட்ட, முன்னைய மொழி பெயர்ப்புகளைக்கொண்டு ஆராயப்பட்டது. பழைய, புதிய ஏற்பாடுகளின் ஆகமங்களின் பெயர், முறை அதிகாரங்களின் தொகை ஆகியவற்றின் விவரம் கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வோர் ஆகமத்திலும் அடங்கிய வேத உரைகள் எண்ணிட்டுக் காட்டப்பட்டுள்ளன. அவை அமைந்துள்ள இடங்கள் மேற்கோள்களுடன் குறிக்கப்பட்டுள்ளன. முன்னைய மொழி பெயர்ப்புக்களுள் காணும் சொல் வேறுபாடுகளும் ஆங்காங்கே குறியிட்டு அடுத்துள்ள குறிப்புப் பத்தியில் தரப்பட்டுள்ளன; viii. 277/1914/III.

Q6:21

249. i. ராஜாக்களின் ஆகமங்கள் (I-ம் II-ம்); ii. ஜே.எச். லாஸன், பசுமலை ; ஏ. எம். லேஜுக்ஸ் பிரஸ், பசுமலை ; iii. 1915; iv. உ.ப. 64 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-2-6 ; vii, சாமுவேலின்

இரு ஆகமங்களையும் சவுல், தாவீது இவர்களின் காலங்களில் நடந்த வரலாறுகளையும் விளக்குவது. மதுரை மிஷன் ஆசாமிகளின் வேதபாடத் தேர்வுககாகத் தொகுத்து எழுதப் பட்ட குறிப்புக்களுடன் கூடியது; viii. 271/1915/IV.

Q6:21

## 220.95 விவிலிய நூற் கதைகள்

250. i. திறந்தவாய் அல்லது வாய்ப்பாவ விளக்கம்: மூன்றும் பதிப்பு; ii. ஜோசப் அய்யர்; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி; iii. டிசம்பர், 1912; iv. உ.ப. 93; v. 16×10 செ.மீ.: vi. 0–2–0; vii. வாய்ப் பேச்சினூல உண்டாகும் தீமைகளைப் பற்றி எடுத்துக்காட்டுகளுடன் விளக்குவது. இருபத்தொரு விவிலிய நூற் கதைகள எடுத்துக்காட்டுகளாக இதில் கொடுக்கப் பட்டுள்ளன. "இது முக்காலததிருந்த வேத போதகர் ஒருவரால் இயற்றப்பட்டது" என்று நூலில் குறிக்கப்பட்டுள்ளது; viii. 758/1912/IV.

Q6:21

## 221.4 விவிலிய நூல்-பழைய ஏற்பாடு

251. i. சத்திய வேதமென்கிற பழைய ஏற்பாடு [சத்திய வேதமென்கிற புதிய ஏற்பாடு]; ii. தி பிரிட்டிஷ் அண்டு பாரின் பைபிள் சொஸைட்டி, சென்னை; எஸ். பி. ஸி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 2,049; v. 22×15 செ.மீ.; vi. 1–6–0; vii. விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டின் தமிழ் மொழி பெயர்ப்பாகும். முதல் மொழியாகிய எபிரேயு மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. "மனுஷர்கள் ரட்சிக்கப்படுவதற்காகச் சர்வலோக தயாபரனுன கர்த்தர் அருளிச் செய்த சத்திய வேதம்" என்று குறிக்கப்பட்டுள்ளது. முப்பத்தொன்பது ஆகமங்கள் இதில் உள்ளன. ஒவ்வொரு ஆகமத்தின் முக்கிய வேத வாக்கியங்கள் எண்ணிட்டுக் காட்டப்பட்டுள்ளன. அதனோடு புதிய ஏற்பாட்டின் பகுதியும் அடங்கியுள்ளது; viii. 551/1914/II.

Q6:22

**சாங்கோபாங்க நாத சுவாமிகள், இராசரிஷி**

252. i. புராந்திம காண்டம்: இரண்டாம் பதிப்பு; ii. ஆ. சூசை அண்ணுதுரை, தெள்ளூர்; குட்பாஸ்டர் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 8+350; v. 19×13 செ. மீ.; vi. 1–0–0; vii. சத்திய வேத பழைய ஏற்பாட்டின் வரலாற்றைத் தொகுத்துத் தரும் நூல். இதன் முதற்

பதிப்பு 1886 ஆம் ஆண்டு எம். எஸ். யாகப்பிள்ளை என்பாரால் திருத்திய அச்சில் பதிப்பிக்கப்பட்டது. எ. எஸ். ஜெயராம முதலியார், தற்காலத் தமிழ் மொழி வழக்குக்கு ஏற்ப கடினமான சந்திகளைப் பிரித்து இதன் நடையை ஒழுங்கு படுத்தியுள்ளார். ஆறு யுகமாக பாகுபடுத்தி இந்த வரலாறு எழுதப்பட்டுள்ளது; viii. 108/1914/I.

Q6:22

ஹெலன் மெக்ரீகர்

253. i. பழைய ஏற்பாட்டின் ஜீவியமும் காலமும்; ii. கிறிஸ்தியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii 1915; iv. உ.ப. 164; v. 19×13 செ.மீ.; vi. 0-6-0 ; vii. பழைய ஏற்பாட்டின் காலத்தில் நிலவியிருந்த மக்கள் வாழ்க்கையையும் சூழ்நிலையையும் பற்றி விரிவாக ஆசிரியர் தமிழில் விளக்கியுள்ளார். இது ஒரு மொழி பெயர்ப்பாகும். பழைய ஏற்பாட்டில் அடங்கிய செய்திகளைத் திரட்டி உரைக்கும் நூல். 'உலகமும் மனுஷனும்', 'கடவுள் தெரிந்துகொண்ட ஜனங்கள்', 'நியாயாதிபதிகள்', 'இஸ்ரவேலரை நடத்தின காலங்கள்', இராச்சியம், தீர்க்கதரிசிகள் உண்டான காலங்கள்', 'அந்நிய தேசங்களில் குடியிருப்பது', யூதர்கள் கானானுக்குத்திரும்ப வருவது என்பனவற்றை ஏழு பிரிவுகளில் விவரிக்கிறது. viii. 55/1915/III.

Q6:22

## 221. 95 [1] பழைய ஏற்பாட்டுக் கதைகள்

சின்னத்தம்பிப் பிள்ளை, வே. ஜோ., உரும்பராய்

254. i. திருவாக்குப் புராணம்: முதற் பதிப்பு; ii. வே. ஜோ. சின்னத்தம்பிப் பிள்ளை, உரும்பராய், கொழும்பு; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மூ.எ. 46; v. 24×14 செ.மீ.; vi. .... ; vii. கிருத்துவ வேதாகமங்களில் ஒன்றாகிய "யோனா" என்னும் சிறு நூலின் தமிழ் மொழிப் பெயர்ப்பைத் தழுவிப் பாடப்பட்டது. பெரு வழக்கிலுள்ள இக்காலத் தமிழைத் தழுவி இந்நூலைப் பாடியுள்ளார். 'நினிவேயினழிவை நீக்கிய காதைப் படலம்', என்பதுவே இதில் செய்யுளாக்கப்பட்டுள்ளது. விருத்தப் பாடல்களில் அமைந்தது. அருஞ்சொல் விளக்கம் இறுதியில் உள்ளது. இவ்வாசிரியர் 'எஸ்தர் புராணம்' என ஒரு நூல் பாடியிருப்பதாக முகவுரையால் தெரிய வருகிறது; viii. 709/1914/I.

Q6:221

255. i. திருவாக்குப் புராணம் : முதற் பதிப்பு ; ii. வே. ஜோ. சின்னத்தம்பிப் பிள்ளை, வெள்ளைவத்தை; தமிழ்ச் சங்கம்பவர் பிரஸ், மதுரை; iii. ஜூன், 1914; iv. செ.மூ.எ. 65; v. 22×14 செ.மீ.; vi. 20 காசு; vii. விவிலிய வேதாகமங்களி லொன்றாகிய "ரூத்" தென்னுஞ் சிறு உரைநடை நூலினது தமிழ் மொழிபெயர்ப்பைச் சார்ந்து செய்யப்பட்டது. எளிதில் விளங்கிக்கொள்ளக்கூடிய நடையில் எழுதி இருக்கிறார். 'உரூத்தின் சரிதப்படலம்' என்று இந்நூற் பகுதிக்குப் பெயரிடப்பட்டிருக்கிறது. விருத்தப் பாவினால் ஆகியது. அருஞ் சொல் விளக்கம் அகராதி வரிசையில் ஈற்றில் சேர்க்கப்பட்டிருக் கிறது; viii. 1128/1914/II.

Q6:221

256. i. பழைய ஏற்பாட்டிலுள்ள கதைகள்: முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்ரேசர் சொசைட்டி, சென்னை; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை; iii மே, 1914; iv உ.ப. 96; v. 14×11 செ.மீ.; vi. 0–1–6; vii. வைதிகநூல் ஆசிரியர் பலர் எழுதிய ஏற்றிலிருந்து திரட்டிச் சேர்க்கப்பட்டது. இது ஆறு திங்கள் பகுதிகளாகவும், ஒவ்வொரு பகுதியும் பத்துப் பாடங்கள் கொண்டதாகவும் குறிக்கப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு பாடத்தின் அடியிலும் ஒரு மறைச் சொற்றொடர் கொடுக்கப் பட்டிருக்கிறது. இது பள்ளி மாணாக்கர்களுக்காக எழுதப்பட்ட நூலாகும். பல பாடங்களுக்குப் படங்களும் உள்ளன; viii. 831/1914/II.

Q6:221

வால்போர்டு, குமாரி, ஜி. எம்.

257. i. வேதப் பாடம் புத்தகம் [Scripture text book to be used with the Old & New Testament stories]: முதற் பதிப்பு; ii. ஜி. எம். குமாரி, வால்போர்டு, பாளையங் கோட்டை; பாளையங்கோட்டை பிண்டிங் பிரஸ், பாளையங் கோட்டை; iii பிப்ரவரி, 1915; iv. உ.ப. 35; v. 14×11 செ.மீ.; vi 0–0–6; vii. பழைய ஏற்பாட்டையும், புதிய ஏற்பாட் டையும் சார்ந்த கதைகளை ஒட்டிய அறமொழிகளைக் கொண்டது இந்நூல். கீழ் வகுப்புகளில் வாசிக்கும் மாணவர்பொருட்டு இது இயற்றப்பெற்றது: viii. 519/1915/I.

Q6:221

## 223·2 கிருத்தவ தோத்திரம்

அபிராம்தாசர், தே.

258. i. சத்திய வேத பஜனைக் கீர்த்தனமாலை : முதற் பதிப்பு; ii. அ. அனந்தநாதப் பிள்ளை ; மதராஸ் டைமண்ட் அச்சியந்திரச் சாலை, சென்னை : iii. ஜூலை, 1913 ; iv செ.மூ.ப. 128 ; v. 21×14 செ.மீ ; vi. 0–8–0 ; vii. கிறித்துப் பெருமானைத்

துதிக்கும் இசைப் பாடற்களின் தொகுதி. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் உள. ''அர்ச். மரியாயி பஜனைக் கீர்த்தனங் களும் இதில் உள்ளன. 'சேசுநாதரின் திருநாம மந்திரப் பதிகம்' 'திருவருள் மன்றுட்டுப் பதிகம்', 'ஆவூர் அர்ச். பெரியன் நாயகியம்மன் பதிகம்', 'அர்ச். வியாகுல மாதாவின் பேரில் பதிகம்', 'பெரிய நாயகியம்மன் பஞ்சரத்தினம்' ஆகியவையும் இதில் உள்ளன. இந்நூலின் அருஞ்சொல் விளக்கம் தரப்பட் டுள்ளது; viii. 108/1913/III.

Q6:222

259. i. அபிஷேக நாதர் ஆலயம்: முதற் பதிப்பு; ii. எஸ். பாக்கிய நாதர், கோயமுத்தூர்; எமேனுவேல் பிரஸ், கோயமுத்தூர்; iii. ஏப்ரல், 1914; iv. செ.மூ.ப. 24; v. 19×12 செ.மீ.; vi. 0–1–0; vii. கோயமுத்தூர் எஸ். பி. ஜி. குழுவைச் சேர்ந்த அபிஷேக நாதர் ஆலயத்தின் வழிபாட்டில் பயன்படுத்தப்படும் பாடல் தொகுதி. அறுப்புக்கால உற்சவ ஜபமுறையும், பெரிய வெள்ளிக்கிழமை காலங்களில் பாடும் பாடல்களும் உள்ளன. மூன்று மணி வழிபாட்டில் பாடவேண்டிய ஞான கீதங்கள், ஞான இசைப் பாடல்கள் இதில் உள்ளன. கிறித்துவின் உயிர்த்தெழுதல் திருநாளில் பாடவேண்டிய ஞான இசைப்பாடல் களும் இதில் அடங்கியுள்ளன; viii. 155/1914/III.

Q6:222

260. i. அர்ச். அந்தோணியார் சத்துரு சங்கார மாலை; திருத்தப் பட்ட பதிப்பு; ii. ஏ. ஜோப் பிள்ளை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 48; v. 16×12 செ.மீ.; vi. 0–4–0; vii. அர்ச். அந்தோணியார் போர்த்துகீசிய நாட்டில் லிஸ்போன் என்ற பேரூரில் 1195 ஆம் ஆண்டு பிறந்தார். இவர் ஞானியராய் மக்களுக்கு அருளுரை ஆற்றியும், மக்களுடைய நோய் முதலியவற்றை நீக்கியும் பல நன்மைகளைச் செய்தவர். சத்ரு சங்கார மாலை என்பது அர்ச். அந்தோணியாரைக் குறித்த துதி மாலை, 30 பாடல்கள் கொண்டது. இதனையடுத்துப் பதின்மூன்று தேவார மன்றுட்டு என்ற பகுதியும், அந்தோணியார் பாடல் பிரார்த்தனை, அந்தோணியார் சீட்டு, அந்தோணியார் ஜெபமாலை, அந்தோணியார் பூஜை முதலியன உள்ளன. இறுதியில் அர்ச். மிக்காயேல் கடவுள் தூதரின் 'சத்ரு சங்கார மாலையும்' தரப்பட்டிருக்கிறது. இம் மாலையும் 30 கலித்துறைப் பாடல்களால் ஆனது. அந்தோணியார் வரலாற்றுச் சுருக்கம் நூல் முகப்பில் உள்ளது; viii. 595/1911/III.

Q6:222

261. i. **அர்ச். தேவ மாதாவின் மந்திர மாலை :** முதற் பதிப்பு ; ii. ஜோசப் ஐயர்; அர்ச். ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. அக்டோபர், 1912 ; iv. உ. ப. 32 ; v. 11×7 செ. மீ. ; vi. 0-0-6 ; vii. மந்திர மாலையைப் படிக்கு முன் செய்யவேண்டிய வழிபாடு, மாலைத் தோத்திரம் இசைப் பாடல், கணித பாடல், முதலிய வழிபாட்டுப் பாடல்கள் இதில் உள்ளன. இவை அர்ச். மரியம்மையைக் குறித்த வழிப் பாட்டு பாடல்களாகும் ; viii. 50/1912/IV.

Q6:222

**ஆசிர்வாதம் அய்யர், ஆர். வி.**

262. i. **பேரின்ப கீதம் :** ஏழாவது பதிப்பு ; ii. திருநெல்வேலி சில்டிரண்ஸ் மிஷன் ஆபீஸ், பாளையங்கோட்டை ; சி. எம். எஸ். பிரஸ், பாளையங்கோட்டை ; iii. நவம்பர், 1913 ; iv. செ.மூ.எ. 67 ; v. 12×9 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. சிறுவர்க்கு ஏற்ற இறை வணக்கப் பாடலின் தொகுதி. 67 பாடல்கள் உள்ளன. பிள்ளைகளின் வழிபாட்டு முறைமையும் இதில் அடங்கியிருக்கின்றது. viii. 739/1913/IV.

Q6:222

**ஆரோக்கியசாமி பிள்ளை, ஆர். ஏ.**

263. i. **திருவேண்டற் பாமணி மாலை** நான்காம் பாகம் : முதற் பதிப்பு ; ii. பி. முத்து வீர நாவலர் ; பூலோக வியாசன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1911; iv. செ.மூ.ப. 8 ; v. 20×13 செ.மீ. vi. இலவசம்; vii கோலார் தங்க வயலில் நிறுவப் பெற்ற அர்ச். அமலோற்பவ லூர்து நாயகியின் கமலோற் பவ காருண்ய தியான பஜனையின் பதினொன்றும் ஆண்டு திருவிழாக் கொண்டாடியபோது பாடப் பெற்றது. கிறித்து நாதரையும், மேரி அம்மையையும், கிறித்துவ சமயப் பெரியார்கள் சிலரையும் பற்றிய பாடல்கள். viii. 194/1911/III.

Q6:222

264. i. **இலத்தீன் பாட்டு புஸ்தகம் :** முதற் பதிப்பு ; ii. பி.ஆர். ஜோசப் ஐயர் ; செயின்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி: iii. நவம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 41; v. 16×10 செ.மீ.; vi. 0-4-0 ; vii. இது இலத்தீன் மொழியில் அமைந்த ஒரு துதிப் பாட்டுப் புத்தகம். இலத்தீன் மொழிப் பாடலை நூலின் இடப்பக்கத்தில் கொடுத்து எதிர்ப் பக்கத்தில் தமிழ் மொழியில் எழுத்துப் பெயர்த்து அச்சிடப் பட்டுள்ளது. இஃது பங்குக் கோவில்களில் நடக்கும் பாட்டுப் பூசை, திவ்விய நற்கருணை, ஆசிர்வாதம் முதலிய சமயங்களில் பாடும் பாட்டுக்களோடு பதில் சொல்லும் விவரத்தையும் குறித்துத் தெளிவாய் அச்சிட்டிருக்கிறது. viii. 654/1911/IV.

Q6:222

265. **i. உலக இரட்சகர் பிரார்த்தனை மாலை :** முதற் பதிப்பு ; ii. எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ். திருச்சிராப்பள்ளி ; iii. ஜனவரி 1915 ; iv. செ.மூ.ப. 14 ; v. 22×14 செ.மீ. ; v. 0–0–9 ; vii. உலகக் காப்பாளரான ஏசுவினைப் புகழ்ந்துப் பாடிய துதி மாலையே இந்நூல். கண்ணி முறையில் அமைந்தது. viii. 511/1915/I.

Q6:222

கார் அய்யர், இ.எஸ்., பாளையங்கோட்டை

266. **i. சுவிஷே கிதங்கள்** [விசுவாச கீதங்கள்] ; பத்தாவது திருந்திய விரிவான பதிப்பு : ii. இ. எஸ். கார் அய்யர், பாளையங்கோட்டை ; சர்ச் மிஷின பிரஸ், பாளையங்கோட்டை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ.மூ.ப. 116 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. கிறித்துவ சுவிசேடங்களை விளக்கி அமைந்த பாடல்களின் தொகுதி. நூற்று ஆறு பாடல்கள் இதில் உள்ளன. அவற்றிற்கு அடிப்படையான ஆங்கிலப் பாடல்களின் தொடக்கமும் ஒவ்வொரு பாட்டின் முதலிலும் கொடுக்கப்பட்டுள்ளது. வடமொழிக் கூட்டெழுத்துக்கள் சேர்ந்து வரும் சொற்களில் அவ்வெழுத்தின் மேலாகப் பிறை வளைவு கொடுக்கப்பட்டுள்ளது. viii. 88/19 4/II.

Q6:222

i. விசுவாச கீதங்கள் (தொ. எ. 266 பார்க்க) : நான்காம் திருந்திய பதிப்பு ; ii. இ. எஸ். கார் அய்யர், பாளையங்கோட்டை; சர்ச் மிஷன் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ.மூ.ப. 69 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. கிருத்துவினிடத்தில் நம்பிக்கை கொண்டு அவரைப் பின்பற்றும் வண்ணம் அறிவுறுத்தும் பாடல்களைக் கொண்டது. ஐம்பது பாடல்கள் இதில் உள்ளன. இவற்றின் அடிப்படையான ஆங்கில பாடல் அடியும் ஆங்காங்கே கொடுக்கப்பட்டுள்ளன. viii. 88/1914/II.

Q6:222

i. சங்கீத புஸ்தகம் (தொ.எ. 308 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. பிரிட்டிஷ் & வெளிநாட்டு பைபிள் சொஸைட்டி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ.மூ.எ. 150 ; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. கிறித்துவ சமய பாடல்களைக் கொண்டது இந்நூல். viii. 172/1915/I.

Q6:222

267. i. சற்குரு சதகம் : முதற் பதிப்பு ; ii. திரிலிஜியஸ் டிராக்ட் அண்டு புக் சொஸைட்டி, சென்னை ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. எப்ரல், 1912 ; iv. செ.மூ.எ. 2+100+1 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. ஏசு உலகில் தோன்றி பற்பல வியத்தகு செயல்கள் நிகழ்த்தியும், பலருக்கு அருளுரை வழங்கியும் மக்களுக்கு நன்னெறி காட்டி வாழ்ந்து, இறுதியில் சிலுவையில் உயிர் விட்டதும் ஆகிய செய்திகளை முறையே விவரித்துப் பாடுவது. 'இகபவமகற்றியிதயப் புனித மீந்தருளும் ஏக சற்குரு நாதனே' என்னும் தொடரை ஈற்றில் கொண்ட நூறு பாடல்களைக் கொண்டிருப்பதால் இதனைச் சற்குரு சதகம் என்று பெயரிட்டிருக்கின்றார். அருஞ் சொற்களுக்குப் பொருள்கள் அடிக்குறிப்பில் ஆங்காங்கே தரப்பட்டிருக்கின்றன. viii. 444/1912/II.

Q6:222

சாமிநாத நாவலர், சூ. அ., அம்பலவூர்

268. i. துயர மனோ வாக்கிய விண்ணப்ப மாலை : முதற் பதிப்பு ; ii. ஏ. சி. ரத்தினம் பிள்ளை, சென்னை ; கவிப்பிரகாச கணேசானந்த பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. செ. மூ. ப. 8 ; v. 22×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. திருவேளை மாநகரில் கோயில் கொண்டு எழுந்தருளிய பரிசுத்த அர்ச். ஆரோக்கிய மாதாவின் சமூகத்திற்குப் பாடப்பட்டது. அந்த வாக்கிய அஷ்டகம் என்பது 'தலையே நீ வணங்காய்' என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தை அடியொற்றி அமைந்துள்ளது. சில இசைப் பாடல்களும் விருத்தங்களும் மரியாயின் திருவடிகளைப் புகழ்ந்து துதிக்கும் வகையில் உள்ளது. viii. 208/1913/IV.

Q6:222

சாமுவேல், எம்., இடையன்குடி

269. i. இம்மானுவேலின் கீதங்கள் : முதற் பதிப்பு ; ii. எம். சாமுவேல் உபதேசியார், இடையன்குடி ; சாரதா பிரஸ், பாளையங்கோட்டை ; iii. டிசம்பர், 1912 ; v. செ. மூ. ப. 12+131+156 ; v. 18×11 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இம்மானுவேலைப் பற்றிய பாடல்கள் இரண்டு பிரிவுகளாக அமைந்துள்ளன. இவற்றில் ஏசு மேசியா அரசரின் பெருமை பொருந்திய வரலாற்றினை, 126 பாடல்களில் பாடியுள்ளனர். ஒவ்வொரு பாடலிலும் ஆசிரியர் தமது பெயரையும் பொருத்தி இயற்றியிருக்கிறார். இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் உள்ளன. இதிலுள்ள பாடல்களைப் பற்றியும் இதற்கு முன் வெளிவந்த சில தொகுப்புக்களைப் பற்றியும் முகவுரையில் விரிக்கப்பட்டிருக்கிறது. viii. 247/1913/I.

Q6:222

270. i. தானியேலின் பஞ்ச காண்டக் கவிதை ; ii. வி. சாமுவேல் உபதேசியார் ; டார்லிங் பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 58 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. தேவனருளிய தூய ஆகமத்தில் நமக்கு எடுத்துக் காட்டாக எழுதி வைக்கப்பட்டிருக்கும் இறையடியார்களுடைய வாழ்க்கை ஓட்டத்தில் அவர்களுக்கு இவ்வுலகில் உண்டான கொடிய துன்பங்களும், அத்துன்பங்களின் இடையில் அவர்கள் நடந்துக் கொண்ட வகையும், முடிவில் அவர்கள் பெற்ற வெற்றியும் இந் நூலின்கண் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இசைப் பாடல்களால் ஆகியது. யாவரும் எளிதில் வாசித்து அறியத்தக்க முறையில் எழுதியுள்ளார். தானியேலின் பூர்வோத்திர காண்டம், வித்தியா காண்டம், உத்தியோக காண்டம், சத்துரு காண்டம், ஜெயகாண்டம் என ஐந்து காண்டங்கள் கொண்டது. viii. 395/1915/IV.

Q6:222

சாமுவேல், ஒய்.

271. i. லாசருவின் சரிதைக் கீர்த்தனை : முதற் பதிப்பு; ii. ஒய். சாமுவேல் ; சி.எம்.எஸ். பிரஸ் ; பாளையங்கோட்டை ; iii. பிப்ரவரி, 1911 ; iv. செ.மூ.ப. 21 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. லாசரு என்பவன் பெத்தானியா ஊரிலுள்ள ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். மார்த்தாள் மரியாள் என்ற இரு தமக்கைகள் இவனுக்கு உண்டு. ஏசு இவர்களை அடைந்த போது மரியாள் மணமுள்ள எண்ணெயைப் பூசித் தன் தலை மயிரால் அவருடைய திருவடிகளைத் துடைத்ததும், லாசரு மரணமடைந்து அடக்கம் செய்தபின், ஏசுவினால் உயிரோடு எழுப்பப்பட்ட வரலாற்றினையும் பாடல்களில் கூறும் நூல். எளிய நடையில் அமைந்துள்ளது. viii. 441/1911/I.

Q6:222

சிகாமணி, ஜா., தூத்துக்குடி.

272. i. யேசு நாயகனின் ஜனன மகோற்சவ மாலை : முதற்பதிப்பு ; ii. ஜா. சிகாமணி & எம். பி. மஸ்கரீனாஸ் ; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 9 ; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6 ; vii. இசைப் பாடல்களும் தெம்மாங்குப் பாடல்களுமாக இது உள்ளது. ஏசு பெருமானார் தோற்றத்தைப் பற்றிப் புகழ்ந்து பாடுவது. இதிலுள்ள பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகள் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 971/1911/IV.

Q6:222

273. i. சுவிசேஷ கீதங்கள் ; ii. அமெரிக்கன் அட்வெண்ட் மிஷின் சொசைட்டி ; ஏ. ஏ. எம். பிரஸ், வேளச்சேரி, சென்னை ; iii. 1914 ; iv. செ.மூ.ப. 344 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0;

vii. இசைப் பாடல்கள் அடங்கிய தொகுப்பு நூல். ஓதுவார்களுக்கும், ஞாயிறு பள்ளிகளுக்கும், சமூகத்தினர் தொழுகைக்கும் இந்நூல் இயற்றப்பெற்றது. பாடல்களின் அட்டவணை அகராதி அடைவில் நூல் முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 987/1915/III.

Q6:222

274. i. **சுவிசேஷ கீதங்கள் :** ii. கோயம்புத்தூர் இவாஞ்சலிஸ்டிக் காம்பேன் கமிட்டி ; லிட்ரேரிசன் பிரஸ், கோயம்புத்தூர் ; iii. 1915 ; iv. செ.மூ. எ. 22 ; v. 21×14 செ.மீ. ; vi. ..........; vii. இதில் உலகம் நிலையாமை, நிலையான பேரின்பமாகிய கிறித்துவின் பெயரையே நாளும் இடைவிடாது கூறும்படி வேண்டப்படுகிறது. இதில் வரும் இசைப் பாடல்களுக்கு எல்லாம் இராக தாளக் குறிப்புக்கள் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 670/1915/III.

Q6:222

275. i. **சுவிசேஷப் பண்டிகை கீதங்கள் :** முதற் பதிப்பு; ii. ஏ. பெரிய நாயகம் ; டி.வி.வி. பிரஸ் & ஸ்ரீ நிகேதனம் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ.மூ.எ. 198 ; v. 18×13 செ.மீ ; vi. 0–1–6 ; vii. ஊர்வலப் பாடல்கள், இறைவனின் படைப்பு, பத்துக் கற்பனை முதலிய கிறிஸ்தவ சமயத் தொடர்பான செய்திகளை வெளியிடும் இசைப்பாடல் தொகுதி ; இப்பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகள் உள்ளன. இந்துக்களின் வழிபாட்டு முறையைப் பற்றியும் இறுதியில் சில பாடல்களில் காட்டி, உருவ வழிபாடு கூடாதென்கிறார். viii. 732/1913/III.

Q 6:222

276. i. **ஞானப் பாட்டுகள் :** திருத்தப்பட்ட பதிப்பு ; ii. ரிலிஜியஸ் டிராக்ட் அண்டு புக் சொஸைட்டி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. அக்டோபர், 1911 ; iv. செ.மூ.எ. 322 ; v. 18×11 செ.மீ ; vi. 0–4–0; vii. இது "தமிழ் ஞானப் பாட்டுகள்" என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு தொகுப்பு. மற்றும் பல்வேறு நூல்களிலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட ஞானப் பாட்டுகள் பெற்றுள்ளன. ஏறக்குறைய எல்லா ஞானப் பாட்டுகளும் மூலத்திலிருந்து சிறிது மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. இந்திய எழுத்தாளர்களால் புனையப்பட்ட ஞானப் பாட்டுகளும் சில உள. ஜெ. எஸ். செண்ட்லர் தலைமையில் அமைந்த ஒரு குழு இந்நூலினைத் தொகுத்து வெளியிட்டுள்ளது. இசை அட்டவணையும், பொருள் அட்டவணையும் இதில் தரப்பட்டுள்ளன. சென்னப் பட்டணத்துச் சன்மார்க்கச் சிறு புத்தக சங்கத்தார் விற்பனை செய்யும் புத்தகங்கள் அட்டவணையும் ஈற்றில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 273/1911/IV.

Q6:222

277. i. **தஞ்சாவூர் ஞானப் பாட்டுப் புஸ்தகம் :** முதற் பதிப்பு ; ii. பாஸ்டரேட் கமிட்டி, தஞ்சாவூர்; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 240 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. சென்னை ரிலிஜியஸ் டிராக்ட் சொஸைட்டியாரால் வெளியிடப்பட்ட நூலுக்கு இது ஒரு பின்னிணைப்பாக அமைந்துள்ளது. 30 ஆண்டுகளுக்கு மேலாகத் தஞ்சாவூர் செயிண்ட் பீட்டர் திருச்சபையில் பாடப் பட்டு வந்த தனிப் பாடல்களின் தொகுதி. இதில் 1 முதல் 134 வரை ஞானப் பாட்டுக்கள் உள்ளன. 135 முதல் 240 வரை ஞான இசைப் பாடல்கள் உள்ளன. viii. 928/1911/IV.

Q6:222

**தாமஸ், ஜி. ஒய்., குலசேகரன்பட்டினம்**

278. i. **பெரிய வெள்ளிக்கிழமை மும்மணி தியான கீதங்கள் :** முதற் பதிப்பு ; ii. ஜி. ஒய். தாமஸ், குலசேகரன்பட்டினம் ; சிவப்பிரகாசம் பிரஸ், தூத்துக்குடி ; iii. ஏப்ரல், 1914 ; iv. செ.மூ.ப. 13 ; v. 17×10 செ.மீ.; vi. இலவசம் ; vii. புதிய வெள்ளிக்கிழமையில் ஏசுநாதரை வழிப்பட்டு பாடும் பாடல்கள் கொண்ட நூல். சிலுவைக் காட்சியும், 'ஏழு வசனங்களும்', 'காணிக்கை கீதமும்' ஆக ஒன்பது பாடல்கள் இதில் உள்ளன. வழிப்பாட்டு முறை பற்றிய விளக்கம் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 266/1914/II.

Q6:222

**தாவீது, எஸ்.எம்.**

279. i. **தோத்திரக் கீர்த்தனவணி :** முதற் பதிப்பு; ii. டி. ஜே. மூரியென், கோட்டகிரி ; கமர்ஷியல் பிரஸ், ஊட்டி ; iii. செப்டம்பர், 1914 ; iv. செ.மூ.ப. 1 ; v. 38×23 செ.மீ. ; vi. இலவசம்; vii. கோட்டகிரியில் கோயில் கொண்டுள்ள ஏசுவின் தாயான மேரியைக் குறித்துப் பாடப்பெற்ற பக்திப் பாடற்றொகுப்பு. viii. 163/1914/IV.

Q6:222

280. i. **திவ்ய பனிமய நாயகியின் பேரில் பதிகம் :** ii. அர்ச். பிரான்சீஸ் சேவியர் மதுவிலக்கு சபை ; குட்பாஸ்டர் பிரஸ், சென்னை ; iii. ........; iv. ........; v. ........; vi. .. ....; vii. குடி என்னும் கெட்ட வழக்கத்தி லிருந்து விடுதலையளிக்குமாறு தேவமாதாவான மேரியை வேண்டுவது. தூத்துக்குடி என வழங்கும் திருமந்திரநகரில் எழுந்தருளியிருக்கும் பனிமய அன்னையைத் துதிக்கும் பதிகம். பாடல்களுக்குப் பொழிப்புரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 1126/1915/II.

Q6:222

**துரைசாமிப் பிள்ளை, ச.சே.**

281. **i.** உத்தம மனஸ்தாபக் கண்ணீர் மணிமாலை: முதற் பதிப்பு; **ii.** ஆர். ஏ. டாவுசன், சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை; **iii.** மார்ச், 1914; **iv.** செ.மூ.ப. 28; **v.** 22×14 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** ஏசுநாதர் சிலுவையில் அறையும் காலத்தில் வருந்திப் பாடும் பாமாலைகளும் புலம்பல்களும் இதில் உள்ளன. 'வினா விடை விருத்தப் பாமாலை' என்பது அஞ்ஞானி வினாவும் மெய்ஞ்ஞானிவிடையுமாக அமைந்துள்ளது. இதில் தபசு காலப் புலம்பலும், வியாகுலப் பாமாலையும், உலக ரட்சகர் உயிர்த்தெழுந்தருளிய மஹோற்சவ மகத்துவ விருத்தாந்த வினா விடை விருத்தப் பாமாலையும், அர்ச். தேவமாதாவின் பாடல் பிரார்த்தனை, பல சந்தராக மாலையும் அடங்கியுள்ளன. **viii.** 6/1914/II.

Q6:222

282. **i.** **தெய்வாராதனை மாலை:** முதற் பதிப்பு; **ii.** ரெவ்.ஹெச்.ஏ. போப்லி; டி.ஏ.சி. பிரஸ், சேலம்; **iii.** 1915; **iv.** உ.ப. 121; **v.** 18×13 செ.மீ.; **vi.** 0-8-0; **vii.** இதில் ஓய்வு நாள் வழிபாடு முறைகளும், ஞானபானங்கள் முதலிய கிறித்துவ சடங்குகளைக் கைகொள்ளும் முறைகளும் அடங்கியுள்ளன. வழிபாடுகளின் உரைநடை முறை, இசை முறை ஆகியவைகளும், ஒவ்வொரு வகையான வழிபாட்டிற்கும் மேற்கொள்ளவேண்டிய முறைகளையும் நன்கு விவரிக்கிறது. **viii.** 623/1915/**IV.**

Q6:222

283. **i.** **நற்கருணை பக்தி மாலை:** **ii.** ரெவரண்ட் பிரதர் ஜோஸப், எஸ். ஜே.; செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சினாப் பள்ளி; **iii.** 1915; **iv.** உ.ப. 176; **v.** 13×9 செ.மீ.; **vi.** 0-2-6; **vii.** ரோமன் கத்தோலிக்கர்களுக்கான வழிபாடும் பக்திப் பாடல்களும் அடங்கியுள்ளன. அடியார்கள் நாள் தோறும் தெய்வீக விருந்தை அருந்த வேண்டும் என்பதை எடுத்துச் சொல்லுது. வழிபாடுகள், வேண்டுதல்கள் முதலியனவும் இதில் இடம் பெற்றுள்ளன. **viii.** 126/1915/III.

Q6:222

284. **i.** **நன்மதிப்பா:** முதற் பதிப்பு; **ii.** ஜோசப் அய்யர், திருச்சிராப் பள்ளி; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; **iii.** மே, 1914; **iv.** செ.மூ.ப. 8; **v.** 19×12 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** கடவுளின் அருளுக்காக நன்றி செலுத்திப் பாடிய பாட்டு. யேசு பெருமானின் வரலாற்றிலிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய பல நல்லொழுக்கங்களையும் இப்பாடல் விவரிக்கின்றது. **viii.** 749/1914/II.

Q6:222

**நிக்கோதேமு, ஜான். எஸ்.**

285. **i.** அமலோற்பவியங்கழற் புஞ்சம்: முதற் பதிப்பு; **ii.** ஜாண். எஸ். நிக்கோதேமு; ஜே. ஆர். வி. எஸ். பிரஸ், மதராஸ்; **iii.** மே, **1913**; **iv.** செ.மூ..ப. 5; **v.** 21×13 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** கிறித்துவின் தாயாகிய மரியம்மையைப் புகழ்ந்து பாடும் நூல். இசைப் பாடலும், விருத்தமும் ஆக அமைந்தது. **viii.** 780/1913/II.

**Q6:222**

286. **i.** தேவ தோத்ரானந்த சங்கீத மாலை: முதற் பதிப்பு, **ii.** செபஸ்து. ஜான், நிக்கோதேமு; வைஜயந்தி பிரஸ்; சென்னை; **iii.** மே, **1911**; **iv** செ.மூ.ப. 5; **v.** 21×14 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** வணக்க மாத, வார ஆராதனைக்குரிய அமலோத்பவ நாயகியின்மீது பாடியது இப்புகழ் மாலை. விருத்தப் பாட்டும் இசைப் பாடல்களுமாக இது அமைந்துள்ளது. **viii.** 566/1911/II.

**Q6:222**

**நோக்கண்ணன், மணப்பாடு**

287. **i.** கண்மணி மாலை: முதற் பதிப்பு; **ii.** ஜோசப் ஐயர்; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிரா பள்ளி; **iii,** செப்டம்பர், **1913**; **iv.** செ.மூ.எ. 33+7; **v.** 17×11 செ.மீ.; **vi.** 0-0-3; **vii.** குலசேகரபாண்டியன் பட்டணத்தையடுத்த மணப்பாட்டின் நற்பார்வை மலைமேல் கோயில் கொண்டுள்ள திருச்சிலுவையில் அறையுண்ட கர்த்தர் ஏசுநாதரையும், அச்சிலுவையின் அடியில் நிற்கும் தேவ தாயாரையும் பற்றிய துதிமாலை. ஆக்கியோன் தனக்கு அருள் வேண்டிப் பாடினும், இதைப் படிப்போர் தாமும் கர்த்தரை வேண்டிக்கொள்வோராகின்றனர். 'ஒளியருளிக் கடாட்சிப்பீர்' என்றும் கண்மணி [illegible] பிறப்பிப்பீர் என்றும் வேண்டிக் கொள்கின்றார். **viii.** 1027/[illegible]3/III.

**Q6:222**

**பர்ஞந்து, ச. மரி.**

288. **i.** நவமணிக் கோர்வை: முதற் பதிப்பு; **ii.** முத்துவீர நாவலர், பூஞ்சோலை; பூலோக வியாஸன் அச்சுக்கூடம், சென்னை; **iii.** செப்டம்பர், **1911**; **iv.** செ.மூ.ப 23; **v.** 21×13 செ.மீ.; **vi.** 0-4-0; **vii.** பம்பாய் பாந்திரா மலையின்கண் உள்ள அர்ச். மோந்து மரியம்மன் மீது பாடப்பெற்றது இந் நவமணி மாலை. விருத்தம், சிந்து, வெண்பா, கீர்த்தனம் முதலியன விரவி அமைந்த பஞ்சரத்னம், கண்ணிகள் வகையிலும் பாடல்கள் உள்ளன. **viii.**886/1911/III.

**Q6:222**

**பெரியசாமி உடையார், அ., பெரும்பன்றியூர்**

**289. i.** தேவமாதாவின் பேரில் இயற்றிய பாடலும் பதிகமும் : முதற் பதிப்பு ; **ii.** அ. பெரியசாமி உடையார், பெரும்பன்றியூர்; ஜோசப் செயிண்ட் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப் பள்ளி ; **iii.** டிசம்பர், 1912 ; **iv.** செ.மூ.ப. 43+36 ; **v.** 20×13 செ.மீ. ; **vi.** இலவசம் ; **vii.** தேவமாதாவின் பேரில் பாடப்பெற்ற கலித்துறை யந்தாதி (100), வெண்பா அந்தாதி (100), தனி வெண்பா (61), தனிக் கலித்துறை (17) ஆகிய நான்கு பகுதிகள் உள்ளன. இதன் பின்னர் 'திருப்பதிகம்' என்னும் தலைப்பில் எசுநாதர் திருப்பதிகம் தேவமாதாவின் திருப்பதிகம், அர்ச். சூசை மாதவ சுவாமிகள் திருப்பதிகம், ஆகியவை உள்ளன. அலோசியஸ் சுவாமியார், லூயி பிரகாச நாத சுவாமியார் முதலிய கிறித்துவப் பெரியார்களும், மகா மகோபாத்தியாய உ. வே. சுவாமிநாதய்யர், அப்பாவு அய்யர் முதலிய புலவர்களும் இக்கவிஞரின் பாடல்களைப் பாராட்டிப் பல சாற்றுக் கவிதைகள் பாடியுள்ளனர். **viii.** 863/1912/IV.

Q6 : 222

**பொன்னுசாமி நாயுடு, ஏ., மலையடிப்பட்டி**

**290. i.** பெரிய தாழை திருக்கெபிஸ்தல தரிசனை : **ii.** எம். பி. மஸ்கறிநாஸ் பாலபாரதி, தூத்துக்குடி; எஸ். பி. பிரஸ், தூத்துக்குடி ; **iii.** பிப்ரவரி, 1915 ; **iv.** செ.மூ.ப. 14 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** ........; **vii.** பெரிய தாழையில் விளங்கும் ஏசுவின் தாயான மேரியைக் காண மேற்கொண்ட பயணத்தை விவரிக்கும் பாடல்களின் தொகுப்பு நூல். பயணத்தின் விவரம், மரியம்மை துதி முதலியன அமைந்துள்ளன. **viii.** 952/1915/I.

Q6:222

**பொன்னுசாமி பிள்ளை, வி. எம்., நீலகிரி**

**291. i.** ஆரோக்கிய மாதா அற்புத மாலை : முதற் பதிப்பு ; **ii.** வி. எம். பொன்னுசாமி பிள்ளை, நீலகிரி ; மெர்குரி பிரஸ், சென்னை ; **iii.** செப்டம்பர், 1912 ; **iv.** செ.மூ.எ. 1+100+1; **v.** 21×13 செ.மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** அர்ச, அமலோற்பவ ஆரோக்கிய மாதா அற்புத மாலை என்பது இதன் முழுப் பெயர். கோத்தாசலம் என்னும் ஊரில் திருக்கோயில் கொண்டிருக்கின்ற மேரியம்மையைப் பற்றிய துதி. 'ஆரோக்கிய மணியே' என்றும் 'ஆரோக்கிய அமல மணியே' என்றும் முடியும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன. பத்துப் பத்துப் பாடல்களுக்கு ஒரு முறை சந்தம் வேறுபட்ட பாடல்களை இவர் அமைத்துள்ளார். எனவே பத்துச் சந்தங்களில் அமைந்த பத்துப் பகுதிகளாக இது உள்ளது. **viii.** 1000/1912/III.

Q6:222

**பொன்னுஸ்வாமி ஐய்யர்**

292. **i.** தேவ இரக்கத்துக்கான பாவத் துயரப் பிரார்த்தநா மாலை— இரண்டாம் பாகம்: இரண்டாம் பதிப்பு ; **ii.** பொன்னுஸ்வாமி அய்யர் ; டாட்சன் பிரஸ், திருச்சினுப்பள்ளி ; **iii.** ஆகஸ்ட், 1911 ; **iv.** செ.மூ.ப. 16+30 ; **v.** 18×12 செ.மீ. ; **vi.** 0–3–0 ; **vii.** மனங்கசிந்து மனமுருகித் தேவனுடைய முன்னிலையில் உண்மையாய் அறிக்கையிடுகிற தீச்செயல்கள் மன்னிக்கப்படும். தீயச்செயல்களைப் பற்றிய வெறுப்பும் பாவ அறிக்கைக்குப்பின் வரவேண்டும். பாவ அறிக்கை, பாவத்தில் வெறுப்பு முதலிய பத்துப் பொருள்களையும் தெளிவான வார்த்தையும், எளிதான நடையும் கொண்டு செவிக்கு இன்பம் பயக்கும் இராகத்துடன் பாடல்களாக அமைக்கப்பட்டிருக்கிறது. சமாதானம், தானியேல் பிள்ளை முதலிய பலர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். **viii.** 794/1911/III.

**Q6:222**

**பொன்னுஸ்வாமி ஐயர், ஜே.**

293. **i.** தோத்திரக் கீர்த்தனங்கள் : **ii.** ஜே. பொன்னுசாமி ஐயர் ; மெஞ்ஞான விளக்கம் பிரஸ், பாலக்காடு ; **iii.** டிசம்பர், 1911 ; **iv.** செ.மூ.எ. 5 ; **v.** 23×14 செ.மீ. ; **vi.** இலவசம்; **vii.** பாலக்காடு எஸ். ஜி. தமிழ்ச் சபையினர் கிறித்துவின் பிறந்த நாள் விழாவின்போதும், ஆண்டு விழாவின்போதும் பாடிய பாடல்களின் தொகுதி. **viii.** 27/1912/I.

**Q6:222**

**பொன்னெல், ஒய். ஜி.**

294. **i.** பரிமளிக்கும் ஆரம் : முதற் பதிப்பு ; **ii.** ஒய். ஜி. பொன்னெல், ராயபுரம்; சென்னை ; மினர்வா அச்சியந்திரசாலை, சென்னை ; **iii.** ஜனவரி, 1914 ; **iv.** செ.மூ.ப. 48; **v.** 18×12 செ.மீ. ; **vi.** 0–1–6 ; **vii.** குழந்தைகள் கிருத்துவைப் பற்றித் துதித்துப் பாடும் வகையில் அமைந்துள்ளது. விவிலிய நூல் 'உபதேசங்கள்' பற்றியும் கூறிக் குழந்தைகளுக்குக் கீழ்ப்படிதல், தாழ்மை, மகிழ்ச்சி, மனநிறைவு, பொறுமை, உண்மை, வழிபாடு, அன்பு ஆகிய மலர்களே மணக்கும் மாலை என்று முகவுரையில் விளக்கி எழுதியுள்ளார். கிறித்தவனுக்கு ஆறுதல், ஏசு எனக்கு அடைக்கலம் முதலிய பொருள்களில் பாடல்கள் அமைந்துள்ளன. ஆசிரியரின் உருவப்படமும் இந்நூலில் அமைந்துள்ளது. 'சொர்க்கப் பறவையின் ஜூபிலி' வரிசையின் நான்காவது வெளியீடாகும் இந்நூல். **viii.** 687/1914/I.

**Q6:222**

**295.** **i.** **மரியாயின் மலர் மாலை :** முதற் பதிப்பு ; **ii.** ஜான் அய்யர், சென்னை ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; **iii.** மார்ச், **1914** ; **iv.** உ. ப. **2+82** ; **v.** **17×11** செ.மீ. ; **vi.** **0–3–0** ; **vii.** கன்னி மரியாயியின் ஐந்து முக்கிய திரு நாட்களுக்குரிய உரைநடைகள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நாளும் சொல்ல வேண்டிய பகுதிகளும், திவ்விய பூசை நேரத்தில் சொல்லவேண்டிய பகுதிகளும் இதில் உள்ளன. பொருள் அட்டவணை நூல் இறுதியில் கொடுக்கப் பட்டுள்ளது. **viii.** **1044/1914/I.**

**Q6:222**

**மிக்கேல் பேதுரு கோஸ், அண்ணாவி**

**296.** **i.** **சத்திய வேத சங்கீத கீர்த்தனை :** முதற் பதிப்பு ; **ii.** ரெவ். பிரதர், ஜோசப், திருச்சிறுப்பள்ளி ; செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; **iii.** ஜனவரி, **1915** ; **iv.** செ.மூ.எ. **102** ; **v.** **16×11** செ.மீ. ; **vi.** **0–4–0** ; **vii.** ரோமன் கத்தோலிக சமய உண்மைகளை அறிவுறுத்தும் பாடல்களின் தொகுப்பே இந்நூல். இவற்றுள் பெரும்பாலனவும் கன்னிமரியைப் பற்றிய துதிகளாம். யாகப்பர், அந்தோணியார் முதலிய கிறித்துவப் பெரியார்களைத் துதித்துச் சில பாடல்கள் உள்ளன. **viii.** **376/1915/I.**

**Q6:222**

**முத்தைய முதலியார்**

**i.** திரு வியாகுல ஒப்பாரி : இரண்டாம் பதிப்பு (தொ.எ. 2076 பார்க்க ); **ii.** ரா. சூசையா பிள்ளை, செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப் பள்ளி ; **iii.** ஏப்ரல்; **1911** ; **iv.** செ.மூ.ப. **2+82+2** ; **v.** **22×14** செ.மீ. ; **vi.** **0–5–0** ; **vii.** ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்டபோது அவரது மாதா அடைந்த துயரத்தை விளக்குவது. ஏசுநாதர் தமது சீடரின் கால்களைக் கழுவினதின் பேரில் பாடல், ஏசுநாதர் சிலுவை சுமந்ததிருப்பதைப் புலம்பல், மழைக்காக வேண்டும் பாடல் ஆகியவையும் இத்துடன் உள்ளன. பொருள் அட்டவணை, நூல் இறுதியில் உள்ளது. **viii.** **248/1911/I.**

**Q6:222**

**மைக்கேல் பிள்ளை, தஞ்சாவூர்**

**297.** **i.** வானோரின் கீதம் : முதற் பதிப்பு ; **ii.** சவேரியார் சுவாமி ; ஸ்ரீ வித்யா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை ; **iii.** ஜனவரி, **1915** ; **iv.** செ.மூ.ப, **36** ; **v.** **16×11** செ.மீ. ; **vi.** **0–2–0** ; **vii.** இலத்தீன் மொழியில் உள்ள ரோமன் கத்

தோலிக்கத் துதிப் பாடல்களின் தொகுப்பு. இலத்தீன் பாட்டுகள் எல்லாரும் பாடக்கூடிய வகையில் தெளிவான தமிழ் எழுத்துக்களில் அமைத்துத் தரப்பட்டுள்ளன. viii. 724/1915/1.
Q6:222

**லாசரஸ், எஸ். டி.**

298. i. *பாலர் ஆராதனை*: மூன்றும் பதிப்பு; ii. எஸ். டி. லாசரஸ்; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.ப. 22; v. 16×10 செ.மீ.; vi. 0–0–6; vii. குழந்தைகள் கூடி ஏசுநாதரைப் போற்றுவதற்கேற்ற துதிப் பாடல்கள் கொண்ட நூல். சிறுவர் பாடுவதற்கேற்ற இசைப் பாடல்கள் பத்து இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 920/1911/III.
Q6:222

**லாப் அய்யர், ஜி. எச்.**

299. i. *பாலர் ஆராதனை*: முதற் பதிப்பு; ii. ஜி. எச். லாப் அய்யர், இடையன்குடி; சர்ச் மிஷன் பிரஸ், பாளையங்கோட்டை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 6; v. 18×11 செ. மீ.; vi. இலவசம்; vii. கிறித்தவச் சிறுவர்களுக்காக வெளியிடப்பட்ட வழிபாட்டு நூல். சிறுவர் விண்ணப்பப் பாடல்களும் வழிபாடுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 736/1913/IV.
Q6:222

**வடிவேலுப் புலவர், பி.ஏ., ஆரணி**

300. i. *அர்ச். அந்தோணியார் பஜனைக் கீர்த்தன மஞ்சரி*: முதற் பதிப்பு; ii. பி. முத்துவீர நாவலர்; ஜீவர்தன விநாயக சம்பந்தர் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1911; iv. செ.மூ.ப. 6+19; v. 18×12 செ.மீ.; vi. 0–4–0; vii. அர்ச். அந்தோணியாரைத் துதிக்கும் பாடல்களைக் கொண்டது. அர்ச். அந்தோணியார்மீது நவமணிமாலை என்னும் தலைப்பில் ஒன்பது ஆசிரிய விருத்தப் பாடல்கள் முதலில் உள்ளன. பின்னர் உள்ள இசைப் பாடல்களுக்கு இராக தாள விளக்கம் தரப்பட்டுள்ளது. viii. 777/1911/II.
Q6:222

**வேதநாயக சாஸ்திரி, தஞ்சாவூர்**

301. i. *பேரின்பக் காதல்*: இரண்டாம் பதிப்பு; ii. வி. டி. எலியாஸ் சாஸ்திரி, தஞ்சாவூர்; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர்; iii. டிசம்பர், 1911; iv. செ.மூ.எ. 646; v. 18×11 செ.மீ.; vi. 0–8–0; vii. கிறிஸ்துவின் பிறப்பையும், அவர் பாடுகளையும் வழிப்படுவதற்குத் துணையாய் இதில் ஞானத் தாலாட்டு, திருச்சபைத் தாலாட்டு, பேரின்பக்

காதல், பிரலாப ஒப்பாரி என்னும் நான்கு சிறு பகுதிகள் அமைந்துள்ளன. முன்னுளில் அந்தோணிக் குட்டி அண்ணு வியாரால் சுருக்கமாய்ச் செய்யப்பட்ட பேரின்பக் காதல் என்னும் நூலில் கிறித்துவின் பாடுகள் வரலாற்று வரிசையில் கொடுக்கப் படாமையினுல், ஆசிரியர் இந்த நூலை முறைப்படி எழுத வேண்டியதாயிற்று. முதலில் பாடல் பொருளட்டவணையும், நூலின் ஈற்றில் பிரலாப ஒப்பாரியைப் பற்றி ஓர் பிற்சேர்க் கையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 927/1911/IV.

Q6:222

**வேதநாயகம் பிள்ளை, பி. எஸ்.**

302. i. தேவமாதா தேடியழுதேகும் பிரலாபப் பண்ணுபரணம்: முதற் பதிப்பு; ii. எஸ். வேதமாணிக்கம்; பூலோக வியாசன் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1912; iv. செ.மூ.ப. 4; v. 18×12 செ.மீ.; vi. இலவசம்; vii. ஏசுகிறித்து சிலுவையில் அறையப்பட்டதைக் குறித்து அவர் தாயார் மேரி அம்மையார் துன்பம் தாளாது அழுது அரற்றிய துயர நிகழ்ச்சியைப் பாடுவது. 1912 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 5 ஆம் நாள் வெள்ளிக்கிழமை இரவு அன்னுள் 'முனீஸ்வரி' யின் கோயிலில் அரங்கேற்றி, கர்த்தருயிர்த்த திருநாளன்று சங்கப் பொருளாளர் கனம் பிரான்ஸிஸ் டேவிட் அவர்களால் வழங்கப்பட்டது. viii. 229/1912/II.

Q6:222

**ஜோசப், டி. எஸ்.**

303. i. குன்னூர் பரிசுத்த யோவான் ஆலயம், பரிசுத்த வாரம்: முதற் பதிப்பு; ii. டி. எஸ். ஜோசப்; தாம்ஸன் அண்டு கோ, மதராஸ்; iii. மார்ச், 1915; iv. செ. மூ. எ. 16; v. 16×11 செ.மீ., vi..........; vii. குன்னூர் தூய யோவான் கோவிலின் தூய வாரத்தில் பாடவேண்டிய பாடல் கள் இதில் அடங்கியுள்ளன. இப்பாடல்கள் இயேசுவின் வர லாற்றை விளக்கி அவரை வாழ்த்துகின்றன. viii. 382/1915/II.

Q6:222

**ஜோன்ஸ் ஐயர், ஜே. பி.**

304. i. ஆவிக்குரிய ஞானப்பாட்டுகளும் கீர்த்தனங்களும்: முதற் பதிப்பு; ii. ஜான் எக்ஸ்மில்லர் ஐயர், பசுமலை; அமெரிக்கன் மிஷன் லேஞக்ஸ் பிரஸ், பசுமலை; iii. செப்டம்பர், 1912; iv. செ.மூ.ப. 11+192; v. 13×11 செ.மீ.; vi. 0-3-0; vii. ஆன்மீகச் சபைக் கூட்டங்களில் பாடுதற்குரிய துதிப் பாடல்களின் தொகுப்பு. துதிகளும் இசைப் பாடல்களுமாக இரு பெரும் பகுதிகள் உள்ளன. முதற் பகுதியில் 'துதி;' 'ஜெபம்',

'ஊழியம்', 'கிறித்துவ ஜீவியம்,' 'இரட்சிப்பு வேதம்' திருச்சபையும் தேவனுடைய ராச்சியமும், 'மோட்சம்,' பரிசுத்த ஆவி எனும் ஒன்பது தலைப்புக்களில் 85 பாடல்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் துதி, 'ஜெபம்', 'ஏசுவின் நாமம்', 'பரிசுத்த ஆவியானவர்', 'ஏசு பாவியை அழைத்தல்', 'தற்பிரதிஷ்டை ஊழியம்', 'சத்தியவேதம்' என்னும் எட்டுத் தலைப்புக்களில் 69 பாடல்கள் உள்ளன. viii. 641/1912/IV.

Q6:222

**ஸ்விட் (மிஸ். ஏவா. எம்.)**

**305.** i. கிருபாசன புஸ்தகம்: ii. ஸே. எச். லாசன்; ஏ. எம். லேஹைக்ஸ் பிரஸ், பசுமலே; iii. 1915; iv. உ.ப. 24; v. 13×11 செ. மீ; vi....... ......; vii. கிறித்துவ சமய வழிபாட்டுப் பாடல்கள் அடங்கியுள்ளன. இப்புத்தகத்தை ஆக்கியதன் நோக்கத்தை ஆசிரியர் நூலின் முதலில் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார். viii. 272/1915/IV.

Q6:222

## 225·4 கிறிஸ்துவம் : புதிய ஏற்பாடு—விவிலிய நூல்

i. சத்தியவேதமென்கிற புதிய ஏற்பாடு (தொ. எ. 251 பார்க்க); ii. தி பிரிட்டிஷ் அண்டு பாரின் பைபிள் சொஸைட்டி, சென்னை; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், வேப்பேரி, சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 1051—1397 (348); v. 22×15 செ.மீ.; vi. 1–6–0; vii. "கர்த்தரும் உலக இரட்சகரும் ஆகிய ஏசுகிறித்துவானவர் அருளிச் செய்த புதிய ஏற்பாடு" என்று இது குறிக்கப்படுகிறது. கிரேக்க மொழியிலிருந்து தமிழில் கொடுக்கப்பட்டது. 27 ஆகமங்கள் இதில் உள்ளன. ஒவ்வொரு ஆகமத்திலும் அடங்கிய மறை சொற்றொடர்கள் எண்ணிட்டுக் காட்டப்பட்டுள்ளன. viii. 551/1914/II.

Q6:23

**306.** i. புதிய ஏற்பாடு: முதற் பதிப்பு; ii. தி பிரிட்டிஷ் அண்டு பாரின் பைபிள் சொஸைட்டி; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. மே, 1913; iv. உ.ப. 1+403; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. ஏசு கிறித்துவைப் பற்றித் தெரிவிக்கும் புதிய ஏற்பாட்டின் மொழி பெயர்ப்பு. மத்தேயு, மார்க்கு முதலியோர் எழுதிய 'சுவிசேஷங்களும்', 'நிருபங்கள்' முதலியனவும் இதில் உள்ளன. இது கிரேக்க மொழியிலிருந்து தமிழில் திருப்பப்பட்டது. viii. 718/1913/II.

Q6:23

**307.** i. புதிய ஏற்பாடும் சங்கீதமும்: முதற் பதிப்பு; ii. தி பிரிட்டிஷ் அண்டு பாரின் பைபிள் சொஸைட்டி, சென்னை; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1913; iv. உ.ப. 499;

v. 19×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. "கர்த்தரும் உலக ரக்ஷகரு மாகிய ஏசுகிருஸ்துவானவர் அருளிச் செய்த புதிய ஏற்பாடு." கிரேக்கு மொழியிலிருந்து தமிழில் திருப்பப்பட்டது என்று முதலில் குறிப்பு உள்ளது. மத்தேயு, மார்க் முதலியோர் எழுதிய சுவிசேஷங்களும் பிற ஆகமங்களும் கொடுக்கப் பட்டுள்ளன. மற்ற சொற்றொடர்களுக்கு எண்கள் கொடுக்கப் டிருக்கின்றன. viii. 495/1913/III.

Q6:23

308. i. புதிய ஏற்பாடும் சங்கீதமும் [சங்கீத புஸ்தகம்] : முதற் பதிப்பு ; ii. பிரிட்டிஷ் & வெளிநாட்டு பைபிள் சொஸைட்டி, சென்னை ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 312 ; v. 19×13 செ.மீ.; vi. 0-6-0 ; vii. இந்நூலில் புதிய ஏற்பாட்டின் பலவகை ஆகமங்கள் பற்றி விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்புதிய ஏற்பாட்டில் அடங்கிய ஆகமங்களின் பெயர், முறை, அதிகாரங்களின் தொகை பற்றிய அட்டவணை நூல் முதலில் தரப்பட்டிருக் கிறது. இசையும் இதனோடு சேர்த்துத் தரப்பட்டிருக்கிறது. viii. 172/1915/I.

Q6:23

ஸ்மித், ஏ.

309. i. புதிய ஏற்பாடும் அதின் ஆசிரியர்களும் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்ரேசர் சொஸைட்டி, சென்னை ; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ. ப. 5+126 ; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. புதிய ஏற்பாட்டை எழுதி உலகுக்கு அளித்த பெரியார்களைப் பற்றி விவரிப்பது. ஆசிரியர்கள் எடுத்துக்காட்டிய முக்கியமான செய்தி களும் உடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன. புதிய ஏற்பாடுசினுப் டிக் சுவிசேஷங்களும், அப்போஸ்தலருடைய நடவடிக்கைகளும், பரி. யோவானின் சாதனங்கள், பரி. பவுலின் நான்கு பெரிய நிருபங்கள், பரி. பவுலின் இதர நிருபங்கள், புதிய ஏற்பாட்டின் இதர ஆகமங்கள் என்னும் ஆறு தலைப்புக்களில் இந்நூல் விவரிக்கப்பட்டிருக்கிறது. viii. 940/1912/III.

Q6:23

## 226·2 சுவிசேஷம் : மத்தேயு

மத்தேயு

310. i. மத்தேயு எழுதின சுவிசேஷம் : முதற் பதிப்பு ; ii. பிரிட்டிஷ் & வெளிநாட்டு பைபிள் சொஸைட்டி, சென்னை ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1915 ; iv. உ.ப. 78 ; v. 18×12 செ.மீ.; vi. 0—0—3 ; vii. இந் நூலில் இயேசு கிறிஸ்துவைப் பற்றி மத்தேயு என்பவர்

எழுதிய 'நற்செய்தி' அடங்கியுள்ளது. 28 அதிகாரங்கள் கொண்டது. ஒவ்வோர் அதிகாரத்துள்ளும் அடங்கிய மறை சொற்றொடர்கள் எண்ணிட்டுக் குறிப்பிடப்பட்டுள்ளன. viii. 1175/1915/I.

Q6:231

## 226·3 சுவிசேஷம் : மார்க்

**எல்வின், எம். ரெவரண்டு (மொ.து.)**

**311.** i. மாற்கு எழுதின சுவிசேஷம் : முதற் பதிப்பு; ii.. ரெவரண்ட் எம். எல்வீன் ; இவான்ஜிலிகல் லூதரன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 2+52 ; v. 18×12 செ.மீ.; vi. 0—0—3 ; vii. கிறித்துவைப் பற்றி முக்கால முணர்ந்தோர்கள் சொன்ன தெய்வக் கூற்று நிறைவேறிற்று என்கிற நற்செய்திதான் சுவிசேஷம் என்று வழங்கப்படுகிறது. நல்லாசானாக வந்த ஏசுநாதர் தெய்வ ஆவியால் முழுக்குப் பெற்று, அதிகாரத்தை அடைந்ததால் அவருக்குக் கிறித்து என்று பெயர். கிறித்து என்பதற்கு முழுக்குப் பெற்றவர் என்பது பொருளாம். காப்பாளரைக் குறித்து மார்க் என்பவர் எழுதிய சுவிசேஷத்தின் மொழிபெயர்ப்பு இந்நூல். viii. 272/1911/II.

Q6:232

## 226·4 சுவிசேஷம் : லூக்கா.

**எல்வின் ஐயர், எம். (மொ. து.)**

**312.** i. லூக்கா எழுதின சுவிசேஷம் : முதற் பதிப்பு ; ii. எ. இ. எல். மிஷன், கும்பகோணம் ; எம்.இ.பிரஸ், சென்னை; iii. மே, 1912 ; iv. உ. ப. 78 ; v. 19×13 செ. மீ.; vi. 0—1—0 ; vii. லூக்கா என்பவர் எழுதிய சுவிசேஷத்தின் தெளிவான தமிழ் மொழி பெயர்ப்பு. இருபத்து நான்கு அதிகாரங்கள் கொண்டது. viii. 876/1912/II.

Q6:233

**313.** i. லூக்கா எழுதின சுவிசேஷம் : இரண்டாம் பதிப்பு ; ii. எம். எல்வின் அய்யர், கும்பகோணம் ; இவாங்க் லூத் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப. 82 ; v. 18×12 செ. மீ.; vi. 0–1–0 ; vii. 'லூகா' என்னும் முதல் நூலிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இருபத்து நான்கு அதிகாரங்கள் கொண்டது ஒவ்வொரு அதிகாரத்திலும் உள்ள மறை விளக்கங்கள் எண்ணிட்டுக் காட்டப்பட்டுள்ளன. viii. 916/1913/IV.

Q6:233

## 226.5 சுவிசேஷம் : ஜான்

**பாப்லி ஐயர், எச். ஏ. (மொ. து.)**

**314.** i. *பரிசுத்த யோவான் எழுதின சுவிசேஷம்* : ii. சென்னைக் கிறிஸ்தவ கல்வி அபிவிர்த்தி சங்கம் ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ. ப. 2+272 ; v. 19×13 செ.மீ.; vi. 0-10-0; vii. இரண்டு பகுதிகளாக இந்நூல் அமைந்துள்ளது. முதற் பகுதியில் யோவானைக் குறித்தும், சுவிசேஷ அறிவுரைகள் குறித்தும் அமைந்த ஆய்வுரைகள் உள்ளன. இரண்டாம் பகுதியில் சுவிசேஷ சொற்றொடர்கள் அமைந்துள்ளன. யோவான் வரலாறும், இந்நூல் இயற்றப்பட்ட காலமும் ஆராயப்பட்டிருக்கின்றன. vi.i. 461/1913/II.

Q6:234

**315.** i. **யோவான் எழுதின சுவிசேஷம்** : முதற் பதிப்பு ; ii. எம். எல்வின் ; ஈவான்ஞ்சிலிகல் லூதர்ன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 63 ; v. 18×13 செ. மீ.; vi. 0—1—0; vii. யோவான் எழுதிய சுவிசேஷத்தின் மொழிபெயர்ப்பு. 21 அதிகாரங்கள் கொண்டது. ஒவ்வோர் அதிகாரத்திலும் அமைந்த மறைத் தொடர்களின் எண்கள் இறுதியில் சுட்டப்பட்டிருக்கின்றன. viii. 129/1913/IV.

Q6:234

## 230 கொள்கை விளக்கம்

**அந்தோனி நத்தால்**

**316.** i. **பூலோக மோட்சம்** : ii. அந்தோணி நத்தால் ; நல்லாயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. உ. ப. 173+2; v. 14×11 செ. மீ.; vi. 0—4—0; vii. எல். எஸ். ரெவரண்ட் பெர்னண்டஸ் என்பார் ஆங்கிலத்தில் எழுதிய "Paradise on earth" என்னும் நூலிலிருந்து எடுத்து எழுதப்பட்ட ரோமன் கத்தோலிக்க நூல். தேவ ஊழியத்துக்குத் தங்களை ஒப்புக் கொடுக்க விரும்புகையில் பெற்றோர் முதலியோர் தடை செய்வதை நீக்குவதற்கு இந்நூல் ஒரு வழி காட்டியாகும். இதன் ஆசிரியர் தேவ ஊழியம் செய்ய விரும்பிய போது, இந்நூலைப் பெற்றோருக்குக் காட்டி, அவர்களது ஒப்புதலை ஆசிரியர் பெற்றாராம். பன்னிரண்டு அதிகாரங்களில் துறவிகளின் நிலைமைப் பற்றியும், தேவ ஊழியம் செய்வாரைப் பற்றியும் விவரித்து உரைக்கும் நூல். viii. 172/1912/II

Q6:3

317. i. **அப்போஸ்தலருடைய நடபடிகள் :** முதற் பதிப்பு ; ii. பிரித்தானிய பிறதேச வேதாகம சங்கம், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ. ப. 94 ; v. 17×12 செ. மீ.; vi. 0—0—3 ; vii. கிறிஸ்த்துவ சமயத்தைச் சார்ந்த அபோஸ்தலருடைய நடவடிக்கைகளைக் குறித்து எழுதப்பெற்ற நூல். 28 அதிகாரங்கள் கொண்டது. viii. 432/1915/I.

Q6:3

**அப்ரஹாம் அருமை நாயகம் தேசிகர்**

318. i. **சுவிசேஷ போதம்—பாகம் ஒன்றும் இரண்டும் :** முதற் பதிப்பு ; ii. அப்ரஹாம் அருமைநாயகம் தேசிகர் ; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. ஜனவரி, 1912 ; iv. உ. ப. 1+113 ; v. 14×11 செ. மீ.; vi. 0—2—0 ; vii. ஆன்மாக்கள் அவசியம் நாடித்தேட வேண்டிய முக்தி நெறிக்கு வழி காட்டுவது. ஞான காண்டம், தீட்சை காண்டம் என்னும் இரண்டு பெரும் பிரிவுகளைக் கொண்டது. viii. 312/1912/I.

Q6:3

**அருமைநாயகம், வி., நாகர்கோயில்**

319. i. **முப்பது உவமைகள் :** இரண்டாம் பதிப்பு ; ii. கிருஸ்டியன் லிட்ரேசர் சொஸைட்டி, சென்னை ; எஸ். பி. ஸி கே. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ. ப. 2+60 ; v. 18×12 செ. மீ.; vi. 0—1—0; vii. கிறித்துவக் கொள்கைகளை விளக்கும் முப்பது உவமைகளின் விளக்கத் தொகுப்பு இந்நூல். சிறு சிறு கதைகளின் வாயிலாகவும், நிகழ்ச்சிகளின் வாயிலாகவும் உள்ளத்தைத் தொடும் வகையில் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது. viii. 867/1912/III.

Q6:3

320. i. **அன்பின் ஊற்று :** ii. எஸ். ஜே. ஜோஸப், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 18 ; v. 16×11 செ. மீ.; vi. இலவசம் ; vii. ஏசுவின் திரு இருதய பத்தியைப் பரப்பச் செய்யும் சபை, தேவதாயின் பேரில் பத்தியைப் பரப்பச் செய்வோரின் சபை ஆகியவற்றை விவரித்து உரைப்பது. viii. 979/1911/IV.

Q6:3

**அன்னெட், ஏ.**

321. i. **பாடம் ஆயத்தம் செய்யும் விதம் :** முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்ரேச்சர் சொஸைட்டி, சென்னை ; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1914 ;

iv. உ. ப. 83; v. 18×12 செ. மீ.; vi. 0—4—0; vii. விவிலிய நூலிலிருந்து சில பாடங்கள் இதில் தரப்பட்டுள்ளன. விவிலிய நூலினைக் கற்பிக்கும் புது முறைகளும் தரப்பட்டுள்ளன. இந்நூல் சிறுவர் வகுப்பு, இளம் மாணக்கர், மாணக்கர் என்ற மூன்று பிரிவுகளைக் கொண்டுள்ளது. இறுதியில் பிற நூல்கள் அடங்கிய பட்டியல் ஒன்றும் தரப்பட்டுள்ளது. viii. 127/1914/IV.

Q6:3

**இக்னேஷியஸ் அய்யர், எஸ். எம். எப்., சென்னை**

322. i. ஆரம்பாக்கம் விசாரணை உற்பத்தி: முதற் பதிப்பு; ii. எஸ். எம். எப். இக்னேஷியஸ் அய்யர், சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ. ப. 10+43; v. 21×14 செ. மீ.; vi. 0—2—0; vii. ஆரம்பாக்கம் என்னும் ஊர் சென்னையிலிருந்து கடற்கரை வழி செல்லும் புகை வண்டி பாதையில் முப்பத்தெட்டாவது கல்லில் இருக்கும் புகை வண்டி நிலயம். இங்கே கோயில் அமைத்து வழிபாடு முதலியன ஒழுங்காக நடைபெறச் செய்த விவரம் இந்நூலில் எழுதப்பட்டுள்ளது. இறுதியில் ஆரம்பாக்கத்திலுள்ள இராக்கினியை வணங்கும் இசைப் பாடல்களும், மன்றாட்டுகளும் இதில் அடங்கியுள்ளன. viii. 1036/1913/IV.

Q6:3

323. i. சத்தியவேடு விசாரணையின் சுருக்க வரவாறு: முதற் பதிப்பு; ii. எஸ். எம். எப். இக்னேஷியஸ் அய்யர், சென்னை; மெர்குரி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ. ப. 9+28+2; v. 21×14 செ. மீ.; vi. 0—1—6; vii சத்தியவேடு என்னும் சிற்றூரைச் சேர்ந்த விசாரணை சபையின சுருக்க வரலாறு இந்நூல். இது அப்பொழுது இருந்த நிலைமையையும், சபை நடந்து வந்த முறையையும் விவரிப்பது. சபையின் கணக்கு விவரங்கள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. இருபது அதிகாரமாக இந்தச் சபையோர்களால் பாகுபடுத்தி எழுதப்பட்டது. viii. 1035/1913/IV.

Q6:3

**உவாக்கர் ஐயர், டி. (மொ.து.)**

324. i. சுவிசேஷகர் இலக்கு: ii. கிறிஸ்தியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 100; v. 19×13 செ. மீ.; vi. 0—3—0; vii. கிறிஸ்துவ சமயத்தின் குறிக்கோள்களை ஆசிரியர் உவாக்கர் விளக்குகிறார். ஆங்கில மொழியினின்று தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. viii. 54/1915/III.

Q6:3

325. i. எல்லோரும் பாவிகள் : ii. ஜே. ஹெச். லாசன் ; அமெரிக்கன் மிஷன் விறுக்ஸ் அச்சியந்திரசாலை, பசுமலை ; iii. 1915; iv. செ. மூ. ப. 58 ; v. 13+11 செ. மீ.; vi. ........; vii. கிறித்தவ சமயத்தின் உண்மைகளை இந் நூலின்கண் காணலாம். இதில் அமைந்துள்ள உரைநடைப் பகுதிகள் அமெரிக்காவிலுள்ள ஹாரோல்டு சேயிலஸ் என்னும் சொற்பொழிவாளரால் செய்யப்பட்டனவற்றின் தமிழ் மொழி பெயர்ப்பு. இதிலுள்ள பாடல்கள் பல நூல்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டன. இவற்றுள் பெரும்பாலனவும் சீமோன் போதகர், சுந்தரம் உபாத்தியாயர், வேதநாயகம் பிரசங்கியார் ஆகிய மூவர்களால் பாடப் பெற்றவனவாம். viii. 481/1915/IV.

Q6:3

எல்வின், ஏ. குமாரி, திருநெல்வேலி

326. i. ஸ்வோர்ட் பிராக்டீஸ் : மூன்றும் பதிப்பு ; ii. குமாரி. ஏ. எல்வின், திருநெல்வேலி ; சி. எம். எஸ். பிரஸ், பாளையங் கோட்டை ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப. 1+22 ; v. 14+11 செ. மீ.; vi. 0—0—6 ; vii. "ஸனஜ" மாணவர்களுக்கான மூன்று ஆண்டு பயிற்சி நூல் இது, ஐரிஷ் திருச்சபை கற்பிக்கும் முறையைப் பின்பற்றியது. முப்பத்து மூன்று பாடங்களாக அமைக்கப்பட்டிருக்கிறது. viii. 738/1913/IV.

Q6:3

ஏசுநாதன், டி.

327. i. பரகதி திறவு கோல் கீதை: ii. சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சாத்தூர் ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 84 ; v. 20×15 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. ஏசுநாதர் உலகைக் காக்கும்பொருட்டு தோன்றியவர் என்பதனை, இந்தியப் பெரியார்களின் கூற்றுகளின் வாயிலாக விளக்குகிறார். viii. 205/1915/IV.

Q6:3

காதிரசனு மரைக்காயர், கே. வி.

328. i. கிறிஸ்துமத தீபிகை : முதற் பதிப்பு ; ii. கே. வி. காதிரசனு மரைக்காயர் ; கலாரத்நாகரம் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப. 13+255+2 ; v, 22×15 செ.மீ; ; vi. 1-4-0 ; vii. கிறித்துவ சமயக் கோட்பாடுகளையும், நூல்களையும் பழித்துரைக்கும் ஓர் உரைநடை நூல். இஸ்லாமியக் கோட்பாடுகளை எதிர்த்துக் கிறிஸ்துவர்கள் எழுதிய சில நூல்களுக்கு இது ஒரு மறுப்பாகவும் எழுதப் பெற்றது. வேதம், வம்சம், காரணம், இளமை, ஞானஸ்நானம், இயேசு தத்வம், வேதப்பிரமாணம் என்றிவ்வாறு பல்வேறு தலைப்புக்

களில் ஆசிரியர் கோட்பாடுகளை விளக்கித் தமது மறுப்பை வெளியிடுகிறார். இவர் ஹிந்து நேயர்களை நோக்கி அவர்களுக்காக "ஹிந்து மத திபிகை" என்று ஒரு நூல் எழுதி முடித்திருப்பதாகவும் முகவுரையில் குறித்துள்ளார். viii. 981/1913/I.

Q6:3

**காம்பெல் ஐயர்**

**329.** **i.** கிறிஸ்து மார்க்க ரூபகாரங்கள் : முதற் பதிப்பு ; **ii.** கிறிஸ்டியன் லிட்ரேசர் சொசைட்டி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; **iii.** ஜூன், 1914 ; **iv.** உ.ப. 19+235 ; **v.** 18×13 செ.மீ. ; **vi.** 0–8–0 ; **vii.** எசுகிறித்துவே கிறித்துவச் சமயத்தின் முடிவு. அவரில் அடைக்கலம் புகுந்து அவரை முழு இதயத்துடன் அன்புடன் பணிவிடை செய்வதே கிறித்துவச் சமயம். கிறித்துவச் சமயச் சான்றுகளை 11 அத்தியாயங்களில் விளக்கி உரைப்பது இந்நூல். எசுகிறித்து நாதரே உலகக் காவலர் என்று எடுத்துக் காட்டுவதே இந்நூலின் நோக்கமாகும். பொருளடக்கப் பகுதியில் ஒவ்வோர் அதிகாரத்தில் விளக்கப் பட்ட பொருள்களின் சுருக்க அட்டவணை தரப்பெற்றிருக்கிறது. **viii.** 1096/1914/II.

Q6:3

**330.** **i.** குருத்துவத்தின் மகத்துவம் : முதற் பதிப்பு ; **ii.** ரெவ், பிரதர் எஸ். ஜே. ஜோசப். திருச்சிறுப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிறுப்பள்ளி ; **iii.** ஜூலை, 1914 ; **iv.** உ.ப. 39 ; **v.** 18×12 செ.மீ. ; **vi.** 0–1–0 ; **vii.** ரோமன் கத்தோலிக்க ஆசான்களின் சிறப்பியல்புகளை விவரிக்கும் சிறு வெளியீடு. "குருவானவர் யார்?" "குருவானவரின் அதி உன்னத அதிகாரம்", என்னும் இரண்டும் பெரும் பகுதியாக உள்ளது இந்நூல். **viii.** 363/1914/III.

Q6:3

**சத்தியநாத ஐயர், டபிள்யூ. டி. & கிளார்க் ஐயர், டபிள்யூ. டி. (மொ. து)**

**331.** **i.** திருச்சபை சரித்திரம் : திருத்தப்பட்ட நான்காம் பதிப்பு : **ii.** சன்மார்க்கச் சிறு புத்தக சங்கத்தார் [The Religious Tract and Book Society] ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; **iii.** நவம்பர், 1910 ; **iv.** உ.ப. 3+3+4+471+4+9 (494) ; **v.** 20×13 செ.மீ.; **vi.** 1–4–0 ; **vii.** முதலாம் நூற்றுண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றுண்டு வரையுள்ள திருச்சபையின் வரலாறுகளைக் கூறும் நூல். திருச்சபையின் தோற்றத்தையும், வளர்ச்சியையும், அந்தந்தக் காலங்களில் அவைகளுக்குண்டான மாறுதல்களையும், அவைகளின் காரணங்களையும் விளக்கிக் காட்டுவதே திருச்சபை வரலாற்றின் சிறந்த நோக்கமாகும். 1864 ஆம் ஆண்டில் ஆங்கில மொழியில் பரப்பிய ஒரு திருச்சபையின் வரலாறு இதற்கு முதல் நூலாக அமைந்தது, ஆனால், இது முழுதும்

அந்த ஆங்கில வரலாற்றின் மொழி பெயர்ப்பு என்று எண்ண லாகாது. இது ஆங்கிலத்திலும், தமிழிலும் உள்ள பல நூல்களை வாசித்து எழுதப்பட்டதாகும். இதற்கு முன், திருச்சபை வரலாற்றைப் பற்றிச் சில நூல்களைத் தமிழில் தரங்கம்பாடி, மதுரை, திருநெல்வேலி ஆகிய இடங்களிலுள்ள சில சமயக் குரவர்கள் எழுதியிருக்கிறார்கள். இந்த நூல்களும் 'கிறிஸ்து மார்க்க விளக்கம்' என்னும் பத்திரிகையில் வந்த செய்திகளும் இந்நூல் எழுத உதவியாயிருந்தன. viii. 255/1911/I.

Q6:3

**சந்தியாகு சுவாமி, சேசுசபை**

332. i. மன்ரேசா : முதற் பதிப்பு; ii. ஜோசப் அய்யர் ; ஜோசப் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சினாப்பள்ளி ; iii. செப்டம்பர், 1911 ; iv. உ.ப. 8+452+2 படங்கள் ; v. 19×13 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. சேசு சபையை ஏற்படுத்திய அர்ச். இஞ்ஞாசி யார் எழுதிய ஞான முயற்சிகளின் விரிவுரைகள் அடங்கிய நூல். எட்டு நாள் அளவும் ஞான முயற்சிகளைச் செய்ய ஏற்ற பாடல் களும், ஞானத் தொடர்களும் இதில் உள்ளன. அர்ச். இஞ்ஞாசி யார் இஸ்பானிய நாட்டில் உள்ள 'மன்ரேசா' என்ற ஒரு குகையில் தவம் செய்து வரும்போது தேவ ஏவலர்க்கு இந்த ஞான முயற்சிகளை எழுதினார். இது பற்றியே தமிழ் நூலுக்கும் "மன்ரேசா" என்ற சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 969/1911/III.

Q6:3

**சாமுவேல், என். (தொ.து.)**

333. i. உள்ளது நாற்பது : நான்காம் பதிப்பு ; ii. இவாங் லூதர்ன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. 1915 ; iv. உ. ப. 140 ; v. 18×11 செ.மீ. ; vi....... ; vii. கிறித்துவர்களின் நன்னடத் தையைக் கற்பிக்கும் நாற்பது நீதிக் கட்டுரைகள் கொண்ட ஒரு தொகுப்பு நூல். viii. 240/1915/III.

Q6:3

334. i. திரு இருதய அலுவல்கள் : முதற் பதிப்பு ; ii. ரெவரண்ட் பிர. எஸ்.ஜே. ஜோசப், திருச்சி; செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சினாப்பள்ளி; iii. ஜூன், 1915; iv. உ.ப. 88; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இயேசு கிறித்துவிடம் மனிதர் தம் இதயத்தை ஒன்று படுத்தவேண்டிய இன்றியமை யாமையையும் முறையையும் விளக்கிடும் சிறு சமய நூல். இதற்கான காரணங்களைக் கொடுக்க ஆசிரியர் முயன்றுள்ளார். குறைகளை நீக்கி, திரு இருதயத்துக்கு உகந்த வணக்கத்தையும், ஆறுதலையும் வருவிக்கும்படி ஒன்பது நிகழ்ச்சிகளின் வாயிலாக

338. i. வியாக்யான குறிப்புகள் : முதற் பதிப்பு ; ii. எஸ். பி. ஸி. கே. டிப்போ, சென்னை ; இ. க. அ. சங்கத்தாரது அச்சுக் கூடம், சென்னை; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 323 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-14-0 ; vii. செயின்ட் ஜான் எழுதிய கடிதத்திற்கு விளக்கமாக அமைந்தது இந்நூல். இந்தியா நாட்டவருக்குத் துணையாகும் பொருட்டு இது எழுதப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் முதல் நூலை எழுதியவர் எஸ். பி. ஜி மிஷினைச் சேர்ந்த எச். பெக்கன் ஹாம் வால்டி ஐயர் என்பவராவர். 'கிறித்து மார்க்கக் கல்வி அபிவிருத்தி சங்கத்தாரின்' வேண்டுகோள்படி மொழிபெயர்க்கப்பட்டுள்ளது இந்நூல். viii. 835/1915/I.

Q6:3

**இவ்வியநாதன், ஆ. சாமுவேல் (மொ.து.)**

339. i. நன்மை கடைப்பிடி : முதற் பதிப்பு ; ii. ஆ. சாமுவேல் திவ்யநாதன் ; பிரசிடென்சி பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1911 ; iv. கூ. ப. 1+86 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. இந்நூல் ஓர் ஆங்கிலப் பெருமாட்டி (A.L.O.E.) என்று புகழ் பெற்றவரால் ஆங்கிலத்தில் செய்யப்பட்டது. அதனுடைய தமிழ்மொழி பெயர்ப்பே இச்சிறு கதை நூல். கிறித்துவ அன்பு வாழ்க்கையின் பெருமையை விளக்குவது. இக்கதை கிறித்துவின் இறப்புக்கு ஏறக்குறைய 20, 25 ஆண்டுகளுக்குப் பின் (அதாவது கிறித்து சமயத்தின் தொடக்கக் காலம்) நடந்ததாகக் கூறப்படுகிறது. இது பத்து அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. viii. 836/1911/I.

Q6:3

**நாராயண அய்யர், ப. (மொ.து.)**

340. i. ஏசு கிறிஸ்து என்பார் ஒழுகிக்காட்டிய ஒழுக்க முறை நூல் : முதற் பதிப்பு ; ii. டி. கே. பாலசுப்பிரமணிய ஐயர் ; ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம் ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ. ப. 9+250 ; v. 21×14 செ.மீ. ; vi. 1-0-0; vii. இதன் முதல் நூல் லத்தின் மொழியில் உள்ளது. இதனை இத்தாலிய நாட்டு கெம்பியஸ் கிராம வாசியாகிய தோமஸ் என்பவர் 1441 ஆம் ஆண்டு எழுதி முடித்தார். இந்நூல் மேல் நாட்டிலுள்ள எல்லா மொழிகளிலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. இத்தமிழ் மொழி பெயர்ப்பு ஆங்கிலத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இதில் உள்ள உண்மைப் பொருள்கள் எல்லாச் சமயங்களும் கைக்கொள்ளத்தக்கவை. இதைப் படிப்பவர் சமயவேறுபாடு இன்றி அமைதியும் ஒப்புநோக்கும் பண்பும் பெறுவர் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். viii. 588/1911/I.

Q6 : 3

**பால்சாமி ஐயர்**

341. i. பூர்வ காலத்துத்தேவன் : இரண்டாம் பதிப்பு ; ii. ஏ. ஆர். ஜான் ஐயர் ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 5+90+1 ; v. 16×11 செ.மீ.; vi. 0–4–0 ; vii. பிரஞ்சுப் புரட்சியின் வரலாற்றிலிருந்து எடுக்கப்பட்ட சில காட்சிகளின் தொகுப்பு. சமய குரவரின் உயர் தன்மையையும், அவர் ஆதிக்கத்திற்குட்பட்ட கிருஸ்துவசபையின் பெருமையையும், ரோமன் கத்தோலிகர்கள் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தப்பட்ட நிகழ்ச்சிகளையும் விவரித்துரைப்பது. ஆறும் பத்திநாதர் சிறைப்பட்டு இயற்கையெய்தவும் ஏழாம் பத்திநாதர் சிறை புகவும் காரணமாக இருந்த பிரஞ்சு அரசியல் நிகழ்ச்சிகளை விவரித்துரைப்பது; viii. 145/1912/III.

**Q 6:3**

342. i. மந்திர குறிப்பிடம் : மூன்றும் பதிப்பு ; ii. ஏ. ஆர். ஜான் ஐயர் ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1912 ; iv. உ.ப. 3+178; v. 12+9செ.மீ.; vi 0–2–0; vii. இந்நூலில் மந்திரங்கள், நன்மை, தீமை முதலியவைகள் விவரமாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இதில் வழிபாட்டுப் பாடல்களும், உரைநடைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. இவை ரோமன் கத்தோலிக்க சமயத்தினருக்கு உரியனவாகும். viii. 574/1912/II.

**Q 6:3**

343. i. பாலியரின் பரம பொக்கிஷம் : முதற் பதிப்பு ; ii. ஜோசப் அய்யர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோஸப்ஸ் இண்டஸ்ட்டரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 384 ; v. 11×8 செ.மீ.; vi. 0–4–0 ; vii. கிறித்துவ சமயம் பற்றிய பல செய்திகளையும் தொகுத்துரைக்கும் நூல். இளைஞர்களுக்காக எழுதப்பட்டது. கிறித்துவ ஒழுக்க முறை, சத்திய வேதக் கொள்கையின் சுருக்கம். பலவகை மந்திரங்கள் ஜெபங்கள், திருச்சபை ஒழுங்கு முறைகள் ஆகியவற்றை விவரிப்பது. கிறித்துநாதரின் படங்கள் இரண்டும், மரியாவின் படம் ஒன்றும், சூசையப்பரின் படம் ஒன்றும் ஆக நான்கு படங்கள் உள்ளன. viii. 4/1914/I.

**Q6:3**

**பிலிப்ஸ், ஜே. திருப்பத்தூர்**

344. i. மறு பிறப்பு : முதற் பதிப்பு ; ii. ஜே. பிலிப்ஸ், திருப்பத்தூர் ; நேஷனல் பிரஸ், திருப்பத்தூர் ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 15 ; v. 13×10 செ.மீ.; vi.........; vii. கிறித்துவ சமயக் கொள்கைகளை விளக்கும் ஒரு கட்டுரை

கிறித்துவ சமயக் கொள்கைப்படி மறுபிறப்பு என்பதை விளக்கும் நூல், விவிலிய நூல் மேற்கோள்கள் தரப் பட்டுள்ளன. viii. 836/1914/I.

Q6:3

**பிளாரன்ஸ், எம். கிங்க்லி**

345. i. சிலுவையின் தோழனாகிய தீத்து: முதற் பதிப்பு; ii. சி. எச். ஹட்சன், வேளச்சேரி; அமெரிக்கன் அட்வன்ட் மிஷன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ.ப. 2+338; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. கிறித்துநாதர் உலகில் பிறந்த கதையை "தீத்துஸ் எ காம்படரேட் ஆப் தி கிராஸ்" (Titus, a comdade of the cross) என்னும் நூல் விவரிக் கிறது. இதில் முப்பத்திரண்டு அதிகாரங்கள் உள்ளன. viii. 208/1914/I.

Q6:3

**பிளேமிங் ஐயர், டி. ஜே.**

346. i. ஊழியஞ் செய்கிற ஜீவியம்: முதற் பதிப்பு; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. உ.ப. 55; v. 19×12 செ. மீ.; vi. 0–3–0; vii. திட்டமான ஊழியம் செய்ததனால்தான் ஒருவனுடைய கிறித்துவ வாழ்க்கை ஓங்கி வளரும் என்பது முதலான நான்கு உண்மைகளை அடிப்படை யாகக் கொண்டு, பன்னிரண்டு 'வேத தியானங்களை' இதில் வகுத்துள்ளார். கிறித்துவுக்கு ஊழியம் செய்து, அவருக்கேற்ற சான்று பகரும்படி கிறுத்துவர்களை அழைக்கின்றார். ஊழியம் செய்கிற வாழ்க்கைக்கும் கிறித்துவுக்கும் உள்ள தொடர்புத் என்பது முதலாக பன்னிரண்டு பொருள்களைப் பன்னிரண்டு அதி காரமாக அமைத்து விளக்கி எழுதியுள்ளார்; viii. 865/1912/ III.

Q6:3

**பேல் பெர்க் ஐயர், ஏ. (மொ. து.)**

347. i. கிறிஸ்தவ சுயாதீனம்: முதற் பதிப்பு; ii. இவாஞ்சிலிகல் லூதரன் மிஷன் சொசைட்டி, தரங்கம்பாடி; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 2+50; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0; vii. கிறித்தவனுடைய இயல்பு எவ்வாறு இருக்கவேண்டும் என்று விளக்குகின்றது. விவிலிய நூல் சான்றுகளுடன் எழுதப் பட்டது. மார்டீன்லூதர் சாஸ்திரியார், 1520ஆம் ஆண்டு இந் நூலை ஜெர்மன் மொழியில் எழுதினர்; ஜெர்மன் மொழியி லிருந்து மொழி பெயர்க்கப்பட்டது இந்நூல். லூதர் எழுதிய முக்கிய மூன்று நூல்களில் இது ஒன்று. viii. 429/1914/II.

Q6:3

**பொர்ன்னெல், ஓய். ஜி. சென்னை**

348. 1. முள்வேலிக்குள் பரதீசு: முதற்பதிப்பு; ii. ஓய். ஜி. பொன்னெல், ராயபுரம், சென்னை; மினர்வா பிரஸ, சென்னை iii. ஜனவரி, 1914; iv. உ.ப. 16+120; v. 18×12 செ.மீ vi. 0—6—0; vii. ஆசிரியர் தமது வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ந்த நிகழ்ச்சிகளை, விவரித்து அவற்றிலிருந்து தெரியும் படிப்பினைகளைக் கூறுகிறார். அங்கங்கே விலிலிய நூலின் கருத்துக்களையும் குறிப்பிட்டு, மேற்கோள் காட்டி யுள்ளார். கிருஸ்த்துவனுக்கு ஆறுதல் என்னும் தலைப்பில் பதினேழு இசைப்பாடல்களின் தொகுப்பைக் கொடுத்துள்ளார். இவை கிருத்துவின் பெருமையை விளக்குவன. பிற்சேர்க்கையாக சிம்சோனின் நரிகள், சாத்தானிடமிருந்து படிக்கும் பாடல், மெய்யான ஜெபம், மெய்யான கனம் என்பனவற்றைப்பற்றி விளக்கம் கொடுத் துள்ளார்; சொர்க்கப் பறவையின் ஜூப்லி வரிசை, என் பதில் இது மூன்றாவது வரிசையாகும். viii.686/1914/I.

Q6 :3

**போன்சால், எல். எம்.**

349. i. நடுராத்திரி சத்தம்: முதற் பதிப்பு; ii. எல். எம்.போன் சால்; வித்தியா விநோதினி அச்சியந்திரசாலை, தஞ்சாவூர்; iii. டிசம்பர், 1911; iv. உ. ப. 8 v 33 25; செ.மீ.; vi. இலவசம்; vii. கிறிஸ்துவின் பிறப்பைக் குறித்து வரும், மத்தேயு 26 6—10 தொடரின் விளக்கமாக அமைந்த ஒரு சிறு வெளியீடு. viii. 867/1911/IV.

Q 6 :3

**மாமயூ, நோவா.**

350. i. பிரதான தீமையாகிய பெருமை: முதற் பதிப்பு; ii. நோவா. மாத்யூ; வி. எம். விஞக்ஸ் பிரஸ், பசுமலை; iii. மார்ச், 1912; iv. உ. ப. 10+120; v. 17×11 செ. மீ.; vi. 0-4-0; vii. பெருமைதான் எல்லாப் பாவங்களுக்கும் தாய் அல்லது வேர் என்கிறார் ஆசிரியர். கிறித்துவ வேதத்தின் அடிப்படையில் இது எழுதப்பெற்றது. பெருமையும் அதன் தோற்றமும், பெருமையும் அதன் தன்மைகளும் முதலாக எழு பெருந் தலைப்புக்களில் ஆசிரியர் இந்நூலில் எழுதியுள்ளார். viii. 205/1912/III.

Q 6:3

**யேசுதாஸன், டி.**

351. i. நவமனுட மாலை; ii. டி. யேசுதாஸன்; டார்லிங் பிரஸ், பாளையங்கோட்டை; iii. 1915: iv. செ.மூ.ப 12; v. 18×12 செ.மீ.; vi. 0—1—6 vii இயேசு கிறிஸ்துவைத்

துதித்து அவருடைய பெருமையினாலும், தூய ஆவியின் ஒருமைப்பாட்டாலும், தேவனுடைய அருளாலும் புதுமை பெறுகின்ற மனிதனைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. viii. 394/1915/IV.

Q6:3

**ரெய்ச்சார்டு ஐயர், எல்.**

352. i. சிறுவற்கேற்ற வேத சரித்திரங்கள் (இரண்டாம் வகுப்பு) முதற் பதிப்பு ; ii. எல். ரெய்ச்சார்டு ஐயர், எம்மேனுவல் பிரஸ், கோயம்புத்தூர்; iii. நவம்பர் 1912; iv. உ. ப. 40; v. 20×13 செ. மீ. ; vi 0-1-6; vii. தேவன் அபிரகாமை அழைத்தல் தொடங்கி ஏசுநாதர் அடக்கம் செய்யப்பெற்று, மக்தலா ஊராளாகிய மரியாளுக்குக் காட்சி கொடுத்தது வரையில் உள்ள வரலாறு. இருபத்து எட்டு அத்தியாயங்களில் தரப்பட்டிருக்கிறது. viii. 404/1912/IV.

Q 6:3

353. i. **லூர்து நாயகியின் வல்லபம்:** முதற் பதிப்பு; ii. ரெவரண்டு பிரதர், எஸ். ஜே. ஜோசப், செய்ண்ட் ஜோஸப்ஸ் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சினாப்பள்ளி; iii. பிப்ரவரி 1911; iv. உ. ப. 1×57 ; v. 17+11 செ.மீ.; vi. 0-1-0; vii. லூர்து மலையின் மாதாவின் பெருமையை உரைப்பது. தேவமாதா 1858 ஆம் ஆண்டு, பெந்நதெத்தம்மாளுக்குக் காட்சியான நாள் தொடங்கி, இன்றை வரையில் லூர்து நகரில் மட்டும் நடந்த புதுமைகள் ஆயிரக்கணக்கானவைகள் என்று ஆசிரியர் சொல்லுகிறார். vii. 389/1911/I.

Q6 :3

354. i. **வரப்போகிற நீதியின் அரசாட்சிக்குரிய ஆயத்தம்;** ii. தேவ சந்தோஷம்; ஸ்காட்டிஷ் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 44; v. 19×13 செ.மீ. ; vi.. .... vii. கிறித்துவ சமயத்தின் கருத்துக்களும் உண்மைகளும் அடங்கியுள்ளன. சத்திய வேதாகம ஆராய்ச்சி வரிசையில் இது முதல் புத்தகம்; viii. 972/1915/III

Q 6:3

**வான்ஸ்கி அய்யர், எம்., சீர்காழி.**

355. i. ஞானோபதேச விஸ்தரிப்பு : முதற்பதிப்பு ; ii. எம். வான்ஸ்கி அய்யர், சீர்காழி ; திரிபுரசுந்தரி பிரஸ், சீர்காழி ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 87 ; v. 20×17 செ.மீ. ; vi. 0—4— 0; vii. ஜர்மானிய நாட்டில் புதிதாய் ஏற்பட்ட ஞானோபதேசத்தின் மொழி பெயர்ப்பு இந்நூல்.. சத்திய வேதமாகிய விவிலிய நூலின் கருத்துக்களை 358 வினா விடைகளாக அமைத்துக்கொடுத்துள்ளார். (1) பத்துக் கற்பனைகள், (2) விசுவாசப் பிரமாணம், (3) கர்த்தருடைய ஜெபம், (4) ஞானஸ் நானக் கட்டளை,

(5) இராப் போசனக் கட்டளை என்னும் ஆதி நியாயங்கள் ஆகியவற்றைப் பெரும்பகுதியாகக் கொண்டது இந்நூல். viii. 100/1914/II.

Q6:3

356. i. **வேதசாஸ்திர சங்கிரக சாரம்:** ii. தாம்சன் அண்டு கோ, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 100; v. 19×13 செ.மீ.; vi. ....; vii. வேதங்களை விளக்கும் ஒரு மொழிப்பு நூல். ரெவரெண்ட் டபிள்யூ. ஸ்களடர் என்பவர் எழுதிய நூலில் உள்ள முக்கியசெய்திகள் இதில் தொழில் தொகுத்துப் பிரசுரிக்கப்பட்டுள்ளன. viii. 261/1915/III.

Q6:3

357. i. **வேத பாடங்கள் (முதற் பாகம்)** முதற் பதிப்பு; ii இண்டர் நேஷனல் டிராக்ட் சொஸைட்டி, திருச்சினாப்பள்ளி வெட்னஸ்டே ரெவ்யூ பிரஸ், திருச்சினாப்பள்ளி; iii ஜூன் 1913; iv. உ.ப. 71; v. 18×13 செ. மீ.; vi. 0—2—0; vii. கிறித்துவ நெறிகளையும் நிகழ்ச்சிகளையும், மாணவர்களுக்கு ஏற்றவகையில் இந்நூல் தருகிறது. பதின்மூன்று பாடங்கள் இதில் உள்ளன. ஒவ்வொரு பாடத்தின் முதலிலும் சில கேள்விகளைக் கொடுத்து அவற்றிற்கு விடை தரும் வகையில் சமய விளக்கம் தரப்பட்டுள்ளது. viii. 166/1913/III.

Q6:3

358. i. **வேதபாடங்கள்—பாகம் 2** முதற் பதிப்பு; ii. இண்டர் நேஷனல் டிராக்ட் சொஸைட்டி, திருச்சினாப்பள்ளி; வெட்னஸ்டே ரெவ்யூ பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஏப்ரல் 1914; iv. உ.ப. 56; v. 18×13 செ.மீ.; vi. 0—2—0 vii. ஓய்வு நாளில் பள்ளிக்கூடங்களிலும், தேவாலய வழிபாடு காலங்களிலும் பயன்படத்தக்க வேதபாடங்கள் இதில் உள்ளன. வேதத்தொடர்கள் ஆராதித்தல், ஜெபம், விசுவாசம் 'பரிசுத்த ஆவி,' தீர்க்க தரிசனவரம், ஆசியவற்றைக் குறித்து 13 பாடங்கள் உள. இதன் பின்னர் ஏசு 'சீஷத்துவம் 'கீழ்ப்படிதல், தேவனுடைய வீட்டில் இருப்பதற்கு வேண்டிய 'பயபக்தி 'மிஷன் 'ஊழியம் ஆகியவற்றைப் பற்றி 13 பாடங்கள் உள. ஒவ்வொரு பாடத்திலும் பல கேள்விகள் அமைந்துள்ளன. கேள்விக்கு விடைகளாக அமைந்த வேத உரைநடைக் குறிப்பும் ஒவ்வொரு கேள்விக்கும் தரப்பட்டுள்ளது. viii. 898/1914/II.

Q6:3

**வைகாப் ஐயர், ஜெ. எச்.**

359. i. பேதுருவின் நிருபங்கள். ii. ஜெ. எச். வைகாப் ஐயர், மினர்வா பிரஸ், சென்னை,; iii. மே, 1915; iv. உ. ப. 26; v. 19×14 செ.மீ vi. .......................; vii.. பேதுருவின் கடிதங்களைப்

பற்றிய விளக்கமும் குறிப்புகளும் அடங்கிய நூல். 1915ஆம் ஆண்டுக்கான ஆர்க்காட் மிஷன் அஸிஸ்டன்ட் பைபிள் தேர்வுக்கான துணை நூல் இக்கிருத்துவ சமய நூலில் பேதுருவின் கடிதத்திற்குப் பொழிப்புரையும் உள்ளது. viii. 644/1915/II.

Q6:3

360. i ஜீவனையும் பரிபூரண ஜீவனையும் கொடுக்கிற ஜீவன்: ii. சி. ஜெ. மத்தேயு; பிரஸிடென்ஸி, பிரஸ், சென்னை. iii. 1915; iv. உ.ப. 40; vi 18×12 செ. மீ. ; vi. .......... ; vi. எல்லா உயிர்களுக்கும் முழுமையுடைய உயிராக இருக்கிற இயேசு கிறிஸ்துவின் பெருமைகளை விளக்கும் நூல். இந்நூல் இயேசுவை வழிபடுபவன் அழிந்து போகாமல் நிலையான வாழ்வைப் பெறுவான் என்று எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. விவிலிய நூலிலிருந்து எடுத்து எழுதப்பெற்றது. இந்த வரலாறு, அங்கங்கே குறிப்பிடும் நிகழ்ச்சிகளுக்குச் சான்றாகவுள்ள வேத உரைநடைத் தொடர்களுக்குரிய எண் குறிப்பும் கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 936/1915/IV.

Q6:3

**ஜேம்ஸ் ஐயர்**

361. i. கிறிஸ்துவைச் சேரும் வழி; முதற் பதிப்பு; ii. இண்டிய நேஷனல் டிராக்ட் சொஸைட்டி, திருச்சி, மெதாடிஸ்ட் பப்ளிஷிங்அவுஸ், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. உ ப 3+200; v. 19×13 செ.மீ.; vi. 0-6-0; vii. ஏசு ஒருவரே ஆன்ம குறைகளை நீக்கக்கூடியவர் என்று காட்டுவது. நீதியையும் நல்லொழுக்கத்தையும் தேடுகிறவனைத் தன்னையே முழுவதும் ஒப்புக்கொடுக்கும் அசையாத நம்பிக்கை உள்ள கிறித்துவ வாழ்வின் வழியாய், படிப்படியாய் நடத்துகிறது. துன்பப்படும் பல ஆன்மாக்களுக்கு ஆறுதலையும் நம்பிக்கையையும் தருவது. பதின்மூன்று அத்தியாயங்கள் இதில் உள்ளன. சில படங்களும் காணப்படுகின்றன. viii. 305/1912/IV

Q6:3

**ஸ்கோமரஸ்; எச்,**

362. i. மனுஷர் கடவுளை அறியும் அறிவு; முதற் பதிப்பு; ii. எச் ஸ்கோமரஸ்; ஈவான்ஞ்சிலிக்கல் லூத்தரன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; iii. மே. 1911; iv. உ. ப. 27; v. 18×12 செ. மீ. ; vi. 0—0—3; vii. கடவுளை அறிதல் மனிதனுக்கு அவசியம் கடவுளை தன்னை வெளிப்படுத்துதல், மனிதன் கடவுளை அறியும் திறன் என்னும் மூன்று பெருந்தலைப்புகளில் எழுதப்பட்ட சமய நூல். ஏசு கிறித்துவுக்குச் சீடர்களாக வேண்டும் என்று வற்புறுத்துகிறார். தொடக்கத்தில் கடவுளை வழிபடல் அவசியம் என்ற தலைப்பை விளக்கு

மிடத்து சிவனடியாராகிய ஆறுமுக நாவலர் சொன்ன தொடர் களை மேற்கொள் காட்டியிருப்பது சிந்தனைக்குரியது. viii. 657./1911/II. Q6:3

**ஹாப், ஈ.**

363. i. கிறித்துவின் வாழ்க்கை பற்றிய மத போதனைகள்: முதற் பதிப்பு; ii. ஈ. ஹாப், அமெரிக்கன் ஆர்க்காட்டு மிஷன் பிரஸ், ஆரணி; iii. அக்டோபர், 1912; iv. உ. ப. 2+438, v. 20×14 செ. மீ. ; vi. ...........; vii. இதிலுள்ள ஒவ்வொரு பாடமும் ஒவ்வொரு வேதத்தொடரை அடிப்படையாகக் கொண்டு, கதையாக எழுதப்பட்டு இருக்கிறது. கதையை மறைத் தொடரை விளக்கும் ஒரு கருவியாகப் பயன்படுத்திப் பிள்ளைகள் பயன்பெறவேண்டும் என்றும் ஆசிரியர் முகவுரையில் குறித்துள்ளார். அட்வெந்து (ஒன்றுவது ஞாயிறு முதல் நாலாவது ஞாயிறு) கிறித்து பிறந்த திரு நாளுக்குப்பின் வரும் ஞாயிறு, நோன்பு நாட்களின் ஞாயிறு, கிறித்துவத்தின் திருநாள், திருநாளுக்குப்பின் வரும் ஞாயிறு என்னும் பொருள்கள் பற்றி விளக்குவது இந்நூல். இதில் லூக்காவின் வேத உரைநடைத் தொடர்கள் எங்கும் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. viii. 939/1913/I.

Q6:3

**ஹாரிஸ், எம். என்.**

364. i. கிருஸ்து தேவனா ? ii. எம். என். ஹாரிஸ் ; பெருந்தேவி விலாசம் பிரஸ், சின்ன காஞ்சிபுரம்; iii. 1915; iv. உ.ப. 24 ; v. 15×11 செ.மீ. ; vi. .................; vii. தேவன் அருளிய சத்திய வேதத்தைப் பற்றி விளக்கப் பட்டிருக்கிறது. இயேசு கிறித்துவின் நெறியானது. கயவர்களுக்காக நிறைவேற்றி முடித்திருக்கிற தீச்செயல்களின் கழுவாயாகிய முழுச் செயல் களிலும் கட்டப்பட்டிருக்கும் உண்மையை எடுத்துக் காட்டும் சிறு நூல். 'கிறித்து தேவன்தான்' என்பதை மறை உரை நடைத் தொடர்களின் வாயிலாக மெய்ப்பித்துக் காட்டுவது. viii. 485/1915/IV.

Q6:3

**ஹென்றி, மிஸ். எப்.இ.**

365. i. எண்பத்தெட்டு வேத வாக்கியங்கள்: முதற் பதிப்பு; ii. மிஸ். எப். இ. ஹென்றி; எஸ்.பி. சி. கே பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1914; iv. உ.ப. 14; v. 14×11 செ.மீ. ; vi. 2 சதம்; vii. இயேசு கிறித்துவின் வாழ்க்கையிலிருந்தும், அவருடைய அருளுரைகளின் அடிப்படையிலும் தொடுக்கப்பட்ட 88 'வேத வாக்கியங்கள்' இதில் உள்ளன. Viii. 903/1914/II.

Q6:3

**ஹென்றி, மிஸ. ஜே. இ.**

366. i. வேதாகம ஸ்திரீகளுக்குப் பிரயோஜனமாக ஒரு வருஷத்துக்கு வேத பாடங்கள்; ii. ஜே. இ. ஹென்றி; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1914; iv. உ.ப. 42; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. மகளிர்க்கான கிறித்துவ மறை பாடங்கள் நூல். இதில் 'சிருஷ்டிப்பு, தொடங்கி அப்போஸ்தலர் ஏற்படுத்தின 'விசுவாசப் பிரமாணம்' ஈறாக 41 பாடங்கள் உள்ளன. இவை ஓர் ஆண்டிற்குப் பயன்படும் வகையில் செய்யப்பட்டது. viii. 445/1914/III. *Q*6:3

**232·9 கிறிஸ்துவின் வாழ்க்கை**

**மிக்கேல்நாதஸ்வாமி ம. சூ.**

367 i. நற்கருணை பேழைப்புரு : முதற் பதிப்பு; ii. எ.ஆர் ஜான் ஐயர்; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii ஜனவரி 1913; iv. உ.ப. 2+172; v. 15×11 செ.மீ. vi. 0—6—0; vii. ஏசு கிறித்து ஜெருசலத்தில் நுழைந்தது முதல் சிலுவையில் அறையப்பட்டுக் கல்லறையில் அடக்கம் செய்வது வரையுள்ள மேதகு வரலாறு எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. முப்பத்து ஒரு சந்திப்புகளாகப் பிரிக்கப்பட்டு இந்நிகழ்ச்சிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு சந்திப்பின் தொடக்கத்திலும் அதற்குரிய ஒரு வேதவாக்கியம் எழுதப்பட்டிருக்கிறது. viii. 440/1913/I *Q*6:3

**232·97 இயேசுவின் இரண்டாம் வருகை உவாக்கர் ஐயர், டி.**

368. i. கிறிஸதுவின் இரண்டாம் வருகையைப் பற்றிய குறிப்புகளும் பிரசங்கங்களும்: ii. எஸ. ரெவரெண்ட்.வேதமுத்து; உதகமண்டலம் நீலகிரி பிரஸ், iii. 1915; iv. உ.ப. 27 ; v. 18×13 செ. மீ. ; vi. . ; vii. கிறித்துவின் இரண்டாம் வருகையைப்பற்றிய குறிப்புகளும், சொற்பொழிவுகளும் அடங்கிய நூல். இதில் கிறிஸ்துவின் இரண்டாம் வருகையின் அடையாளங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன viii. 263/1915/II. *Q*6:3

**242 தியானம் இஞ்ஞாசியார் சுவாமி**

369 i. உத்தரிக்கிற ஆத்துமாக்களின் வணக்க மாதம் : மூன்றும் பதிப்பு ; ii. ஜோசப் ஐயர், செயின்ட் ஜோசப் இண்டஸ்டரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. அக்டோபர்,1913; iv. உ.ப. 375; v. 17×10 செ.மீ. ; vi. 0—9—0 vii. இறந்த

வர்களுக்கு இரங்கி அவர்களுடைய துன்பத்தைக் குறையச் செய்யப்படும். வழிபாட்டிற்கு உத்தாரித்தல் என்று பெயர். மரித்தவர்களுடைய ஆன்மாக்களைக் குறித்து வழிபாடு, அறம் முதலியன பண்ணுவது சிறந்த செயலாகும். உத்தாரிக்கிற வணக்க வழிபாட்டிற்குரிய மாதம் நவம்பர் மாதமாகும். அம்மாதம் முழுமையும் ஒவ்வொரு நாளும் ஆன்மாக்களைக் குறித்துச் செய்ய வேண்டிய வழிபாடு முதலியவற்றைப்பற்றி விளக்கும் நூல்; viii. 362/1913/IV. Q6:412

**இலேஜர், ஜி. டி.**

370. i. ஜெபங்களும் தியானங்களும் : முதற் பதிப்பு ; ii. ஆர். டி. பாட்ஸ் ; எஸ். பி.ஸி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. மார்ச், 1911; iv. உ.ப. 8+124 ; v. 14×11செ.மீ.; vi. 0–4–0 ; vii. இதில் காலை, மாலை மற்றும் "தனி ஜெபங்களும்" பரி, நற்கருணை ஆயுத்தம், முறைமை, தியானங்களும், அறிவுரைகளும் அடங்கியிருக்கின்றன. ஞானப் பாட்டுக்களும் இதன் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. கிறித்துவர்கள் தமது வாழ்க்கையை எவ்வாறு நிகழ்த்திச் செல்லவேண்டும் என்பயை அறிவிக்கும் வாழ்வின் சட்டம் என்னும் ஒரு பகுதியும் ஈற்றில் உள்ளது. இதில் கிறித்தவர்களுடைய நாட் கடமைகளும், வார முடிவிலும், மாத முடிவிலும் செய்ய வேண்டிய காரியங்களும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. viii. 414/1911/I. Q6:412

371. i. **உத்தமதனத்தின் ஏணி** : ஒன்பதாம் பதிப்பு ; ii. அர்ச் ஜோசப், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. . டிசம்பர், 1911 ; iv. உ.ப. 1+310+7 ; v. 13×10 செ. மீ. ; vi. 0–7–0 ; vii. கிறித்துவர்கள் நல்லவர்களாக வாழ்வதற்குரிய வழியை உரைப்பது ; உத்தமதனமாகிற ஞான கோபுரத்தின் சிகரத்தை அடைவதற்குப் படிபோன்று உள்ளது. இப்படிகளில் ஏறிச் செல்வதற்கு வசதியாக இருக்கும் பற்பல பத்தி முயற்சிகளும சுகிர்த வழிபாடுகளும் இன்னதென்றும், அவைகளை எவ்விச மாய்ச் செய்ய வேண்டுமென்றும் இந்தச் சிறு புத்தகத்தில் விவரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. இறுதியில் பயனுள்ள சுகிர்த ஜெபங்களும், லத்தீன் பாட்டுகளும் இடம் பெற்றுள்ளன ; பொருள் அட்டவணை இறுதியில் அமைந்துள்ளது. viii. 864/1912/IV. Q6:411

2. i. **ஞான பொக்கிஷம்** : இரண்டாம் பதிப்பு ; ii. ஜோசப் அய்யர் ; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜூலை, 1911 ; iv. உ. ப. 2+318+6;

v. 17×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. கிறிஸ்தவர்களின் பல சபையிலுள்ள துறவிகளும், கன்னிப்பெண்களும் தங்கள் ஒழுங்கு முறைப்படி சொல்ல வேண்டிய செபங்களும், பின்னும் பக்தியில் பெருகும்படி தாங்களே வழக்கமாய்ச் செபித்து வரும் வரும் செபங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இதோடு துறவற நிலையின் முக்கிய ஞான முயற்சிகளாகிற தியானம், ஆன்ம சோதனை, மதத்தின் பரிசோதனைகளும் தரப்பட்டுள்ளன. கடைசியாக துறவிகளும், கன்னிப் பெண்களும் தாங்கள் கொடுக்கும் "தரித்திரம்", "விரத்துவம்", "கீழ்ப்படிதல்" என்னும் மூன்று வார்த்தைப் பாடுகளால் தங்கல் மேல் சுமத்திக் கொள்ளும் கடன் பற்றி விவரிக்கப்பட்டுள்ளன. viii. 349/1911/III.

Q6 : 412

**தாவீது ஐயர், தே., தஞ்சாவூர், (மொ. து.),**

373. i. தியானங்களும். செபங்களும் : ii. தே. தாவீது ஐயர், தஞ்சாவூர் ; ஆர். விவேகானந்தா பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ. ப. 40 ; v. 18×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. யோவான் பிதரிக் ஸ்ருற்கே போதகர் தொகுத்த தியான ஜெபங்களின் தமிழ் மொழி பெயர்ப்பு. ஞாயிறு முதல் சனி வரையில் எழு நாட்களிலும் நாள்தோறும் காலை, மாலை ஜெபத்துக்குரிய ஜெபங்களும், தியானங்களும் உள. இத்தனை அருமையான செபத் தியானங்கள் தமிழ் மொழியில் இல்லாததால் மொழி பெயர்த்ததாக மொழி பெயர்ப்பு ஆசிரியர் முகவுரையில் கூறுகிறார். viii. 166/1913/II.

Q6 :412

**பயோ சாமியார், எச்.**

374. i. கடமையின் பேரில் தியானங்கள் : முதற் பதிப்பு ; ii. எச். பயோ சாமியார் ; ஆரியன் பிரஸ், கும்பகோணம் ; iii. ஆகஸ்ட் 1914 ; iv. உ. ப. 76, v. 18×13 செ.மீ. ; vi.........; vii. ரோமன் கத்தோலிக் கிறித்தவர்களின் கடமைகள் விளக்கப்பட்டுள்ளன. கடமையின் பல்வகை சிறப்புகளையும் இது விவரிக்கிறது. " இந்த முயற்சியானது எவ்வளவு கனமாய் இருக்கிறது' என்பது தொடங்கி எப்போதும் என் கடமையை நிறைவேற்றி வருவேன்" என்பது ஈறாக 30 தியானங்கள் உள்ளன. ஒவ்வொரு தியானத்தின் இறுதியிலும் ஆன்ம சோதனை, பிரதிக்ஞை, ஞான புஷ்பம் என்னும் மூன்று செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 582/1914/III.

Q6:412

375. i. **பரமண்டல மந்திர விரிவுத்துரை** ; புதிய ஐந்தாம் பதிப்பு; ii. ஜோசப் அய்யர், திருச்சிராப்பள்ளி ; அர்ச், சூசையப்பர் தொழிற்சாலை அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி ; iii. எப்ரல்; 1914 ; iv. உ. ப. 17 ; v. 13×9 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. நன்மை வாங்கினதும், முந்தி அறிந்த தோத்திரமாகத்

தியானித்துச் சொல்லப்படுவது " பரமண்டல மந்திரத்தின் விளக்கமாக அமைந்தது இந்த நூல். பரமண்டலங்களிலே இருக்கின்ற எங்கள் பிதாவே உங்களுடைய நாமம் அர்ச்சிக்கப் படுவதாக, உம்முடைய ராச்சியம் வருக என்பன போன்ற தலைப்புகளின் கீழ் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 269/1914/II.

Q6:412

376. i. **போம்பேயி மாதாவின் நவ நாட் செபங்கள் :** முதற் பதிப்பு ; ii. ஏ. ஆர். ஜான் அய்யர் ; நல்ல ஆயன் அச்சுக்கூடம் சென்னை; iii. செப்டம்பர், 1913 ; iv. உ. ப. 73 ; v. 14×11 செ.மீ.; vi. 0–2–0; vii. இத்தாலியில் உள்ள போம்பேயி கணவாயில் கோயில் கொண்டுள்ள தேவமரியைப் பற்றிய வழி பாடு. பாத்தாலோ லோம்போ என்னும் பெருமகனால் 1172ஆம் ஆண்டு இந்தக் கோவில் அமைக்கப்பெற்றது. அவரது முயற்சி யினால் ஜபமாலையும் மரியாயின் பக்தியும் அங்குள்ள மக்க ளிடையே வளர்ந்தன. இங்கே வழிபடுகின்ற "நவ நாட் ஜெபம் போம்பேயி" இராக்கினியின் ஜெபமாலை, மாதாவின் பிரார்த்தனை முதலியன இதில் அடங்கியுள்ளன. viii. 107/1913/IV.

Q6:412

**மிக்கேல்நாத சுவாமி, சங். ம. சு.**

377. i. கபால மலை : முதற் பதிப்பு ; ii. ரெவ் ஏ. ஆர். ஜான், சென்னை ; நல்ல ஆயன் அச்சகூடம், சென்னை ; iii. நவம்பர்; 1914 ; iv. உ. ப. 555 ; v. 17×11 செ.மீ.; vi. 0–12– 0 vii. கிறித்தவர்கள் ஆண்டு முழுவதற்கும் ஒவ்வொரு நாளும் பாட வேண்டிய துதிப் பாடல்களையும், செய்ய வேண்டிய வழி பாடுகளையும் இந்நூல் கொண்டுள்ளது. ஒவ்வொரு கிழமைக் கென்று தியானப் பகுதிகள் தனித்தனியே உள்ளன. ஆண்டுத் திருநாட்களின் அட்டவணையும் உள்ளது. ஏசு நாதரின் படங்களும் இடையிடையே உண்டு. viii. 741/1914/IV.

Q6:412

**லார்ஸென் ஐயர், எல். பி.**

378. i. ஜெபம் : முதற் பதிப்பு ; ii. கிறித்தது கல்வி அபிவிருத்தி, எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ.ப. 4+196 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. லார்சன் அய்யர் இயற்றிய நூலின் மொழி பெயர்ப்பே இந்நூல். ஜே. லாசரஸ் அய்யர் என்பார் இதனை மொழி பெயர்த்துள் ளார். பதினைந்து அத்தியாயங்களில் இறை வணக்கங்கள் தரப்பட்டுள்ளன. கிறித்துவ வழிபாட்டில் நம்பிக்கை வைத்து, கிறித்துவ வழிப்பாட்டை பயன்படுத்த முதலியவை அத்தியாயப் பெயர்களாய் உள்ளன. ஒவ்வொரு அத்தியாயத்திலும் ஏழேழு பகுதிகள் உள்ளன. viii. 462/1913/II.

Q6:412

379. i. **வழிக்கு ஒளி** ; முதற் பதிப்பு ; ii. சன்மார்க்கச் சிறு புஸ்தக சங்கத்தார், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ. ப. 366 ; v. 19×11 செ.மீ.; vi. 0–8–0 ; vii. கிறித்தவன் நாள்தோறும் நடக்க வேண்டிய வழிக்கு ஒளி தருவது இந்நூல். ஆண்டில் நாள்தோறும் மாலையில் வாசித்து வணங்கத்தக்க மறைத் தொடர்கள் அடங்கிய நூல். ஒவ்வொரு நாளுக்குரிய வழிபாடும் தனித்தனி பக்கங்களில் அமைந்துள்ளது. அது குறித்த செய்திகள் காணப்பெறும் வேத தொடர்களைப் பற்றிய குறிப்பு அடிக் குறிப்பில் உள்ளது. viii. 174/1913/I.

**Q6:412**

**ஜான் அய்யர், ஏ.ஆர். சென்னை**

380. i. நல்ல ஆயன் சோலை : இரண்டாம் பதிப்பு ; ii. ஏ. ஆர். ஜான் அய்யர், சென்னை ; நல்ல ஆயன் அச்சாபிஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 10+382+3 ; v. 13×8 செ.மீ.; vi 0–5–0 ; vii. நல்ல ஆயன் பத்திரிகை நிலையத்திலிருந்து தொகுத்து வெளியிடப்பட்டது. பல வழி பாடடு நூல்களிலிருந்து தெரிந்தெடுத்துத் தரப்பட்டது. இந்த இரண்டாம் பதிப்பில புதிதாய்ச் சேர்க்கப்படட வழிபாடுகளுக்கு அட்டவணையில் உடுக் குறியிடுக் காட்டப்பட்டிருக்கிறது. சிறப்பான நாட்களிலும் நேரங்களிலும் செய்ய வேண்டிய வழிபாடுகள் அடங்கியுள்ளன. viii. 235/1914/II.

**Q6:412**

381. i. வியாக்குலப் பூசைத் தியானம் : முதற் பதிப்பு ; ii. ஏ. ஆர். ஜான் அய்யர், சென்னை ; குட்பேஸ்டர் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; vi. உ.ப. 14; v. 16×11 செ.மீ.; vi. 0–0–6; vii. ஏசுநாதர் சிலுவையில் பலியாக ஒப்புக் கொடுத்த நினைவாகக் குருவானவர் செய்கின்ற பூசையை விளக்குவது இந்நூல். பூசை காண்கிறவர்களுக்கு அறிவும், விசுவாச மந்திரம். தோத்திர மந்திரம், பரமண்டல மந்திரம், கிருபை தாயபத்து மந்திரம் என்னும் தலைப்புக்களின் கீழ் விவரிக்கப் படடிருக்கிறது. சேசுவைக்குறித்த வணக்கத்துடன் இது முடிவடைகிறது. viii. 234/1914/II.

**Q6:412**

382. i. ஜெப புஸ்தகம் முதற் பதிப்பு ; ii. செயின்ட் தாமஸ் கான்வென்ட் தலைவர், சென்னை ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1914 ; iv. உ.ப. 106 ; v. 19×13 செ. மீ.; vi. இலவசம் ; vii. மேரியின் ப்ரான்சிஸ்கன் மிஷனரியின் நிறுவனத்தைச் சார்ந்த கன்னியரின் பயனுக்காக எழுதப் பெற்ற வழிபாடலின் தொகுப்பு, இச்சபையை உண்டாக்கின தாயாரால் எழுதப்பட்டது. viii. 742/1914/IV

**Q6:412**

## 252. பிரசங்கம்.

**தேவதாசன், ஜி. பாளையங்கோட்டை**

383. i. பிரசங்கக் களஞ்சியம் (இரண்டாம் பங்கு) : முதற் பதிப்பு; ii. ஜி. தேவதாசன், பாளையங்கோட்டை, ஸி. எம். எஸ். பிரஸ், பாளையங்கோட்டை ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப. 9+112 ; v. 18×11 செ.மீ.; vi. 0–4–0 ; vii. பாளையங்கோட்டையில் 43 ஆண்டுகள் இறைபணி பார்த்து வந்த ஈசாக்கு குருபாதம் அய்யர் அவர்களுடைய 75 சொற்பொழிவுகளின் குறிப்புக்கள் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு செய்திக்கும் சான்றாக விவிலிய நூல் தொடர்களைப் பற்றிய குறிப்புக்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. viii. 741/1913/IV.

Q6:52

**பரமானந்தம். எஸ்.**

384. i. சுவிசேஷ பிரசங்கங்கள் ; ii. எஸ். பரமானந்தம் ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர் , 1911; iv.உ. ப. 5+307 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. தென் இந்தியாவிலும் இலங்கையிலும் நடந்த''கன்வென்ஷன் கூட்டங்''களில் ஆசிரியர் நிகழ்த்திய சொற்பொழிவுகளின் தொகுப்பு. பதின்மூன்று சொற்பொழிவுகள் இதில் உள்ளன. டி. உவாக்கர் என்பார் இதற்கு முகவுரை எழுதியிருக்கிறார். இந்தச் சொற்பொழிவுகள் வேத சத்தியத்திற்குத் தெளிவும் வலிவும் தருகிறபடியினால் இந்தச் சொற்பொழிவுகளை யாவரும் ஆழ்ந்து படிக்கவேண்டும் என்று முகவுரையில் எழுதியிருக்கிறார். viii. 900/1911/IV.

Q6:52

385. i. சுவிசேஷ பிரசங்கங்கள் : இரண்டாம் பதிப்பு; ii. எஸ்.பரமானந்தம், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ. ப. 9+291 ; v. 18×13 செ. மீ.; vi. 0–6–0 ; vii. யாவரும் எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சுவிசேஷ சத்தியங்கள் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றன. சத்திய வேதத்தின் உண்மைகளை ஆசிரியர் தமக்கே உரிய சிறந்த முறையில் வெளிப்படுத்தியிருக்கிறார்.பதின்மூன்று சொற்பொழிவுகள் இதில் உள்ளன. உவாக்கர் என்பவர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். இந்த நூலின் முதற் பதிப்பை வாசித்து சைவ சமயத்தைச் சார்ந்த ஒரு இந்து தம் குடும்பத்தோடு கிறீத்துவ சமயத்திற்கு மாறியதைப் பற்றிக் கூறும் பட்டறிவு உரையும் இதில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 1068/1913/IV.

Q6:52

## 267 கிருத்துவச் சபைகள்

**சந்தியாகு சுவாமி, சேசு சபை.**

386. i. பங்கிராஸ் : மூன்றும் பதிப்பு ; ii. ரெவரண்ட, பிரதர், எஸ். ஜே. ஜோசப், திருச்சி ; செயின்ட ஜோஸப்ஸ் இண்டஸ்டிரியல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 510 ; v. 19×12 செ.மீ. ; vi. 1–0–0; vii. கார்டினல் வைஸ்மேனின் "பாபியோலா" (Fabiola) என்னும் நூலிலிருந்து கத்தோலிக்கத் திருச்சபையினர் தொடக்க காலத்தில் செய்தவைகளைக் குறித்துத் தமிழில் தருகிறது இந்நூல். "பூர்வீக சுரங்க சபையின் விநோத விருத்தாந்தம்" என்றும் இது வழங்கப்படும். திருச்சபை முதலில் முதல் மூன்று நூற்றாண்டுகளில் இருந்த நிலைமையை இது விளக்குவதாகும். viii. 906/1914/IV.

Q6:6

**சாமுவேல் ஐயர், நா.**

387. i. திருச்சபை சரித்திரப் பொழிப்பு : திருந்திய பெரியதாக்கப்பட்ட இரண்டாம் பதிப்பு ; ii. சாமுவேல் ஐயர். தரங்கம்பாடி நூர்ஜஹான் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 113 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. பல திருச்சபை வரலாறுகளின் ஆராய்ச்சியால் உண்டான பயன் இது. இந்நூல் செமினேரியிலும், வேறு சில பள்ளிகளிலும் உபயோகிக்க ஆசிரியர்கள் கூறிய சில அறிவுரைகளை ஒட்டி இப்புதுப் பதிப்பு செய்யப்பட்டது. இந்நூல், பொருள் அட்டவணையில் குறித்தவண்ணம் "பூர்வ காலம்" (கி. பி.30 – 680) 'மத்திப காலம்' (கி. பி. 680– 1571), " நவீன காலம்'' (கி.பி. 1517– 1892) முதலிய முப்பிரிவுகளாகப் பிரித்து விளக்குகின்றது. viii. 91/1914/IV. Q6:6

**சேமே ஐயர், சங். சீ.**

388. i. திருச்சபை சரித்திரம் ; முதற் பதிப்பு ii. எல்.இ.எல்.எம் பப்ளிஷங் ஹவுஸ், தரங்கம்பாடி; எல்.இ.எல்.எம். பிரஸ்; தரங்கம்பாடி iii. செப்டம்பர், 1914 ; iv. உ. ப. 22+432+38=(492) ; v. 22×14 செ. மீ. ; vi. 1—4—0 ; vii. இந்நூல் கிருத்துவ திருச்சபையின் வரலாற்றினைத் தருகின்றது. இச்சபையின் பழங்கால வரலாற்றினை முதல் பகுதியிலும், இடைக்கால வரலாற்றினை (692—1517) இரண்டாம் பகுதியிலும் இந்நூல் கூறுகிறது. ஒவ்வொரு பகுதியிலும் மும்மூன்று காலங்களில் திருச்சபை வரலாறு முறையே விளக்கப்படுகின்றது. அவைகள் அப்போஸ்தல காலம், இரத்த சாட்சிகளின் காலம், கிருத்துவ சக்ரவர்த்திகளின் காலம் என்பன முதல் பகுதியிலும், திருச்சபை வளர்ச்சியுற்றப ருவம் (692–1085 ,

392. i. **லொரெட்டோ திருஸதலம் :** முதற் பதிப்பு ; ii. ஜோசப் அய்யர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. பிப்ரவரி, 1914 iv. உ.ப. 20; v. 16×11 செ.மீ.; vi. 0–0–6; vii. லொரெட்டோ என்பது இத்தாலிய தேசத்தின் கீழ்ப்பகுதியில் அலங்காரமாகக் கட்டப்பட்ட ஒரு திருக்கோவில். இக்கோவிலைச் சுற்றிப் பெரிய மதில் சூழ்ந்த கோட்டையும் உள்ளது. இந்த இடத்திற்கு மக்களும், தேவகன்னியர்களும் நாள்தோறும் வந்த வண்ணம் இருக்கிறார்கள். இங்கு வீற்றிருக்கும் ஆண்டவனைக் கண்டு நற்பேறு பெற்றோர்கள் பலர். இங்கு நடக்கும் புதுமைகளும் பலவாகும்; viii. 578/1914/I.

**Q6:6**

291. **சர்வ சமயம்**

**அப்துல்காதர், க. மீ.**

393. i. இந்து மார்க்கமும் இஸ்லாம் மார்க்கமும் : முதற் பதிப்பு; ii. அப்துல் காதர், நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. 1915 ; iv. உ.ப. 20 ; v. 16×11 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்துக்களும் முகம்மதியர்களுக்குமுரிய, மணநூல் சாத்திரங்களில், ஒற்றுமையாயுள்ள சில தொடர்களைத் தொகுத்து எம். அபூபசல் எழுதிய ஆங்கில மொழி நூலின் தமிழாக்கமாகும். இஸ்லாமியரின் தூய நூலான குர்ஆன் சொற்றொடர்களை எடுத்துக்காட்டி அதற்கு நேரான கருத்துள்ள வேதம், பகவத் கிதை மனுஸ்மிருதி தொடர்கள் எதிர்ப்பக்கத்தில் தரப் பட்டுள்ளன; viii. 46/1915/IV. **QA**

**இராமலிங்கம் பிள்ளை, ஸி. எஸ்., திருநெல்வேலி**

394. i. சமயம் முதற் பதிப்பு; ii. ஸி. எஸ். இராமலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி ; ஆரியப்பிரகாசினி பிரஸ், திருநெல்வேலிப் பாலம் ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 1+14+1 ; v. 16×11 செ. மீ .; vi. இலவசம் ; vii. உண்மையான சமயம் என்பது எது என்னும் சொற்பொழிவாகும் இது. திருநெல்வேலியிலுள்ள ஆஸ்திக சித்தாந்த சபையில் 1913 ஆம் ஆண்டு சனவரி, 13ஆம் தேதி பாளையங்கோட்டை வக்கீல் சி.பி. சுப்பையா பிள்ளை என்பவர் தலைமையில் செய்யப்பட்டது இச் சொற்பொழிவு. எச் சமயமாயினும் அதிலுள்ள உண்மைகளைக் கைக்கொண்டு மற்றவற்றை விலக்கவேண்டும் என ஆசிரியர் கூறுகிறார்; viii. 756/1913/IV.

**QA**

395. i. **கிறிஸ்து மதகண்டனத்திரட்டு** : முதற்பாகம் ; ii. சிவசங்கர செட்டி, ரிப்பன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 718 ; v. 17×11 செ. மீ. ; vi. 1-8-0 ; vii. கிறித்துவ சமயக் கொள்கைகளை எதிர்த்தும், இந்து சமயத்தைப் போற்றியும் வெளியிடப்பட்ட கண்டன நூல்களின் தொகுப்பு. (1) ஏசுவை நம்பினால் இரக்ஷிப்படையலாமா ? (2) கிறிஸ்தவர் விடைகளின் மறுப்பு (3) விவிலியகுற்சிதம் (4) விவிலிய குற்சித கண்டன திக்காரம் (5) சீவநாமவிளக்கம் (6) ஏசுகிறிஸ்து மனிதனே, ஏசுகிறிஸ்துவும் கடவுளா ? (7) விக்கிரகத்தை வணங்கல் முதலியன (8) பைபிள் யாரால் எழுதப்பட்டது? (9) சிவனுந்தேவனு என்னும் தீய நாவுக்கு ஆப்பு (10) கிறிஸ்தவர் ஞானோதய ஆபாச விளக்கம் (11) புரோடஸ்டாண்டு கிறிஸ்துமத கண்டனம் (12) கிறிஸ்துமத திரியேகத்வ ஆபாசம் (13) இந்திய ஜய பேரிகை (4 பாடல்கள்), (14) வஜ்ஜிரடங்கம் (15) பைபிலும் உலக சிருஷ்டியின் ஆபாசமும் ; பாதிரிகளுக்கு ஓர் சற்புத்தி (16) கிறிஸ்து மதத்தின் குருட்டு நம்பிக்கை (17) பாதிரிமார் ஸ்கூல்களில் பெண்கள் படிக்கலாமா? (18) ஆரியப் பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும் முறைமை என்னும் 18 நூல்கள் இதில் உள்ளன; viii. 652/1915/IV.

QA

## நரசிம்மலு நாயுடு, எஸ்.பி., சேலம்

396. i. **மதவிருக்ஷம்** : இரண்டாம் பதிப்பு ; ii. எஸ்.பி. நரசிம்மலு நாயுடு, சேலம் ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ.ப. 36+480 ; v. 21×13 செ.மீ. ; vi. 1-12-0 ; vii. பல நூல்களையும் செய்தித்தாள்களையும் படித்துத்திரட்டி எழுதப்பெற்றது இந்நூல். மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. இவை முறையே ஆஸ்திக மத சித்தாந்தத்தையும், இந்து சமயப் பிரிவுகளையும், கிறிஸ்து மகம்மது ஆதி மதங்களையும் விவரித்துள்ளார். சமயங்கள் தோன்றிய காலம், இடம், பொருளைப்பற்றியும் அந்தச் சமயங்களை நிறுவிய சமயக்குரவர்களைப் பற்றியும், சுருக்கமாகவும் உரைநடை காவியம் போன்றும் எழுதியுள்ளார். “சேலம் சுதேசாபிமானி” பத்திரிக்கையில் வெளியிட்ட பகுதிகளைத் திரட்டி இந்நூல் வடிவில் ஆக்கியுள்ளார். இது ஒரு உலக சமய வரலாற்று நூல்; viii. 401/1912/III.

QA

## நாராயண அய்யர், ப. (மொ.து.)

397. i. **ஸர்வசமய ஜகமத்ய ஸாரஸங்கிரஹம்** : முதற் பதிப்பு ; ii. ப. நாராயண ஐயர் ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ.ப. 3+121 ; v. 13×10 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. இது அன்னிபெசண்டு அம்மையாரால் ஆங்லத்தில் எழுதப்பட்ட நூலின் (The Universal Religious Text

Book) தமிழ் மொழி பெயர்ப்பு ; இதனை "பூர்ண சந்திரோதயம்" என்ற தமிழ்ப் பத்திரிக்கையில் முதலில் வெளியிட்டு, பின் நூல் வடிவில் பதிப்பித்துள்ளார். ஆங்கிலத்தில் பல சமய சாத்திரங்களிலிருந்து காட்டப்பட்ட மேற்கோள்களை நூலின் விரிவை அஞ்சி மொழி பெயர்ப்பில் சேர்க்காமல் அவைகள் வந்துள்ள இடங்களையும், நிகழ்ச்சிகளையும் மட்டும் சுட்டியிருக்கிறார். சமயவெறுப்பு குறைந்து, அன்பும் ஒருமையுணர்ச்சியும் தோன்றுவதற்கு இந்நூல் ஒரு கருவியாம் என ஆசிரியர் தம் முகவுரையில் குறித்துள்ளார்; **viii. 706/1912/III.**

QA

**பாப்லீ, எச். ஏ.**

398. **i.** சற்சமயவிளக்கம் ; **ii.** கிறிஸ்டியன் லிட்டிரச்சர் சொசைட்டி, சென்னை; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; **iii. 1915 ; iv.** செ.மூ.உ. ப. 120; **v.** 18×13 செ. மீ.; **vi. 0–4–0 ; vii.** கிறிஸ்தவ சமயக் கொள்கையை இந்நூல் சுருக்கமாக விளக்குகிறது. இடையிடையே தமிழ்நூற்களிலிருந்து மேற்கோள்களையும் எடுத்துக்காட்டியுள்ளார். கிறிஸ்தவக் கொள்கைகளுக்கும் சைவ வைணவக் கொள்கைகளுக்கும் ஒப்புடையதான பாடற்பகுதிகளை விளக்குவது. கடவுள் இயல், குருபரன் இயல், மனிதன் இயல், பக்தி இயல், திருவருள் இயல், அறவியல், மீட்பியல் என ஏழு அதிகாரங்கள் உள்ளன; **viii. 939/1915/III.**

QA

**முனிசாமி முதலியார், சிறுமணவூர்**

399. **i.** பிரபஞ்ச உற்பத்தி : ஆறும் பதிப்பு ; **ii.** த.பூ. முருகேச நாயகர், சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; **iii.** பிப்ரவரி, **1913 ; iv.** உ. ப. 639 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 2–0–0 ; **vii.** சமயத்தொடர்புள்ள பல புராண வரலாறுகளிலிருந்து தொகுத்து ஆக்கப்பட்ட நூல். இந்நூலில் உலகத் தோற்றம் மனித இயல்பு சாஸ்திரங்கள் இவைகளைப்பற்றி உரைக்கின்றார். இது பற்றிக் கூறும் உற்பத்தி காண்டத்தில் உலக உற்பத்தி, மானிட ஜென்ம உற்பத்தி, சயன ரக்ஷணம், விவாக விதி சாஸ்திர பேதம் என்னும் தலைப்புக்களில் பல செய்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அடுத்த தேவ உற்பத்தி காண்டத்தில் விநாயகர், சுப்பிரமணியர், மகாவிஷ்ணு முதலியோர்கள் பற்றிய சிவமகாவைபவம் கூறப்பட்டுள்ளது. உலகில் உள்ள நூற்றைம்பது சமயங்களின் விவரங்கள்'மதபேதவிளக்கமெனும்' பகுதியில் உள. இதன் ஆசிரியரின் ஊர் செழுமணவை என்றும் சிறுமணவூர் என்றும் சிறப்புப்பாயிரத்திலும், சாற்றுக் கவிகளிலும் காணப்படுவதால் இரண்டும் ஓர் ஊரையே குறிக்கும்; **viii. 274/1913/III.**

QA

## 294.3 புத்த சமயம்

**அப்பாத்துரையார், எஸ். ஜி., சேலம்**

400. **i.** கௌதம புத்தரைப்பற்றி மருட்துவேஷ சங்குலதர்ப்பணம்: முதற்பாகம்; முதற் பதிப்பு; **ii.** எஸ். ஜி. அப்பாதுரையார்; சாம்பியன்ரீப்ஸ், மெர்குரி பிரஸ், சென்னை; **iii.** ஜுன், **1914**; **iv.** உ.ப. 12; **v.** 20×14 செ.மீ.; **vi.** 0–1–0; **vii.** திருமயிலை பி.எம். சுவாமி என்பார் புத்தரைப்பற்றி எழுதியவைகளுக்கு விடைகூறும் வகையில் அமைந்த மறுப்புரை நூல். சி. குருசாமியார் சாஸனதாயகா என்பவர் பொருளுதவியுடன் பிரசுரிக்கப்பட்டது இந்நூல். **viii.** 63/1914/III.

Q4: 3

**அயோத்திய தாஸ பண்டிதர், க.**

401. **i.** புத்த மார்க்க வினாவிடை; இரண்டாம் பதிப்பு; **ii.** தென்னிந்திய சாக்கைய பௌத்த சங்கம்; கோலார் மாரிக்குப்பம் கௌதமா அச்சியந்திரசாலை, சென்னை; **iii.** பிப்ரவரி, **1912**; **iv.** உ. ப. 40; **v.** 12×9 செ.மீ.; **vi.** இல்வசம்; **vii.** புத்தர் நெறியை வினாவிடைகளாக விளக்குவது. எண்பத்தொன்பது வினாவிடைகள் உள்ளன. 'புத்தேள் உலகு' என்னும் தொடர் புத்ததேவனைக் குறிக்கும் என்றும், வள்ளுவர் திருக்குறள் 'திரிபிடகங்களைத்' தழுவியது என்றும் ஆசிரியர் கூறுவது ஆராய்ச்சிக்குரியது. **viii.** 1043/1912/I.

Q4: 3

402. **i.** புத்தரது ஆதிவேதம்: முதற் பதிப்பு; **ii.** க. அயோத்திதாஸப் பண்டிதர்; கௌதம அச்சியந்திரசாலை, சென்னை; **iii.** ஜூலை, 1912; **iv.** உ.ப. 9+296+8; **v.** 25×17 செ.மீ.; **vi.** 3–8–0; **vii.** புத்தருடைய வரலாற்றைப் பற்றியும், அவரது அறவுரைகளைப்பற்றியும் விரிவாகத் தமிழில் தருவது, 29 அத்தியாயங்கள் கொண்டது. "பஞ்ச காவியங்களின் துணை கொண்டும் பாலி மொழியிலுள்ள பிடகங்களின் துணை கொண்டும் திராவிட பௌத்தருள் பெருமையுடன் வழங்கிவந்த மறையின் பட்டறிவு கொண்டும் வரைந்துள்ள முதற் நூலாம்" என்று ஆசிரியர் நூலிறுதியில் கொடுத்துள்ளார். புத்தரது ஆதிவேத விளக்கம் எனும் ஒரு சிறு பகுதி ஈற்றில் உள்ளது. **viii.** 128/1912/III.

Q4:3

403. **i.** யதார்த்த பிராமண வேதாந்த விபரமும் வேஷப்பிராமண வேதாந்த விபரமும்: முதற் பதிப்பு; **ii.** க. அயோத்தியதாஸ பண்டிதர், சென்னை; கௌதம அச்சுயந்திரசாலை, சென்னை; **iii.** நவம்பர், 1912; **iv.** உ.ப. 33+13; **v.** 22×14 செ.மீ; **vi.** 0–4–0; **vii.** புத்தரின் அறவுரைகளாகிய திரிபிடகமே உண்மையான வேதமென்றும், பௌத்தத் துறவிகளே

**ஆண்டாளம்மாள், ஏ.**

407. i. திருநீற்றின் உண்மை: முதற் பதிப்பு; ii. சி. எஸ். ஏகாம்பர முதலியார், பெங்களூர் பேட்டை; தமிழ்ச் சங்கம் முத்திரா சாலை, மதுரை; iii. டிசம்பர், 1913; iv. உ. ப. 32; v. 22×14 செ.மீ.; vi. 0-4-0; vii. சைவ சின்னமாகிய திருநீற்றின் பெருமையைப் பற்றிய சொற்பொழிவு. ஆகமம், புராணம் முதலிய சில மேற்கோள்கள் காட்டித் தெளிவாக எழுதி யுள்ளார். இச்சொற்பொழிவு 1909 ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் திரிசிரபுரத்தில் கூடிய சைவ சித்தாந்த மஹாசமாஜத்தில் பேசப்பட்டது. இதற்கு ஜே. எம். நல்லசாமிப்பிள்ளை என்பார் பாயிரம் எழுதியுள்ளார். viii. 1030/1913/IV.

Q2

**இராமகிருஷ்ணனந்தசுவாமி (மொ.து)**

408. i. பக்தி: முதற் பதிப்பு; ii. சாது கருணாநந்த பிரிமியர் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1912; iv. உ.ப. 4; v. 16×11 செ.மீ.; vi. இலவசம்; vii. 1908 ஆம் வருஷம் மே மாதம், 14 ஆம் தேதி இராமகிருஷ்ணனந்த சுவாமிகளால் செய்யப்பட்ட சொற்பொழிவு. கடவுளின் அருளைப் பெற பக்தியே சிறந்த வழி என்று எடுத்துக் காட்டியுள்ளார். காமிகமாக மேலும் பக்தி செய்வது அவசியம் என்கிறார். viii. 1020/1912/I.

Q2

**காசிவிஸ்வநாத முதலியார், சைதாபுரம் (மொ.து.)**

i. மநுநீதி சாஸ்திரச்சுருக்க அட்டவணை: (தொ.எ.409, பார்க்க); ii. இராஜகோபால்பிள்ளை, கோமளபுரம்; மதராஸ் ரிப்பன் அச்சியந் சாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 17 (83 முதல் 99 வரை); v. 21×13 செ.மீ.; vi. 0–12–0; vii. வட நூலாகிய மனு தர்ம சாஸ்திரத்திலிருந்து எடுத்துத் தொகுக்கப்பெற்ற ஒரு சிறு தொகுப்பு. உலக தோற்றத்தின் வரலாறும், பலருடைய கடமைகள் இன்னவை என்பதும் இதில் விவரிக்கப்பட்டிருக் கின்றன. viii. 656/1915/IV.

Q2

409. i. வேதப் பொருள் விளக்கம்: [மனுநீதி சாஸ்திரச் சுருக்க அட்டவணை பிராயச் சித்த நிர்ணய சாஸ்திர சங்கிரகம்]; ii. இராஜ கோபாலப்பிள்ளை, கோமளபுரம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 186; v. 21×13 செ.மீ., vi. 0–12–0; vii. ஆரியர்களுடைய நான்கு வேதங்களின் கருத்துகளையும், மனுநீதி சாத்திரமும், ஹிந்து சாஸ்திரப்படிப் பாவங்களுக்குக் கழுவாயும் இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. வேதம் அச்சில் வெளிவந்த வகையை விவரித்துள்ளார். வடமொழியில் பெரும்புலமை வாய்ந்த கோல்புருக் என்பவரால்

செய்யப்பட்டு, 'மாஸ்டர் வார்ட்ஸ் கவுண்டு ஆப் இந்தூஸ்' என்கிற புத்தகத்தில் வெளிப்படுத்திய 'நால்வேதச் சுருக்கம்' என்பதில் இன்றியமையாத பகுதிகளை மொழிபெயர்த்து இந்நூலில் தந்துள்ளார். இதனோடு சேர்ந்துள்ள மநுஸ்மிருதிச் சுருக்க அட்டவணை, பிராயச் சித்த நிர்ணய சாஸ்திரச் சுருக்கம் ஆகியவையும் மொழிபெயர்த்து அமைக்கப்பட்டனவே. நூலிறுதியிலுள்ள குறிப்பு வேதத்தின் உட்கருத்து இன்னதென விளக்குகிறது. viii. 656/1915/IV.

Q2

**சக்கரவர்த்தி அய்யங்கார், எ. (தொ.து.)**

410. i. ஸ்ரீரங்கராஜ மனோரஞ்சித சபை 1913-1914 வருடத்திய வரவு-செலவு புஸ்தகம்: ii. ஏ. சக்கரவர்த்தி, ஸ்ரீரங்கம்; ஹயவதன விலாஸ பிரஸ், கும்பகோணம்; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 52; v. 22×14 செ.மீ. vi ....; vii. சீரங்கத்தின் சிறப்புபற்றியும் ரங்கராஜ மனோரஞ்சித சபையின் 1913–14 ஆண்டின் வரவு செலவு பற்றியும் இந்நூலில் கூறப்பட்டிருக்கிறது. viii. 58/1915/I.

Q2

**சுப்பய்யர், மு.வ.**

411. i. ஸந்த்யா வந்தனம்: முதற் பாகம்; ii. முஸ்வாதி, வ. சுப்பையர், சித்திர சாலா பிரஸ், மதுரை; iii. ஜனவரி, 1915; iv. செ.மு.ப. 4; v. 14×11 செ.மீ.; vi. 0–0–6; vii. காலையில் எழுந்ததும் சூரியனை வணங்கி, ஓதும் சமயநெறி பாடல்கள். இவை பிராமணர்கள் கடைப்பிடித்த சமய நெறியாம். இவை வடமொழியிலும் தமிழ் எழுத்திலுமாக உள்ளன. viii. 301/1915/II.

Q2

**சுப்பராய ஆச்சாரி, தி.பொ.**

412. i. விஸ்வப்ரம்ஹ ஆன்ஹிக தீபிகை: பிராதகால சந்தியா வந்தனம் முதற் பதிப்பு; ii. தி. பொ. சுப்பராய ஆச்சாரி; விவேகபாநு அச்சுக்கூடம், கரூர்; iii. மார்ச்சு, 1912; iv. உ.ப. 54; v. 17×11 செ.மீ.; vi. 0–3–0; vii. ஆசாரிய வகுப்பைச் சார்ந்த விஸ்வ பிராமணர்களுக்குரிய 'சந்தியா வந்தனம்' பற்றி உரைப்பது. பல் துலக்கல், குளித்தலுக்குரிய விதிகளும் இதில் கூறப்பட்டிருக்கின்றன. குரு சீடன் முறையில் வினா-விடையாகச் செய்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இதில் நாளும் செய்ய வேண்டிய கடமைகளை முறையேகூறி விளக்கியிருத்தல் நோக்கத்தகும். viii. 951/1912/I.

Q2

**துரைசாமி நாடார், சி., பிறையாறு**

**413.** **i.** உலக வித்தை: முதற் பதிப்பு; **ii.** சி. துரைசாமி நாடார், பிறையாறு; இரத்தின விலாசம் பிரஸ், பிறையாறு; **iii.** ஏப்ரல், 1913; **iv.** உ.ப. 25; **v.** 17×11 செ.மீ.; **vi.** 0–2–0; **vii.** இக்காலத்தில் இந்துக்கள் மேற்கொண்டுவரும் சைவ வைணவ சமயங்கள், இந்நாடு முழுமையும் பரவி இருந்த சமண சமயத்தை வாதில் வென்றோரால் நிறுவப்பட்டது என்றும், அதற்கு முன் இந்து சமயம் உலகத்தை ஒன்றாய்ச் சேர்க்கும் பொதுக்கொள்கையில் திகழ்ந்தது என்றும் விளக்குகின்றார். தொழில்பற்றி ஏற்பட்ட ஜாதிப்பிரிவுகளேயன்றி கடவுள் அமைப்பில் உள்ளவை ஆண் பெண் என்னும் இரண்டே ஜாதிதான் என்றும், மனித குலம் ஒன்றே என்றும் விவரிக்கின்றார். **viii.** 125/1913/II.

Q2

**நரசிம்மலு நாயுடு, பகடால சேலம் (தொ.து.)**

**414.** **i.** ஆரியர் சத்திய வேதம்—புதிய ஏற்பாடு—இதிகாச புராணம் முதலியன–இரண்டாம் பாகம்—இரண்டாம் பிரிவு: முதற் பதிப்பு; **ii.** பகடால நரசிம்மலு நாயுடு, சேலம்; சென்னை பிரஸிடென்ஸி அச்சாபீஸ், சென்னை & சௌராஷ்டிரா அச்சாபீஸ், சேலம்; **iii.** மார்ச், 1914; **iv.** உ. ப.+செ.மூ.ப. 386A; **v.** 19×13 செ.மீ.; **vi.** 1–4–0; **vii.** இதற்கு 'இந்து பைபிள்' என்றும் ஒரு பெயருண்டு. இந்து சமயத் தத்துவங்களும் கோட்பாடுகளும் விரிவாக இந்நூலில் கூறப்பட்டுள்ளன. புராணங்களிலிருந்தும் மற்றும் பல நூல்களிலிருந்தும் பெறப்பட்ட செய்திகள் கொண்டது. சேலம் பகடால நரசிம்மலு நாயுடுவின் புகைப்படம் ஒன்றும் இவரின் நூலைக் குறித்து பலர் தெரிவித்த கருத்துக்களும் இதில் அடங்கியுள்ளன. **viii.** 977/1915/I.

Q2

415 **i.** இந்து பைபிள் என்னும் ஆரியர் சத்திய வேதம் புதிய ஏற்பாடு: முதற் பதிப்பு; **ii.** பகடால நரசிம்மலு நாயுடு, சேலம்; சுதேசாபிமானி சேலம் & பி.ஆ.அ. அச்சுக்கூடம், சென்னை; **iii.** ஏப்ரல், 1912; **iv.** உ.ப.+செ.மூ.ப. 8+59+26+468; **v.** 21×13 செ.மீ.; **vi.** 2–0–0; **vii.** இந்து பைபிளின் முதற் பாகமாகிய பழைய ஏற்பாட்டை 1898ஆம் ஆண்டு ஆசிரியர் வெளியிட்டார். அதன் தொடர்ச்சியாக இரண்டாம் பாகமாகிய புதிய ஏற்பாடு இதில் எழுதப்பட்டிருக்கிறது. இதில் இதிகாச புராண நூல்களிலிருந்து செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. பிரம்ம லக்ஷணம், பிரபஞ்ச லக்ஷணம், ஜீவாத்மாவின் லக்ஷணம், பக்தி லக்ஷணம், பிரார்த்தனையின் லக்ஷணம் என்னும் பெரும் பிரிவுகளில் பல்வேறு நூற் கருத்துக்கள் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. வழிபாடு பகுதியில் வடமொழி

நூல்களோடு தமிழில் உள்ள தேவாரம், திவ்யப் பிரபந்தம் முதலான பாடல்களிலிருந்தும் இறைவணக்கப் பாடல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பாபுராஜ நாராயணபோஸ் என்பார் இந்து சமயத்தின் ஏற்றம் பற்றி ஆங்கிலத்தில் பேசிய சொற்பொழிவும் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. **viii.** 447/1912/II.

**Q2**

**416. i.** சர்வசமய சமரசமான பிரார்த்தனை மாலை : முதற் பதிப்பு ; **ii.** பகடால நரசிம்மலு நாயுடு, சேலம், பிரம்மோ ஆர்பன் அசைலம் பிரஸ், சென்னை ; இச்சினர் அச்சுக்கூடம், சென்னை ; **iii.** டிசம்பர், 1912 ; **iv.** உ.ப.+செ.மூ.ப. 4 +168; **v.** 20×13 செ.மீ. ; **vi.** 0—6—0 ; **vii.** பாரத நாட்டில் வழிபாடுகளெல்லாம் பாடல்களாகவே இருப்பதனால்தான் எளியவர்களுக்கு அது பயன்படுவதில்லை. 'பிரம்மோ உபாசன பத்ததி பிரார்த்தனைகள்' என உரைநடையாக ஆசிரியர் ஒரு வழிபாட்டுத் தொகுதியை அமைத்து வெளியிட்டிருந்தார். அதனோடு சில வேத துதிபாடல்களையும், ஆழ்வார், நாயன்மார், முதலிய அடியார்களின் பாடல்களையும் சேர்த்து, இந்நூலை ஆக்கியுள்ளார். வழிபாட்டின் இலக்கணங்களை வினா விடையாக விளக்கி எழுதியுள்ளார். **viii.** 107/1913/I.

**Q2**

**நாராயணன், பா.**

**417. i.** காயத்திரீ : முதற் பதிப்பு ; **ii.** பா. நாராயணன், மதுரை; விவேகபாநு பிரஸ், மதுரை ; **iii.** ஆகஸ்ட், 1911 ; **iv.** உ.ப. 8 ; **v.** 20×14 செ.மீ.; **vi.** இலவசம் ; **vii.** பிராமணர்கள் சந்தியாவந்தனத்தில் ஓதுகின்ற ஒருவகை மந்திரம். உலகத்திலுள்ள வித்தைகளெல்லாம் நான்கு மறைகளில் அடக்கமென்றும், அந்த வேதங்களெல்லாம் காயத்திரீ மந்திரத்திற்குள் அடக்கமென்றும் கூறப்படுகிறது. இதன் பெருமையை ஆசிரியர் வெளியிட்டுள்ளார். இம் மந்திரத்தின் பொருளும், இதனை உபாசனை செய்யும் வகையும் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. **viii.** 456/1911/III.

**Q2**

418. **i.** காயத்திரீ : முதற் பதிப்பு ; **ii.** ப. நாராயண ஐயர் தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; **iii.** மே, 1913 ; **iv.** உ.ப. 21; **v.** 14×11 செ.மீ.; **vi.** 0—1—0 ; **vii.** பிராமணர்களுக்கு ஏற்பட்ட வேதகர்மங்களில் 'காயத்ரீ மந்திர ஜெபம்' சிறப்பானது. இம்மந்திரத்தை 'உபாசனை' செய்து ஓதவேண்டிய முறைகள் முதலியனவெல்லாம் இந்நூலில் விளக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது. **viii.** 677/1911/II.

**Q2**

419. i. ஹிந்து என்பவன் எவன்? முதற் பதிப்பு; ii. ப. நாராயண ஐயர்; தமிழ்ச்சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. மார்ச், 1913; iv. உ.ப. 27; v. 14×12 செ.மீ.; vi. 0—0—6; vii. இந்து சமயத்தின் சிறந்த கொள்கைகள் எவை? இந்து என்பவன் எவன்? அவனுடைய இன்றியமையாத இலக்கணங்கள் யாவை? முதலிய செய்திகளைப்பற்றி அலகாபாத் நகரிலிருந்து வெளிவரும் "லீடர்" என்னும் பத்திரிகையின் அதிபர் பல அறிஞர்களின் கருத்துக்களைத் திரட்டி வெளியிட்டு வந்தார். அவ் வெளியீடுகளில் ஸ்ரீபாபு பகவன்தாசர் என்பாரின் கருத்தையொட்டித் தமிழில் இந்நூல் எழுதப்பெற்றது. இந்து சமயத்தின் தன்மை, வேதசாஸ்திரம், அறவழிகள் முதலியன, இதில் விளக்கப்பட்டுள்ளன. 'பூரணசந்திரோதயத்தி'னின்று மறுபதிப்பிடப்பட்ட மூன்றுவது வெளியீடு. viii. 919/1913/I.

Q2

420. i. ஹிந்துமத தூஷணையின் பரிகாரம்: இரண்டாம் பதிப்பு; ii. ப. நாராயண ஐயர்; தமிழ்ச்சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. எப்ரல், 1912; iv. உ.ப. 6+130; v. 13×11 செ.மீ; vi. 0—4—0; vii. அன்னிபெசண்ட் அம்மையார் ஆங்கிலத்தில் எழுதின நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு. 'விக்கிரக ஆராதனை', 'தேவர்களின் பூஜை', 'திரிமூர்த்திகள்', 'ஸ்ரீகிருஷ்ணன் சிராத்தம்', 'இந்து மதம் சாஸ்திரத்திற்கும் புத்திக்கும் ஒற்றுமையானது', 'விகாசமுறை அல்லது பரிணாம வாதம்' என்னும் பொருள்களைப் பதினான்கு அதிகாரங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஆரிய சமய அறமுறை, உயர்நலம் அமைந்த அறவழிகள் போன்ற செய்திகளும் முகப்பில் விளக்கப்பட்டுள்ளன. viii. 451/1912/II.

Q2

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை, தி.**

421. i. மறந்துபோன சில ஆரியமத உண்மைகள்: முதற் பதிப்பு; ii. தி. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை; கிருஷ்ணவிலாச அச்சுயந்திர சாலை, கோயம்புத்தூர்; iii. டிசம்பர், 1912; iv உ.ப.+செ.மூ.ப. 2+82+10; v. 21×14 செ.மீ.; vi. 0—4—0; vii. ஆரிய சமயமென்றும் இந்து சமயமென்றும் வழங்கிவரும் பழைய சமயம் மற்ற சமயங்களைப் பார்க்கிலும் உலக உண்மைகளை மிகுதியாய் எடுத்துக்காட்டுகிறது என்பதை இறுதியில் ஆசிரியர் விளக்கியுள்ளார். ஜெ சீனிவாசராயர் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு. வடமொழி நூல் மேற்கோள்கள் ஆங்காங்கே எடுத்தாளப்பட்டிருக்கின்றன. viii. 255/1913/I.

Q2

**முனிசாமி முதலியார், சிறு மணவூர்**

422. **i.** நவக்கிரஹ மஹாமந்திரம்: முதற் பதிப்பு ; **ii.** முனிசாமி முதலியார், சிறுமணவூர் ; சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; **iii.** அக்டோபர், 1911 ; **iv.** உ.ப. 44+1 படம் ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 0—4—0 ; **vii.** சூரியன் முதலிய ஒன்பது கோள்களையும் வழிபடும் முறையையும், அப்பொழுது சொல்லத் தகுந்த மந்திரங்களையும் கூறுவது. 'நவக்கிரக தேவதா' படம் ஒன்றும் இதில் வைக்கப்பட்டிருக்கிறது. 'நவக்கிரக சாந்தி' பற்றியும் விவரிப்பது இந்நூல். கோவில்களில் ஒன்பது கோள் களை நிறுவனம்செய்யும் முறை பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. **viii.** 411/1911/IV.

Q2

**வெங்கிட சுப்பிரமண்ய பாஸ்கரப் பிரௌடகி**

**423.** **i.** வைச்யானுஷ்டான புஸ்தகம் : முதற் பதிப்பு ; **ii.** பிரௌடகி ப. கிருஷ்ணசாமி சாஸ்திரி, சென்னை ; ஸ்ரீகிருஷ்ணவிலாச அச்சுக்கூடம், தஞ்சாவூர் ; **iii.** மார்ச், 1911 ; **iv.** உ.ப. 8 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0—3—0 ; **vii.** வணிக குலத்தோர் கைக்கொள்ள வேண்டிய நாட் கடன்களை விவரிப்பது. இதில் 'சந்தியாவந்தனம்', 'ஜெபம்', 'பூணூல் போட்டுக் கொள்கிற விதி' ஆகியவை குறிக்கப்பட்டுள்ளன. **viii.** 606/1911/I.

Q2

**வெங்கிடாசல முதலியார், நடுவீரப்பட்டுகோனி**

424. **i.** மாரியம்மன்பேரில் ஸ்தோத்திரம் முதலியன: புதுப் பதிப்பு; **ii.** வெங்கிடாசல முதலியார், நடுவீரப்பட்டுகோனி ; ஸ்ரீ வரலட் சுமி விலாசம் பிரஸ், நெல்லிக்குப்பம் ; **iii.** ஜூலை, 1914 ; **iv.** செ.மூ.ப. 16 ; **v.** 23×14 செ.மீ. ; **vi.** 0—0—6 ; **vii.** சென்னப்பநாய்க்கன் பாளையம் நடுவீரப்பட்டு மந்தவெளியில் அமர்ந்தருளும் மாரியம்மன் பேரில் வழிப்பாட்டு பாடலும் திருக் கண்டீச்சரம் நடனபாதீஸ்வரர், திருப்பதி வெங்கடாசலபதி, வைத்தினதர் முதலிய தெய்வங்களின்மீது பாடப்பெற்ற வணக்கப் பாடல்களும் அடங்கியுள்ளன. **viii.** 565/1914/III.

Q2

**வேலுதேசிகர், பி. (தொ. து.)**

425. **i.** மந்திரமாலிகா : முதற் பதிப்பு ; **ii.** பி. சுப்பிரமணிய முதலியார், சென்னை ; ஞானசம்பந்தா அச்சுக்கூடம், சென்னை; **iii.** மார்ச், 1914 ; **iv.** உ.ப. 2+86 ; **v.** 22×14 ; செ.மீ.; **vi.** 0–8–0 ; **vii.** இதில் கணபதி, சிவபெருமான், சுப்பிரமணியர், காளி, அங்காள பரமேசுவரி முதலிய பல தெய்வங்களின் மந்திர எந்திரங்களும், உபாசனைகளும், கைக்கொள்ளும் முறை

ஒன்றும் இடம் பெற்றிருக்கிறது. வேதாந்த தத்துவங்களை விளக்கும் பட்டினத்துப் பிள்ளையார் பாடல், தாயுமான சுவாமிகள் பாடல், இராமலிங்க சுவாமிகள் பாடல்கள் சிலவும் சேர்க்கப்பட்டுள்ளன. இறுதியில் ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரது உபதேசங்கள் சிலவும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 191/1915/I.

Q2

## 294·5[1] குரு தோத்திரம்

**அப்பாவையர், மணி., பன்னுருட்டி**

429. i. நால்வரருட் புகழ்ச்சி : முதற் பதிப்பு [இலக்குமீ நவமணி மாலை] ; ii. இலட்சுமணஞ் செட்டியார், தேவகோட்டை & அப்பாவையர், மணி, பன்னுருட்டி ; மஹாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1913; iv. செ.மூ.ப. 4; v. 17×13 செ. மீ.; vi. இலவசம் ; vii. சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர என்னும் நால்வருடைய வணக்கமாக அமைந்த பாட்டு, 64 அடியால் மிகுத்து வந்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். viii. 265/ 1914/I.

Q2

**அபேதாநந்த சுவாமிகள்**

430. i. இராமாநந்த மாலை : முதற் பதிப்பு; ii. அபேதாநந்த சுவாமிகள் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; iii. ஜூலை, 1913 ; iv. செ. மூ. எ. 31 ; v. 14×8 செ. மீ.; vi. ... ; vii. இராமாநந்த குருவைப்பற்றிய துதி ஒவ்வொரு பாட்டிலும் 'ராம, ராம' என்று குருவை விளித்து முடிக்கின்றார். இதன் ஆசிரியர் திருவருட்பிரகாச வள்ளலார் மரபைச் சேர்ந்தவர். ஜாகீர் ஆரணி திருமலை சமுத்திரவாசியான சித்திரக்கவி ச. அண்ணாமலை செட்டியார் இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார். இந்த இராமானந்த மாலையைக் காலை மாலை நேரங்களில் முறைப்படி பாராயணம் செய்பவர் நற்பயன் பெறுவார்கள் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 501/1913/III.

Q2

**அம்மமுத்து நாடார்**

431. i. ஏறல் மாநகர் சேர்மன் ஸ்ரீ அருணாசல சுவாமிகள் மாலை ; ii. அருணோதய அச்சியந்திர சாலை, தூத்துக்குடி ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 1+32+3 ; v. 21×14 செ. மீ.; vi. 0-1-0 ; vii. திருநெல்வேலி மாவட்டத்தின்கண் ஏறல் என்னும் பழம் பதியிலே உறையும் அருணாசல சாமியின்மீது பாடப்பெற்ற புகழ் மாலையாகும். இம்மாலையின் ஒவ்வொரு பாடலும் 'சேர்மனருணாசலமே' என்னும் முடிவினைப்

பெற்றுள்ளது. இப்பாமாலை அச்சிட பொருள் கொடுத்த வராகிய ஆறுமுக நாடார்மீது பாடப்பெற்ற இரு பாடல்கள் நூல் இறுதியில் உள்ளன. viii. 622/1915/III.

Q2

**அய்யாசாமி ஆச்சாரி, வல்லம் & பாலசுப்பிரமணிய பிள்ளை, திருப்பாதிரிப்புலியூர்**

432. i. பாமாலை, காப்பு, விநாயகர் ஸ்துதி, வெண்பா, வாசி யோக நிலைக்குறி : முதற் பதிப்பு ; ii. அய்யாசாமி ஆச்சாரி, வல்லம் கிராமம் & பாலசுப்பிரமணிய பிள்ளை, திருப்பாதிரிப் புலியூர் ; ஸ்ரீ ருக்மணி விலாசம் பிரஸ், விழுப்புரம் ; iii. ஆகஸ்டு, 1914 ; iv. செ.மூ.ப. 12 ; v. 17×11 செ.மீ.; vi. 0–0–9 ; vii. விராட் விஸ்வப்பிரம்ம மடத்தில் வசித்த அகோர வீரபத்திர ஆச்சாரி சுவாமிகளைப் புகழ்ந்து பாடப் பெற்றது. பாமாலை, காப்பு, விநாயகர் துதி, வெண்பா, வாசியோக நிலைக்குறி முதலியன அடங்கியுள்ளன. viii. 640/1914/III.

Q2

**இராமானந்த சுவாமிகள், நிச்சல., காஞ்சீபுரம்**

433. i. முருகானந்த சுவாமிகள்மேல் பதிகம் முதலியன : முதற் பதிப்பு ; ii. தி. சு. வேலுசாமிப் பிள்ளை, காஞ்சீபுரம் & இராமானந்த சுவாமிகள், மைசூர் ; ஸ்ரீ காஞ்சிபூஷண அச்சியந்திர சாலை, காஞ்சீபுரம் ; iii. டிசம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 8 ; v. 18×11 செ.மீ.; vi. இலவசம் ; vii. நாகப் பூரில் விளங்கிய பெரியாராகிய முருகானந்த சுவாமிகளைப் பற்றியது. சுவாமிகளைப் பற்றிய வரலாற்றுச் சுருக்கம் முதலில் உள்ளது. சுவாமிகளைப் பற்றிப் பதிகம், கொம்மி, லாலி வகைகளில் அமைந்த பாடல்கள் உள. viii. 167/1913/I.

Q2

**கங்காதர நாவலர், கி.ஊ,பா.**

434. i. தோத்திர மணிமாலை : முதற் பதிப்பு ; ii. கி. ஊ. பா. கங்காதர நாவலர் ; ஜெயவிநாயக சிவப்பிரகாஸ அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. செ. மூ.+உ. ப. 18 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. சாங்கு சித்த சிவலிங்க நாயனார், கண்ணுடைய வள்ளலாரின் அருள் பெற்றவர். பூரணானந்தோதயம் என்னும் அரிய ஞான நூலை ஆக்கியவர் இந்நாயனாரின் பதினாலாவதுஆண்டு குருபூசையன்று (16–7–1913) இந்நூலாசிரியரால் அரங்கேற்றம் செய்யப்பெற்றது. பாடல் களுக்கு விரிவுரை கொடுக்கப்பட்டிருக்கிறது. நூல் முதற்கண் நிலை மண்டில ஆசிரியப்பாவால் ஆன சிறப்புப் பாயிரம் ஒன்றும் உள்ளது. viii. 298/1913/III.

Q2

**கண்ணுயிரம் ஆசாரி, சு., காமநகர்**

435. i. லாடகுரு சுவாமிகள் தோத்திரப்பா : முதற் பதிப்பு ; ii. சு. கண்ணுயிரம் ஆசாரி ; விவேகபானு அச்சியந்திர சாலை, மதுரை ; iii. அக்டோபர், 1911 ; iv. செ. மூ. ப. 16 ; v. 22×15 செ.மீ.; vi. 0–2–0 ; vii. பரம்பக்குடிக்கு அடுத்த கச்சியேந்தல் என்னும் ஊரில் சமாதி கொண்டருளும் லாடகுரு ஸ்வாமிகளைக் குறித்த துதிப்பாடல்கள் இவை. லாடகுருவின் வரலாறு அகவற்பாவில் உள்ளது. 'பித்தா பிறைசூடி' என்ற பண்ணில் சுவாமிகளைப்பற்றித் துதிப்பாக்கள் அமைந்துள்ளன. செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை இங்கு வழிபட மக்கள் வருவதுண்டு என்றும் தெரிகிறது. viii. 218/1911/IV.

Q2

**கணேச மூர்த்தியார், வெளியம்பாக்கம்**

436. i. சற்குருஸ்தவம் : [போற்றிப் பஞ்சகம்] முதற் பதிப்பு ; ii. பூ. அ. கோவிந்தராஜதாஸர் & என். கன்னைய நாயுடு, சென்னை ; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. செ.மூ.ப. 18+24 ; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0 ; vii. நாராயணசாமி தேசிகர் என்னும் குருவைப் புகழ்ந்த துதிப்பாடல் திரட்டு. அடைக்கலம், சொரூப வணக்கம், நாராயண பஞ்சகம், போற்றி, அபயம், விண்ணப்பம் மனத்திற் கறிவுறுத்தல், குருவல்லபம், மயில், குயில், கிளி, திருவுந்தி, எக்காளம் முதலிய பல்வகைப் பாடல்களில் அமைந்தது. இசைப் பாடல்களும் மூன்று உள்ளன. மணவாள நாயுடு என்பார் பாடிய போற்றிப் பஞ்சகம் என்பதும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. கோவிந்தராஜ தாசர் என்பவர் சிறப்புப் பாயிரமும் நிச்சல ராமானந்த சுவாமிகள், முருகேச முதலியார் முதலியோர் பாடிய சாத்துக்கவிகளும் உள்ளன. viii. 46/1914/III.

Q2

**கனகசபைக் கவிராயர்**

437. i. பாலையசுவாமிகள் மாலை : முதற் பதிப்பு ; ii. என். எம். எஸ். சண்முகசுந்தர நாயனுர் ; ஸ்ரீகுஞ்சிதசரண அச்சியந்திர சாலை, சிதம்பரம் ; iii. ஜூலை, 1912 ; iv. செ. மூ. எ. 1+33 ; v. 13×10 செ. மீ.; vi. . . . . . . . ; vii. பொம்மைய பாளையம் வீரசிம்ம சதுதிபதி பாலைய சுவாமிகள் பேரில் பாடப்பட்ட துதிப்பாட்டு, சிவபெருமானே இச்சுவாமிகள் உருவில் குருவாய் வந்துள்ளார் என்னும் கருத்தைப் பல பாடல்களில் ஆசிரியர் வெளியிட்டுள்ளார். viii. 406/1912/III.

Q2

**குமரகுரு செட்டியார், சி.**

**438.** i. சிவவேற்குருவின் தோத்திரப் பாமாலை : முதற் பதிப்பு ; ii. சூ. வி. கன்னைய செட்டி, சூளைம்பேடு ; விஸ்வகுலோதார்ம பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. செ. மூ. ப. 12 ; v. 14×11 செ. மீ.; vi. இலவசம் ; vii. சூளைம்பேட்டில் சமாதி அடைந்துள்ள சிவவேற் குருவைப்பற்றிய புகழ் மாலை. "திருவளர் சூளை பேட்டுறு சிவ வேற் தேசிக சின்மய சிவமே" என்று பாடல்கள் முடிகின்றன. இது எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. காஞ்சீபுரம் இராம சாமி நாயுடு, சி. இ. சுந்தராச்சாரியார், திருமயிலை. பால சுந்தரம் செட்டியார் ஆகியோர் இதற்குச் சிறப்புப்பாயிரம் பாடி யுள்ளார்கள். viii. 799/1912/IV.

Q2

**439.** **i. குருபூஜாஸ் தோத்திரங்கள்** : முதற் பதிப்பு ; ii. தே. ஞானம் பாள் ; அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், சென்னை ; iii எப்ரல், 1913 ; iv. செ. மூ. ப. 40 ; v. 12×10 செ. மீ.; vi. இல வசம் ; vii. இதனை அச்சிட்டவர் கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகளிடத்து அடிமை பூண்டு ஒழுகுபவர். சிவப்பிரகாச சுவாமிகள் துதியாக அமைந்த நூல்கள் இதில் உள்ளன. சிவப்பிரகாச சுவாமிகள்பேரில் 'நமஸ்காரசங்கீர்த்தனம்','போற்றி சங்கீர்த்தனம்', சரணம், திருவடிமாலை, 'அக்ஷரமாலிகா' ஸ்தோத்திரம். 'நிற்குண அஷ்டோத்திரம்' ஆகியவை இதில் உள்ளன. viii. 150/1913/II.

Q2

**குழந்தைவேலு ஆச்சாரியார், நரசிங்கபுரம்**

**440.** i. சாது வடிவேற் சற்குருஸ்தவம் : முதற் பதிப்பு ; சென்ன கேசவலு நாயுடு; ஆ. மே. விஸ்வகுலோத்தாரண அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. செ. மூ. எ. 10+10+10+6 ; v. 17×11 செ. மீ.; vi. இலவசம் ; vii. சாது வடிவேல் என்ற குருவைப்பற்றிப் பாடப்பெற்ற பாடல்கள். திருத்துருத்தி திரு. நடேசானந்த சுவாமிகள், கிளாம்பாக்கம் வேலுப் பிள்ளை முதலியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடி யுள்ளனர். இறுதியில் பிழை திருத்தப்பட்டியல் ஒன்றும் இடம் பெற்றுள்ளது. viii. 731/1914/IV.

Q2

**சடகோப யதீந்த்ர மஹாதேசிகன்**

**441.** i. ஸ்ரீ ஸந்நிதி குருபரம்பரை : முதற் பதிப்பு ; ii. கே. அனந்தா சார்யர், சென்னை ; ஸ்ரீ வாணிபூஷணம் அச்சுக்கூடம், திருவல்லிக் கேணி ; iii. ஜூலை, 1914 ; iv. உ. ப. 141+30+26 ; v. 22×14 செ. மீ.; vi. 1—2—0; vii. அகோபில மடத்தை சார்ந்த பல குருக்களின் சிறப்பை முறைப்படி கூறுகிறது இந்த

நூல். அவர்களைப் புகழ்ந்து பாடிய பாடல்களின் தொகுப்பும் இதில் அடங்கியுள்ளது. 'ஸத்ஸம்ப்ரதாய முக்தாவலி' என்றும் இதற்குப் பெயர் உண்டு. viii. 881/1914/IV.

Q2

**சண்முகப் பத்தர்**

**442.** i. சதானந்த சுவாமிகள் பதிகம் : முதற் பதிப்பு ; ii. தி. மா. சிதம்பராச்சாரியர் ; பிரம்மானந்த அச்சுக்கூடம், திருவாதி ; iii. நவம்பர், 1914 ; iv. செ. மூ. எ. 3+11+1 ; v. 17×11 செ.மீ .; vi. இலவசம் ; vii. திருவையாற்றில் இருந்த சுடுகாட்டுச் சுவாமிகள் என வழங்கும் சதானந்த சுவாமிகள் பேரில் பாடிய பதிகம். இச்சாமியின் மாணாக்கர் உ. ரா. சுவாமிநாத பிள்ளை இதற்குச் சாத்துக்கவி பாடியுள்ளார். viii. 542/1914/IV.

Q2

**சாம்பசிவம் முதலியார், டி.**

**443.** i. அருளானந்தம் : முதற் பதிப்பு ; ii. டி. சாம்பசிவ முதலியார், சென்னை ; பூலோக வியாசன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ. மூ. எ. 3+30 ; v. 17×12 செ. மீ.; vi. இலவசம் ; vii. திருவருட் பிரகாச வள்ளலார் என வழங்கும் இராமலிங்க சுவாமிகளின் துதியாக அமைந்தது. அருளானந்தம் என்னும் தலைப்பில் கலிப்பாவிலும், கலிவெண்பாவிலும் அமைந்த இரண்டு துதிப்பாடல்கள் இதில் உள்ளன. அதன்பின் 'அருட்பிரகாச வெண்பா' என்னும் தலைப்பில் முப்பது வெண்பாக்களும் அமைந்துள்ளன. இது 'அருட் பிரகாசம்' வெளியீட்டு வரிசையில் இருபதாவது ஆகும். viii. 967/1914/I.

Q2

**சொரூபாநந்தமணி சுவாமிகள், கா.**

**444.** i. சத்குருஸ்தவ மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. கா. சொரூபாநந்தமணி சுவாமிகள் ; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை ; iii. மே, 1913 ; iv. செ. மூ. எ. 50+1 ; v. 19×11 செ. மீ.; vi....... ....; vii. காஞ்சீபுரம் நிச்சல இராமநந்த சுவாமிகளின் அடியவரான இவ்வாசிரியர் தமது குருவைத் துதித்துப் பாடிய பாடலின் தொகுதி. திருவடிப் புகழ்ச்சி, பல்லிப்பத்து என வேறு இரு பகுதிகளும் இதில் உள்ளன. பல்லிப்பத்தில் தமக்கு அருள் செய்யக் குருநாதன் எப்பொழுது வருவான் என்று சொல்லுமாறு சிறு பல்லியை வினவுவதாக உள்ளது. 'நாயக நாயகி பாவ'த்தில் அமைந்ததாக இப்பல்லிப்பத்து உள்ளது. viii. 610/1913/II.

Q2

சோமசுந்தர செட்டி, சிவ. அதிகப்ப., வீ.

445. i. மகாகுருசுவாமிகள் தோத்திரப் பாமாலை : முதற் பதிப்பு ; ii. சிவ. அதிகப்ப. வீ. சோமசுந்தரச் செட்டி ; ஸ்ரீ கிருஷ்ண விலாசம் பிரஸ், திருப்பாதிரிப்புலியூர் ; iii. டிசம்பர், 1912 ; iv. செ. மூ. எ. 2+10+1 ; v. 15×10 செ. மீ., vi...... ......; vii. திருக்கோவிலூர் ஆதீனம், திருப்பாதிரிப்புலியூர் சன்னதிவீதி ஞானியார் மடாலயத்தில் விளங்கிய ஷண்முக குருசுவாமியைப் பற்றிய தோத்திரம். எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. "குருவின் இணை அடிகளைச் சிரங்கொடு பணிவாம்" எனப் பாடல்தோறும் முடித்துள்ளார். இந்நூலாசிரியரால் இயற்றிப் பதிப்பிக்கப்பட்ட நூல்களை, இனி பதிப்பிக்கப்படும் நூல்கள் ஆகியவற்றைப்பற்றிய விவரம் நூல் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 265/1913/I.

Q2

திருக்காமணி பிள்ளை, ச. பெ.

446. i. அருள் வேண்டற்பா ; முதற் பதிப்பு ; ii. கி. உ. ப. கங்காதர நாவலர் ; ஸ்ரீ ஜெய விநாயக சிவப்ரகாஸ அச்சுக் கூடம், சென்னை, சேத்துப்பட்டு ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ. மூ. எ. 24 ; v. 22×14 செ. மீ. ; vi. இலவசம் ; vii. கண்ணுடைய வள்ளலார் அருள் பெற்ற பெரியார் சாங்கு சித்த சிவலிங்க நாயனாரின் அருள் வேண்டிப் பாடிய பாடல்களைக் கொண்டது. நாயனார் அவர்களின் பதினாலாவது ஆண்டு குருபூசையன்று (16—7—1913) வெளியிடப் பெற்றது. நாயனாரின் திருக்கண் பார்வையை வேண்டியும், அருள் செய்து ஆளுமாறு வேண்டியும் இதிலுள்ள பாடல்கள் அமைந்துள்ளன. viii. 569/1913/IV.

Q2

447. i. தியானப்பா மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. ச. பே. திருக் காமணி பிள்ளை ; ஜெய விநாயக சிவப்ரகாஸ அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்டு, 1914 ; iv. செ.மூ.ப. 14 ; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. சிவபிரானின் அடியார்களில் ஒருவரான சிவலிங்க நாயனாரை வணங்கிப் பாடிய பக்திப் பாடல்கள். நாயனாரின் 15-வது ஆண்டு குருபூசையன்று (6—7—1914) வெளியிடப்பட்டது இந்நூல். கணபதி வணக்கம், சிவசுப்ர மணியர் துதி, குரு துதி என மூன்று பகுதிகள் இதில் உள்ளன. viii. 1062/1914/III.

Q2

448. i. துதியருட்பா : முதற் பதிப்பு ; ii. தி. சோ. சாமிநாத நாயகர் ; பிரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1912 ; iv. செ. மூ. ப. 39 ; v. 22×14 செ. மீ.; vi. 0—2—6 ; vii. அருட்பெருஞ்சோதி இராமலிங்க அடிகளின் துறவறத்தின் பெருமையைப் பல்வகைப் பாடல்களில் புகழ்ந்து பேசவது

அனுபோக நிலைமை, அடிமைத்திறம் உரைத்தல், அந்தோபத்து உபதேசக் கிரியை, வெண்ணிலா, துரியாதீதப் பொருள் வணக்கம், ஆனந்த மேலீடு, வினு விடைப்பா, குண்டலிக் கண்ணி, தமிழ் வேண்டும் நிலையுரைத்தல் என்னும் பொருள்களை பற்றி இப்பாடல்கள் அமைந்துள்ளன. viii. 128/1912/III. Q2

**நாராயணசாமிதாசன், மு.**

449. i. மௌன தேசிகநாத பேரில் ஞான ரத்தின மாலை— இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. மு. நாராயணசாமி தாசன் ; ஹமீதிய்யா அச்சுக்கூடம், நாகப்பட்டினம் ; iii. ஜூலை, 1912 ; iv. செ. மூ. ப 16 ; v. 21×14 செ. மீ.; vi. 0—1—0; vii. நாகப்பட்டினத்தில் விளங்கிய மௌன தேசிகர் என்னும் குருவைத் துதிக்கும் நூல். ஆனந்தக் களிப்பாகவும் விருத்தமாகவும் அமைந்தது இத்தோத்திரம். 'பல சந்தப் பதிற்றந்தாதி' என்னும் ஒரு பகுதியும் இதன் இறுதியில் உள்ளது. மௌன குருநாதரைப் பற்றிய வரலாறும் சுருக்கமாக இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 374/1912/III. Q2

**நாராயண செட்டியார், எஸ்.**

450. i. அத்தாமலகத் தோத்திரம் : முதற் பதிப்பு ; ii. எஸ். நாராயண செட்டியார் ; ரிகார்ட் அச்சுக்கூடம், வேலூர் ; iii. ஆகஸ்ட், 1913 ; iv. செ. மூ. ப. 22 ; v. 13×9 செ. மீ.; vi. இலவசம் ; vii. சங்கராச்சாரியார் மேற்குத் திசையில் சுற்றுப் பயணம் செய்த காலத்து ஓர் அந்தணர் ஊமையாயிருக்கும் தன் மகனைச் சுவாமிகளிடம் கொண்டுவந்து, அவனுக்கு அருள் செய்ய வேண்டினர். அப்பொழுது ஆச்சாரியார் கேட்ட வினவும் அதற்கு அவன் கூறிய விடையும் பாடலாக கொடுக்கப்பட்டுள்ளது. இதுவே, 'அத்தாமலகத் தோத்திரம்' என்பது. இது தவிர குரு தோத்திரம் என்பது பண்டண பண்டிதரைச் சங்கரர் வென்றபோது, காம சாஸ்திர உண்மையறிய இறந்த அரசனுடலிற் புகுந்து அரண்மனையில் வாழ்ந்தபோது அவருடைய சீடர்கள் அவரை அடுத்துச் சொன்னதாகும். சங்கரர் அருளிய 'ஏகஸ்லோகி' என்பதும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 963/1913/III. Q2

**புலியூர் சுவாமிகள்**

451. i. குரு வணக்க மணிமாலை : முதற் பதிப்பு ; ii. அ. அருணாசல முதலியார், கீழ்வேளூர் ; நீல லோசினி பிராஞ்சு அச்சியந்திரசாலை, திருவாரூர் ; iii. ஜூன் 1912; iv. செ. மூ. எ. 451+25 ; v. 21×14 செ .மீ.; vi. 0—0—6 ; vii. "புலியூர்

சுவாமிகள் ஆணையின்படி . ஸ்ரீ வேளூர் அ. அருணசல முதலியா ரால் பதிப்பிக்கப்பட்டது" என்னும் குறிப்பு முதலில் உள்ளது. குருவின் பெருமையையும் அவரது அருட்திறத்தையும் பலபடியாகப் போற்றியுரைப்பது. போற்றி விருத்தமாகவும் எந் நாட்டெண்ணிகளாகவும் பாடல்கள் உள. viii. 155/1912/III.

Q2

**பொன்னுவேற்பிள்ளை, பிரம்பை**

452. i. சச்சிதாநந்த சுவாமிகள் தோத்திரப்பா: முதற் பதிப்பு; ii. பொன்னுவேற்பிள்ளை; சச்சிதாநந்தம் பிரஸ், கோமளேசு வரன் பேட்டை, சென்னை; iii. மார்ச், 1913; iv. செ.மூ.எ. 1+13; v. 16×11 செ.மீ.; vi. இலவசம்; vii. சச்சிதாநந்த குருதுதி. சுவாமிகளின் குரு பூஜையை முன்னிட்டு நடந்த 'மகேஸ்வர பூஜையில்' வழங்கப்பட்டது என்று தெரிகிறது. "சச்சிதானந்த மாமணியே!" என்னும் விளியுடன் ஒவ்வொரு பாடலும் முடிவடைகிறது. viii. 80/1913/II.

Q2

**மகாதேவ முதலியார், வா., சென்னை**

i. பரமாசாரியர் பாமாலை (தொ.எ. 1911 பார்க்க): முதற் பதிப்பு; ii. வா. மகாதேவ முதலியார், சென்னை; மீனலோசனி முத்திராக்ஷரசாலை, தேவகோட்டை, iii. பிப்ரவரி, 1912; iv. செ.மூ.எ. 1+31; v. 17×13 செ.மீ.; vi.. ....; vii. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள், மாணிக்கவாசகர் என்னும் சைவசமயக் குரவர் நால்வரைப் பற்றியும் அமைந்த துதிநூல். viii. 529/1912/I.

Q2

**மணவாள நாயுடு, படுவூர்**

i. போற்றிப் பஞ்சகம்: (தொ.எ. 436 பார்க்க) முதற் பதிப்பு; ii. கோவிந்தராஜ தாஸர், & என். கன்னைய நாயுடு சென்னை; iii. ஜூன், 1914; iv. செ.மூ.எ. 5; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0; vii. நாராயணசாமி தேசிகர் என்னும் குருத் தோத்திரம் 'போற்றி போற்றி' எனத் துதித்துப் பாடுவதால் 'போற்றி பஞ்சகம்' என்று பெயராயிற்று. viii. 146/1914/III.

Q2

**மாணிக்க முதலியார், சி., சேலம்**

453. i. சின்மயதேசிகர் மாலை: முதற் பதிப்பு; ii. காசிச்சாமியார் & சி. எ. சாமிநாதபிள்ளை; வித்யா விநோதினி அச்சியந்திர சாலை, தஞ்சை; iii. ஜூலை, 1913; iv. செ.மூ.உ.ப. 18; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. 'சின்னஞ்சாமி' என்று

வழங்கும் சின்மய தேசிகரைப் பற்றிய துதிமாலை. அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தத்தால் அமைந்த 30 பாடல்களைக் கொண்ட நூல். இதற்கு உரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. நெஞ்சறிவுறுத்தலாக முப்பத்தொரு பாடல்கள் உள்ளன. இவை "சங்கர சங்கர சம்போ" எனும் சந்தத்தில் அமைந்துள்ளன. சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர் துறவு வாழ்க்கையிலிருந்து பல வியத்தகு நிகழ்ச்சிகளை நிகழ்த்தியதாகத் தெரியவருகிறது. "ஒருவேளையில மூன்று சேர் மிளகாயை உண்ணுவார்" என்னும் குறிப்பு பாரதி எழுதியுள்ள மிளகாய்ப் பழச் சாமியாரை நினைவூட்டுகிறது. இவர் கலியுகாதி 5010-ல் சௌமிய ஆண்டு ஆடித் திங்கள் 31 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆயில்ய நட்சத்திரத்தன்று பேரின்ப ஒளியில் கலந்தருளினர். viii. 296/1913/III.

Q2

## முத்துசாமி நாவலர், சு.

454. i. அருணாசல சுவாமிகள் தோத்திரப் பாமாலை : முதற் பதிப்பு; ii. பாலகுருசாமி நாடார் & சு. முத்துசுவாமி நாவலர், இரத்தினவிலாசம் பிரஸ், பிறையாறு ; iii. பிப்ரவரி, 1912, iv. செ.மூ.எ. 2+10; v. 14×11 செ.மீ. ; vi. இலவசம்; vii. இராய வேலூர் கும்பனுங்குட்டையில் வாழ்ந்த தொடைதட்டி அருணாசல சுவாமிகளைப் பற்றிய துதி. எழுசீர் விருத்தத்தால் ஆகியது. viii. 687/1912/I.

Q2

455. i. காரைக்கால் ஸ்ரீ சீமான்சாமி தோத்திரப் பாமாலை : முதற் பதிப்பு; ii. பி. சு. கல்யாண சுந்தர நாடார், பிறையை; கமலா பிரஸ், மாயூரம்; iii. செப்டம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 1+21 ; v. 17×11 செ.மீ.; vi. ......; vii. சிங்கள நாட்டில் பிறந்து, காரைக்காலில் வாழ்ந்து வந்த சீமான் சாமியைப் பற்றிய துதி விருத்தமாய் அமைந்த ஒரு பதிகமும், கட்டளைக் கலித்துறையிலும் கலி விருத்தத்திலும் அமைந்த இரண்டு பஞ்சகங்களும் இதில் உள்ளன. viii 48/1911/IV.

Q2

## வெங்கடேசைய நாயுடு, ம., சென்னை

456. i. தண்டறை சுப்பராய ஸ்வாமிகள் திருவடிமாலை: முதற் பதிப்பு ; ii. ம. வெங்கடேசைய நாயுடு, சென்னை ; பூலோக வியாசன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ. ப. 12 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. குருவின் திருவடிப் பெருமையைப் பேசுவது. திருவடிமாலை கலிவெண்பாவில் அமைந்தது. "திருவருளாய் ஓங்குமடி, தீரா வினைகள் நிர்மூலமாக்குமடி" என்று திருவடியின்

பெருமை பேசப்படுகிறது. இதனோடு "உபதேசப்பா, மனது, பொய் உயிரே ஜீவன, மெய் உயிரே சிவம்" என்னும் தலைப்புகளில் வேறு பாடல்களும் உள்ளன. viii. 59/1912/I.

Q2

**வேலுப்பிள்ளை, கே.; கிழாரம்பாக்கம்**

457. i. ஜயராம சற்குருஸ்தவம் முதற் பதிப்பு ; ii கே. சாமி முதலியார், சென்னை ; சச்சிதானந்த அச்சியந்திரச லை, சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. செ.மூ.எ. 10 ; v. 13×11 செ.மீ.; vi. ...... ; vii. ஆசிரியரின் குருவான ஜயராம சற்குருவைப் பற்றிய தோத்திரப்பாட்டு. இவ்வாசிரியர் தமது குருவினிடத்தில் 'தத்துவமசி' வாக்கியத்தின் உண்மையும், உண்மை ஞானமாகிய 'அபரோட்ச ஞானத்தையும்' பெற்றதாகக் குறிப்பிடுகிறார். இப் பதிகத்திலுள்ள பாடல்களுள் முதல் ஒன்பது பாடல் 'ஜயராம சற்குருவே போற்றி போற்றி' என்றும், இறுதிப்பாட்டு 'ஜயராம சற்குருவே வாழி வாழி' என்றும் முடிவுறுகிறது. எண்சீர்கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது. கோ. வடிவேலு செட்டியாரும், குழந்தைவேலு ஆச்சாரியாரும் இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளனர். viii. 1001/1914/II.

Q2

## 294.53 யோகம், நிஷ்டை, விக்கிரக வழிபாடு

**அகஸ்தியர்**

i. அகஸ்தியர் ஞானச்சுருக்கம்–1 (தொ.எ. 1096 பார்க்க): முதற் பாகம் ; முதற் பதிப்பு ; ii. த.குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை, ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii........; viii. 736/1914/II.

Q2:4

i. அகஸ்தியர் ஞானச் சுருக்கம்–2 (தொ.எ. 1096 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குபபுசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 2 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii.........................; viii. 736/1914/II.

Q2 : 4

i. அகஸ்தியர் ஞானச் சுருக்கம்–3 (தொ.எ. 1096 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914, iv. செ.மூ.எ. 3 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii.....................; viii. 736/1914/II.

Q2:4

**அகவனி தேவர்**

1. அகுவனி தேவர் சிவயோக கற்பம்–16 (தொ.எ. 1099 பார்க்க) பாகம்—4; முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 16: v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. வாசிநிலை யோகப் பயிற்சிகளுக்கு வேண்டிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. சத்திகிரி, சிவகிரி, திருவாவினன்குடியெனத் தழைத்தோங்கும் திருப்பழனி மலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாசபோக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம், ஆதீன மகா கைலாச பரம்பரை, 225-வது பட்டம் ஸ்ரீ கைலாச தெண்டாயுத பாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 739/1914/II.

Q2:4

**அத்திரி மகாரிஷி**

1. அத்திரி மகாரிஷி உண்மை ஞான போதகம்—34 (தொ.எ. 1098 பார்க்க): முதற் பதிப்பு; த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை; iii மே, 1914; iv. செ.மூ.எ. 34; v. 22×14 செ. மீ. vi. 0–12–0; vii. 'அண்ட பிண்டம்' 'பஞ்ச பூதம்', 'பரவான்மா', 'ஜீவான்மா', 'சத்தி சிவம்', 'பஞ்சாட்சர நிலை', கதி மதி 'அடி முடி', 'ஆதிவஸ்து' முதலிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. திருப்பழனி மலையிற சிறப்புற்றோங்கிய ஸ்ரீபோக மகாரிஷிஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகாகைலாச பரம்பரை225-வது பட்டம் ஸ்ரீ தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது.; viii. 738/1914/II.

Q2:4

**அம்பிகானந்தர்**

1. அம்பிகானந்தர் ஞானோபதேசம்-25 (தொ.எ. 1097 பார்க்க); முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர் குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ. மூ. எ. 25; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. யோக ஞான சாதனக் குறிப்பும், கற்பம், குளிகை, குரு, செயநீர், சுண்ணம், செந்தூரம், உருக்கினம், கட்டு, வழலை, முப்பு முதலிய விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை புதுக்குயவர்பாளையம் சின்னச்சாமிக் கவிராயரவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 737/1914/II.

Q2:4

**ஆறுமுக நயினார் பிள்ளை, த., திருநெல்வேலிப் பேட்டை**

458. i. விக்கிரகாராதனம் : முதற் பதிப்பு ; ii. த. ஆறுமுக நயினார் பிள்ளை ; வாணி விலாஸம் அச்சாபீஸ், திருநெல்வேலி; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 191 ; v. 13×11 செ. மீ. ; vi 0-8-0 ; vii. உருவ வழிபாட்டின் உண்மையைப் பலவகை சான்றுகளுடன் விளக்குவது. ஆலய வழிபாட்டின் அருமை தெரியாது புறச் சமயத்தார் சொற்கு ஆட்பட்டோருக்கு உண்மை தெரிந்துகொள்வதற்குத் துணையான நூல். புறச் சமயத்தாரால் நிகழும் தடைகளை எடுத்துக் காட்டி அவற்றிற்குத் தக்க விடைகள் தரப்பட்டுள்ளன. viii. 107/1913/III.

Q2:4

**இராமதேவர்**

459. i. சிவயோகம்—200 : ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. 1915; iv. செ.மூ.எ. 201 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. யோக முறையைப் பயிற்சித்தல் குறித்தும், சில மருந்துகள் செய்முறை குறித்தும் தரப்படும் விளக்கங்கள் இதில் காணலாம். ‘இராம தேவர் ரசாயனம்’ என்னும் நூலும் இதனோடு உள்ளது. இராம தேவர் அருளிய சாஸ்திரங்களின் விவரங்கள் 53 ஆம் பக்கத் தில் தரப்பட்டுள்ளன. இந்நூலில் விவரிக்கப்பட்ட செய்திகளோடு ஒத்த செய்திகள் வேறு எங்கு உள்ளது என்னும் விளக்கம் அடிக் குறிப்பாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 793/1915/III.

Q2:4

**கடுவெளிச் சித்தர்**

i. கடுவெளிச் சித்தர் பூரண ஞானம்—67, பாகம்—5, (தொ. எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச் சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 67 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. சரியை, கிரியை, யோகம், ஞானம், திரிமூர்த்திகள் காட்சி விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வணிகர் ந. ரா. ம. கணபதியாபிள்ளை யவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பட்டது. இந்நூலிலுள்ள பாடல்கள் கண்ணிமெட்டில் அமைந் துள்ளன. viii. 740/1914/I.

Q2:4

**கண்ணனைந்தர்**

i. கண்ணனைந்தர் சிவராஜ யோகம்—14—பாகம்—4 : (தொ. எ. 1099 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு; மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 14 ; v. 22×14 செ.மீ.,

vi. 0–12–0 ; vii. யோக சாதனத்துக்குரிய மூலாட்சரங்களையும், ஞான சித்தி விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை, வடக்கு மாசி வீதி இராமாயணச் சாவடித் தெருவிலிருக்கும் அஷ்டாங்க யோகி சுந்தர மகாலிங்க சுவாமிகளிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 739/1914/II.

Q2:4

**கொங்கணர்**

கொங்கணர் நடுக்காண்ட சூஸ்திரம்—53 : (தொ. எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 53 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. யோக சாதன காய சித்தி முதலிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு வாசல் யானைக்கல் தெரு, வித்வான் மு. குழந்தைவேலுப் பிள்ளை அவர்களிடத்திலும், திருமங்கலம் வைத்தியம் அ. குமர குருபரம் பிள்ளை அவர்களிடத்திலும், வாங்கிய எட்டுப் பிரதிகளின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 740/1914/III.

Q2:4

**கோபால தேசிகர், தா., கோயம்புத்தூர்.**

460. i. துறைமுகச் சாவி : முதற் பதிப்பு ; ii. தா. கோபால தேசிகர், கோயம்புத்தூர் ; நித்ய கல்யாண சுந்தரம் அச்சியந்திர சாலை, ஈரோடு ; iii. பிப்ரவரி, 1913 ; iv. செ. மூ. எ. 21 ; v. 14×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. யோகப் பயிற்சி செய்வது பற்றி விளக்கி யுரைக்கும் இருபத்தொரு பாடல்கள் கொண்ட நூல். viii. 798/1913/I.

Q2:4

**சத்தியநாதர் என்ற ஞானசித்தர்**

i. சத்திய நாதரென்ற ஞான சித்தர் மெய்ஞ்ஞானம்—12. பாகம்—4 : (தொ. எ. 1099 பார்க்க) முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார்; மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ. மூ. எ. 12 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. யோக ஞான சாதனங்களுக்குரிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. சத்திகிரி, சிவகிரி, திருவாவினங்குடி யெனத் தழைத்தோங்கும் திருப்பழனி மலையிலெழுந்தருளிய ஸ்ரீகைலாசபோக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம், ஆதீன மகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ கைலாச தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிட

மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பட்டது. viii. 739/1914/II.

Q 2 : 4

**சபாபதி சுவாமி, புத்தூர்**

461 i. மந்திர சங்கிரஹ வேத தியானோபதேச ஸ்மிருதி : முதற் பதிப்பு ; ii. சபாபதி சுவாமி, புத்தூர் ; ஷண்முகவிலாஸ் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப.+செ.மூ. ப. 44 ; v. 23×15 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. யோகப் பயிற்சி, தியானம் முதலியன பற்றி விவரிக்கின்றது. சர்வ கர்ம, கிரியா, யோக, ஞான, தியானப்பியாச, சாதனானுபவ மந்திர சங்கிரஹ வேத்தியானோபதேச ஸ்மிருதி' என்பது இந் நூலின் முழுப் பெயர். இதன் ஆசிரியர் தன்மாணக்கர்களுக்காக இந்நூலை ஆக்கியுள்ளார். பூசை முறைகளும், மந்திரங்களும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. சிவன், விஷ்ணு, அம்பிகை ஆகியவர்களைப் பற்றிய துதி பாடல்களும் இதில் உள. யோகநிலை பற்றிய ஏழு படங்கள் இதில் உள்ளன. viii. 178/1913/IV.

Q2:4

**சற்குரு சுவாமி**

462 i. அருள்ஞான தீபம் ; ii. அருணாசல வன்னியர் ; விநாயக சுந்தர விலாசம் பிரஸ் ; சிதம்பரம் ; iii. அக்டோபர், 1915 ; iv. உ. ப.+செ.மூ ப. 76 ; v. 14×12 செ. மீ. ; vi. . . . . . ; vii. ஆன்ம யோகத்தைப் பற்றிக் குருவும் சீடனும் உரையாடுவது போல் எழுதப்பட்டுள்ளது. ஞானம், கர்மம், பக்தி என்னும் இம் மூன்றினையும் குறித்தும், ஞானத்திலும் சிறந்த குருவின் திருவடி பூசையைப் பற்றியும் விவரித்து உரைப்பது. குரு வணக்கம், அருள்ஞான தீபம், காப்பு என்பனபற்றி முதலிலும் பெரியார்களை வணங்குவதினால் ஏற்படும் பயன்களைக் குறிக்கும் பாடல்கள் ஈற்றிலும் உள்ளன. viii. 636/1915/IV.

Q2:4

**சுப்பிரமணியர்**

i. சுப்பிரமணியர் ஞானச் சுருக்கம்—2 : (தொ. எ. 1096 பார்க்க) ; முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 2 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. யோக ஞான பயிற்சிக்குரிய மூல மந்திர மவுனாட்சரங்களையும், ரவி, மதி, சுழிமுனைநாடி உதித்தொடுங்கும் விவரங்களையும் இப் பகுதி விளக்குகிறது. viii. 736/1914/II.

Q2:4

**சூதமகாமுனி**

i. சூதமகாமுனி ஞான சூஸ்திரம்—14 (தொ. எ. 1098 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாஸம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மு.எ. 14 ; v 22×14 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. யோக சாதனங்களுக்குரிய நுட்பங்களையும் ஆதார மூல 'பிரணவ சொரூப' விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. இப்பகுதியில் அச்சிட்டிருக்கின்ற நூல்களில் மறைபொருளாய் உள்ளவைகட்குத் திறவுகோலாகத் தெளிவித்திருக்கின்ற ஞான சாத்திரங்களை அடுத்த பகுதியில் வெளியிட்டிருக்கின்றனர். viii. 738/1914/II.
Q2:4

**நாராயண ஐயர், ப.**

463. i. மோநம் என்பது ஞாந வரம்பு : முதற் பதிப்பு ; ii. ப. நாராயண அய்யர் ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. மார்ச், 1913 ; iv. உ. ப. 17 ; v. 14×11 செ. மீ. ; vi. 0-0-6 ; vii. 'மோநம் என்பது ஞான வரம்பு' என்னும் ஔவையாரின் அருள்வாக்கிற்கு விளக்கம் தருவது. மௌனம் என்றால் உரையாடாமல் இருத்தல் மாத்திரம் அன்று. யோக சாத்திரத்தில் பதஞ்சலி பகவான் சொல்லியிருக்கிறபடி சித்த விருத்திகளின் அடக்கமே என்றும், சித்த விருத்தி அடங்கினால் சமாதிநிலை கைகூடும் என்றும் ஆசிரியர் விளக்குகிறார். வடமொழி, தென்மொழி மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. 'பூர்ண சந்திரோதயத்தினின்று' மறுபதிப்பிடப் பெற்ற நூல் வரிசையில் இது நான்காவது. viii. 984/1913/I.
Q2:4

464. i. யோக உபந்யாஸங்கள் : முதற் பதிப்பு ; ii. ப. நாராயண ஐயர், சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913, iv. உ.ப. 6+121 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. பதஞ்சலி முனிவர் ஆக்கிய 'யோகசூத்திரங்களைக் கற்று உணர்வதற்குத் தூண்டுகோலாக அமைந்தது இந்நூல். இச் சொற்பொழிவுகளை யோக சூத்திரத்தின் ஒரு முன்னுரை எனலாம். யோகம் சாத்திரத்தின் இயல்பு, பல காட்சிகள், யோகம் ஒரு சாஸ்திரம் யோகம் அப்பியாச சாஸ்திரம் என்னும் நான்கு பொருள்கள் பற்றிய நான்கு சொற்பொழிவுகள் இதில் உள்ளன. இவை அன்னிபெஸண்ட் அம்மையாரால் 1907-ம் ஆண்டு டிசம்பர் திங்கள் 27, 28, 29, 30-தேதிகளில் காசியில் கூடிய பிரம்மஞான சபையின் 32-ம் ஆண்டு சபைக் கூட்டத்தில் ஆங்கிலத்தில் பேசிய பேச்சின் தமிழ் மொழி பெயர்ப்பு. ரீகா. வடிவேலு செட்டியார் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 127/1913/III.

Q2:4

**பதஞ்சலியார்**

i. பதஞ்சலியார் ஞானம்—(தொ. எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந் திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 2+54; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. யோகஞான பயிற்சி களுக்குரிய மூலாட்சர விவரங்களையும், வாசி, சித்தி, சொரூப தெரிசன விபரங்களையும் இந்நூல் விளக்குகிறது. வில்லிபுத்தூர் வத்திராயிருப்பைச் சேர்ந்த தம்பி பட்டி கிருஷ்ணாபுரம் மாலூற்றுச் சாமியார், இராமகிரி கோசாயி அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலாயது. இந் நூலின் காப்புச் செய்யுள் நேரிசை வெண்பாவால் ஆகியது. பிற பாடல்கள் திருப்புகழ்ச் சந்தத்தில் அமைந்துள. பாடல் களுக்குரிய சந்தக்குறிப்பும் அவ்வப்பாடல்களின் முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது; viii. 740/1914/II.

Q2: 4

**பரத்துவாச மகாரிஷி**

i. பரத்துவாச மகாரிஷி யோக சாதனம்—23 (தொ.எ. 1100 பார்க்க) முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர் குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமசந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 23; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. ரவி, மதி, சுழிமுனை, ஆறுதார தெரிசனம், காயசித்தி, யோக சித்தி விவரங்களை இந்நூல் விளக்குகிறது; viii. 740/1914/II.

Q2 : 4

**பராச ரிஷி**

i. பராச ரிஷி ஞானோபதேசம்—22 (தொ.எ. 1099 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 22; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. பூரண வஸ்துவைக் காணும் ஞான சாதன விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை திண்டுக்கல் சாலை சிவராஜயோகி பங்காரு சாமியார் அவர்கள் மகன் முத்தி யாலு நாயுடு அவர்களிடம் வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது; viii. 739/1914/II.

Q2:4

**பாம்பாட்டிச் சித்தர்**

i. பாம்பாட்டிச் சித்தர் ஞான சூஸ்திரம்—16 (தொ.எ. 1099 பார்க்க) முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர

விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-12-0; vii. யோக சாதன நுட்பங்களின் விபரங்களை இந்நூல் விளக்குகிறது. சத்திகிரி, சிவகிரி, திருவாவினன்குடியெனத் தழைத்தோங்கும் திருப்பழனி மலையிலெழுந்தருளிய ஸ்ரீ கைலாச போக மகா ரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் ஆதீனமகா கைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீகைலாச தெண்டாயுத பாணி ரிஷீஸ்வரசுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது; viii. 739/1914/II.

Q2:4

**பூரணானந்த சுவாமி**

465. i. சிவயோக சாரம் [ப்ரஹ்மாநந்த விளக்கம்] : முதற் பதிப்பு ; ii. பூரணாநந்த சுவாமி ; ஸ்ரீ லட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 30 ; v. 16×13 செ.மீ. ; vi. இலவசம் : vii. மூச்சைக் கட்டுப்படுத்திச் செய்யும் யோக மார்க்கத்தைப் பற்றி விவரிப்பது. ஆசிரியர் குருமுகமாய் இந்துஸ்தானியாலுணர்ந்த இராசயோக மார்க்கத்தைப் பல நூல்களிலுள்ள அரும்பொருளோடு 'சிவ யோக சார'மென எழுதியிருக்கிறார்; viii. 104/1911/I.

Q2:4

**போக மஹாரிஷி**

i. போக மஹாரிஷி ஞான சூஸ்திரம்—1 (தொ.எ. 1096 பார்க்க) முதற்பாகம் ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர், குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 1 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-12-0; vii. யோகத்திற்குரிய அட்சரங்களும், அதன் சித்தி விபரங்களும் விளக்கப்பட்டுள்ளன. திருப்பழனி மலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீபோக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீனம் ஸ்ரீ தெண்டாயுதபாணி யிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பட்டது; viii. 736/1914/II.

Q 2:4

**மாணிக்கம் பிள்ளை, எஸ்.**

i. யோகம் (தொ.எ. 131 பார்க்க) ii. தி.ப. பொன்னுசாமிபிள்ளை; ஸ்ரீமட்டுவார் குழலாம்பாள் பவர் பிரஸ், திருசிரபுரம் ; iii. 1915 ; iv. உ.ப. 45–52 (8) ; v. 22×14 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பயிற்சி வகைகளையும் விளக்கியுரைக்கும் நூல். 'நியமம்' 'ஆசனம்', 'திருமந்திரம்' என்பன பற்றி விவரித்துரைப்பது; viii. 148/1915/III.

Q2:4

செய்யும் முறைகள். அப்பொழுது ஓத வேண்டிய மந்திரங்கள் முதலியன கொடுக்கப்பட்டுள்ளன. விநாயகரைப் பற்றிய புராண வரலாறும் இதில் தரப்பட்டுள்ளது; viii. 11/1911/IV.

Q2 : 4

**ஷண்முக சுந்தர நாயனார், நெ மு.ஷ.**

468. i. தீபாவளி விரதம்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீதிருவள்ளுவ நாயனார் சங்கத்தார், சேலம்; நாயனார் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1910; iv. உ.ப. 16; v. 17×10 செ.மீ.; vi. இலவசம்; vii தீபாவளி விழாவைக் கொண்டாடும் வரலாற்றை விவரிப்பது இந்நூல். இதில் நரகாசுரன் வரலாறும், கண்ணன் அவனைக் கொல்லும் காலத்தில் அந்த அசுரனது வேண்டுகோளின்படி தீபாவளி விழா ஏற்பட்ட வரலாறும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விழாவில் புலால் விருந்துண்டு மகிழும் வழக்கத்தை இவர் கண்டித்து எழுதியுள்ளார்; viii. 143/1911/I.

Q2:4

## 294. 535 தலபுராணம்

**அப்பாசாமி குருக்கள், மு., சேஷமூலை**

469. i. கௌரீபுரிஸ்தல புராணச்சுருக்கம்: முதற் பதிப்பு; ii. எஸ். சிவசங்கர செட்டியார், சென்னை; மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1912; iv. உ. ப. 8; v. 16×12 செ.மீ.; vi. இலவசம்; vii. சேஷமூலை என்று வழங்கி வருகின்ற கௌரிபுரி திருப்புகலூருக்கு வடகிழக்குத் திக்கில் பூந்தோட்டம் இரயில்வே நிலையத்துக்குக் கிழக்காகக் காரைக்கால் சாலையில் இருக்கிறது. கிரந்த எழுத்தில் அமைந்த வடமொழிப் புராணத்திலிருந்து இதனை மொழிபெயர்த்து அமைத்துள்ளார். இவ்விடத்தின் சிறப்பும் நீர்ச்சிறப்பும், இவ்விடத்தில் பூசித்துப் பேறு பெற்றோர் விவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 534/1912/IV.

Q2:38

**அம்பலவாணர், மருதூர்**

470. i. திருக்கருப்பறியலூர்த் தல புராணம்: முதற் பதிப்பு; ii. சுப்பிரமணிய சுவாமி, தருமபுரம்; சூரியப்பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலி பாலம்; iii. ஜூன், 1912; iv. செ.மூ.எ. 298; v. 22×13 செ. மீ.; vi. 0–6–0; vii. காவிரியின் வடபால் உள்ள இடங்களில் ஒன்று திருக்கருப்பறியலூர் என்னும் சிவத்தலம். இதற்கு ஆதித்தபுரம் என்றும் பெயர் உண்டு. இவ்விடத்தின் மேன்மை, பிரமாண்ட புராணத்தில் கூறப்பெற்றுள்ளது. இப்புராணம், தலச்சருக்கம் முதலிய எழு சருக்கங்கள் கொண்டது. இதன் ஆசிரியர் 250

ஆண்டுகட்கு முன்பு தருமபுர ஆதீனம் பத்தாவது குருமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த சிவஞானதேசிக மகாசன்னிதானத்தின் திருவருள் பெற்றவர். இரண்டு பழம ஏட்டுச் சுவடியின் துணைகொண்டு பதிப்பிக்கப்பெற்றது. பாடல்களுக்கு அருசொற்பொருள் ஈற்றில் கொடுக்கப்பட்டுள்ளது; viii. 945/1912/II.

Q2:38

**அரங்கப் பிரகாச சுவாமிகள்**

**471.** i. திருப்பதி பக்த விஜயம், திருத்தப் பெற்ற இரண்டாம் பதிப்பு ; ii. வி. ஆர். கேய்க்வாட், புனா நகர் ; கிரேவ்ஸ் குக்ஸன் அண்டு கோ, சென்னை ; iii. மே, 1915 ; iv. உ. ப.137 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-12-0 ; vii. திருப்பதியில் எழுந்தருளியுள்ள சீனிவாசன் பெருமைகளை அவரது அடியார்களின் வாழ்க்கை வாலாறுகள் வாயிலாக விளக்கும் வரலாறுத் தொகுப்பாகும். இதன் கண் சீனிவாசருடைய ஆற்றிலின் வன்மைகளும், அவரை இகழ்ந்தவருக்கு உற்ற இடுக்கண்களும் விளக்கப்பட்டுள்ளன. திருப்பதியைச் சூழ்ந்த பகுதியில் எந்த அடியார்கள் இருந்ததற்குரிய சின்னங்கள் காணப்படுகின்றனவோ அந்த அடியார்களின் வரலாறுகளை மட்டும் பத்திததும்ப இந்நூல் கூறுகிறது; viii. 463/1915/II.

Q2:38

**அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி, புவனகிரி**

**472.** i. தில்லைத் திருச்சித்திர கூட மான்மியச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. தில்லைக் கோவிந்த பிள்ளை & அரங்கசாமி பிள்ளை ; ஸ்ரீபாராங்குச விலாச அச்சுக்கூடம் ; சிதம்பரம் ; iii. டிசம்பர், 1910 ; iv. உ. ப. 134 ; v. 20×14 செ.மீ ; vi. 0-8-0 ; vii. சிதம்பரம் தில்லை திரிசித்திரகூடத்தில் எழுந்தருளியிருக்கும் கோவிந்தராசப் பெருமாளின் பெருமை பேசுவது. இது வடமொழியில் பிரமாண்ட புராணத்தின் க்ஷேத்திரகாண்டத்தில் பதினெட்டு அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ளது. இதைப் பின்பற்றி இந்நூலாசிரியரின் குருவாகிய புதுவை ஏ. வே. விலக்ஷணகவி ராமாநுஜ நாவலர் இரண்டாயிரத்து முப்பது செய்யுட்களால் தமிழில் பாடியுள்ளார். அதிலுள்ள முக்கிய பாடல்களைத் தழுவி, கற்றோரும் மற்றோரும் ஓதும்வகையில் சுருக்கமாக உரைநடையில் இந்நூல் செய்யப் பெற்றது. பாயிரப்படலம் தொடங்கி புராணபடன பேறுரைத்தபடலம் ஈறாக அறுபத்தியொரு பாடல்கள் உள்ளன. viii. 98/1911/I.

Q2 : 38

**ஆதியப்பனார், களந்தை**

**473.** i. திருக்களர்ப்புராணம் : இரண்டாம் பதிப்பு ; ii. அ. நாராயணசாமி ஐயர் & தி. மு. சுவாமிநாத அய்யர் ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1913 ; iv. செ மூ. உ ப. 2+121 ; v. 19×14 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. திருத்துறைப்

பூண்டிக்கு நான்கு மைல் மேற்கில் உள்ளது திருக்களர்த்தலம். வடமொழியிலிருந்து தமிழில் செய்யுள் நடையில் ஆதியப்பனார் பாடியுள்ளார். ஏழு சருக்கங்கள் கொண்டது. இந்நூல்பிரதியை ஆய்ந்தவர் பின்னத்தூர் அ. நாராயணசாமி அய்யர். திருக்களர் தி.மு. சுவாமிநாத உபாத்தியாயர் எழுதிய கதாசாரங்கள் குறிப்புக்கள், செவிவழிக் கதைகள், வீரசேகர ஞான தேசிகத் திருப்பணி முதலியவைகள் இதில் உள்ளன. இவ்விடம் பற்றிய தேவாரப் பதிகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 851/1913/II.

Q2:38

**இராமநாத பிள்ளை, திருவன்**

**474.** i. திருமந்திர நகர்த் தலபுராணசங்கிரக வெண்பா [தூத்துக்குடி சுந்தர விநாயகர் பதிகம்] : முதற் பதிப்பு ; ii. ந. சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி, சைவப் பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. அக்டோபர், 1911; iv. செ.மூ.ப. 12+40+1 , v. 21×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. தூத்துக்குடி என வழங்கும் திரு மந்திர நகரின் பழம் பெருமையை வெளியிடுவது. இவ்விடத்தைப் பற்றிய புராணத்தை எழுதியவரும் இந்நூலாசிரியரே, இந்நூலில் தல புராணச் செய்திகளைச் சுருக்கமாகத் தருகிறார். தூத்துக்குடி சுந்தர விநாயகர் பதிகமும் இதில் அடங்கியுள்ளது; viii. 180/1911/IV.

Q2:38

**இராமாநுஜதாசர், காயார்**

**475.** i. காஞ்சிக்ஷேத்திர அத்திகிரி மஹாத்மியம் : முதற் பதிப்பு; ii. கந்தசாமி பிள்ளை, கவிராஜ ; பாலவிர்த்தி போதிநிபிரஸ், சென்னை ; iii. மே, 1912 ; iv. உ.ப. 22 ; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. காஞ்சி மா நகரத்தில் விளங்கும் அத்திகிரி என்னும் வைணவ ஊரைப் பற்றிய புராணம். புராணங்களின் துணை கொண்டு இந்த விடத்தின் பெருமை எழுதப்பட்டிருக்கிறது. காஞ்சியிலுள்ள பிற வைணவ கோவில்களைப் பற்றிய விவரங்களும் இதில் உள்ளன; viii. 638/1912/II.

Q2:38

**ஏகாம்பர முதலி எஸ். (தொ.து.)**

**476.** i. திருக்கழுக்குன்றம் ஸ்ரீ வேதகிரீஸ்வர அன்னதான கைங்கரிய பக்தஜன சபையார் 29-வது வருஷமாகிய ஆனந்த வருஷத்து வரவு செலவுக் கணக்கு ஜாப்தா : முதற் பதிப்பு ; ii. எஸ். ஏகாம்பரமுதலி, சென்னை ; சச்சிதாநந்தம் பிரஸ்; சென்னை கோமளேஸ்வரன் பேட்டை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ.ப. 52 ; v. 22×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சிவத்தலமாகிய 'பட்சிதீர்த்தம், என்னும் திருக்கழுக்குன்றத்தின் சிறப்பினைப்பற்றிய உரைநடை பகுதியும், தேவாரப்பாட்டுகள் 40-ம்

இடம் பெற்றுள்ளன. ஆனந்த ஆண்டின் வரவு செலவுக் கணக்கும் தரப்பட்டுள்ளது. இங்கு நடைபெற்றுவரும் திருப்பணி முதலியவற்றின் விவரமும் குறிப்பிடப்பட்டுள்ளது; viii. 760/1915/I.

Q2:38

**கணேச உபமன்ய தேசிகர், பாறைநகர்**

477. i. *பத்திரஸாலங்காரம் : முதற் பதிப்பு* ; ii. என். சிவபாத ஹிருதயம் பிள்ளை ; விக்டோரியா பிரஸ், பாலக்காடு ; iii. மே, 1912; iv. செ. மூ. ப. 2+24 ; v. 20×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சிவனையும் சுப்பிரமணியரையும் துதிக்கும் இசைப் பாடலின் தொகுதி. பாடல்களுக்கு இராகதாளக் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. வேறு சில பாடல்களின் மெட்டுகளில் அமைந்த இசைப்பாடல்களும் உள; viii. 667/1912/II.

Q2:38

**கந்தசாமிப் புலவர், திருப்பூவணம்**

478. i. *திருவாப்பானூர் புராணம் : இரண்டாம் பதிப்பு* ; ii. எம்.ஆர். கந்தசாமிக் கவிராயர், விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜனவரி, 1911 ; iv. செ.மூ.உ.எ. 515 ; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. பாண்டிய நாட்டிலுள்ள திருவாப்பனூர் என்னும் சிவதலத்தைப் பற்றிய புராணம். அத்தலத்தில் சிறப்பு வாய்ந்த ஆதிசைவராகிய குலசேகர பாண்டிய பட்டர் மரபுளோர் வேண்டிக்கொண்டவண்ணம் வடமொழியிலுள்ள இதனைத் தமிழ்ப் பாடலாக ஆசிரியர் இயற்றியுள்ளார். இது எட்டுச் சருக்கங்களைக் கொண்டது. இதற்குச் சிதம்பரம் ப. வசவலிங்க பௌராணிகர் என்பவர் உரை வகுத்துள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான் மு. ரா. அருணைசலக் கவிராயர் அவர்கள் இதற்குச் சிறப்புப்பாயிரம் பாடியிருக்கிறார்; viii. 252/1911/I.

Q2:38

**கலியாணசுந்தர முதலியார், பூவை**

479. i. *அரியதுறை தல புராணம் : முதற் பதிப்பு* ; ii. [அரியதுறை வரமூர்த்தீஸ்வரர் பதிகம்]; ச. அப்புக்குட்டி செட்டியார், சைவ வித்தியாநு பாலன யந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1911 : iv. உ.ப. 1+44 ; v. 21×14 செ.மீ.; vi. . . . . . ; vii. அரிய துறை தலத்தின் சிறப்புகளை உரைப்பது ; பதிமூன்று சருக்கங்கள் கொண்டது. இதன் பிற்சேர்க்கையாகப் பாலூர் வேலுதேசிகர் என்பார் பாடிய 'அரியதுறை வரமுத்தீஸ்வரர் பதிகம்', 'மரக தாம்பாள் பதிகம்' ஆகியவையும் கொடுக்கப்பட்டுள்ளன. ஊசல், லாலி, மங்களம், என்னும் தலைப்புகளில் பாடல்கள் உள்ளன; viii. 156/1911/III.

Q2:38

**480.** **i.** சீகாளத்தி புராணம் (வசனம்) ; **ii.** டி. செங்கல்வராய நாயுடு, சென்னை ; முராஹரி அச்சுக்கூடம், சென்னை ; **iii.** பிப்ரவரி, **1911** ; **iv.** உ.ப. 8+88 ; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0–6–0 ; **vii.** சிவப்பிரகாசரும், அவரது உடன்பிறந்தாரும் சேர்ந்து பாடிமுடித்த செய்யுட்புராணம் இத்தலத்திற்கு உண்டு. எல்லாரும் எளிதில் படித்தறியும் வண்ணம் ஆசிரியர் புராணத்தை ஆக்கியிருக்கிறார். இதில் தலத்தின் பெருமையும் சிவபெருமான் அருட்திறமும், அங்குள்ள நீர்நிலைகளின் பெருமையும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சீகாளத்தி திருக் கோயிலின் படம் ஒன்றும் இதில் இணைக்கப்பட்டிருக்கின்றது. தலம் பற்றிய தேவாரம், திருப்புகழ் முதலிய துதிப் பாடல்களும் தரப்பட்டிருக்கின்றன; **viii** 623/1911/I.

**Q2:38**

**481.** **i.** திருவலிதாய புராணம் : நான்காம் பதிப்பு ; **ii.** கு. முருகு கந்தசாமி முதலியார், மினெர்வா அச்சுக்கூடம், சென்னை ; **iii.** மே, **1911** ; **iv.** உ.ப.+செ.மு:ப. 1+96 ; **v.** 16×12 செ.மீ.; **vi.** 0–2–0 ; **vii.** உரைநடையில் அமைந்த இத்தல புராணம் இருபத்தொரு சருக்கங்கள் கொண்டது. 'பாடி' என வழங்கும் திருவலிதாயக் கோயிலின் பெருமையை உரைப்பது. நூலின் முற்பகுதியில் இத்தலத்தைக் குறித்துச் சம்பந்தர் அருளிய தேவாரமும் அருணகிரியார் பாடிய திருப்புகழும் கொடுக்கப்பட்டுள்ளன. வலிதாயநாதர் மீது எச்சரிக்கை, லாலி, மங்களம் பற்றிய பாடல்கள் ஈற்றில் உள்ளன. திருவலிதாயத்தைக் குறித்து நந்தி நாடியிற்கண்ட 'மான்மியப்' பகுதியாகிய செய்யுட் புராணம் இறுதியில் கொடுக்கப்பட்டிருக் கிறது; **viii.** 231/1911/III.

**Q2:38**

**481A.** **i.** திருவொற்றியூர்ப் புராணம்—கத்தியரூபம் [திருவொற்றியூர் வடிவுடையம்மன் ஆசிரிய விருத்தம்] : முதற் பதிப்பு; **ii.** கோ. லோகநாத முதலியார், மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை ; **iii.** மே, **1911** ; **iv.** உ.ப. 1+58 ; **v.** 14×11 செ.மீ.; **vi.** இலவசம் ; **vii.** சென்னையின் வட எல்லையில் அமைந்துள்ள திருவொற்றியூரின் புராண வரலாறு உரைநடையில் அமைந்தது. பதினைந்து சருக்கங்கள் கொண்டது. திருவொற்றியூர்க் கோயில் நந்தீஸ்வரர் ஆலயத்தில் திருத் தொண்டு செய்துவரும் ஸ்ரீசுந்தர ஸ்வாமிகளின் விருப்பத்தின் படி இந்நூல் இயற்றப்பட்டது. இதன் இறுதியில் திருவொற்றியூர் வடிவுடையம்மன் ஆசிரிய விருத்தம் எனும் பதிகமும் உள்ளது. **viii.** 476/1911/II.

**Q2:38**

**கனகசபைக் கவிராயர், வீரசைவ.**

482. i. உடையார்பாளையம் ஸ்தல புராணம்: முதற் பதிப்பு; ii. புச்சைக்கந்தைய சுவாமிகள்; ஸ்ரீகுஞ்சிதசரண அச்சியந்திர சாலை, சிதம்பரம்; iii. ஜூலை, 1912; iv. செ.மூ.எ. 825; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. உற்கபுரி என்னும் உடையார்பாளையத் தலபுராணம் என்பது இதன் முழுப்பெயர். வடமொழியிலிருந்து ராஜா சாஸ்திரியார் என்பாரால் மொழி பெயர்க்கப்பட்ட உரைநடைப் புராணத்தை அடியொற்றியமைந்த செய்யுட் புராணம். பதின்மூன்று படலங்கள் கொண்டது. உ. வே. சாமிநாதய்யர், தருமபுரம் ஷண்முக சுவாமிகள் முதலியோர் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். இந்நூலாசிரியர் பாடிய நூல்களின் விவரமும் இதில் உள்ளது. ஆறு தல புராணங்களும் கலிவெண்பா, பிள்ளைத்தமிழ், பதிகம், மாலை என்னும் சிறு நூல்கள் பதின்மூன்றும் பாடியுள்ளார் என்று தெரிகிறது. viii. 666/1912/III.

**Q2:38**

**காமாட்சிநாதன் செட்டியார், வ. நா., நரசிங்கநல்லூர்**

483. i. நெல்லைச்சிந்து; ii. வ. நா. காமாட்சிநாதன் செட்டியார்; ஸ்ரீகாந்திமதி விலாஸம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1915; iv. செ.மூ.ப. 34; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. திருநெல்லையம்பதியில் கோயில் கொண்டிலங்கும் சுவாமி நெல்லையப்பர் பேரிலும், காந்திமதியம்மை பேரிலும் பாடப் பெற்ற தோத்திர மாலை. இதில் அமைந்த பாடல்களில் பெரும்பாலானவும் அண்ணாமலைச் செட்டியார் காவடிச்சிந்தின் சந்த அமைப்பில் உள்ளன. கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர், திருநெல்வேலிப்பேட்டை கி. மு. சுப்பிரமணிய பிள்ளை முதலியோர் பாடிய சாத்துக்கவிகள் முதலில் இடம் பெற்றுள்ளன; viii. 979/1915/III.

**Q2:38**

**குஞ்சிதபாதம் பிள்ளை, என்., நெய்க்குப்பை**

484. i. கௌரி மாயூர மான்மிய தாற்பரிய சங்கிரகம்: முதற் பதிப்பு; ii. சண்முகம் பிள்ளை என வழங்கும் சிதம்பரம் பிள்ளை; சரசுவதி விலாஸ் பிரஸ், மாயவரம்; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப. 27; v. 21×15 செ.மீ.; vi. 0–2–0; vii. மாயூரம் தலத்தைப் பற்றியது இப்புராணம். இந்த ஊரின் சிறப்பும், இங்குள்ள காவேரியின் பெருமையும் விரிவாக எடுத்துரைப்பது. திருவாவடுதுறை ஆதீனம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் குமாரன் சிதம்பரம் பிள்ளை அவர்களின் வேண்டுகோளின்படி இந்நூல் இயற்றப்பட்டது. இத்தலத்தில் வந்து வழிபட்டுப் பேறு பெற்றோர் வரலாறுகளும் இத்தலத்தைப் பாடிய நாயன்மார் முதலியோர் பற்றிய குறிப்புக்களும் தரப பட்டுள்ளன; viii. 756/1911/I.

**Q 2:38**

**சபாபதிப் பிள்ளை, வி., உத்தரகோசமங்கை.**

485. i. இராமீச்சுரத்தல புராணக் கும்மி [சிவஞான போதம்] : முதற் பதிப்பு ; ii. எம். முத்துவய்யர், ராமநாதபுரம் ; இலட்சுமி விலாசம் பிரஸ், இராமநாதபுரம் ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.எ. 4+188+1 ; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0 ; vii. இராமேசுவரத்தின் புராணப் பெருமையைக் கும்மிப் பாடலில் உரைக்கும் நூல். கோயில் சிறப்பும், அங்குள்ள நீர்நிலைகளின் பெருமையும் விவரிக்கப்பட்டுள்ளன. இறுதியில் தெய்வங்களின் பெருமைகள் சொல்லப்பட்டிருக்கின்றன; viii. 137/1914/I.

Q2:38

**சபாபதி முதலியார், புரசை**

486. i. திருப்போரூர்த்தல புராண வசனம் : இரண்டாம் பதிப்பு ii. த. குப்புசாமி முதலியார், புரசை ; இராமநிலைய விவேகானந்த அச்சியந்திரசாலை, மதராஸ் ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 4+42 ; v. 19×13 செ.மீ ; vi. 0–1–6 ; vii. 1975 ஆம் ஆண்டு (பவ வருஷம்) ஆசிரியர் இந்நூலை முதலாவதாக வெளியிட்டனர். அதில் வடமொழியில் இருந்த புராணத்தைக் கிருஷ்ண சாஸ்திரியார் என்பாரைக் கொண்டு தமிழில் மொழி பெயர்க்கச் செய்து, தமிழில் விருத்தச் செய்யுளாக இவர் பாடியுள்ளார் என்று தெரிகிறது. அத்துடன் எல்லோருக்கும் பயன்படுமாறு உரைநடையாகவும் இந்நூலை எழுதியுள்ளார். பதினேழு அத்தியாயங்கள் உள்ளன. இந்நூலில் முருகக் கடவுள் அருளுருக் கொண்டு விளங்கும் வண்ணம் கண்ணுவர், சிவமுனிவர்களுக்கு அருளியதும், பிரணவத்தின் சிறப்பும், வேம்படி விநாயகர் வரலாறும் விளக்கப்பட்டிருக்கின்றன. தலபுராணத்தின் பாயிரச் செய்யுட்கள் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1011/1913/IV.

Q2:38

**சாம்பசிவ அய்யர் (மொ. து.)**

487. i. அத்திப்புலியூர் க்ஷேத்திரத்தின் ஸ்தல புராணம் ; ii. துரைசாமி முதலியார், அத்திப்புலியூர்; எஸ்.பி. பிரஸ், நாகப்பட்டினம் ; iii. செப்டம்பர், 1914 ; iv, உ.ப. 32 ; v. 21×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. அத்திப்புலியூர்த் தலத்தின் பெருமையை உரைப்பது. வட மொழியில் ‘பவிஷிய உத்தர புராணம்’ என்னும் நூலில் நூறு முதல் நூற்று ஆறு வரையிலுள்ள அத்தியாயங்களின் பொருளைத் தமிழில் மொழி பெயர்த்து அமைக்கப்பட்டது. viii. 191/1914/IV.

Q2: 38

**சிதம்பரனார், அ., துடிசைகிழார் (தொ. து.)**

488. i. திருத்துடிசைப்புராணம்: முதற் பதிப்பு; ii. அ. சிதம்பரனார், துடிசைகிழார்; மினர்வா அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜனவரி, 1914; iv. செ.மூ.எ. 15+516; v. 18×13 செ.மீ., vi. 0–12–0; vii. கொங்கு நாட்டிலுள்ள திருத்துடிசை என்னும் ஊரைப்பற்றிய புராணம். சிவபெருமான் சுந்தர மூர்த்தி நாயனாருக்கு வேடனாகக் காட்சி கொடுத்தது இவ்வூரில் என்பார். இவ்வூருக்கு அமைந்த பழைய செய்யுட் புராணத்தின் ஏட்டுப் பிரதியிலிருந்து எடுத்துப் பதிப்பிக்கப்பட்டது. ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஆனால் "வடிவு பெறு குலோத்துங்கன் வாழி! செங்கோல் வாழியவே!!" என வரும் வாழ்த்துப்பாடல்களைக் கொண்டு குலோத்துங்கன் காலத்தவராக இப்புலவரைப் பதிப்பாசிரியர் கொள்கிறார். பாயிரம் உட்பட பதினைந்து சருக்கங்கள் இதில் உள்ளன. இந்நூல் அச்சிட்ட வரலாற்றையும், இந்நகரின் வரலாறுகளையும் முதலிலுள்ள முகவுரை, தந்துரைப் பகுதிகளில் காணலாம். உரைநடையில் அமைந்த இப்புராணத்தின் சுருக்கம் நூல் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. viii. 690/1914/I.

Q2:38

**சிவஞானயோகிகள், திருவாவடுதுறை ஆதீனம்**

489 i. காஞ்சிபுராணம்: முதற் பதிப்பு; ii. சி. நாகலிங்க முதலியார், காஞ்சி & வெ. ஆதிமூலம் செட்டியார்; கலாரத்னாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1912; iv. செ.மூ.எ. 4851; v. 25×17 செ.மீ.; vi. 2–8–0; vii. காஞ்சி நகரத்தைப் பற்றி வடமொழியில் பஞ்சாசத், சதாத்தியாயம், காமாட்சி விலாசம் என மூன்று நூல்கள் உள்ளன. இவற்றுள் பஞ்சாசத் என்ற நூலை காஞ்சி புராணம் முதற்காண்டம் என்னும் பெயரினால் சிவஞான யோகிகள் ஆக்கியுள்ளார் 'சதாத்தியாயம்' என்பதை இவருடைய மாணாக்கர் கச்சியப்ப முனிவர் காஞ்சிப் புராணம் இரண்டாம் காண்டம் என்னும் பெயரினால் தமிழில் இயற்றியுள்ளார். மூன்றாவதான காமாட்சி விலாசத்தை 'காம கோட்ட புராணம்' என்னும் பெயரால் இதன் பதிப்பாசிரியர் தாம் பாடிவருவதாக முகவுரையில் குறித்துள்ளார். சிவஞான யோகிகள் வரலாறு விரிவாக எழுதப்பட்டிருக்கிறது. காஞ்சி நகர் பற்றிய திரு முறைத் திரட்டும் திருப்புகழும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த நூலில் சிவஞான முனிவரும், கச்சியப்ப முனிவரும் பாடிய இரண்டு காண்டங்களும் உள்ளன. இவை முறையே 2742 ம், 2110 ம் விருத்தங்கள் கொண்டவை. இரண்டு காண்டங்களிலுமாக 73 படலங்கள் உள்ளன. viii. 546/1912/III.

Q2: 38

**சிவராமபிள்ளை, வி. ஸி., பாலக்காடு (மொ.து.)**

**490** **i.** பெதரிவன மான்மியச் சுருக்கம்; முதற் பதிப்பு ; **ii.** கிருஷ்ண சாமி செட்டியார், சேங்காலிபுரம் & கணபதி பண்டாரம் ; ஸ்ரீ வித்தியா அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 12 ; v. 19×12 செ.மீ., vi. இலவசம்; vii. நம்பிப் பாடி என வழங்கும் பெதரிவனத்தைப் பற்றிய புராணம் வட மொழி முதனூலுக்கிணங்க தமிழில் மொழி பெயர்க்கப் பெற்றது; viii. 88/1911/II.

**Q2:38**

**சுந்தரேச பாரதியார், எஸ்., திருவாரூர்**

**491.** **i.** திருநெல்லிக்காத் தல புராணம் : முதற்பதிப்பு ; **ii.** எஸ். சுந்தரேச பாரதியார், திருவாரூர் ; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சை ; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. 4+54; v. 21×14 செ. மீ.; vi.. .. ; vii. இத்தலம் திருக்காருயை, திருத்தங்கூர் என்னும் ஊர்களுக்கு நடுவில் உள்ளது. இங் குள்ள இறை, இடம், நீர் என்பனவற்றின் சிறப்புகளை முதலில் உரைத்து, இங்கு நிகழ்ந்த வேறு பல வியத்தகு நிகழ்ச்சிகளையும் விவரிக்கிறது. பதினேழு படலங்களைக் கொண் டது. viii. 153/1911/IV.

**Q2:38**

**சுப்பிரமணிய சுவாமி, ஜே. (தொ.து.)**

**492.** i. திருமறைக்காட்டுத் தேவாரத்திரட்டும் ஸ்ரீ கக்ஷீவான் சரித்திரச் செய்யுளும் வசனமும் : முதற் பதிப்பு ; ii. சுப்பிர மணிய சுவாமிகள், வேதாரணியம் ; நீல லோசனி அச்சுக் கூடம், நாகபட்டினம் ; iii. பிப்ரவரி, 1915 ; iv. செ.மூ.எ. 16 ; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. திருமறைக்காட் டினைப் பற்றித் தேவாரத்தில் உள்ள பாடல்களின் தொகுப் பையும், வேதாரண்யத் தல புராணத்திலிருந்து எடுக்கப்பெற்ற கக்ஷீவான் வரலாற்றுச் செய்யுளையும் உரைநடையையும் இந் நூல் கொண்டுள்ளது. திருமறைக்காட்டுத் தேவாரப் பதிகங் களும் நூல் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 843/1915/I.

**Q2:38**

**சுப்பிரமணிய பிள்ளை, த., வடக்குபட்டு**

**493.** **i.** சிவஸ்தல மஞ்சரி : இரண்டாம் பதிப்பு ; ii. வி. எஸ். செங்கல்வராயப்பிள்ளை ; சவுத் இந்தியன் அச்சுக்கூடம், சென்னை ; பீ. ஆர். ராமையர் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1912 ; iv. உ.ப. 3 + 188 + 2 ; v. 21 × 14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. சிவத்தலப்பயணம் செய்வாருக்குப் பயன்படு வகையில் இயற்றப்பெற்றது. நூற்றிஎழுபது தலங்களுக்கு மேல் ஆசிரியர் தாமே சென்றும் கண்டும் அத்தலங்களைப் பற்றித் தக்க மேற்சான்றுகள் கொண்டும் இந்நூல் எழுதியுள்

ளார். தேவாரப்பாடல்கள் பெற்ற இருநூற்று எழுபத்து நான்கு தலங்களின் விவரம் தனியாய்க் குறிக்கப் பெற்றிருக்கிறது. சிவத்தலங்களை அகராதி அடைவில் கொடுத்து, ஆசிரியர் விளக்கியுள்ளார். அந்தந்த தலத்திற்குரிய இரயில்பாதை வண்டி பாதை முதலிய குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தலங்களைப் பற்றிய புராணக் குறிப்புக்களும் தேவாரப் பாடல்களும் உரிய இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 491/1912/II.

Q2:38

**சுவாமிநாத உபாத்தியாயர், தி.மு. திருக்களர்**

494. i. களப்பாள் சிவக்ஷேத்திர விளக்கம்: முதற் பதிப்பு; ii. தி.மு. சுவாமிநாத உபாத்தியாயர்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. மே, 1911; iv. உ.ப. 34; v. 17×12 செ.மீ.; vi. இலவசம்; vii. திருக்களர் என்னும் சிவதலத்தைப் பற்றிய புராணவரலாறு, இறை, இடம், நீர் என்னும் மூன்றின் சிறப்புகள் முதலில் தரப்பட்டுள்ளன. இத்தலத்தில் உதித்த சிவனடியாராகிய கூற்றுவ நாயனாரைப்பற்றிய புராணமும் உரைநடையில் எழுதப்பட்டிருக்கிறது. viii. 540/1911/II.

Q2:38

495. i. திருச்சிற்றேமச் சிவக்ஷேத்திர விளக்கம்: முதற் பதிப்பு; ii. தி.மு. சுவாமிநாத உபாத்தியாயர், திருக்களர்; எட்வர்ட் அச்சுக்கூடம், நாகபட்டினம்; iii மே, 1912; iv. உ.ப. +செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0–0–9; vii. திருச்சிற்றேமம் என்னும் கோயிலைப்பற்றிய புராண வரலாறுகளை உரைப்பது. இத்தலம் திருக்களர் என்னும் சிவன்கோவிலுக்குத் தென்கிழக்கில் இரண்டரை கல் தொலைவில் உள்ளது. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் இத்தலத்தைப்பற்றிப் பாடிய தேவாரமும், 'திருக்ஷேத்திரக் கோவை' திருப்பதிகக் கோவை ஆகியவற்றில் இத்தலம்பற்றிக் குறித்துள்ள பாடலும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 758/1912/II.

Q2:38

**தணிகாசல முதலியார், பா.**

496. i. திருவொற்றியூர் மகிழமர மகிமை: முதற் பதிப்பு; ii. ஆ. பார்த்தசாரதி முதலியார் & பூவை. கலியாணசுந்தர முதலியார்; கிலாட்ஸ்டன் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. உ.ப. 4; v. 21×14; செ.மீ.; vi. 0–0–1; vii. விண்ணுலகத்திலிருந்த கற்பக மரங்கள் ஐந்தும் திருவொற்றியூர் ஆலயத்தில் தவம் செய்து தியாகராசப் பெருமான் வரத்தினால் ஓர் மகிழமரமாய்த் தோன்றிய வரலாற்றை விவரிப்பது; viii. 694/1912/I.

Q2:38

**தாயுமான பிள்ளை, சு.**

497. i. தேசுமிக்கையனார் சரித்திரச் சுருக்கமும், வன்னியடி ஸ்ரீ கருப்பண்ண சுவாமிகள் சரித்திர சுருக்கமும் : முதற் பதிப்பு ; ii. தி. சபாபதி பிள்ளை, திருச்சி ; ஸ்ரீமட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், திருச்சி ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப.8 ; v. 13×11 செ.மீ.; vi. 0-0-3 ; vii. திருச்சிராப்பள்ளி மலையடி வாரத்தில் வடகிழக்கு மூலையில் எழுந்தருளியிருக்கும் ஐயனாரைப் பற்றியும் மலைக்குத் தென்புறம் அடிவார வன்னியடித் தெருவில் கோயில்கொண்டிருக்கும் வன்னியகருப்பண்ண சுவாமிகளைப்பற்றியும் வழங்கும் ஒரு புராண வரலாறு. அந்நாளில் எண்பத்தேழு வயதினரான ஐயனாரைப் பூசிக்கும் தாயுமான பிள்ளை சொன்னபடி இது வெளியிடப்பெற்றது. திரிசிராமலைக் கோயிலுக்குக் காவற்தெய்வமாக ஐயனார் விளங்கிவருகிறார். viii 113/1911/II.

Q2:38

**திருக்கச்சி நம்பிதாஸர், க. வெ.**

498. i. நூற்றெட்டுத் திவ்ய தேஸப்ரபாவம் : முதற் பதிப்பு ; ii. கா.வெ. திருக்கச்சிநம்பிதாஸர் ; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 48 ; v. 21×14 செ.மீ.; vi. 0-4-0 ; vii. திருமால் திருப்பதிகள் நூற்றெட்டின் சிறப்புகளையும், திருநாராயணபுரம், ஸ்ரீமுஷ்ணம், பிருந்தாவனம், பாபவிநாசம், ராஜமன்னார்கோயில், பூதபுரி என்னும் ஸ்ரீபெரும்புதூர், ஆகிய பழமையான தலங்கள் ஆறின் சிறப்புக்களையும் விவரிப்பது. "ஈரிரு பதாம் சோழம்" என்னும் பாடலில் காணகின்ற படி சோழநாடு (40), பாண்டியநாடு (18), மலைநாடு (13), நடுநாடு (2), தொண்டைநாடு (22), வடநாடு (12), திருநாடு (1) என்னும் முறையில் விவரங்கள் தரப்பட்டுள்ளன. இதனுள் சிறந்த நாடுகள் விவரமும், ஆழ்வார்கள் பாடிய பாடல்களுக் குறிப்பும், ரயில் நிலையங்களின் குறிப்பும், இரயில் நிலையங்களிலிருந்து இன்ன திசையில் இத்தனை கல் என்ற விவரமும் அடங்கியிருக்கின்றன. viii. 1/1911/I.

Q2:38

499. i. திருக்கழுக்குன்றத் தலபுராணச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. வ. வெங்கடாசல முதலி, சென்னை ; சீனிவாச வரதாச்சாரியார் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப. 34 ; v. 22×14 செ.மீ; vi. இலவசம் ; vii. 'பட்சி தீர்த்தம்' என வழங்கும் திருக்கழுக் குன்றத்தலத்தின் புராண வரலாறு சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது இதோடு மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோர் இத்தலத்தைக் குறித்துப் பாடிய பாடல்களும் தரப்பட்டிருக்கின்றன. 'அன்னதான கைங்கரிய பக்தஜனசபையாரால்' வெளியிடப்பட்ட சாதாரண ஆண்டின் வரவுசெலவு கணக்குப் பட்டியலுடன் வெளியிடப்பட்டுள்ளது. viii. 762/1911/I.

Q2:38

**500.** i. **திருக்கழுக்குன்றத் தலபுராணச் சுருக்கம்**: முதற் பதிப்பு; ii அன்னதான கைங்கரிய பக்தஜன சபை திருக்கழுக்குன்றம்; சச்சிதானந்தா பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ.ப. 44; v. 22×14 செ.மீ; vi .....; vii. திருக்கழுக்குன்றத் தலத்தின் பழம்பெருமையும், புராணவரலாறும் சுருக்கமாய் அமைந்துள்ளது. இவ்வூர் 'பட்சிதீர்த்தம்' எனவும் வழங்கும். இத்தலத்து இறைவனைக் குறித்து மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசர் பாடிய தோத்திரப்பாக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நகரில் நடைபெறும் விழாவில் மகேசுவர பூசை செய்பவர்கள் இருபத்தெட்டாவது ஆண்டாகிய பிரமாதீச ஆண்டு வரவுசெலவுக் கணக்குகளையும் இதில் வெளியிட்டுள்ளனர். viii. 225/1914/II.

Q2:38

**501.** i. **திருக்கழுக்குன்றத் தலபுராணம்**: முதற் பதிப்பு; ii. ஆ. நா. ஜகந்நாத நாயகர், இச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை, iii. ஏப்ரல், 1913; vi. உ.ப. 32; v. 21×14 செ.மீ.; vi. 0—1—0; vii. திருக்கழுக்குன்றத் தலத்தைப்பற்றி உரைநடையிலமைந்த தலபுராணநூல். புராண வரலாறு தொடங்கி சுரகுருசருக்கம் ஈறுக இருபது அத்தியாயங்கள் உள்ளன. இத்தலத்தைக் குறித்து நாயன்மார் முதலியோர் பாடிய துதிப்பாடல்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தேவாரம், திருவாசகம், பட்டணத்தடிகளின் பாடல்கள் ஆகியவற்றில் வரும் கழுக்குன்றத்தைப்பற்றிய பாடல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மலை வலம்வரும் முறையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இறுதியில் திரிபுரசுந்தரியம்மை பதிகம், நவகம் என்னும் தோத்திரப் பாடல்களும் உள்ளன. viii. 275/1913/II.

Q2:38

**502.** i. **திருக்கோட்டூர் புராணம்.** [நாற்பொருள் விளக்கம்]: முதற் பதிப்பு; ii. தி. மு. சுவாமிநாத உபாத்தியாயர், திருக்களர்; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1913; iv. உ.ப.+செ.மூ.ப. 95+26; v. 18×12 செ.மீ;; vi 0-6-0; vii. சோழநாட்டிலுள்ள சிவ தலங்களுள் ஒன்றாகிய திருக்கோட்டூரின் பெருமையை விவரிப்பது. நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. பழைய ஏட்டுப்பிரதி இரண்டை துணைகொண்டு எழுதப்பட்டது. ஒன்பது வரலாறுகள் கொண்டது. இதற்குக் கதைச் சுருக்கம், குறிப்பு, முகவுரை முதலியவற்றை எழுதியவர் தி. மு. சுவாமிநாத உபாத்தியாயர். நாற்பொருள் விளக்கம் என்னும் நூலும் இதனுள் இணைந்துள்ளது. viii. 874/1913/IV.

Q2:38

**503.** i. **திருத்தேங்கூர் தலபுராணம்:** ii. சண்முக சுவாமிகள், தருமபுர ஆதீனம்; திரிபுரசுந்தரி அச்சுக்கூடம், சீர்காழி; iii. 1914; iv. உ. ப. + செ.மூ.ப- 60; v. 21×14 செ.மீ;

vi .0-4-0 ; vii. தென் இந்தியாவில் நாகப்பட்டின வட்டத்தின்கண் அமைந்துள்ள சிவதலமாகிய திருத்தேங்கூரின் பெருமையை விளக்கும் செய்யுளும் (201) உரைநடையும் கொண்ட நூல். 'இப்புராணம் இயற்றினார் இன்னார் என்பது விளங்கவில்லை' என்று நூல்முகப்பில் குறிப்பு எழுதப்பட்டிருக்கிறது. பிற்பகுதி உரைநடை, முற்பகுதி யானைச்செய்யுட் புராணத்தின் உரைநடையாக்கமேயாகும். viii. 7/1915/II.

Q2:38

504. i. **திருமயிலைச் சிறப்பு:** முதற் பதிப்பு; ii .ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 30 ; v. 18×12 செ.மீ ; vi. 0-2-0;vii. சென்னை நகரின் ஒருபகுதியாய் இப்பொழுது விளங்கும் மயிலாப்பூரின் புராண வரலாறு கூறும் நூல். இதில் அறுபத்துமூவர் விழா, பார்வதிதேவி மயிலுருவம் நீங்கியது, வாயிலார் நாயனார் வரலாறு, திருவள்ளுவர் வரலாறு, பேயாழ்வார் வரலாறு ஆகியவை அடங்கியுள்ளன. திருமயிலை கோபுரப் படமும் அறுபத்துமூவர் படமும் தரப்பட்டுள்ளன. viii. 59/1911/II.

Q2:38

505. i. **திருவையாறு சப்தஸ்தல தேவாரத் திரட்டு:** ii பி. எ. நீலமேகம்பிள்ளை, தஞ்சை பள்ளியக்கிரகாரம் ; தாரா அச்சுக்கூடம், தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 62 ; v. 22×14 செ.மீ.; vi. 0-4-0; vii. சைவசமயக் குரவர்களாகிய மூவர்களால் அருளிய தேவாரங்களிலிருந்தும் சமய குரவர்களிலொருவராகிய திருவாதவூரடிகளருளிய திருவாசகத்திலிருந்தும் சிலபாடல்கள் இதில் தொகுக்கப்பட்டிருக்கின்றன. நால்வர் வரலாறுகளும் நூல் முதலில் விவரிக்கப்பட்டிருக்கிறது. திருவையாறு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் என்பனவே 'சப்தஸ்தலம்' எனப்படும் எழு சிவத்தலங்களாம். viii. 152/1915/III.

Q2:38

506. i. **திருவொற்றியூர் தியாகராஜப் பெருமான் சரித்திரச் சுருக்கம்:** முதற்பதிப்பு ; ii. ஆ. பார்த்தசாரதி முதலியார் ; கிளாட்ஸ்டன் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி. 1912; iv. உ. ப. + செ. மூ.ப. 16 ; v. 14×11 செ.மீ.; vi. 0-0-3 ; vii. இதில் திருவொற்றியூர் தேர் விழா வரலாற்றுச் சுருக்கம், மகிழடி விழாவின் வரலாற்றுச் சுருக்கம், சுந்தரர் வரலாற்றுச் சுருக்கம், பிட்சாடனமூர்த்தி வரலாறு, தியாகர் நடன வரலாறு ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன. viii. 695/1912/I.

Q2:38

506-A. i. **தில்லை வளாகமென்கிற ஆதிசிதம்பரமான்மியம்** [தில்லை வளாகம் நடேசர் பதிகம்]: முதற் பதிப்பு ; ii. பெரி. நா. நா. நாராயணன் செட்டியார், காரைக்குடி ; மீனலோசனி அச்சி யந்திரசாலை, தேவகோட்டை ; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப. +செ.மூ.ப. 14 ; v. 16×12 செ.மீ.; vi. ........ ; vii. தில்லை வளாகம் என்கிற பழைய சிதம்பரத்தின் தல வரலாறு. இது 'பிரமாண்ட புராணம்' 'க்ஷேத்திர வைபவ' கண்டத்துட் 'பிரம-நாரத சம்வாத'த்திலுள்ள ஐந்து அத்தியா யங்களைச் சுருக்கி மொழிபெயர்க்கப்பெற்றது. viii. 158/1911/IV.

Q2:38

**நடேச சாஸ்திரி (மொ. து.)**

507. i. ஸ்ரீ காசிமகாத்மியம் : முதற் பதிப்பு ; ii. எ. வைத்திய நாத ஐயர் அண்டு கம்பெனி, திருவல்லிக்கேணி, சென்னை ; கல்விப் பிரகாசம் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. உ. ப. 2+68 ; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. வடமொழியில் வேதவியாசர் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு. பத்ம புராணம் பாதாள காண்டத்தில் இத்தல பெருமை சொல்லப்பட்டிருக்கிறது. காசிலிங்கம், கங்கை இவைகளின் பெருமைகள் பல வரலாறுகளின் வாயிலாக வெளிடயிப்பட்டிருக்கிறது. வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதியாரின் துணையைக்கொண்டு இம் மொழிபெயர்ப்பைச் செம்மையாக்கி வெளியிட்டுள்ளார். இது ஐந்து அத்தியா யங்களைக் கொண்டது. viii. 54/1911/IV.

Q2:38

**நாராயணசுவாமி நாயுடு, பி. பி.**

508. i. நெட்டூர்ப் புராணம் : முதற் பதிப்பு ; ii. எம். வேதநாயக சுவாமி, திருநெல்வேலி ; சைவ வித்யா பாலன யந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. செ.மூ.எ. 454; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0 ; vii. நெட்டூரில் விளங்கும் சிவதலத்தின் சிறப்பினைக் கூறும் நூல், நெட்டூர் என்பது இக்காலத்து 'நிட்டைபுரி' என வழங்குகின்றது. இங்கு விளங்கும் குமரக் கடவுளின் பெருமைகளைப் பலபடியாக விவரித்துரைக்கின்றது. பதினொரு சருக்கங்கள் கொண்டது. திருச்செந்தூர் மகாதேவ ஐயர் முதலியோர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 133/1915/I.

Q2:38

**நாராயணதேசிகாசாரியார், கே.**

509. i. திருவெவ்வுளூர் மஹாத்மியம் : முதற் பதிப்பு ; ii. காவளி வீரராகவ அய்யங்கார், வங்கிபுரம் ; ஆநந்த அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 2+20 ; v. 18×1?

செ.மீ.; **vi.** 0–1–0 ; **vii.** திருவெவ்வுளூர் கோயிலின் புராண வரலாறுகளை விவரிப்பது. இது மார்க்கண்டேய புராணத்தி லிருந்து சுருக்கமாய் எழுதப்பட்டது. இத்தலம் நூற்றெட்டு வைணவத்திருப்பதிகளில் ஒன்றாகும். திருமங்கை ஆழ்வாரும், திருமழிசைப் பிரானும் இத்தலத்துப் பெருமானைப் பாடி யுள்ளனர். **viii.** 876/1914/I.

**Q2:38**

**பட்டாபிராம பிள்ளை, திருப்புட்குழி**

**510.** **i.** திருப்புட்குழி மணிகண்டேஸ்வரர் மான்மியம் [விபூதி அத்தியாயம், உருத்திராக்ஷ அத்தியாயம், சிவதரிசன அத்தி யாயம்] : முதற் பதிப்பு ; **ii.** சு. செங்கல்வராய பிள்ளை, வடக்குப்பட்டு & தி. சு. வேலுசாமி பிள்ளை ; ராமநிலைய விவேகானந்த அச்சுக்கூடம், சென்னை ; **iii.** பிப்ரவரி, 1911 ; **iv.** செ.மூ. உ.எ. 4+15 ; **v.** 18×13 செ.மீ.; **vi.** 0–2–0 ; **vii.** மணிகண்டேஸ்வரர் ஆலயத்தின் வரலாற்றை உரைப்பது. இக்கோயிலைத் திருப்பணி செய்தவர் நூலாசிரியரின் தகப்பனாரின் பாட்டனாராவார். நூலாசிரியரின் மகள் காலஞ் சென்ற கனகவல்லி என்பாளின் நினைவாக இந்நூல் வெளியிடப் பெற்றது. இதில் விபூதி, உருத்திராட்சம், சிவவழிபாட்டு முறைகள் விளக்கப்பட்டுள்ளன. **viii.** 48/1911/I.

**Q2:38**

**பாலகிருஷ்ணதாசர், காளப்பநாயக்கன்பட்டி**

**511.** **i.** நயநாசல மஹாத்மியமென்னும் ஸ்ரீ வரதராஜ ஸ்வாமி வைபவம் (முதல் பாகம்): முதற் பதிப்பு ; **ii.** பாலகிருஷ்ண தாசர், காளப்பநாயக்கன்பட்டி ; சுதேசாபிமானி அச்சியந்திர சாலை, சேலம் ; **iii.** மே, 1912 ; **iv.** உ.ப. 1+52 ; **v.** 21×13 செ.மீ., **vi.**.....; **vii.** சேலத்தைச் சார்ந்த 'நயநாசலம்' என்னும் வைணவ தலத்தைப் பற்றிய புராணம். இது வட மொழியிலுள்ள பிரமாண்ட புராணத்தில் சொல்லிய வண்ணம் தமிழில் உரைநடையாக எழுதப்பட்டுள்ளது. நயனகிரி வரதராஜ சுவாமியின் அஷ்டோத்ர சதநாமாவளி, கோவலவல்லி அஷ்டோத்ர சதநாமாவளி, நவக்ரக அஷ்டோத்ர சதநாமாவளி என மூன்று நாமாவளிகள் இதில் உள்ளன. **viii.** 581/1912/II.

**Q2:38**

**பெரியசாமி பண்டிதர், டி. இ. (மொ.து.)**

**512.** **i.** திருவானைக்கா பஞ்சப் பிரகார ப்ரபாவம் : **ii.** டி. எஸ். வெங்கடாசலம் பிள்ளை, திருச்சிராப்பள்ளி ; ஸ்ரீ மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி ; **iii.** எப்ரல், 1914 ; **iv.** உ.ப.+செ.மூ.எ. 8 ; **v.** 21×14 செ.மீ.; **vi.** இலவசம் ; **vii.** ஜம்புகேஸ்வரம் என்று வழங்கும் திரு

வானைக்காக் கோவிலிலுள்ள ஐந்து சுற்று மதில்களின் பெருமையை விளக்குவது. கஜாரண்ய புராணம் நாற்பத் தைந்தாவது அத்தியாயத்தில் கூறியபடி தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. viii. 530/1914/II.

Q2:38

**பெருமாளையங்கார்**

513. i. கூடலழகர் ஸ்தல புராணம் : முதற் பதிப்பு ; ii. பெருமாளையங்கார் ; ஸ்ரீ ருக்மணி விலாஸம் பிரஸ், மதுரை ; iii. மார்ச், 1911 ; iii. செ.மூ.எ. 257 ; v. 21×14 செ.மீ.; vi. 0–3–0 ; vii. மதுரை என வழங்கும் கூடல்பதியில் கோயில் கொண்ட பெருமாளைப் பற்றிய புராணம். திருக்கூடலில் எழுந்தருளி யிருக்கிற மதுரை வ்யூக சுந்தரராஜன் ஸ்தல புராண சங்கிரகம் என்பது இதன் முழுப் பெயர். இது பதின்மூன்று சருக்கங்கள் கொண்டது. பிரமாண்ட புராணத்திலிருந்து இவ்வரலாறு மொழிபெயர்த்து எழுதப்பட்டிருக்கிறது. viii. 47/1911/II.

Q2:38

**பொன்னம்பலம் பிள்ளை, சொக்கம்பட்டி சமஸ்தானம்**

514. i. வாசுதேவ நல்லூர் என்னும் வாசவனூர்த் தல புராணம்—மூலமும் அரும்பதவுரையும் : முதற் பதிப்பு ; ii. மு. ரா. அருணசலக் கவிராயர், மதுரை ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. + செ.மூ.உ.எ. 35+632+4 v. 21×14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. பாண்டிய நாட்டில் சங்கர நாராயணசாமி கோயிலுக்கு வடமேற்கில் உள்ளது வாசுதேவநல்லூர். இங்குள்ள சிவன் கோயில் பெருமையும், சிவ பெருமான் திருவருட் பெருமையும் அங்குள்ள 'நிட்சேப நதி' யின் சிறப்பும், அங்கு வந்து பேறுபெற்றோர் வரலாறுகளும் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. இதில் பதினைந்து வரலாறுகள் உள்ளன. இந்நூலாசிரியர் ஏறக்குறைய எண்பது ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்தவர் என்று குறிக்கப்பட்டிருக்கிறது. இந்நூலுக்கு மு. ரா. அருணசலக் கவிராயர் அருஞ்சொற்பொருள் இயற்றி யுள்ளார். மு. ரா. கந்தசாமிக் கவிராயர் முகவுரை எழுதி யுள்ளார். சில புலவர்களின் சாத்துக் கவிகளும் உள்ளன. வாசுதேவநல்லூர் பழனியாண்டிப் புலவர் செய்த புராணசாரம் என்னும் சிறுபகுதியும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 746/1911/I.

Q2:38

**பொன்னையா பிள்ளை, டி. வி. (மொ. து.)**

515. i. பக்தகாக்ஷி மான்மியம் : முதற் பதிப்பு ; ii. பொன்னையா பிள்ளை, டி. வி.; சாரதா விலாச அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 8+20 ; v. 11×9 செ. மீ.;

vi. 0–1–0 ; vii. திருவாரூர்க் கோயிலில் தியாகராஜர் 'அஜ்பா நிருத்த'த்துடன் மும்முறை வலம் வந்தருளும் காட்சி பற்றிய உண்மையை உரைப்பது. இக்காட்சி நிகழும் திருவிழாவைப் பற்றியும், மற்றும் திருக்கோயில் தொடர்பான சில புராண நிகழ்ச்சிகளையும் விவரிப்பது. இது வடமொழி நூல்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது. viii. 507/1913/III.

Q2:38

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை, மகாவித்வான், திரிசிரபுரம்**

516. i. திருக்குறுக்கைப் புராணம் : முதற் பதிப்பு ; ii. சி. அய்யாக் கண்ணு ஓதுவார் & ந. சோமசுந்தர உபாத்தியாயர் ; ஸ்ரீலோக மாதா அச்சுக்கூடம் & குஞ்சிதசரண அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. ஜூலை, 1911 ; iv. செ.மூ.எ. 736 ; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்றான குறுக்கைப் பதியைப் பற்றிய தலபுராணம், வடமொழியிலிருந்து செய்யுளாக மொழிபெயர்க்கப்பெற்றது. இந்நூலின் சிறப்புப் பாயிரம் அவை யடக்கத்திற்கும், நாட்டுப் படலத்திற்கும் இடையே அமைந் திருப்பது கவனிக்கத் தக்கது. இருபத்துநாலு படங்கள் கொண்டது. இத்தலம் பற்றித் திருநாவுக்கரசர் பாடிய தேவாரம் முதலில் தரப்பெற்றிருக்கிறது. viii. 265/1911/III.

Q2:38

517. i. திருப்பெருந்துறைப் புராணம் : இரண்டாம் பதிப்பு ; ii. வே. சாமிநாதய்யர், உத்தமதானபுரம் ; வைஜயந்தி அச்சுக் கூடம், சென்னை & பிரஸிடென்ஸி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. செ.மூ.எ. 1656 ; v. 22×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. பாண்டிய நாட்டிலுள்ள சிவத்தலங்களுள் ஒன்று திருப்பெருந்துறை. மாணிக்கவாசகர் திருவருள் பெற்றுச் சிவபுராணம் முதலிய பாடல்களைப் பாடியது இத்தலத்தில்தான். இத்தல புராணம் 32 படலங்கள் கொண்டது. இந்நூலை ஆக்குவித்தவர் அத்தலத்திற் கட்டளைப் பணிபுரிந்துவந்த சுப்ர மணிய முனிவராவர். இந்நூலைத் தவிர சாமிநாத முனிவர் இயற்றிய திருப் பெருந்துறைப் புராணமும், சுந்தரலிங்க முனிவர் இயற்றிய ஆதி கைலாய மான்மியமும் இத்தலத்திற்கு உள்ளன. முகவுரையில் இத்தலத்தைப் பற்றிய பல செய்திகள் தெரியவருகின்றன. viii. 519/1913/III.

Q2:38

**முத்துசாமிக் கோனார், டி. ஏ., திருச்செங்கோடு (தொ..து.)**

518. i. திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை : முதற் பதிப்பு; ii. டி. ஏ. முத்துசாமிக்கோனார், திருச்செங்கோடு ; சுந்தரவதனி அச்சுக்கூடம், சேலம் ; iii. பிப்ரவரி, 1913 ; iv. செ.மூ.எ. 408 ; v. 20×14 செ. மீ., vi. 0–8–0 ; vii. திருச்செங் கோட்டிலுள்ள சிவன் கோயில், கோபுரம், குளம், பூஞ்சோலை,

ஊர்தி, மடம் முதலியனவெல்லாம் இன்னின்ன காலத்து இன்னாரால் செய்யப்பட்டன என்பதைத் தெரிவிக்கும் நூல். இது பெரும்பான்மை விருத்தங்களாலும் சிறுபான்மை வெண்பா, கட்டளைக் கலித்துறை, கட்டளைக் கலிப்பாவாலும் ஆனது. பல ஏட்டுப் பிரதிகளை ஆய்ந்து வெளியிடப்பெற்றது. ஆங்கில துரைத்தனத்தாரால் செய்யப்பட்ட திருப்பணிகளைக் குறித்துப் பாடிய பாடல்களைப் பதிப்பாசிரியர் ஈற்றில் சேர்த்துள்ளார். viii. 711/1913/I. Q2:38

**ரங்காச்சாரி, இ. ரா. (மொ.து.)**

519. i. ஸ்ரீபெரும்புதூர் மாஹாத்மியம்; முதற் பதிப்பு; ii. எம். சி. பட்டாபிராம முதலியார், சென்னை; ஸ்ரீ மஹாலட்சுமி விலாசம் அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஏப்ரல், 1914; iv. உ. ப. 2+29; v. 19×13 செ. மீ.; vi. 0–2–0; vii. ராமாநுஜரின் பிறப்பிடமாகிய பெரும்புதூர் தலப்பெருமையை உரைப்பது. இத்தலத்தில் திருமாலின் அருளுக்கு ஏற்ற பெரியார்களின் வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. ஸ்காந்த புராணத்தில் நான்கு அத்தியாயங்களில் சொல்லப்பட்ட புராண வரலாற்றைத் தமிழில் மொழி பெயர்த்து அமைத்த நூல். viii. 238/1914/II.

Q2:38

**ரங்கைய நாயுடு, சி. (தொ.து.)**

520. i. திருப்பதி ஸ்தல புராணம்: முதற் பதிப்பு; ii. சி. ரங்கைய நாயுடு, சென்னை; கிரேவ்ஸ் காக்ஸன் அண்டு கம்பெனி, சென்னை; iii. ஜனவரி, 1915; iv. உ. ப 24; v. 21×14 செ. மீ.; vi. 0–1–6; vii. திருப்பதியின் பெருமையையும் சிறப்பினையும் விளக்கும் நூல் இது. ஸ்ரீ வராக, பத்ம, பவிஷ்யோத்தர புராணங்களாகிய அஷ்டாதச புராணங்களின் சுருக்கமே இது. இத்தலத்தில் அமைந்துள்ள நீர் நிலைகளின் சிறப்புக்களும் விளக்கப்பட்டுள்ளன. viii. 348/1915/I.

Q2:38

**ரெங்கசாமி அய்யங்கார், காண்டூர்.**

521. i. திருவரத்துறைப் புராணம்: முதற் பதிப்பு; ii. ரெங்கசாமி அய்யங்கார், காண்டூர்; சண்முகசுந்தர விலாச அச்சியந்திரசாலை, சிதம்பரம்; iii. மே, 1911; iv. செ. மூ. எ. 399; v. 22×14 செ. மீ., vi. 0–8–0; vii. திருநெல்வாயிலறத்துறை என வழங்கும் திருவரத்துறையைப் பற்றிய தலபுராணம். திருஞானசம்பந்தர் சிவனருளால் முத்துச் சிவிகையும் குடையும் சின்னமும் பெற்ற திருத்தலம். வடமொழிப் புராணத்தைப் பின்பற்றி இந்தத் தலபுராணம் செய்யப் பெற்றது. இருபது படலங்கள் கொண்டது. viii. 367/1911/III.

Q2:38

**வடிவேலு செட்டியார்**

522. i. திருவண்ணுமலை பராக்கிரமம்: முதற் பதிப்பு; ii. ப. வடிவேலு செட்டியார், கொரக்கோட்டை; வித்வசிரோமணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ. ப. 144; v. 18×13 செ. மீ., vi. 0–8–0; vii. இதற்கு 'அருணுசல பராக்கிரமம்' என்றும் பெயருண்டு. திருமாலும், பிரமனும் சிவபெருமானது அடிமுடி தேடிக் காணுமல் வருந்த, இறைவன் தீப்பிழம்பாகக் காட்சி தந்து நின்ற புராண வரலாறு காணப்படுகிறது. இத் தலத்தோடு தொடர்புடைய 'வஜ்ஜிராங்கத பாண்டியன்,' வல்லாள மகாராஜன் ஆகியோர் வரலாறுகள் கூறப்பட்டிருக்கின்றன. இறுதியில் திருவண்ணுமலையில் உள்ள குளத்தைப் பற்றியும், அம்மலையை வலம் செய்வதால் விளையும் பயன் பற்றியும் விவரிக்கப்பட்டிருக்கிறது. viii. 775/1912/IV.

Q2:38

**வரதாச்சாரியர், ஈகை, திருமலைசங்கபுரம் (மொ.து.)**

523. i. மல்லாபுர க்ஷேத்திரத்தின் மஹாத்மியம்: முதற் பதிப்பு; ii. அழகிய மணவாள இராமாநுஜதாஸர்; தனியாம்பாள் விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1912; iv. உ.ப. 36+1 படம்; v. 18×11 செ.மீ.; vi. இலவசம்; vii. மஹாபலிபுரம் என வழங்கும் மல்லபுரத்தின் தல புராணத்தைச் சுருக்கமாகத் தருவது. பிரமாண்ட புராணத்தின் க்ஷேத்திர காண்டத்தில் அகஸ்திய–சூத உரையாடலாக இத்தலத்தின் வரலாறு கூறப்பட்டுள்ளது. வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்துள்ளார். கடல்மல்லைத் தல அரிதுயிலைப் பற்றி பூதத்தாழ்வார், திருமங்கை மன்னன் ஆகியோர் பாடிய பாடல்களும் இதில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 283/1912/III.

Q2:38

**வெங்கட்டரமணதாசர், லளிகம், தர்மபுரி தாலுகா**

524. i. பக்தகிரிகுண்டு ராமசரித்திரம்: முதற் பதிப்பு; ii. இ.மா கோபாலகிருஷ்ண கோனுர், மதுரை; ஸ்ரீ மீனும்பிகை அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1911; iv. செ.மூ.ப. 15; v. 22×14 செ.மீ.; vi. 0–0–6; vii. பக்தகிரிமலையில் இராமர் கோயில் தோன்றிய வரலாற்றை விவரிப்பது. கண்ண பிரான் அனுமனுக்குக் கட்டளையிட, அவர் கல்லெடுத்துக் கட்டியதனுல் 'குண்டு ராமர்' என்னும் பெயர் இத்தெய்வத்திற்கு ஏற்பட்டதாம். கும்மி, நொண்டிச்சிந்து, சிந்து, வர்ண மெட்டு வகைகளில் இசைப் பாடல்கள் இதில் உள்ளன. viii. 741/1911/I.

Q2:38

**வெங்கட்டராம கனபாடி, வெ., முடிகொண்டான்**

525. i. ஆலங்குடி ஸ்தல புராணம்: ii. இலக்குமணப் போற்றிகள் தச்சநல்லூர், ஆரியப்பிரகாசினி பிரஸ், திருநெல்வேலிப் பாலம்; iii. 1915; iv. உ.ப. 152; v. 21×15 செ.மீ.; vi. 1–4–0; vii. காசியாரணியம் என்ற ஆலங்குடி என்னும் புராணத் தலத்தின் பெருமையும், அத்தலத்தின் தெய்வச் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளன. வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இறை, இடம், நீர் மூன்றின் பெருமை களையும் விளக்குவது. viii. 963/1915/III

Q2:38

**வென்றி மாலைக் கவிராசர்**

i. திருச்செந்தூர்த் தலபுராணம்: (தொ. எ. 1917 பார்க்க); முதற் பதிப்பு; ii. மு. ரா. அருணாசலக் கவிராயர்; ஸ்ரீராமச் சந்திரவிலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூலை, 1911; iv. செ.மு.உ.ப. 184; v. 22×14 செ.மீ.; vi. 1–8–0; vii. முருகனது ஆறுபடை வீடுகளில் ஒன்றாகத் திகழும் திருச் செந்தூர்த் தலத்தைப் பற்றியது இப்புராணம். சூரபதுமனைக் கொன்று தேவர்க்கு வாழ்வளித்து முருகன் வந்து தங்கிய பெருங்கோயில். 'ஜெயந்தி மான்மியம்' என்னும் வடமொழி நூலிலிருந்து தமிழில் மொழிபெயர்த்து விருத்தப் பாவினால் செய்யப்பெற்றது. பதினெட்டு அத்தியாயங்களும் எண்ணூற்றுத் தொண்ணூற்று ஒன்பது திருவிருத்தங்களும் கொண்டது. மு.ரா. அருணாசலக் கவிராயர் இதற்கு அருஞ்சொற்பொருள் எழுதிச் சேர்த்துள்ளார். viii. 267/1911/III.

Q2:38

**வேங்கடாசலம் பிள்ளை, சிதம்பரம்**

526. i. சீகாழிப் புராணம்: முதற் பதிப்பு; ii. சி. வேங்கடாசலம் பிள்ளை; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 223; v. 18×13 செ.மீ.; vi......; vii. அருணா சலக் கவிராயர் செய்தருளிய செய்யுளில் அமைந்த சீகாழிப் புராணத்தை அடியொற்றி அமைக்கப்பெற்ற தமிழ் உரைநடை நூல். தருமபுர ஆதீனத்தின் மகா சந்நிதானம் ஞானசம்பந்த மாசிலாமணி தேசிக மூர்த்தியின் கட்டளைப்படி ஆசிரியர் இந் நூலைச் செய்துள்ளார். 31 அத்தியாயங்கள் கொண்டது. அருஞ் சொற்பொருள் அகராதி நூலிறுதியில் சேர்க்கப் பெற்றிருக் கிறது. திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் முதலியோர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். viii. 290/1914/III.

Q2:38

**முகம்மது இப்ருஹீம் ஸாகிபு காதிரிய்யி, அ., மவுலபீ, வேலூர்**

788. **i.** மறண விளக்கம்; திருந்திய நான்காம் பதிப்பு; **ii.** அ. மவுலவி முகம்மது இப்ருஹீம் ஸாகிபு காதிரிய்யி, வேலூர், சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், இராயவேலூர்; **iii.** ஏப்ரல், 1914; **iv.** செ.மூ.ப. 48; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–4–6; **vii.** முகமது நபிக்கு இருந்த பொறுமையும், தனக்கு அவரிட மிருக்கும் அன்பும் வரை வேண்டுமென்று வேண்டிய பாடல் கள் இந்நூலில் உள்ளன. “பெரிய மரண விளக்கம் இருளு மனை தத் துலக்கும்” என்பது இதன் முழுப்பெயர். பல பதிகங் களாக இது அமைந்துள்ளது. இதில் அமைந்துள்ள பதிகங்களின் அகரவரிசை இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. **viii.** 42/1914/II.

**Q7 : 3**

**முஹம்மது இபுருஹீம் லெப்பை, எஸ்., ராணிப்பேட்டை**

789. **i.** கிபாயத்துல்ஸாலிகீன் ஹிக்காயாத்திஸ் ஸாலிஹுன்: முதற் பதிப்பு; **ii.** காளீ ஹஸன் அலிப்புலவர்; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலே, சென்னை; **iii.** செப்டம்பர், 1913; **iv** உ.ப. 322; **v.** 22×14 செ.மீ.; **vi.** 1–8–0; **vii.** இசுலாமியக் கொள்கைகள் சிலவற்றை விளக்குகின்றது. முகமது இப்ரஹீம் லப்பை அரபியிலிருந்த மொழிபெயர்ப்பைக் காளீ ஹசன் அலிப் புலவர் தமிழில் திருத்தி அமைத்துள்ளார். இருபது பாடங்களாக வும், அவற்றுள் ஒவ்வொன்றிலும் பல ‘ஹிகாயத்து’ களாகவும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. **viii.** 1012/1914/I.

**Q7 : 3**

**மைமுன் பீவி**

790. **i.** முனாஜாத்து: முதற் பதிப்பு; **ii.** ஜி. ஸ்ரீகந்தய்யா; வாணி விலாசம் அச்சியந்திர சாலே, திருநெல்வேலி; **iii.** பிப்ரவரி, 1912; **iv.** செ.மூ.ப. 8; **v.** 13×11 செ.மீ.; **vi.** 0–0–3; **vii.** தீச்செயல்களிலிருந்து விடுபட்டு அமைதியான வாழ்க்கையை நடத்த பக்குவம் பெறவேண்டும் என அறிவுறுத்தும் பாடல் களைக் கொண்டது. **viii.** 891/1912/I.

**Q7 : 3**

**ஷாஹுல் ஹமீது லெப்பை, பீ-ம., ஏறல்**

791. **i.** கைருத்துல் ஜமால் பீ நப் இற்றி ஜால்: முதற் பதிப்பு; **ii.** பீ. ம. ஷாஹுல் ஹமீது லெப்பை, ஏறல்; காந்திமதி விலாசம் பிரஸ், திருநெல்வேலி; **iii.** ஜுலை, 1912; **iv.** உ.ப. 1; **v.** 23×14 செ.மீ.; **vi.** 0–1–0; **vii.** ஒவ்வொரு திங்களிலும் நற்செயல்களைச் செய்யவும் குளித்தல், ஆடையணிதல்,

வீடுகட்டுதல், பிள்ளைகளுக்குப் பெயரிடுதல் முதலிய நிகழ்ச்சிகளை எவ்வாறு செய்வதென்றும் விவரித்துரைக்கும் ஒரு அட்டவணை. viii. 174/1912/III.

Q7 : 3

**ஷாஹுல் ஹமீது லெப்பை, (மொ.து.)**

792. i. ஸூறத்து யாஸீன்: முதற் பதிப்பு ; ii. ஷாஹுல் ஹமீது லெப்பை ; ஷாஹுல் ஹமீதுய்யா அச்சியந்திர சாலை, சென்னை ; iii. மே, 1913 ; iv. உ.ப. 32 ; v. 20×14 செ.மீ. ; vi. 0–4–0; vii. அரபி மொழியிலுள்ள "ஸூறத்து யாஸீன்" நூலைத் தமிழ் எழுத்தில் பெயர்த்து அமைத்த புத்தகம். அரபி எழுத்துக்கள் 28–ம் அதற்குப் பிரதியான தமிழ் எழுத்துக்கள் 28–ம் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இஸ்லாமியரின் இறுதிச் சடங்குபற்றிய மரபு களைத் தெரிவிக்கும் நூல். viii. 177/1913/III.

Q7 : 3

**ஷைகு மீரான் முஹியத்நின் சாஹிபு**

793. i. முஹம்மதியா மகத்துவம்: முதற் பதிப்பு ; ii. ஷைகு மீரான் முஹியத்தீன் சாஹிபு ; முஹம்மதியா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப. 2+1917 ; v. 22×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. இசுலாமிய விதி விலக்குகளைச் சரிவரத் தெரிந்து கொள்ளாமல் கண்டபடி பேசுபவர்களை முன்னிட்டு இது எழுதப் பெற்றது. வாழ்க்கையில் நடந்து வரும் ஆயிரக் கணக்கான எடுத்துக்காட்டுகளைச் சுட்டிக்காட்டி, முஸ்லீம்களுடைய நம்பிக்கை மேலும் அதிகம் உறுதிப்படும் பொருட்டும் பிற சமயத்தினருடைய மனம் இஸ்லாம் சமயத்தில் திரும்பும் பொருட்டும் இந்நூல் கோவை செய்யப்பெற்றது. மேலும், கிறித்துவ நண்பர்கள் முஸ்லீம்களையும் முகம்மது நபியர்களையும் பலவாறாய் பழித்து, "சுவிசேஷத்தின் உண்மை" ஏசுவோ முகம்மதுவோ யார் நம்பத்தக்கவர்?''—முதலிய பல நூல்களை வெளியிட்டுச் சொற்பொழிவு செய்து வருவதனால் அவர்கள் செய்திருப்பது குறித்தும் இதில் அதிகமாய் எழுதப் பெற்றிருக் கிறது. viii. 271/1911/III.

Q7 : 3

## 297·3 சமய வழிபாடு, தோத்திரம்

**அகுமது சாகிபு காமில், கடையநல்லூர்**

794. i. அருளானந்தப் புகழ்—முதற் பாகம்: முதற் பதிப்பு ; ii. காமில் அகுமது சாகிபு, கடையநல்லூர் ; காந்திமதி விலாஸம் பிரஸ், திருநெல்வேலி ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 447 ; v. 22×14 செ.மீ.; vi. 0—6—0 ; vii. இசுலாமிய சமய விளக்கத்தையும், கொள்கைகளையும்

செய்யுளில் அமைத்த ஒரு நூல். இதன்கண் இறசூல் நாமா, முகியித்தின் நாமா, மதிவாயல் திறவு, கதிர் வாயல் திறவு, சுழி முனை திறவு, கல்பு துறவு, குரு விளக்கம், இலாஹிப்பு பதிகம் என்னும் தலைப்புகளின்கீழ் பல பகுதிகள் உள்ளன. இசைப் பாடல்களும் இடையிடையே காணப்படுகின்றன. viii. 130/1912/I.

**Q7:4146**

**கந்தசாமி உபாத்தியாயர், ஐ., வாஞ்சூர்**

795. i. ஷாஹூல் ஹமீது ஆண்டவரவர்கள் பேரில் பதங்கள் : முதற் பதிப்பு; ii. பா. ராமசாமிப் பிள்ளை ; ஸ்காடிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. மே, 1915 ; iv. செ.மூ.ப. 8 ; v. 8 vo ; vi. 0—0—3 ; vii. நாகூரில் வணங்கப்படும் முகமதியப் பெரியார் ஒருவரைக் குறித்துப் புகழ்ந்து எழுதப் பெற்ற பக்திப் பாடல்கள். இப்பெரியாரின் பெயர் ஷாஹூல் ஹமீது என்பது நூலின் முகப்பிலிருந்து தெரிகிறது. viii. 298/1915/II **Q7:4146**

**செய்யிது முகம்மது ஷம்சுத்தீன் சாயபு, (மொ.து.)**

796. i. லத்திபு முஸ்தப விய்யத்துல் ஜிஷ்திய்யா : [சங்க சந்தக் கீர்த்தனம் நவரத்தின அலங்கார கீர்த்தனம்]: முதற் பதிப்பு ; ii. செய்யிது முகம்மது ஷம்சுதீன் சாயபு, ஷாஹூல் ஹமீதய்யா அச்சியந்திர சாலை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. செ.மூ.உ.எ. 24 ; v. 21 × 14 செ.மீ.; vi. 0—4—0; vii. தனிப்பட்ட ஓர் இசுலாமியன் கடவுளுக்குச் செய்ய வேண்டிய வழிபாடு முறைகளைப்பற்றி விவரிப்பதும், முகம்மது நபியையும் இசுலாமியப் பெரியார்கள் பலரைப் பற்றியும் புகழ்ந்து பாடும் பாக்களும் கொண்ட நூல். viii. 454/1912/III.

**Q7:4146**

**சையது மஸ்ஹூது ராவுத்தர், நா., ராஜபாளையம் சம்மந்தபுரம்**

797. i. மும்மணியாரப் பதிகம் : முதற் பதிப்பு ; ii. நா. சையது மஸ்ஹூது ராவுத்தர், ராஜபாளையம் சம்மந்தபுரம் ; சுந்தர விலாஸ அச்சியந்திர சாலை, இராஜபாளையம் ; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.எ. 24 ; v. 20 × 16 செ.மீ.; vi. 0-2-0; vii. அல்லாவைப் பற்றியும், முகம்மது நபியைப் பற்றியும் அவரது சீடரான அப்துல் காதர் தஸ்தகீரைப்பற்றியும் புகழ்ந்து பாடும் துதிப் பாடல்கள் அடங்கிய நூல். இம்மூவரையும் துதிக்கும் பதிகங்களில் முறையே "சர்வ ஜீவ தயாபரனே" என்றும், "அகமதே பரம சற்குருவே" என்றும், "குருமுகையதீன் குதுபே" என்றும் பாடல் தோறும் ஈற்றில் அமைத்துப் பாடியுள்ளார். இப்பதிகங்கள் தவிர, அவையடக்கம், முகவுரைப் பாயிரம், ரஸூல் நாயகத்தின் காதல் ஆகிய வெண் செந்துறையாலாகிய பாடல்

களும் பல இதில் உள்ளன. காஞ்சீபுரம் சிதானந்த தேசிகர், ராஜபாளையம் வே. சுப்பராஜா முதலியோர் பலர் இந்நூற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள். **viii.** 48/1912/IV.

**Q7:4146**

**798. i. நாகூர் காதர் அவுலியா பேரில் பதமும் சந்தனக் கூட்டின் சிறப்பும் :** மூன்றும் பதிப்பு ; **ii.** ஷேக் நூற் புலவர், உறையூர்; பாக்கிய விலாச பிரஸ், திருச்சி; **iii.** 1913; **iv.** செ.மூ.ப.8; **v.** 15×11 செ.மீ.; **vi.** 0–0–3; **vii.** நாகூரில் சமாதி கொண்டிருக்கும் இசுலாமிய பெரியாரைப் பற்றிய தோத்திரம். காவடிச் சிந்து, கப்பல் பாட்டுச் சந்தங்களிலும் இரண்டு பாடல்கள் உள்ளன. இந்தப் பெரியாரின் சமாதியில் நிகழும் சந்தனக் கூட்டுத் திருவிழாவின் சிறப்பையும் தெரிவிக்கிறது. **viii.** 622/1913/II.

**Q7:4146**

**நாகூர் மீரா லெப்பை, த.உ.(தொ. து.)**

**799. i.** யாஸையிதீமாலே முகியத்தீன் மாலே : **ii.** எஸ். எம். முஸ்தப்பா லெப்பை ; றிவாயத்துல் இஸ்லாம் அச்சியந்திர சாலே ; **iii.** 1915 ; **iv.** செ.மூ.ப. 46 ; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0–12–0 ; **vii.** அரேபிய சமய கருத்துக்களே அடிப்படையாகக் கொண்ட இஸ்லாமிய பக்திப் பாடல்கள் நிறைந்த நூல். யாஸையிதீமாலே, செய்கப்துல் காதிறு நயினர் லெப்பை ஆலீம் புலவர்கள் செய்த முனஜாத்து முதலிய செய்யுட்கள், காயற்பட்டணம் திருப்புகழ் பாடிய மகாவித்துவான் அருள்வாக்கி காசிம் புலவர், பூவாற்றிலிருந்து நபிநாயகம்பேரில் பாடிய இன்னிசை, கிலுறு நபிபேரில் முனஜாத்து, முகியித்தீனண்டகையின் முனஜாத்து, ஷெய்கு சிந்தா சேகு மதார் பதீவுத்தின் சாகிபு பேரில் முனஜாத்து, நபியுல்லாபேரில் இன்னிசை, பதுறுத்தீன் புலவர் பாடிய முனஜாத்து, எக்கீன் சாகிப் பாடிய சரஸ்வதிப் பாட்டு, முகியித்தீனண்டவர்கள் பேரில் முனஜாத்து ஆகியவை இத்தொகுதியில் அடங்கியுள்ளன. **viii.** 395/1915/III.

**Q7:4146**

**பாவா முகையதீன் புலவர், மேலச்செவல்**

**800. i.** தோத்திரப் பாப்பதிகம் : **ii.** பாவா முகைதீன் புலவர் மேலச்செவல் ; நூருல் இஸ்லாம் பிரஸ் அச்சியந்திரச்சாலே, திருநெல்வேலி ; **iii.** 1915 ; **iv.** செ.மூ.எ. 10 ; **v.** 14×12 செ.மீ.; **vi.** ....; **vii.** செய்யது அப்துல்காதர் என்னும் முகமதிய மதகுருவைப்பற்றிய தோத்திரமாலே. இதில் பத்துப் பாக்கள் அடங்கியுள்ளன . **viii.** 1068/1915/III.

**Q7:4146**

**பீர்முகம்மது சாகிபு, தக்கலே.**

**801. i.** அமிர்த விளக்கம், முதற் பதிப்பு : **ii.** அகமது சாகிபு ; ஸ்ரீ காந்திமதி விலாசம் பிரஸ், திருநெல்வேலி ; **iii.** டிசம்பர்,

1911 ; iv. செ.மூ.எ. 40 ; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. இசுலாமிய மதத்தின் "கலிமா" என்னும் சாதியின் தொடர்பை விளக்கும் நாற்பது பாடல்களைக் கொண்டது. viii. 131/1912/I.

Q7:4146

**ஷெய்க் அப்துல்காதரு நயினூர் லப்பை ஆலிம் புலவர், காயற் பட்டணம்**

i. முகைதீன் ஆண்டகை தோத்திரம் (தொ.எ. 1658 பார்க்க) : ii. மா. இப்ராஹிம் சாகிப், கயத்தாறு ; கலாரத்நாகரம் அச்சுக் கூடம், சென்னை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 11 ; v. 17×11 செ.மீ.; vi. 0–12–0 ; vii. அண்ணல் நபிநாயகத்தின் பேரன் எனப் புகழப்படும் முகைதீன்மேல் பாடப்பெற்ற துதி. 'கவுது முகைதீனே' என்னும் விளித் தொடரைக் கொண்டு ஒவ் வொரு பாடலும் முடிவடைகிறது. viii. 847/1914/II.

Q7:4146

**ஷெய்கு முகம்மதுப் பாவலர், வா. அ., அடியகமங்களம்**

802. i. தொழுகை அம்ரு மாலை : முதற் பதிப்பு ; ii. வா. அ. ஷெய்கு முகம்மது பாவலர், அடியகமங்களம் ; எட்வர்டு அச்சுக் கூடம், திருவாரூர் ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.எ. 101 ; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0 ; vii. முகமதியர்களின் தூய நூலான குரானில் கூறப்பட்டுள்ள அறவுரைகளைப் பின்பற்று மாறு இதிலுள்ள நூறு பாடல்கள் வலியுறுத்துகின்றன, இவற்றுள் பெரும்பாலன அந்தாதித் தொடையாக அமைந் துள்ளன. viii. 145/1914/II.

Q7:4146

## 297·5 சமய ஒழுக்க நூல்கள்

**செய்யிது முகம்மது ஆலிம் புலவர், சை. மு., ஹாபிலு, கீழ்க்கரை**

803. i. முனாஜாத்து மாளிகை : முதற் பதிப்பு ; ii. எச். பி. முகமது அப்துல்லா சாயிபு ; முஸ்லீம் அபிமானி பிரஸ் சென்னை ; iii. எப்ரல் 1911; vi. செ.மூ.ப. 20 ; v. 14×11செ.மீ.; vi. இல வசம் ; vii. பெரியோர்களிடத்தில் மன்றுடி வேண்டிக்கொள் ளும் பொருளில் பாடப்படும் எண் வரையறுக்கப்பட்ட தமிழ்ச் செய்யுளுக்குப் பெரியோர்கள் 'முனாஜாத்து என வழங்கியுள் ளனர். முகமது நபியையும், வேறு பல இஸ்லாமியப் பெரி யார்களையும் துதிக்கும் 66 விருத்தப் பாக்களைக் கொண்டது. viii. 732/1911/II.

Q7:4

**முஹம்மத்தாஹிர் சாயபு, அ. (மொ. து.)**

804. கொரான் ஷரிபு: **ii.** முஹம்மத்தாஹிர் சாகிபு, அ.; வரிட்டி அச்சுக்கூடம், தஞ்சை; **iii.** 1915; **iv.** உ.ப. 21; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0-2-0; **vii.** தூய மறைநூலான குரானின் முதல் பாகமாகிய அலிபுலாம் மீம்ஜுஸீலைத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இஸ்லாமானவர்களுக்கு விளங்காத தமிழ்ச்சொற்களுக்கு அதற்கு நேரான அரபுச் சொற்களைக் கொண்டும், ஹிந்துக்களுக்கு விளங்காத அரபுச் சொற்களுக்குத் தமிழ்ச் சொற்களைக் கொண்டும் விளக்கிக் காட்டியுள்ளனர். **viii** 518/1915/IV.

**Q7:4**

**முஹம்மது ஹூசைன் லெப்பை, கோஜு**

805. **i.** முனுஜாத்: முதற் பதிப்பு; கோஜு முஹம்மது ஹுசைன் லெப்பை; நீமா பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்; **iii.** ஜூலை, 1913; **iv.** செ.மூ.ப. 14; **v.** 20×13 செ.மீ.; **vi** 0-0-6; **vii.** முஹயிதீன் ஆண்டவர் என்னும் இசுலாமியப் பெரியார் மீது பாடப்பெற்ற துதிப்பாட்டு. அம்மானை, இன்னிசை, ஞான இன்னிசை, முதலிய தலைப்புக்களில் பாடல்கள் உள்ளன. காலைஹஸனலிப் புலவர் இதற்குச் சாற்றுக்கவி கொடுத்துள்ளார். **viii.** 429/1913/III.

**Q7: 4**

## 297·63 நபிகள் வரலாறு

**காலை ஹஸனலிப் புலவர், மேலப்பாளையம் (மொ. து.)**

806. **i.** சுல்தான் இபுருஹிமுபுனு அதுஹமுடைய கிஸ்ஸா: முதற் பதிப்பு; **ii.** ஷாஹுல் ஹமீது லெப்பை; ஷாஹுல் ஹமீதியா அச்சியந்திர சாலை, சென்னை; **iii.** நவம்பர், 1912; **iv.** உ. ப. 140; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0-12-0; **vii.** இப்ரஹிம்பின் ஆதம் என்னும் இசுலாமிய முனிவரைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றை விவரிப்பது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. புஸ்தானுன் அஹ்க்கம் பீதிக்கிரி கிஸ்ஸத்தி இபுருஹிம் புனு அதுஹம் என்ற அரபித் தமிழ் நூல் தமிழ் எழுத்துக்களால் எழுதிப் பதிப்பிக்கப்பட்டது. **viii.** 174/1913/III.

**Q7: 4**

**முகம்மது இப்ருகிம் சாயபு, ஆ. நூ.**

807. **i.** பல முத்து மாலை நலம் பத்தி தாலை: **ii.** ஆ. நூ. முகம்மது இப்ருகீம் சாயபு; ஹக்கீம் பிரஸ், பள்ளப்பட்டி; **iii.** ஆகஸ்ட், 1911; **iv.** செ.மூ.ப. 24; **v.** 21×13 செ.மீ.;

vi. 0–2–0 ; vii. முகம்மது நபியைப் பற்றியும், சில இசுலாமியப் பெரியார்களைப் பற்றியும் கூறும் தோத்திரப் பாமாலை. viii. 587/1911/III.

Q7:4

ஸியாஉத்தீன் காதிரி, ஷாமுஹம்மது

808. i. மஜ்மூஉமுஃஜிஸாத் துர்றசூல் : முதற் பதிப்பு ; ii. மோ. அ ஷாஹுல் ஹமீது லெப்பை : ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மே, 1913 ; iv. உ.ப. 31+366 ; v. 22×15 செ.மீ.; vi. 1–8–0 ; vii இசுலாமிய குரு முகமது நபியின் வாழ்க்கையையும், அவர் நடத்திய அதிசயங்களையும் விளக்கும் நூல். விரிவான பொருளட்டவணை நூல் முகப்பில் உள்ளது. viii. 179/1913/III.

Q7:4

## 297·64 இசுலாமியப் பெரியார்கள் வரலாறு

காஸீ ஹசன் அலிப் புலவர்

809. i. முஹ்யித்தீனாண்டவர்கள் காரண சரித்திரம் : முதற் பதிப்பு; ii. மொ. அ. ஷாகுல் ஹமீது லப்பை, திருவல்லிக்கேணி; சென்னை ; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலை, சென்னை , iii. செப்டம்பர், 1911 ; iv. உ.ப. 18+320 ; v. 22×14 செ.மீ.; vi. 1–4–0; vii. முகம்மது நபிக்குப் பின் வந்த பெரியாராகிய முகையித்தீன் அப்துல்காதர் என்பவர் பற்றிய வரலாறு. ஷாகுல் அமீது லப்பை அரபுத் தமிழில் வெளியிட்ட நூலையும் வேறு சில நூல்களிலுள்ள செய்திகளையும் ஒன்று சேர்த்து நல்ல தமிழில் எழுதி வெளியிடப்பட்ட நூல். இவ்வரலாற்றின் பொருளட்டவணை முகப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 691/1911/IV.

Q7 : 332

ஜமாலு முகம்மது ஆலிம் சாகிபு, தை. மு.

810. i. கல்வத்து நாயகர் காரண சரித்திரம் ; முதற் பதிப்பு ; ii. தை. மு. ஜமாலு முகமது ஆலிம் சாகிபு ; ஷாஹுல் ஹமீதிய்யா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1914 ; iv. உ.ப.+ செ.மூ.ப. 76 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. கல்வத்து நாயகர் என்று அழைக்கப்பெறும் முகமதியப் பெரியார் ஒருவரின் வாழ்க்கை வரலாற்றையும், பெருமைகளையும் விளக்கும் நூல். viii. 956/1914/III.

Q7 : 332

**ஷாஹூஹம்மதுஸியா உத்தீன் காதிரி.**

811. i. ஸீறத்துல் பாறூக் : முதற் பதிப்பு ; ii. மொ. அ. ஷாஹூல் ஹமீது லெப்பை ; ஷாஹூல் ஹமீதிய்யா அச்சியந்திரச்சாலை, சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 370 ; v. 21×14 செ.மீ., vi. 1–8–0 ; vii. இஸ்லாம் சமயத் தலைவர் முகம்மதுவின் இரண்டாம் சீடரான உமர் அவர்கள் வாழ்க்கை வரலாறும், அவருடைய வீரமிக்க செயல்களும் விளக்கப்பட்டுள்ளன. viii. 854/1914/III.

Q7 : 332

**ஹகீம்ஷைக் தாவுத் சாகிபு & ஹகீம் முகம்மது ஷம்சுத்தின் சாகிபு (மொ. து.)**

812 i. அமீர் ஹம்ஜா ஜங்க் (இரண்டாம் பாகம்) : முதற் பதிப்பு ; ii ஹகீம் ஷைக்தாவூத் சாகிபு & ஹகீம் முகம்மது ஷம்சுத்தின் சாகிபு, ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ.ப. 410 ; v. 21×14 செ.மீ.; vi. 1–10–0 ; vii. இது ஹஜ்ரத் ஹபீபு நபி முஹம்மது முஸ்தபா சல்லல்லாகு அலைஹி, வ, ஆலிஹி, வஅஸ் ஹாபி ஹிவசல்லம் அவர்களின் சிறிய தந்தையாகிய அமீர் அம் ஜாஜங்க் என்பாரைப் பற்றிய வரலாறு. இந்தி மொழியிலிருந்து இது தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. viii. 59/1911/III.

Q7 : 332

# 300 சமூதாய சாத்திரங்கள்

## 301 சமூகம், பொது

**சுப்பிரமணிய அய்யர், ஜி.**

813. i. ஆசாரத் திருத்த வியாசங்கள் : முதற் பதிப்பு ; ii. வி. வி. சண்முக நாடார், விருதுப்பட்டி ; சுதேசமித்திரன் அச்சுக்கூடம், சென்னை ; iii. எப்ரல், 1914 ; iv. உ. ப. 7+248+2 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii, நம் நாட்டுப் பழக்க வழக்கங்களில் தோன்றும் மாறுதல்களைக் குறிக்கும் நிகழ்ச்சிகளும், அவைபற்றி அமைந்த கருத்துக்களும் அடங்கியுள்ளன கண்மூடிப் பழக்கங்களைத் திருத்துதல் போன்ற இன்றியமையாத பல பொருள்களைப் பற்றி இந்நூல் விவரிக்கிறது. பதினோர் அத்தியாயங்கள் இதில் உள்ளன. நாடுகளைச் சுற்றி வருதல், சமயப் பயிற்சிகள், உண்மை, கீழினத்தார், பெண்களின் முன்னேற்றம், பிறநாட்டுப் பெண்கள், சாதி, சமய ஒற்றுமை முதலிய பல பொருள்கள் பற்றியது. இவற்றுள் பெரும்பாலும் 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் அவ்வப்போது தலையங்கத்தில் தோன்றியவையாம். viii. 208/1914/II.

Y

**வெங்கடாசலம் அய்யர்; எஸ்.**

814. i. சமூக விளக்கம் ; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கோ. ; iii. 1914 ; iv. உ.ப. 118 ; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. நம் நாட்டின் பஞ்சத்திற்குரிய காரணங்கள் இன்னின்ன வென்றும், நம் சமூகப் பழக்கங்கள் இன்னின்னவென்றும் இந்நூலின்கண் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 7/1915/III.

Y

## 301.246 சமூக முரண்பாடும் நிவாரணமும்

**அரங்கநாத முதலியார், எஸ்., வேப்பேரி.**

815. i. இலாகிரிப் பிரியரென்னும் குடியர் துயரம் : முதற்பாகம் ; [கள்ளானந்தக் களிப்பு] : முதற் பதிப்பு ; ii. ஜி. ஆர். பாலய்ய நாயுடு, சென்னை ; பாலவிர்த்தி போதினி அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 48 ; v. 20×17 செ.மீ.; vi. 0–4–0 ; vii. குடியினால் தங்கள் உடம்பையும் செல்வத்தையும் இழந்து மக்கள் துன்புறுவதைக் கண்டு, ஆசிரியர் மனமிரங்கி இந்நூலைச் செய்ததாகக் கூறுகிறார். குடித்தனக்காரர்களின் துயரம் எனப் பொருள்படும்படி 'குடியர் துயரம்' என இதற்குப் பெயர் வைத்துள்ளாராம். குடியினால் பலர் படும் பாடுகளைக் கற்பனை செய்து, கதை போல, இந்நூலில் ஆசிரியர் சொல்லியுள்ளார். இதில் சில நாட்டுப் பாடல்களும் இடை இடையே தரப்பட்டுள்ளன. இறுதியில் 'கள்ளானந்தக் களிப்பு' என்ற பாடல் ஒன்றும் உள்ளது. viii. 500/1911/I.

Y

**பாலசுப்ரமண்ய பிள்ளை, பி. எம். (தொ. து.)**

816. i. ஞானசிகாமணி—முதற்பாகம் : முதற் பதிப்பு; ii. டி. பி. சரவண பிள்ளை & எம். ஆர். சுப்பிரமணிய அய்யர் ; ஸ்ரீகிருஷ்ண விலாஸ பிரஸ், திருச்சி; iii. மே, 1912 ;iv. செ.மூ.எ. 144 ; v. 21×14 செ.மீ.; vi 0–2–0 ; vii. மின்னுரியல்பும், விலைமகளிர் சூழ்ச்சி பற்றிய செய்திகளும் இதில் உள்ளன. அருணசல புராணம், தனிப்பாடற்றிரட்டு, தாயுமானவர், பட்டணத்துப் பிள்ளை பாடல், விவேக சிந்தாமணி முதலான பல பிரதிகளிலிருந்து எடுத்துத் தொகுக்கப்பெற்ற செய்யுட்களைக் கொண்டது. பெண்களின் இயல்பில் நிறையுடைமை நிறையின்மை என்னும் இருபொருள் பற்றிய பாடல்கள் உள. விலைமகளிரின் சூழ்ச்சி, அவர்கள் நயமாகப் பேசி ஆடவரை மயக்கிப் பொருள் பறிக்கும் தன்மையும், அவர்கள் வலையில் விழாது பிழைத்துப் போகுமாறும், அறிவுரைகள் தரப்பட்டுள்ளன, viii. 855/1912/II.

Y

## 301. 4243 பொது மகளிர்

**தேவேந்திரநாத பண்டிதர், சி. சி., செழுமணவை**

817. i. தாய்க் கிழவிகள் தளுக்கு : முதற் பதிப்பு ; ii. சி. எம். மாணிக்கவேல் முதலியார், மயிலை, சென்னை ; சிவகாமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ.ப. 70 ; v. 21×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. பொது மகளிர் தொழில் புரியும் இளம் பெண்களுக்கு, வழிகாட்டும் தாய்க் கிழவிகளின் சூழ்ச்சிகளை விளக்குவது. இக்கிழவிகள் அழகுடைய இளம் பெண்களை எக்குலத்தினராயினும் விலைக்கு பெற்றுத் தாசித் தொழிலில் ஈடுபடுத்தி, ஆடவர்களை காதல் செய்யும் நிலைமைகளை விளக்குவது. "தசக்கி மசக்கித் தட்டிப் பறிக்கும் தாய்க்கிழவிகளின் தளுக்கு" என்பது இதன் முழுப் பெயர். தாய்க்கிழவியின் அறிவுரை, பொது மகளிர் செய்தி, மருந்திடு முறை முதலியவை குறித்த பாடல்கள் உள. நான்கு அத்தியாயங்களில் துரைரங்கப் பிள்ளை என்பார் தாய்க்கிழவியின் வயப்பட்டுத் தாம் பட்ட பாடுகள் முதலியவற்றைக் கதைபோலக் கூறியுள்ளார். viii. 493/1912/IV.

**Y221**

## 301.426 மனையற இயல்

**அப்துல் காதிர், எம். (மொ. து)**

818. i. 'பாத்திமா' நாயகியின் திருக் கலியாணம்: முதற் பதிப்பு ; ii. எம். அப்துல் காதிர், முஹம்மதிய பிரஸ், வாணியம்பாடி ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 12 ; v. 17×11 செ.மீ. ; vi. ........ : vii. முகமதுநபியின் மகள் பாத்திமாவின் திருமணத்தைப் பற்றியது. அத் திருமணத்திலிருந்து இக்கால இசுலாமியர்கள் அறிந்து கொள்ள வேண்டிய கருத்துக்களும் இதில் அடங்கியிருக்கின்றன. மவுலானா மவுல்வி அஷ்நப் அலி சாயுபு அவர்களின் "இஸ்லாஹுுற்ருஸுும்" என்னும் உருதுநூலைக் கொண்டு தமிழாக்கம் செய்யப்பட்டது. viii. 406/1913/IV.

**Y221**

**இராமலிங்க செட்டி, பழ. க. ராம**

819. i. தனவணிகர் விவாக விளக்கச் சூருவளி : முதற் பதிப்பு ; ii. ஜி. ராமச்சந்திரராவ் ; விவேகபாநு பிரஸ் ; மதுரை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ.ப. 12 ; v. 23×15 செ.மீ. ; vi. .. ....... ; vii. தனவணிக விவாக விளக்கம் என்ற பெயருடன் கண்டனூர் நா.பெ.ந.மு. முத்துராமன் செட்டியார் வெளியிட்ட துண்டுப் பத்திரத்திற்குக் கண்டனமாக அமைந்தது இந்நூல். தனவணிகர் திருமணச் சடங்குகளில் தாலி அணிதல் பற்றி இவரது கருத்தை மறுத்து உரைக்கின்றார் சூருவளி ஆசிரியர். அதோடு இவர் எழுதிய 'கலியாணச்

சடங்கு விளக்கம்' என்னும் நூலையும் சற்குரு விளக்கம் என்னும் வேறொரு நூலையும் சுட்டிக்காட்டி, இவரது உரைகள் உண்மைக்கு மாறுபட்டவை என்று அறுதி இடுகிறார். எழுத்துப் பிழை, கருத்துப் பிழை, வாக்கியப் பிழை முதலிய 26 பிழைகளை அவர் எடுத்துக் காட்டியுள்ளார். viii. 885/1913/III.

Y221

**ஏகாம்பர முதலியார், செஞ்சி**

i. தாயாரிடம் பெண் புலம்ப தாய் விடை கொடுத்தல் (தொ.எ. 1905 பார்க்க) : முதற்பதிப்பு ; ii. நாராயணசாமி முதலியார், களத்தூர் ; ஆதிகணாதிபதி அச்சுக்கூடம், சென்னை, சூலை ; iii. பிப்ரவரி, 1911 ; iv. செ.மூ.எ. 8 ; v. 21×14 செ.மீ.; vi. 0–3–0 ; vii. தன் கணவன் படுத்திய கொடுமை தாளாது தாய் வீடு வந்து மகள் முறையிடுவதும், தாய் கணவனை வெறுக்கலாகாது என்று அறிவுரை சொல்லிக் கணவன் வீட்டிற்கு அனுப்பி வைப்பதும் ஆகிய நிகழ்ச்சிகளை விவரிக்கிறது. viii 497/1911/I.

Y221

**கம்பர்**

820. i. மங்கல வாழ்த்து வாழி : முதற் பதிப்பு ; ii. தி. அ. முத்துசாமிக் கோனார், திருச்செங்கோடு ; விவேகதிவாகரன் அச்சுக்கூடம், சேலம் ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 16 ; v. 22×14 செ.மீ.; vi இலவசம் ; vii. 'கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் இயற்றிய மங்கல வாழ்த்து வாழி' என்பது இதன் முழுப் பெயர். "கங்காகுலம் விளங்கக் கம்பர் சொன்ன வாழ்த்துரைத்து" என இவ்வாழ்த்துப் பாடலில் காணகிறது. கொங்கு இருபத்திநான்கு நாட்டினர் பாராட்டிப் போற்றி வருவது இம்மங்கல வாழ்த்து. கொங்கு வேளாளர் திருமணச் சடங்குகள் முடிந்தவுடன் இப்பாடலைக் கூறி வாழ்த்த, நாட்டுப் புலவர் என்னும் மரபினர் உள்ளனர். இவர்கள் கம்பரின் மாணாக்கர் எனத் தம்மைச் சொல்லிக் கொள்கின்றனராம். இவ்வாழ்த்து அகவற் பாக்களாக அமைந்துள்ளது. வாழி எனப்படும் இறுதிப் பகுதியில் கட்டளைக் கலிப்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், வெண்பா முதலிய பாக்கள் சேர்ந்தமைந்துள்ளன. viii. 231/1914/I.

Y221

**சித்திரம் பிள்ளை, அ., மதுரை**

821. i. நலுங்குப் புத்தகம் : முதற் பதிப்பு : ii. எ. முத்துசாமி நாயுடு, தாராபுரம் ; ஸ்ரீசாமுண்டீஸ்வரி அச்சுக்கூடம், தாராபுரம் ; iii. அக்டோபர், 1913 ; iv. செ.மூ.ப. 8 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. திருமணக் காலங்களில் பாடப்படும்

நலுங்குப் பாடல்கள் இவை. ஊஞ்சல் பாட்டும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. **viii. 761/1913/IV.**

**Y221**

**பத்மாஸினி அம்மாள்**

**822. i.** கல்யாணக் கும்மி : முதற் பதிப்பு ; **ii.** வி. வெங்கடாசல சாஸ்திரி, பாலக்காடு ; வித்யா கல்பதரு அச்சுக்கூடம், கல் பாத்தி, பாலக்காடு ; **iii.** மார்ச், 1914 ; **iv.** செ.மூ.ப. 32 ; **v.** 14×11 செ.மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** திருமணக் காலத்தில் பெண்கள் பாடுகின்ற விளையாட்டுப் பாடல்கள், பிராமணர்களின் திருமணத்தில் பாடப்பெறும் பாட்டு. பிராமணர்கள் பேசும் நடையில் உள்ளது. **viii. 1010/1914/I.**

**Y221**

**823. i.** நலங்கு பத்தியம் : முதற் பதிப்பு ; **ii.** வி. வேங்கடாசல சாஸ்திரி, பாலக்காடு : வித்யாகல்ப்பதரு அச்சுக்கூடம், கல்பாத்தி, பாலக்காடு ; **iii.** மே, 1914 ; **iv.** செ. மூ. ப. 32 ; **v.** 14×11 செ.மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** திருமணக் காலத்தில் பாடப்படும் நலங்குப் பாடல், "திலகமிடுகிற பாடல்" "ஆரம் சாற்றுகிற பாடல்" முதலியன உள. ருக்மணி கிருஷ்ணனுக்கு நலங்கிடுகிற முறையில் இது பாடப்பட்டிருக்கிறது. **viii. 646/1914/II.**

**Y221**

**பாலாம்பாளம்மையார்**

**824. i.** பாலமிருதபோதம் [வித்தியா வித்தியா சரித்திரம்]: முதற் பதிப்பு ; **ii.** பாலாம்பாளம்மையார், சச்சிதாநந்த அச்சியந்திர சாலை, சென்னை ; **iii.** பிப்ரவரி, 1911 ; **iv.** உ. ப. 8+1+68 ; **v.** 14×11 செ.மீ.; **vi.** 0–4–0; **vii.** இதன் ஆசிரியை வாழ்க்கையில் தான் கண்ட உண்மையை உலகத்தார் அறியும் பொருட்டு இந்நூலை எழுதியுள்ளார். ஆண் பெண் திருமணஞ் செய்து கொள்வது கடவுளது படைப்பை நடத்துவதற்கும், வீடு பேற்றின் பொருட்டு ஒருவருக்கொருவர் துணையாய் இருப்பதற்குமாகும் என்ற உண்மையை இதில் விளக்குகிறார். இவர் நாராயண தேசிகர் என்பவர்பால் அருளுரை பெற்று, தாமறிந்த உண்மையை இந்நூல் மூலம் வெளியிடுவதாகக் கூறுகிறார். இதற்குப் பல புலவர்கள் சிறப்புப் பாயிரம் அளித்துள்ளார்கள். **viii. 563/1911/I.**

Y221

**பெருமாளய்யங்கார், ரா. ம., மதுரை**

**825. i.** சௌராஷ்ட்டபவள்ளுக் ஹேறாயெபொகுளுவாஸ்பொஸ்தொவ் : **ii.** ரா. ம. பெருமாளய்யங்கார், மதுரை, சித்திரசாலா அச்சி யந்திர சாலை, மதுரை ; **iii.** ஜனவரி, 1915 ; **iv.** செ. மூ. ப. 5 ;

v. 16×12 செ. மீ.; vi. இலவசம்; vii. மணமகன் குடும்பத்தாருக்கும் மணமகள் குடும்பத்தாருக்குமிடையே திருமண நாளில் தோன்றும் கேளிக்கை உரையாடல்கள். இம் முறை சௌராட்டிரர்களிடம் பெரிதும் காணப்படுகிறது. இந்நூல் சௌராஷ்டிர மொழியிலும் தமிழ் எழுத்துக்களிலும் எழுதப் பட்டுள்ளது. viii. 302/1915/II.

Y221

மணமங்களர், பி.

826. i. மர்மசாஸ்திர தர்மபோதினி: இரண்டாம் பதிப்பு; ii. எஸ். கலியாண சுந்தர பட்டர், சென்னை; ஸ்ரீநிகேதனம் அச்சுக்கூடம், சென்னை; iii டிசம்பர், 1910; iv உ. ப. 8+48; v. 18×12 செ.மீ.; vi. 0–5–0; vii. இது ஆண்மை யின் அடிப்படை எதுவென்றும், அவனுடைய இலக்கணங்கள் எவை என்றும் எளியோரும் அறிந்து கொள்வதற்காக எழுதப் பட்ட ஒரு சிறிய உரை நூலாகும். ஆண் பெண் தொடர்பான மறைவுச் செய்திகளும் இரு வகுப்பாரும் நடந்து கொள்ள வேண்டிய வகையும் எழுதப்பட்டிருக்கின்றன. இந்தச் செய்தி களைப் பற்றி ஒளியாது கூறும் பல நூல்கள் ஆங்கிலத்தில் இருப் பினும் தமிழில் இதுவே முதல் நூல் என்று குறிக்கப்பட்டுள்ளது. இதைப்படிப்பதனால் இருபாலர்க்கும் உயர்ந்த நன்மைகள் ஏற்படு மென்றும் கூறப்பட்டுள்ளது. "மணமங்கள மாலிகா" வரிசையில் இது நாலாவது நூலாகும். vii. 76/1911/I.

Y221

மாதவையா, ஏ.

827. i. கல்யாணப் பாட்டு; முதற் பதிப்பு; ii. ஸ்ரீநிவாச வரதாச் சாரி அண்டு கம்பெனி, சென்னை; iii. மார்ச், 1914; iv. செ. கூ . எ. 98; v. 19×13 செ. மீ.; vi. 0–2–0; vii. திருமண நிகழ்ச்சிகளில் பலவற்றைத் தொகுத்துரைப்பது. நாலு கட்டங்களாகப் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் முறையே "பெண் பெற்றோர் பெருமை", "வரன் தேடும் வைப வம்", "முதல்நாள் சம்பிரமம்", "மற்றநாள் மகிமைகள்" ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன. "போஜன விமரிசை" என்னும் பகுதியில் கறியும், சோறும் தின்பண்டங்களும் எவ்வாறு இருக்கவேண்டும் என்று மணமக்களின் பெற்றோர் விருப்பத்தை உரைக்கிறது. இறுதியில் "இதோபதேசம்" என்னும் பகுதிகளில் பெரிய மனிதர்கள் திருமணத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளை விளக்குகின்றது. இந்நூலாசிரியர் எழுதிய பிற நூல்களின் விவர மும் இந்நூலின் இறுதியில் குறிக்கப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர் 'இந்து தாசன்' என்னும் புனைப் பெயரில் இந்நூலை வெளியிட் டுள்ளார். viii. 343/1914/II.

Y221

**வெங்கடேச சர்மா, எஸ். பி., மதுரை**

828. **i.** இல்லாண்மை அல்லது கிரக விசாரணை : முதற் பதிப்பு ; **ii.** ஜி. வி. சுப்ரமணியம், மதுரை ; ஸ்ரீ மீனும்பிகை அச்சாபீஸ், மதுரை ; **iii.** நவம்பர், **1914; iv.** உ. ப. 71; **v.** 19×11 செ.மீ; **vi.** 0–4–0 ; **vii.** குடும்பத்தை நடத்தும் பொறுப்பு, முறை இவை பற்றியும், நலமான வாழ்வுப் பற்றியும் இதில் விளக்கப்பட்டுள்ளன. சில தொத்து நோய்களிலிருந்து காப்பாற்றிக் கொள்ளத்தக்க வழிகள், அவை ஏற்படின் செய்ய வேண்டிய சிகிச்சை முறைகள் ஆகியவற்றை விவரிப்பது. வீடுகளில் இருக்க வேண்டிய சில மருந்துச் சாமான்களைக் குறித்தும் விவரித்துள்ளார். **viii. 635/1914/IV**.

**Y221**

**ஷாஹுல் ஹமீது லெப்பை, மொ. அ.**

829. **i.** மிபுத்தாஹுஸ்ஸலாஹ பீயிலாஹின்னிக்காஹ : **ii.** ஷாஹுல் ஹமீதய்யா அச்சியந்திரச் சாலை, சென்னை ; **iii. 1915 ; iv.** உ.ப. 200 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 1–0–0 ; **vii.** இசுலாமிய சமயத்தினரின் மணவாழ்க்கையைப் பற்றி விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. மேலும், இருபாலரின் புணர்ச்சி வகையினையும் இதில் காணலாம். கருக் கொள்ளுதல் தொடர்பாக ஆண்பாலர் பெண்பாலர்களுக்கு உளதாகும் நோயின் தன்மைகளையும் அதனை நீக்கும் முறைகளையும் இந்நூல் விளக்குகிறது. **viii. 209/1915/III.**

**Y221**

## 301.4520954 சமூகம் : இந்திய சாதிகள்

**அண்ணுசாமி சாஸ்திரி, கே.ஏ., மதுரை.**

830. **i.** சௌராஷ்ட்ரப் பிராமணர் சரித்திரம் : முதற் பதிப்பு ; **ii.** கே. ஏ. ஸ்ரீனிவாசதாதாச்சாரி, திருநெல்வேலி & அண்ணுசாமி சாஸ்திரி, மதுரை; மற்றும் பலர்; விவேகபாநு அச்சியந்திரச்சாலை, மதுரை ; **iii** மே, **1914** ; **iv.** உ. ப. 12 ; **v.** 22×14 செ மீ. ; **vi.** 0–4–0 ; **vii.** சௌராட்டிர பிராமண சமுதாய வரலாற்றை விவரிப்பது. சௌராட்டிர நாட்டினைப் பிறநாட்டாரும் பிற சமயத்தாரும் நெருக்குவதால் நாட்டில் பல இடத்திலும் மக்கள் குடிபெயர்ந்தனர். தென்னிந்தியாவில் குடியேறியவர்கள் மட்டும் தங்கள் பழைய நடையுடை செயல்களில் வேறுபாடின்றி வாழ்ந்து வருகிறார்கள். இதிகாச புராணங்களிலிருந்து இம்மரபு பற்றிய செய்திகளைத் தொகுத்து ஆசிரியர் இந்நூலில் கொடுத்துள்ளார். **viii.** 632/**1914/II**.

**Y592.44**

**அமிர்த கவிராயர், பாலூர்**

i. கோவைசிய மாலை (தொ. எ. 1576 பார்க்க); ii. இ. ராம. குருசாமிக் கோனார்; இராமச்சந்திரா விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1914; iv. செ. மூ. ப. 5; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. கோகுல மக்களைப் பற்றிய பாடல்; கலிவெண் பாவாலாகியது. "அவ்வையார் சொன்ன வசதிக்கோவை தன்னைச் செவ்வையாய்ப் பெற்று மகிழ் சீர்த்தியோர்" என்று இதில் வரும் அடிகள் அவ்வையார் தொடர்பு இம்மக்களுக்கு உண்டாகியிருக்கிறது என்ற உண்மையை வெளிப்படுத்துகிறது. viii. 1154/1914/III.

Y592.44

**அர்த்த நாரீச நாயகவர்மா, சு., சேலம்**

831. i. பள்ளியர் பரத்வம்: முதற் பதிப்பு; ii. சு. அர்த்த நாரீச நாயகவர்மா, சேலம்; ஷண்முக விலாசம் அச்சுக்கூடம், சேலம்; iii. மார்ச், 1914; iv. உ. ப. 18; v. 20×14 செ.மீ.; vi. ...... ; vii. 1910 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் "ஸ்ரீவன்னியகுல பிரகாசிகை" என்னும் ஒரு நூல் வெளியிட்டனர். அதில் வன்னியரைக் குறித்து ஆசிரியர் கொடுத்த கருத்தைத் தங்கள் இனத்திற்குக் குறைவாக மதித்துக் கம்மியர்கள் "பள்ளிப் பத்து" என்னும் ஆபாச நூலை வன்னியரைக் குறித்து வெளி யிட்டனராம். அதில் குறித்தவை பொய்மையானவை என்று காட்டுவதற்காக "பள்ளியர் பரத்துவம்" என்னும் இந்நூலை வெளியிட்டுள்ளார். viii. 10/1914/II.

Y592·44

832. i. வன்னி குலோத்கர்ஷ தீபிகை: முதற் பதிப்பு; ii. சு. அர்த்த நாரீசநாயகவர்மா, சேலம், சுகவனபுரி; சுதேசாபிமானி பிரஸ், சேலம்; iii. டிசம்பர், 1911; iv. செ மூ.எ. 2+84; v. 16×12 செ.மீ.; vi. 0–1–0; vii. "வன்னியக்ஷத்திரிய" குலத் தாரின் மேன்மையை எடுத்து உரைப்பது. இதிகாசம் முதலிய நூல்களில் காணும் இம்மரபினரது பெருமையும், இந்நாட்டில் இம்மரபால் பல்வேறு குலப்பெண்களுடன் வாழ்வதையும் சுட்டிக்காட்டுகிறது. சூரிய சந்திர குலத்தினரைக் காட்டிலும் "அக்கினி" குலத்தவரான "வன்னியக்ஷத்திரிய குலம்" உயர்ந்த தாகும் என்று இவ்வாசிரியர் கூறுகிறார். viii. 94/1912/I.

Y592·44

833. i. வன்னிவம்ஸ ப்ரகாசிகை: முதற் பதிப்பு; ii. சு. அர்த்த நாரீசநாயகவர்மா, சேலம், சுகவனபுரி; சுதேசாபிமானி பிரஸ், சேலம்; iii. டிசம்பர், 1911; iv. உ. ப. 2+44; v. 17×12 செ.மீ.; vi. 0–2–0; vii. இதில் வன்னியகுலக்ஷத்திரியர் வரலாறு தெளிவாகக் காட்டப்பட்டிருக்கின்றது. முதல் நூற் களாகிய "ஜாதி சங்கிரக சாரம்", "வருணதர்ப்பணம்" என்னும்

இரண்டும் பெரிய நூலாக அமைத்திருத்தலின், சுருக்கமாக இந் நூல் செய்யப்பெற்றது. வன்னிய குலச் சிறுவர் தமது குலத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கத் துடன் வினு—விடையாக இதனை எழுதியுள்ளார். **viii. 93/1912/I.**

**Y592·44**

**ஆறுமுக நயினர், த. , பேட்டை**

**834. i.** சாலியவந்தனர் புராணம் என்ற மகாசைவர் புராணம்: **ii.** எம். நல்லசிவன் பிள்ளை; ஸ்ரீவிஜயலக்ஷ்மி விலாச அச்சி யந்திரசாலை, பாளையங்கோட்டை; **iii.** ஜூலை, 1914; **iv.** செ.மூ.உ.எ. 44; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0–4–0; **vii** சாலிய அந்தனர்களது வரலாற்றை உரைக்கும் செய்யுட் புராணம். திங்கள் தோறும் இதழாக வெளிவரும் இப் புராண மலர் வரிசையில் இது முதல் மலரின் மூன்ருவது இதழாகும். சாலிய அந்தனர் அவாசியிற் குடியேறிய படலம் தரப்பட்டிருக் கிறது. வடக்கே க்ஷாமக்கண்டாரியர் ஆட்சியால் தெற்கே சாலியர் ஒதுங்கினர் எனக் கூறுகிறது. உரை விளக்கமும், பொழிப் புரையும் தரப்பட்டுள்ளன. **viii. 281/1914/III.**

**Y592·44**

**835. i.** மகாவாக்கியங்களும் அத்துவித விளக்கமும்: முதற் பதிப்பு; **ii.** எம். நல்லசிவன் பிள்ளை, பாளையங்கோட்டை & த. ஆறுமுக நயினர் பிள்ளை, பேட்டை; ஸ்ரீவிஜய லக்ஷ்மி விலாச அச்சியந்திர சாலை, பாளையங்கோட்டை; **iii.** ஜூன், 1914; **iv.** உ.ப.+செ. மூ. ப. 36; **v.** 22×14 செ.மீ.; **vi.** தனிப்பிரதி 0–4–0 ஆண்டுக்கு ரூ. 2–8–0; **vii.** சாலிய வந்தனர் புராணம் என்னும் மகா சைவ புராணத்தில் இது இருபத்தைந்தாவது. உதிட்டிரனுக்கு அருளுரை அருளிய புராணம். படலத்தின் உரை விளக்கத்துடன் கூடியது. இதழாக திங்கள் தோறும் வெளியிடப்படும் இப்புராண வரிசையில் இது முதலாவது இதழாகும். இப்படலத்தில் வரும் "அத்துவைத மகா வாக்கியங்களுக்கு" விளக்கமும் உள்ளது. **viii. 635/1914/II.**

**Y592·44**

**கதிரேசச் செட்டியார், மு., மகிபாலன்பட்டி**

**836. i.** நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் சீர்திருத்தம்: முதற் பதிப்பு; **ii.** மெ. அரு. நா. இராமநாதச் செட்டியார், விவேக பாநு அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** நவம்பர், 1911; **iv.** உ.ப. 12+43+1; **v.** 21×14 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழாவின்போது (25-4-1911-ல்) நிகழ்த்திய சொற்

பொழிவு கல்வி, சமயம், விவாகமுறை, வியாபாரம், தருமங்கள், ஒற்றுமை என்ற தொகுப்புக்களில் நகரத்தார்களின் சீர்திருத்தக் கருத்துக்களை ஆசிரியர் வெளியிட்டிருக்கிறார். viii. 512/1911/IV.

Y592.44

**கந்தசாமிக் கவிராயர், எம். ஆர்., மதுரை**

837. i. நாட்டுக்கோட்டையாரைப் பற்றிய சில விசேடக் குறிப்புக்கள் : முதற் பதிப்பு ; ii. எம். ஆர். கந்தசாமிக் கவிராயர், மதுரை ; விவேகபாநு பிரஸ், மதுரை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ.ப. 130 ; v. 23×15 செ.மீ.; vi. இலவசம் ; vii நாட்டுக் கோட்டை நகரத்தார் எனப்படும் தனவைசிய குலத்தார்களின் வரலாறு பற்றியது. இவ்வினத்தாரின் பழைய நிலை, இறை ஈடுபாடு, சமயப் பற்று, நாட்டுப் பற்று, மொழிப் பற்று இவர்கள் செய்து வரும் அறங்கள் ஆகியவற்றை விவரித்துரைப்பது. 'வித்யாநுபாநு' பத்திரிகையிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப்பட்டது. இவ்வெளியீடு பேலைச்சிவப்பட்டி சன்மார்க்க சபையாரால் வெளியிடப்பட்டதாகும். நகரத்தாருக்குள்ளே இயல், இசைத் தமிழ்களில் வல்லவராய் விளங்கிய பெரியோர்களின் பெயரும், தொண்டும் சுருக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளன. viii. 1131/1914/IV.

Y592.44

**கிருஷ்ண பண்டிதர், ஆர். & ராமஸ்வாமி ஐயர், ஜி. கே.**

838. i. சௌராஷ்ட்ர சரித்திரம் : முதற் பதிப்பு ; ii. ஜி. கே. ராமஸ்வாமி அய்யர் ; சுதேசி அச்சியந்திரசாலை, கும்பகோணம்; iii. செப்டம்பர், 1911 ; iv. உ. ப 11 ; v. 19×12 செ.மீ.; vi. 0–4–0 ; vii. சௌராட்டிர பிராமணர்கள் என்று சொல்லும் இனத்தாரைப் பற்றிய வரலாறு. வேதசாஸ்திர புராண இதிகாசங்களிலிருந்து எடுத்து எழுதப் பெற்றது. இவர்கள் சௌராட்டிர நாட்டிலிருந்து இந்தியாவின் பல பகுதிகளுக்கும் குடியேறியவர்கள். இவர்கள் பேசுகின்ற மொழி 'சௌரசேனி' என்ற பிராகிருத மொழியைச் சேர்ந்ததாம். viii. 811/1912/I.

Y592.44

**குருசாமி இராயர், வி.**

839. i. வன்னியகுல க்ஷத்திரிய மஹா சங்கப் பதிகம் : இரண்டாம் பதிப்பு ; ii. வி. குருசாமி ராயர் ; புஷ்பாலயாம்பாள் விலாச அச்சுக்கூடம், திருக்கோயிலூர்; iii. 1911; iv. செ.மூ.எ. 1+10 ; v. 18×11 செ.மீ.; vi. 0–0–3 ; vii. வன்னியர்கள் எனும் வகுப்பாரைச் சென்னை வன்னிய குலக்ஷத்திரிய மகா சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்து பயன்பெறத் தூண்டும் ஒரு நூல். இதில் குலநலம், கல்வி, ஒற்றுமை, குலமுறை, நாட்கடன்கள்,

குலவொழுக்கம், முயற்சி, மனுநீதி, கழக நியதிகள் ஆகிய கருத்துக்கள் பாடல்கள் வாயிலாக விளக்கப்பட்டுள்ளன. மேற்படி மகாசங்கத்தின் மாவட்டச் செயலாளரான அண்ணுசாமி நாயகர் அவர்களால் இயற்றப்பட்ட சாற்றுக் கவி ஒன்றும் இந்நூல் முதலில் இடம் பெற்றுள்ளது. viii. 683/1911/I.

Y592·44

840. i குலசங்கரமாலை : முதற் பதிப்பு ; ii. கே. கன்னியப்ப ஆசாரி, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை ; விஸ்வகுலோத்தாரன அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.ழ எ. 103+5+5 ; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. இந்து சமுதாயத்தில் பிராமணர்களுக்கு உள்ள சில சலுகைகளும் உரிமைகளும் பாமாலையாக இந்நூலில் அமைந்துள்ளன. சிறப்பாக இது விஸ்வ பிராமணர்களின் சமூகத்தைப் பற்றி விவரிக்கிறது. இதனோடு 'ரிஷிமூல பஞ்சகம்', 'விபர பஞ்சகம்' என இரண்டு பஞ்சகங்களும் இதில் உள்ளன. viii. 84/1914/I.

Y592·44

## சட்டைநாதக் கவிராயர், அடைகாசநகர்

841. i. சான்றோர் புராணம்: முதற் பாகம் ; முதற் பதிப்பு ; ii. என். வடிவேல் நாடார், பொறையாறு ; இரத்தின விலாசம் பிரஸ், பொறையாறு ; iii. ஜனவரி, 1914 ; iv. செ.ழ.எ. 469 : v. 22×14 செ.மீ.; vi 1–0–0 ; vii. சான்றோர்கள் என்று சொல்லப்படும் சாணர்களின் பழைய வரலாற்றை விளக்குவது. இவர்கள் காளியின் மக்கள் என்று சொல்கின்றார்கள். காவியங்கள் போல நாட்டுப் படலம், நகரப் படலம் என்னும் பகுதிகள் அடங்கியுள்ளன. அதன் பின் 'உற்பத்திப் படலம்' தொடங்கி, 'நகர்புகு படலம்' வரை இதில் உள்ளது. இப்புராணத்தின் முதற் பகுதியே இந்நூல். இப்புராணம் பாடி இருநூற்று அறுபது வருடங்களுக்குப்பின் முதன்முறையாக இது அச்சுக்கு வருகின்றது என்பது முகவுரையால் தெரிகின்றது. viii. 398/1914/I.

Y592·44

## சாமிநாத ஆச்சாரியார், அ. மு. (மாணிக்க யோகியார்)

842. i. சென்சஸாபாஸதர்ப்பன முக்கிய கவனிப்பு : முதற் பதிப்பு ; ii. கொ. கன்னியப்ப ஆசாரி, சென்னை, விஸ்வகுலோத்தாரன அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 24; v. 16×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. 'விஸ்வகுலோத்தாரர்கள்' எனப்படும் வகுப்பில் எடுக்கப்பட்ட குடிக்கணக்கு அறிக்கையில் உள்ள குறைபாடுகளை இந்நூல் விவரிக்கின்றது. viii. 766/1913/IV.

Y592·44

**சுந்தராச்சாரியார், சி. கி.**

843. i. விசுவபிரம புராணம் : மூன்றும் பதிப்பு ; ii கன்னியப்பாச்சாரியார், குளத்தூர் ; விசுவகுலோத்தாரான அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 271 ;v 15×11 செ.மீ. ; vi 0–0–8 ; vii. விஸ்வகர்மா மரபினரின் தோற்றமும் அவர்கள் கைக்கொள்ளவேண்டிய சமூக–சமய கோட்பாடுகளும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. திருவையாறு அ. முத்துசாமி பாரதி என்பார் தமிழ் மொழியில் பாடிய செய்யுட் புராணத்தை ஒட்டி எழுதப்பெற்ற உரைநடை நூல். இத்துடன் நாளுமாற்ற வேண்டிய கடன்களையும் சந்தியாவந்தனச் சுருக்கம், கௌரி பஞ்சாங்கம், தின ஓரை ஆகியவையும் கொடுக்கப்பட்டுள்ளன. சுப்பிரமணிய சாஸ்திரியார், கோ. வடிவேலு செட்டியார், மா. இராஜகோபால பிள்ளை ஆகியோர் பாடிய சாத்துக் கவிகள் முதலில் இடம் பெற்றுள்ளன. viii. 218/1915/IV.

Y592.44

**சுவர்ணம் எட்வார்ட் தூத்துக்குடி**

844. i. பாண்டிய வம்ச பாரம்பரை ; முதற் பதிப்பு ; ii. சுவர்ணம் எட்வார்ட், தூத்துக்குடி ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1911 ; iv. உ.ப. 12+150+2 ; v 21×14 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. சந்திரகுல அரசர்களாகிய பாண்டியர்களது மரபு வரலாற்றையும், அவர்களுடைய வீரமும் துணிவும் கொண்ட செயல்களையும் விவரிப்பது ; நெய்தல் நிலவாழ் பரதகுலத்தவர்களே பாண்டியனது வழியினர் என்று ஆசிரியர் கூறுகிறார். பாண்டிய நாட்டின் பழைய வரலாறுகளைக் கூறி, பரதகுல பாண்டியர் கிறித்துவ சமயத்தை மேற்கொள்பவர்களாய் ஆனார்கள் என்றும், அவர்களுக்குக் கிறித்துவ சமயத்தைப்பற்றி யுரைத்த பெரியார் யார் யார் என்றும் விவரித்துள்ளார்; viii. 756/1911/III.

Y 592·44

845. i. **தொண்டை மண்டலம் உயர் துளுவ வேளாளர் சரித்திரச் சுருக்கம்** : ii. இ. சுப்பிரமணிய முதலியார் ; எம்.எல்.வி. பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ.ப. 45 ; v. 21×14 செ.மீ ; vi. தனிப்பட்டவர்கள் உபயோகத்திற்கு இலவசம் ; vii. தொண்டை மண்டல துளுவ வேளாளர்களுள் சென்னையில் வசிக்கும் பொன்னேரி மரபார் கடைப்பிடிக்க அப்போதைக்கப்போது ஏற்படுத்திக்கொண்ட விதிவிலக்குகளும், கோத்திர சூத்திரம் முதலியவைகளும் அடங்கி இருக்கின்றன. பூணூல் அணிவிழா, திருமணம் முதலிய நிகழ்ச்சிகளுக்கு என்னென்ன முறை செய்யவேண்டும் என்ற

விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன. இம்மரபார் பல காலங்களில் முடிவு செய்த பல சமுதாயத் தீர்ப்பு விவரங்கள் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 314/1912/I.

Y592·44

**பாலசுந்தர நாயகர், மு. புரசை**

i. அக்கினிகுல க்ஷத்திரியர் பட்டப் பெயர் பிரபாவ மாலை, (தொ. எ. 846 பார்க்க) : மு. பாலசுந்தர நாயகர், புரசை; மதுகரவேணி விலாசம் பிரஸ், புரசை, சென்னை; iii. டிசம்பர், 1911 ; iv செ.மூ.உ.எ. 31+2 ; v. 19×11 செ.மீ.; vi 0–2–0 ; vii. அக்கினி குலத்தில் தோன்றிய வன்னிய மரபார்களின் பட்டப் பெயர்களை வரிசையாகக் கொடுத்து, அப்பெயர் வந்த காரணமும் விளக்கப்பட்டுள்ளது. viii. 367/1912/I.

Y592·44

846. i. அக்கினிப் பிரபாவ தீபிகை [அக்கினி குல க்ஷத்திரியர் பட்டப் பெயர் பிரபாவ மாலை] : முதற் பதிப்பு ; ii. மு. பாலசுந்தர நாயகர், புரசை ; மதுகரவேணி விலாசம் பிரஸ், புரசை, சென்னை ; iii. டிசம்பர், 191 ; iv. உ.ப. 33 ; v. 19×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. அக்கினியினது பெருமைகளைப் பல நூற்சான்றுகளுடன் வளக்கியுரைப்பது; viii. 367/1912/I.

Y592:44

847. i. **பிரசங்காபரணம்** ; ii. பெரியசாமி செட்டியார், இலக்ஷ்மி விலாசம் அச்சுக்கூடம், சேலம் ; iii. ஜனவரி, 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 34 ; v. 18×11 செ.மீ. ; vi. ....... ; vii. குலாலப் பிரம்மமே எல்லாக் கடவுள்களிலும் சிறந்தவர் என்று உரைப்பது. வேதத்திலிருந்தும் சித்தர் பாடல்களிலிருந்தும் வேறு பல நூல்களிலிருந்தும் சான்றுகள் எடுத்து விளக்கிக் காட்டியுள்ளார். நூல் இறுதியில் திருநீலகண்டர் துதி, குலாலரின் பெருமை ஆகியவற்றைப் பற்றிய பாடல்கள் உள. குலாளர்மீது பாடப்பெற்ற ஊசல் பாட்டும் இதில் உள்ளது; viii. 549/1913/I.

Y592:44

**மாணிக்க வாசக நாயக வர்மா, சே மு.**

848. i. அரசர்களின் நித்தியகனமச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. சே.மு. மாணிக்கவாசக நாயக வர்மா ; வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், இராயவேலூர் ; iii. அக்டோபர், 1911 ; iv. உ.ப.+செ.மூ.ப. 2+46+1 படம் ; v. 18×13 செ.மீ. ; vi. 1–4–0; vii. வன்னிய குலத்தவர்களுக்கு உரிய நாட் கடமைகளை விவரிப்பது. இவர்கள் பண்டைத் தமிழ் மன்னர் மரபில் வந்தவர்கள் என ஆசிரியர் துணிகிறார். தூக்கத்திலிருந்து

எழுந்தது முதல் நாளும் கைக்கொள்ள வேண்டிய கடமைகளும், சந்தியாவந்தன முறைகளும் 'பூணூல் அணிதல்', 'அமாவாசை தர்ப்பணம்' ஆகிய முறைகள் பற்றியும் இதில் விவரித்துக் காட்டப்பட்டிருக்கின்றன; viii. 175/1911/IV.

Y592:44

**விஜயதுரைசாமி கிராமணி, தண்டையார்பேட்டை**

849. i. ஆர்ய க்ஷத்திரியகுல விளக்கம்; முதற் பதிப்பு; ii. சா. பொன்னுசாமி ராஜா & த. விஜய இராஜரத்ன கிராமணி; திருமயிலை; புரோகிரஸிவ் அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1910; iv. உ.ப.+செ.மு.ப. 4+4+4+11+262; v. 21×14 செ.மீ.; vi. 1–4–0; vii. இந்நூல் க்ஷத்திரியர்களின் தோற்றத்தை விளக்கப்புராணங்களினின்று மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. சாணார் என்கிற கிராமணி வகுப்பார் க்ஷத்திரிய சாதியைச் சேர்ந்தவர்கள் என்பதை இந்நூல் விளக்க முற்படுகிறது. இந்நூலில் பல ஆங்கில நூல்களிலிருந்தும், தெலுங்கு நூல்களினின்றும் மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. இடையிடையே பல நூல் மேற்கோள் பாடல்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும், பல ஆசிரியர்கள் இந்நூல்பற்றிச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 237/1911/I.

Y221

**வெங்கிட்டராமன் செட்டியார், வெ. பெ.**

850. i. ஸ்ரீயாகக்ஷத்திரிய குலப் பிரகாசிகை—முதற்பாகம்; முதற் பதிப்பு; ii. வெ. பெ. வெங்கட்டராம செட்டியார், சென்னை; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப.+செ.மு.ப. 251; v. 22×14 செ.மீ.; vi. 1–4–0; vii. யாகக்ஷத்திரியர் என்று வழங்கப்பெறும் தெலுங்க செட்டியார் குலத்தவரின் தோற்றமும் வரலாறும் இந்நூலின் கண் விளக்கப்பட்டுள்ளன. ஆசிரியரின் நண்பர் எழுதியுள்ள முகவுரையால் ஆசிரியரும் இக்குலத்தைச் சேர்ந்தவர் என்பது தெரியவருகிறது. ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. இவை முறையே 'தேவிபிரபாவம்' 'பூலோகத்தின் பிரபாவம்', 'தீர்த்தயாத்திரைப் பிரபாவம்' 'நீதிகளும் தெய்வீக சம்பத்தும்' 'வாணிகம் செய்தல்' என்பவற்றை விளக்குவதாம். பற்பல நூல் மேற்கோள்களுடன் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. viii. 849/1915/II.

Y221

**320·9 ஆட்சிமுறை நூல்: அரசியல்**

**எக்யம் அய்யர், டி. ஏ., புளியங்குடி**

851. i. இராஜாங்க நூல்: முதற் பதிப்பு; ii. டி. ஏ. எக்யம் அய்யர்; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி;

iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 32 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. ஆட்சிமுறைமை பற்றிப் பள்ளி மாணவர்கள் அறியும்பொருட்டு எழுதப்பெற்றது. கல்வி இலாகா, தபால் இலாகா முதலிய பல இலாகாக்களின் அமைப்பும் பயனும் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 74/1911/II.

W:5

852. i. இராஜாங்க நூல். திருந்திய 5-வது பதிப்பு ; ii. சி.எ. எக்யம் அய்யர், கழுகுமலை ; ஸ்ரீராமானுஜம் பிரஸ், தென்காசி ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 36 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இந்நூல் தொடக்கப்பள்ளி மாணவர்களுக்காகப் பொது அறிவு பெறும்பொருட்டு எழுதப்பட்டது. அரசியல் தொடர்பான செய்திகள் தரப்பட்டுள்ளன; viii. 870/1915/I.

W:5

**சுப்பிரமணிய ஐயர், தி. சே.**

853. i. துரைத்தன விளக்கம் : முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912 ; iv. உ.ப. 12+267 ; v. 17×12 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. ஆங்கிலேயர்களுடைய அரசியல் முறைகளையும், அவர்களால் இந்தியர்களுக்குக் கிடைத்திருக்கும் நன்மைகளையும் மக்களுடைய கடமைகளையும் விளக்குவது. ஆட்சியாளருடைய நன்மைகளையும் குடிகள் அவர்களுக்குச் செய்யும் பயன்களையும் மேற்படி நன்மைகள் அளிக்கப்படும் முறைகளையும், இந்தியாவின் சுருக்கமான வரலாற்றையும் முறையே தெரிவிப்பனவாகிய நான்கு பாகங்கள் இப்புத்தகத்தில் அமைந்துள்ளன. படங்களுடன் கூடியது. மாணாக்கர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பயன்படும்படி எழுதப்பெற்றது; viii. 625/1912/IV.

W:5

**சேஷகிரி ஐயர், கா. சு.**

854. i. பிரிட்டிஷ் துரைத்தன நற்பயன் ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1913 ; iv. உ.ப. 94 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஆங்கிலேயர் ஆட்சியால் இந்தியா அடைந்த நன்மைகளைப் பற்றிக் கூறுவது. இது முதலில் 'வித்யாவிஹாரிணி' என்னும் திங்கள் இதழில் வெளியிடப்பெற்றுப் பின் இந்நூல் உருக்கொடுக்கப்பெற்றது. 'துறைத்தனப் பாங்கு', 'ந்யாய பரிபாலனம்', 'பொதுஜன தேக சௌக்கியம்', 'கல்வி', 'பயிர்த் தொழில்', 'வர்த்தகம்' முதலிய பல செய்திகளையும் இந்நூல் விளக்கியுரைக்கின்றது. இரண்டாம் பாகத்தில் இந்திய

அரசாட்சியால் இங்கிலாந்தும் உலகமும் அடையும் நன்மைகளும் விளக்கப்பட்டுள்ளன. viii. 300/1915/III.

W:5

**நாராயணஸ்வாமி ஐயர், வி.கே,**

**855.** i. இராஜாங்க முறை நூல்; ஐந்தாம் பதிப்பு; எஸ். சிவராம ஐயர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி; செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. டிசம்பர், 1912; iv. உ.ப. 6+14+219; v. 18×12 செ.மீ; vi. 0–8–0; vii. தொடக்கப் பள்ளிகளுக்கும், பயிற்சிப் பள்ளிகளுக்கும் ஏற்பட்டிருக்கும் பாட முறைப்படி எழுதப்பட்டது. உள்நாட்டு அலுவலர்களின் அலுவல்கள், அஞ்சல், காவல் துறை முதலிய துறைகளைப் பற்றியும், வணிகம், கூட்டுறவு, சேமிப்பு முதலிய செய்திகள் பற்றியும் விவரிப்பது. பதினேழு அத்தியாயங்கள் கொண்டது. தொடக்கப் பள்ளி ஆசிரியர் பயிற்சிக்குரிய வினாத் தாள்கள் சிலவும் (1906-லிருந்து 1911 வரை) இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 12/1913/I.

W:5

**856.** i. இராஜாங்க முறை நூல்; திருந்திய பதிப்பு; ii. எஸ். சிவராம அய்யர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. நவம்பர், 1913: iv. உ.ப. 20+225+ஒரு படம்; v. 18×12 செ.மீ; vi. 0–8–0; vii. தொடக்கப் பள்ளிகளுக் காக அமைந்த ஆட்சி முறை நூல். மாவட்ட ஆட்சி மொழி பற்றியும். அரசியலார் மக்களுக்குச் செய்துள்ள பல்வேறு நன்மைகளைப்பற்றியும், அரசின் பல்வேறு துறைகளைப் பற்றியும் விரிவாக உரைப்பது. பதினேழு அத்தியாயங்கள் கொண்டது. ஐந்தாம் 'ஜார்ஜ்' பேரரசரின் உருவப்படம் இதில் சேர்க்கப் பட்டிருக்கிறது. viii. 842/1913/IV.

W:5

**857.** i. இராஜாங்க முறை நூல்: எட்டாம் பதிப்பு; ii. எஸ். சிவராமய்யர் அண்டு சன்ஸ்; இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 244; v. 19×13 செ.மீ; vi. 0–10–0; vii. பள்ளி மாணவர்க்கென எழுதப்பட்டது இந்நூல். அரசியற் செய்திகள், ஊராட்சி முறைகள், அற வொழுக்கம், இவை போன்ற செய்திகளைப் பற்றி விரிவாகக் கூறும் நூல். பல்வேறு துறைகளின் அலுவல்களை நன்கு விளக்கிக் கூறும் நூல். viii. 1043/1915/III.

W:5

தூரம் அகற்றலாம் என்றும் விவரித்துள்ளார். இடை யிடையே பொருத்தமான படங்களைக் கொண்டும் விளக்கம் தரப்பட்டுள்ளது. viii. 1036/1913/III.

X61

861. i. செல்வ விருத்தி விளக்கம்; ii. சுப்பிரமணிய அய்யர்; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. உ.ப. 181; v. 18×11 செ.மீ., vi 1–0–0, vii. நாகரிகமற்ற நிலைமையிலிருந்து நாளடைவில் நாகரிகப்பேற்றை மக்கள் அடையுங்கால், எவ்விதம் செல்வப் பெருக்கம் உண்டாகும் என்பதையும், செல்வத்தின் வளர்ச்சியையும், பண்டம் கைமாறுதலேயும், செல்வத்தின் பங்கீட்டு முறைகளையும் விவரிப்பது. இறுதியில் வறுமையின் காரணங்களும் அதனை யொழிக்கும் வழிகளும், கூட்டுறவு முறைகளால் அவற்றை எம்மட்டில் அகற்றலாம் என்பதும் விளக்கப்பட்டிருக்கின்றன. ஐந்து பாகங்களாகப் பகுத்து, 22 அத்தியாயங்களில் ஆசிரியர் இதனை அமைத்துள்ளார். viii. 296/1915/IV.

X 61

## 338. 0954 தொழில் முறை

862. i. இந்தியர்களால் செய்யப்படும் வியாபாரத்தையும், தொழிலேயும் வளர்க்கும் வகை; ii. தி ஆல் இந்தியா கமர்ஷியல் பியூரோ; ஸ்ரீனிவாசா பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 48; v. 18×13 செ.மீ; vi. 1–0–0; vii. வாணிகம் செய்வது எப்படி என்றும், இந்திய வாணிகத்தை எவ்வாறு வளர்ப்பது என்றும், இந் நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. மேலும், வாழ்க்கைக்கு இன்றியமையாத சில பொருள்களைச் செய்யும் முறையினையும் இந் நூலின்கண் காணலாம். viii. 447/1915/III.

X

**டின்ஷா, எம்.**

863. i. பவர்த்தறியின் நெசவுக்காரர்களுக்கு கைட்; முதற் பதிப்பு; ii. சவுத் வொர்த் துரை, சென்னை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. மே, 1913; iv. உ.ப. 2+52; v. 18×13 செ.மீ; vi. ......; vii. நெசவு ஆலைகளில் வேலை செய்வோர்க்கு உரிய துணை நூல். தறியின் உறுப்புகளும், அவைகள் செய்யும் வேலைகளும், அவற்றை நெசவுக்காரர் கவனித்து வரவேண்டிய வகையும் பற்றி விவரிப்பது. சென்னை பக்கிங்காம் மில்லில் வீவிங் மாஸ்டரான சவுத் வொர்த் துரை இதனைப் பார்வையிட்டுத் திருத்தியுள்ளார். தறி உறுப்புகளுடைய ஆங்கிலப் பெயர்கள் நூல் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 262/1913/III.

X

**342.42 ஆங்கில அரசியல்.**

**இலக்குமணப் போற்றி, தச்சநல்லூர்**

864. **i.** ஆங்கில அரசியல் : முதற் பதிப்பு ; **ii.** இலக்குமணப் போற்றி, தச்சநல்லூர் ; ஆரியப்பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலி ; **iii.** டிசம்பர், 1911 ; **iv.** உ.ப. 17 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** இலவசம் ; **vii.** ஒரமில்லாத அறமும், உலக வாழ்க்கைக்கு இன்றியமையாத நன்மைகளும், ஆங்கில அரசாட்சியில் இந்தியர்களுக்குக் கிடைத்த முறைகளை விவரிப்பது. ஆங்கில அரசாட்சியில் தமக்குள்ள பற்றைக் காட்டுவதற்காக இயற்றப்பெற்றது. மாட்சிமையுற்ற ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் மன்னரது முடிவிழாவின்போது பேசிய உரை. **viii.** 771/1911/IV.

**W561**

**349·54 இந்தியா: சட்டம்**

**அய்யர், என். எஸ்.**

865. **i.** விவகார சட்ட போதினி : முதற் பதிப்பு ; **ii.** என். எஸ். அய்யர் ; மினர்வா அச்சியந்திரசாலை, சென்னை ; **iii.** எப்ரல், 1911 ; **iv.** உ.ப. 11+262 ; **v.** 22×15 செ.மீ. ; **vi.** ....... ; **vii.** பெரும்பாலும் பர்மா நாட்டிலுள்ள செட்டிப் பிள்ளைகள் முதலிய தென்னிந்தியர்களுடைய பயனுக்காக இயற்றப்பட்டது. இது பதினெட்டு அத்தியாங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. செட்டிப் பிள்ளைகளுக்கு வேண்டிய எல்லா 'சிவில் கிரிமினல்' சட்டங்களையும், அதை விளக்கும் தீர்ப்புகளையும், எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. செட்டியார்கள் இந் நூலைக் கவனம் செலுத்திப் பார்த்தால் எவ்வளவோ பணம் வீணுவதிலிருந்து. அவர்கள் மீளலாம் என்பதை எடுத்துக்காட்டுகிறது; **viii.** 227/1911/III.

**Z44**

866. **i.** கிராம கிரிமினல் ரிவின்யூ மான்யூலும், தேவஸ்தான ஆக்டும் : முதற் பதிப்பு ; **ii.** சரஸ்வதி விலாச புக் டிப்போ அண்டு கே. என். சங்கரன், சென்னை ; 'நல்லாயன்' அச்சியந்திரசாலை, கிச்சினர் அச்சுக்கூடம், சென்னை ; **iii.** நவம்பர், 1913 ; **iv.** உ.ப. 1+107 ; **v.** 22×14 செ.மீ ; **vi.** .... ; **vii.** சிற்றூர் அலுவலர்களின் பயனுக்காக வெளியிடப்பட்டது. சிற்றூர் தலைமை அலுவலர் கடமையும், 'கிராமப் பஞ்சாயத்து' வரவு–செலவு செய்திகள் முதலிய பல கடமைகளும் தெளிவாக்கப்பட்டுள்ளன. 1890 ஆம் ஆண்டின் ஆறுவது சட்டப்படி அறச் செயல்களுக்கு நம்பி

ஒப்பிக்கப்படும் செல்வத்தை ஒருவர் தமதாக்கி ஆட்சிசெய்வதற்கான கட்டுபாடுகள் ஏற்படுத்துவதற்கு உண்டான சட்டங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன; viii. 274/1914/I.

Z44

**சங்கர அய்யர், இ. அண்டு சங்கரலிங்கம் பிள்ளை, அ.**

867. i. சென்னை ராஜதானியின் பூஸ்திதிகளிலுள்ள நிலத்தைப் பற்றிய 1908 வருடத்திய 1 ஆவது ஆகட்டும் வியாக்கியானமும்: முதற் பதிப்பு; ii. பி. வி. சபாபதி முதலியார்; புரொக்ரெசிவ் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1911; iv. உ.ப. 22+472+30; v. 22×14 செ.மீ; vi. 5–0–0; vii. சென்னை மாநிலத்திலுள்ள நிலத்தைப்பற்றிய 1908 ஆம் ஆண்டின் 1–வது சட்டம்; 1909 ஆம் ஆண்டின் சென்னை 4–வது சட்டத்தின் திருத்தங்களும் சேர்ந்தது. சென்னை சட்டசபையில் முடிவெடுத்து, 1908 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 25 ஆம் நாள் ஆளுநரின் அனுமதியும், 1908 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 28 ஆம் நாள் கவர்னர்-ஜெனரலுடைய அனுமதியும் பெற்று, நடைமுறையிலுள்ளது. அது பதினேழு அத்தியாயங்களைக் கொண்டது; viii. 804/1911/I.

Z44

## 349·54[1] முகம்மதிய சட்டம்

**முஸ்த்தபா லெப்பை**

868. i. இஸ்லாமிய மார்க்கச் சட்டம்; ii. முஸ்த்தபா லெப்பை; ஹிமாயத்துல இஸ்லாம் பிரஸ்; iii. 1915; iv. உ.ப. 72; v. 21×14 செ.மீ; vi. 0–6–0; vii. நபிமார்கள், மார்க்கம், நாயனுடைய கட்டளை முதலியவற்றில் உண்மையாய் நடக்கவேண்டும் என்பதை வகுத்துக் காட்டுவது. 41 பாடங்களில் இஸ்லாமியர் கொண்டொழுக வேண்டிய நெறிகள் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 697/1915/III.

Z(Q 7)

**முஹம்மது ஜீயாவுத்தின் சாஹிபுகாதிரி, ஷா.**

869. i. அக்பனுல்பஹுயிலு; முதற் பதிப்பு; ii. மொ. அ. ஷாஹுல் ஹமீது லெப்பை; ஷாஹுல் ஹமீதய்யா அச்சியந்திர சாலை, சென்னை; iii. ஜூன், 1912; vi. உ.ப. 10+756; v. 22×15 செ.மீ.; vi. 3–0–0; vii. இசுலாமியர்களின் வழிமுறை உரிமைகளைப் பற்றி விவரிக்கும் சட்ட நூல்; viii. 213/1912/III

Z(Q7)

## 370 கல்வி : பொது

**சிவசுப்பிரமணிய ஐயர், ம. வெ.**

870. i. அருங்கலை விளக்கம்; முதற் பதிப்பு; ii. ம. வெ. சிவசுப்ரமணிய ஐயர், கூனூர்; காக்ஸ்டன் அச்சியந்திர சாலை, சென்னை; iii. டிசம்பர், 1914; iv. செ.மு.உ.ப. 380+1; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0; vii. பழங்காலக் கல்விக் கொள்கைகளைக் கொண்டு 380 வெண்பாக்களின் தொகுப்பு இந்நூல் புதிய வேதியல், பொருளியற் கலைகளின் இயல்பு களை விவரித்துரைப்பது. viii. 471/1915/I.

T

**சுந்தராம்பாள், சி. என்., சென்னை**

871. i. பெண் கல்வி; முதற் பதிப்பு; ii. ஜெ. என். ராமநாதன்; மெய்கண்டான் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1913; iv. உ.ப. 8; v. 21×15 செ.மீ; vi.......; vii. பெண் கல்வியைப் பற்றிய ஒரு சொற்பொழிவு. "ஆசார சீர்திருத்த" மலரில் இது பன்னிரண்டாவது வெளியீடு. பெண்பாலுக்குரிய சமூகக் கடமைகளை விளக்கியுரைப்பது. viii. 168/1913/IV.

T

## 370.4 கல்விபற்றிய கட்டுரை

சுப்பைய நாடார், சி.ச., விருதுபட்டி அண்டு கந்தசாமி குற்றாலவர்மா, எஸ்.

872. i. கல்வியும், செல்வமும்; ii. வே.வ. சண்முக நாடார், விருதுபட்டி; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 12; v. 20×13 செ.மீ.; vi. 0–0–6; vii. கல்வியும், செல்வமும் என்னும் இரு பொருள்களைப் பற்றிய கட்டுரையாக அமைந்தது இந்நூல்; பல மேற்கோள்கள் காட்டி விளக்கியுரைக்கப்பட்டுள்ளன. இவ்விரண்டு பொருளும் ஆண்பால், பெண்பால் என்னும் இரு சாரார்க்கும் இன்றியமையாதது என்று எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. viii. 625/1914/I.

T

## 371.3 போதன முறை : கைவேலை

இஸ்ரேல் (மோஸஸ்)

873. i. பின்னயோலை வேலை; முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ்;

iii. ஜூலை 1912 ; iv. உ.ப. 6+80 ; v. 18×13 செ.மீ. ; vi, 0-8-0; vii. கிண்டர்கார்டன் பள்ளிகளில் கைத்தொழில் பயிற்சி கற்பிப்பதற்கான துணை நூல் பனையோலைகளைக் கொண்டு பல வேறு பொருள்களை ஆக்கும் முறை படங்களுடன் விவரிக்கப்பட்டிருக்கிறது. இப்படங்கள் ஆசிரியர் பனையோலையினால் வேய்ந்து முடித்த உருவத்தினின்று எடுத்து இதில் அச்சிடப்பட்டுள்ளது. இருபத்து ஒன்பது பொருட்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 2262/1912/III.

T : 3

874. i. உரைநடை எழுதுவதற்கான சிறு கதைகள்—(முதல் பாகம்) ; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 96 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. நாற்பத்து நான்கு கட்டுரைகளைக் கொண்டது இந்நூல். உரைநடை எழுதுவதற்கான வழிமுறைகளும், விதிமுறைகளும் நன்கு விளக்கப்பட்டுள்ளன ; viii. 1076/1915/III.

T : 3

875. i. உரைநடை எழுதுவதற்கான சிறுகதைகள்—(இரண்டாம் பாகம்) : ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 6 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-4-0; vii. பதினான்கு சிறுகதைகள் அடங்கிய நூல். இதில் சில உலக அறத்தினை உணர்த்துகின்றன. கட்டுரைகள், கதைகள் எழுதுவதற்கான பொருள், மொழி நடை போன்றவற்றையும் விளக்குகின்றது. "கட்டுரை எழுதும் முறை" பற்றிய செய்திகள் முதலில் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. தொடர்ந்து உரைநடை எழுதுவதற்கான பயிற்சியளிக்கும் கதைகள் இடம் பெற்றுள்ளன ; viii. 1077/1916/III.

T : 3

**கிருஷ்ணசுவாமி அய்யர், வி. எஸ்.**

876. i. நவீன போதனு முறைப் பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. வி. எஸ். கே. சுவாமி அண்டு கம்பெனி, கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1911 ; iv. உ.ப. 1+47 ; v. 21×14 செ.மீ. ; vi. 0-2-6; vii. மூன்றாவது வகுப்பு மாணவர்களுக்காக இயற்றப்பட்டது. கதை வாயிலாக பிற பாடங்களைத் தொடர்பு படுத்திக் கற்றுக் கொடுப்பதை விளக்குவது. viii. 23/1911/IV.

T : 3

877. i. நவீன போதனு முறைப் பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. வி. எஸ். கே. சுவாமி அண்டு கம்பெனி, கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ;

iii. செப்டம்பர், 1911 ; iv. உ.ப. 2+65 ; v. 16×12 செ.மீ. vi. 0–3–0 ; vii. நான்காவது வகுப்பு மாணவர்களுக்காக இயற்றப்பட்டது. கதையோடு தொடர்புப்படுத்திப் பிற பாடங்களைக் கற்பிக்கும் முறையை விளக்குவது. viii. 24/1911/IV.
T; 3

878. i. நவீன போதன முறைப் பாடங்கள் : இரண்டாவது பதிப்பு ; ii. வி. எஸ். கே. சுவாமி அண்டு கம்பெனி, கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 1+58 ; v. 16×13 செ.மீ. vi. 0–2–0 ; vii. இரண்டாவது வகுப்பு மாணாக்கர்களின் பயன் கருதி இயற்றப்பட்டது. கதை வடிவில் பிற பாடங்களைத் தொடர்பு படுத்திக் கற்பிப்பதை விளக்குவது. viii. 221/1912/I.
T : 3

879. i. நவீன போதனமுறைப் பாடங்கள் : இரண்டாவது பதிப்பு ; ii. வி.எஸ்.கே. சுவாமி அண்டு கம்பெனி, கயத்தாறு ; விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 1+41 ; v. 17×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. சிறுவர் வகுப்பு (முதல் வகுப்பு) மாணாக்கர்களின் பயன் கருதி இயற்றப்பட்டது. கதைவடிவில் பிற பாடங்களைத் தொடர்புப்படுத்திக் கற்றுக்கொடுக்கும் முறையை விளக்குவது. viii. 279/1912/I.

T : 3

**சில்லிங்ஹாம், ஸி. எல்.**

880. i. இந்திய கிண்டர்கார்ட்டென்]: ii. லாங்மன்ஸ் கிரின் அண்டு கம்பனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 116 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. சிறுவர் வகுப்பு மாணவர்களுக்குக் கற்பிக்கும் முறைகளை விளக்குவதோடு, அவர்களின் மனநிலையைப் புரிந்து அதற்கேற்ப ஆசிரியர்கள் பாடங்களையும், அறங்களையும் கற்பிப்பதுடன் அவர்களின் கற்பனை ஆற்றல், சிந்தனை, நினைவு ஆகியவைகளை வளர்ப்பதற்கு ஏற்ற நடைமுறை விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1018/1915/III.

T : 3

881. i. கீழ்தரப் பாடசாலைகளுக்குக் காட்சி சாலை : இரண்டாம் பாகம் ; ii. ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; லாக்ஸ்டன் பிரஸ், மதராஸ் ; iii. 1915 ; iv. உ.ப. 30 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. ஆரம்பப் பள்ளியில் காட்சிசாலை நிறுவுவதில் கவனிக்க வேண்டிய சில குறிப்புகள் இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. “ கிண்டர்கார்டன் உதவிகள் ” வரிசையில் இது இரண்டாம் பாகம். 30 பொருள்களை பற்றி உரைக்கின்றது. viii. 437/1915/IV.

T : 3

**நாகோஜிராவ்**

882. i. கற்பிக்கும் முறை—(வாசகம், எழுதல், கணிதம்) திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. ஸ்ரீனிவாசவரதாச்சாரி அண்டு கோ, சென்னை; எஸ். வி. அண்டு கோ; iii. அக்டோபர், 1914; iv. உ.ப. 118; v. 17×11 செ.மீ. vi. 0–8–0; vii. சிறுவர் பள்ளி ஆசிரியர்களின் பொருட்டு அவர்கள் தாம் கற்பிக்க வேண்டியிருக்கின்ற பாடங்களை நன்கு கற்பிப்பதற்கு ஏற்ற முறைகளைச் சுட்டிக்காட்டி, இந்நூல் வெளியிடப்பட்டிருக்கிறது. இந்நூல் ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. viii. 587/1914/ IV.

T:3

**நெல்லையப்ப அய்யர், டி. எஸ. நாக்ர்கோயில்**

883. i. பொருட்பாடம்—முதற் பாகம்: மறு பதிப்பு; ii. டி. எஸ். நெல்லையப்ப அய்யர், நாகர்கோயில்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட் 1911; iv. v. உ.ப. 1+51; v. 18×11 செ.மீ.; vi. 4 சக்கரம்; vii. தொடக்க உயர்நிலை வகுப்புகளுக்குப் பயன்படும்வகையில் செய்யப்பெற்றது. விலங்குகள் செடிகொடிகள், கனிப்பொருட்கள் ஆகியவைபற்றியும் அவை தொடர்பான பொருள்களைப் பற்றியும் விவரிக்கும் பல பாடங்கள் கொண்டது. ஒவ்வொரு பாடமும் விளக்க படங்களுடன் அமைந்துள்ளது. கேள்விகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 954/1911/III.

T:3

## 371.4 ஆதாரக் கல்வி

**கோகலே**

884. i. ஆதாரக் கல்வி மசோதா: ii. கார்டியன் பிரஸ், மவுண்ட் ரோட், மதராஸ்; iii. 1911; iv. உ.ப. 45; v. 15×10 செ.மீ.; vi.........vii. ராஜ்ய பிரதிநிதியின் சபையில் கனம் கோகலே அவர்களால் கொண்டு வரப்பட்டது இந்த மசோதா. மூலாதாரக் கல்வி பரவச் செய்வதற்கான வழிவகைகளை எடுத்துக்காட்டுகிறது. இது கோகலே செய்த ஆங்கில பிரசங்கத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு நூல். viii. 740/1911/ II.

T:3

## 371.73 உடற் பயிற்சி

**ஆழ்வார் அய்யங்கார், வி. எஸ்.**

885. i. தேகாப்யாசம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. உ.ப. 1+62; v. 19×13 செ.மீ. vi. 0–2–0; vii. தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு ஏற்ற

உடற் பயிற்சிகளை விளக்கிக் காட்டும் நூல். ஆசிரியர்களின் பொருட்டு விளையாட்டுகளை நடத்த வேண்டிய வகை முதலியன விளக்கப்பட்டிருக்கின்றன. அணிவகுத்து மாணவர் செல்லும் போது பாடத் தகுந்த பாட்டுக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பதின்மூன்று அத்தியாயங்களாகப் பகுத்து வரைபடங்கள் முதலிய விளக்கங்களுடன் அமைக்கப் பட்டுள்ளது. viii. 42/ 912/IV.

T:6

**சங்கமேஸ்வர ஐயர், வி. பி.**

886. i. இளைஞர் விளையாட்டு : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1912 ; iv. உ.ப. 8+76; v. 18×12 செ. மீ. vi. 0–6–0 ; vii. தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு ஏற்ற உடற்பயிற்சி தொடர்பான விளையாட்டுக்களை விளக்கும் நூல். இரண்டு பிரிவாக அமைந்துள்ளது. முதற் பிரிவில் இக்காலப் பள்ளியின் நிலைமையும் உடற்பயிற்சியின் அவசியத்தையும் விளக்கும் முகவுரை உள்ளது. இரண்டாம் பிரிவு ஒன்பது அத்தியாயங்கள் கொண்டதாய், சிறுவர்க்கேற்ற பல விளையாட்டுகள் படங்களுடன் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஆடலுக்குரிய பாட்டுக்கள் பதினைந்து இறுதியில் உள்ளன. viii. 9/1913/I.

T:3

**சுப்பிரமணிய ஐயர், கே. ஆர்.**

887. i. எ. மேனுவல் ஆப் டிரில் அண்டு ஜிம்னஸ்டிக்ஸ் ; ஐந்தாம் பதிப்பு ; ii. கே. ஆர். சுப்பிரமணிய அய்யர், செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல், பிரஸ்; திருச்சிணுப்பள்ளி ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ.ப. 4+72 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–5–0; vii. இது மூன்றுவது நான்காவது வகுப்புகளுக்குக் கற்பிக்கும் உடற் பயிற்சிகள் அடங்கிய நூலாகும். இந்நூல் சென்னை புதிய கல்வித் திட்டத்தின்படி பள்ளிகளில் ஆண் பிள்ளைகளுக்கும், பெண் பிள்ளைகளுக்கும் கற்பிக்கும்படியான அழகான புகைப்படங்களுடன் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலினைப் பற்றிப் பல அதிகாரிகள் தங்களுடைய கருத்துக்களையும் வெளியிட்டிருக்கிறார்கள். அரசு வாழ்த்தும் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 492/1911/I.

T:6

888. i. கவாத்தும் கஸரத்தும் : ஆறும் பதிப்பு ; ii. கே ஆர். சுப்பிரமணிய அய்யர் ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிணுப்பள்ளி ; iii. ஜனவரி, 1912 ; iv. உ.ப. 8+60 ; v. 19×13 செ.மீ ; vi. 0–4–0; vii. பாலர் முதல் இரண்டாவது வகுப்புகளுக்குக் கற்பிக்கும்படியான உடற்

பயிற்சிகள் அடங்கிய நூல். ஆங்கில மொழியிலுள்ள பல நூல்களிலிருந்து தெரிந்தெடுத்துத் தமிழில் மொழி பெயர்த்து எழுதப் பெற்றது. viii. 519/1912/I.

T: 6

889. i. டிரில் அண்டு ஜிம்னாஸ்டிக்ஸ்; முதற் பாகம், ஏழாம் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மே, 1915; iv. உ.ப. 64; v. 18×13 செ.மீ.; vi. 0–4–0; vii. படங்களுடன் கூடிய உடற் பயிற்சி நூலின்கண் பல உடற் பயிற்சிகளின் வகைகளும் முறைகளும் விளக்கப்பட்டுள்ளன. இவ் உடற்பயிற்சிகள் பெரும்பாலும் தொடக்கப் பள்ளிக்கூடம், உயர்நிலைப் பள்ளிக்கூட மாணவர்களுக்குத் தகுந்த முறையில் விளக்கப்பட்டுள்ளன. படங்களுடன் கூடியது. viii. 571/1915/II.

T :6

டைர்ஸ், ஜி. எ. வி.

890. i. ஹிண்ட்ஸ் ஆன் ஹாக்கி; ii. டி. ஏ. சி. பிரஸ், சேலம்; iii. 1915; iv. உ.ப. 16; v. 17×11 செ.மீ.; vi. .0–1–0; viii. "ஆக்கி" விளையாடுபவர்கள் கை கொள்ள வேண்டிய முறையினை விளக்கும் நூல். viii. 631/1915/III.

T : 6

நடராஜ முதலியார்

891. i. இந்திய தேகப் பயிற்சி: முதற் பதிப்பு; ii. நடராஜ முதலியார், சென்னை; ஸ்மார்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1912; iv. உ.ப. 1+36; v. 14×11 செ.மீ.; vi. 0–4–0; vii. உடற் பயிற்சி செய்வது உடல் நலத்திற்கும் உடல் வலிமைக்கும் இன்றியமையாதது என்பதை ஆசிரியர் முகவுரையில் எடுத்துக்காட்டியுள்ளார். சிறுவர்களுக்குப் பயன்படும் தண்டால், தோப்புக்கரணம் முதலிய பல விளையாட்டுக்களைப் படங்களுடன் ஆசிரியர் இந்நூலில் விளக்கியுள்ளார். இறுதியில் சில இறை வணக்கப் பாடல்களும் இதில் அமைந்துள்ளன; viii. 376/1912/III.

T : 6

## 372.3 இயற்கைப் பொருட்பாடம்

எக்ஞமையர், சி.ஏ.

892. i. இயற்கையறிவு—முதல் பாகம்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. சி. ஏ. எக்ஞமையர், கழுகுமலை; இராமானுஜம் பிரஸ், தென்காசி; iii. பிப்ரவரி, 1915 iv. உ. ப. 60; v. 18×1 செ.மீ.; vi. 0–3–0; vii. இயற்கையின் படைப்

பாகிய தாவரங்களைப் பற்றியும் பிராணிகளைப் பற்றியும் இந் நூலில் சொல்லப்பட்டுள்ளன. ஆரம்பப்பள்ளி மாணவர்களுக்கு ஏற்றது. viii. 869/1915/I.

A

**நமச்சிவாய முதலியார், சி. ஆர்.**

893. i. இயற்கைப் பொருட்கதைகள், முதற் புத்தகம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 5+88; v. 25×19 செ.மீ.; vi. 0–8–0; vii. இயற்கைப் பொருள்களின் அழகையும், சிறப்பையும் குழந்தைகள் உணரும் வண்ணம் எழுதப்பட்ட புத்தகமாகும். குளவி, சிலந்தி, வண்டு முதலிய உயிரினங்களின் வாழ்க்கையை விவரிப்பது; படங்களுடன் கூடியது. viii. 953/1914/I.

A

**நாராயணசாமி, வி. கே.**

894. i. இயற்கைப் பொருட்பாடம்—தொகுதி 1: நான்காம் பதிப்பு; ii. எஸ். சிவராம அய்யர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி செயின்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல், பிரஸ்; iii. நவம்பர் 1913; iv. உ.ப. 126; v. 18×12 செ.மீ.; vi. 1–0–0 vii. இதில் இயற்கை நூல், விலங்கு நூல், உடலோம்பல் போன்ற செய்திகள் உள்ளன. தொடக்கப்பள்ளிகளுக்கும், பயிற்சிப் பள்ளி மாணவர்களுக்கும் பயன்படும் பொருட்டு எழுதப்பட்டது படங்களுடன் கூடியது. viii. 841/1913/IV.

A

895. i. பாடசாலைத் தோட்டம்—முதல் பாகம்: ii. சென்னை குமாரசாமி நாயுடு & சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii., 1915; iv. உ.ப. 24; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0; vii. பள்ளி மாணவர்களுக்கெனத் தோட்ட வேலையைப் பற்றிய சில நடைமுறைக் குறிப்புகள் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இண்டர்கார்டன் வகுப்புக்குப் பயன்படும் வண்ணம் எழுதப்பட்டது. படங்களுடன் கூடியது. viii. 436/1915/IV.

A

**428.64 ஆங்கிலம்—தமிழ், பாடப் புத்தகம்**

**சாரங்கபாணி நாயுடு, எஸ்., சென்னை**

896. i. ஆல் ஆங்கிலோ தமிழ் ரீடர்ஸ் வேட் மிகம். பாகம்-1; முதற் பதிப்பு; ii. எஸ். சாரங்கபாணி நாயுடு, சென்னை; பிரஸிடென்ஸி பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1913; iv. உ.ப. 34; v. 19×13 செ.மீ.; vii. 0–2–0; vii. நடைமுறையிலுள்ள பல தமிழ்த் தொடர்களுக்கேற்ற ஆங்கில

கீழ் வாசிக்கப்பெற்றது. தமிழ் மொழி வாயிலாக உயர்தரக் கல்வியைச் செம்மையாகவும் பயனுடையதாகவும் வளர்ச்சியடையச் செய்யக்கூடும் என்பதை இக்கட்டுரை தெளிவாக விளக்குகிறது. viii. 536/1915/III.

**P 31**

## 494.811104 தமிழ்க் கட்டுரை

900. i. உபந்நியாசங்கள் : முதற் பதிப்பு ; ii. கரன்தை தமிழ் சங்கம், தஞ்சை, வெட்னஸ்டேரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 66 ; v. 18×13 செ.மீ. ; vi. ........ ;; vii. தஞ்சை நகர்க் கரந்தை தமிழ்ச் சங்க இரண்டாவது ஆண்டு நிறைவு விழாவில் நிகழப் பெற்றவற்றைத் தொகுத்துரைப்பது இந்நூல். இவ்விழா கோயம்புத்தூர் உயர் நீதிமன்ற வழக்கறிஞர் டி. ஏ. இராமலிங்கம் செட்டியார் என்பவர் தலைமையில் நடைபெற்றது. தமிழன்பர்களும் தமிழறிஞர்களும் இதில் கலந்து கொண்டு பல பொருளுரைகள் வழங்கியுள்ளார்கள். இவ்வுரைகளும் இதில் அமைந்துள்ளன. பிற்சேர்க்கையில் தமிழ் மொழி வாழ்த்து இடம் பெற்றுள்ளது. அதில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, மு. வெங்கடசாமி நாட்டார் முதலியோர் பாடிய வாழ்த்துக்கள் இடம் பெற்றுள்ளன. viii. 76/1914/IV.

**P 31**

**கிருஷ்ணமாசாரியார், எஸ் & நரஸிம்மாச்சாரியார், எஸ்.**

**திருவல்லிக்கேணி, சென்னை.**

901. i. தமிழ்க் கட்டுரைகள் (Tamil) Essays : ii. ஜனரல் சப்ளைஸ் கம்பெனி, மைலாப்பூர், சென்னை ; ஸ்ரீநிகேதனம் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1910 ; iv. உ.ப. 2×45 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. காலத்தின் அருமை "சந்தோஷம்" "இடையூறுகள்", "பிராணிகளுக்குகள் இயற்கை அறிவு", "வீட்டுப் பழக்கம்", "முருகதாசர் இயற்றிய புலவ புராணம், என்னும் ஆறு பொருள்கள் பற்றிய ஒரு கட்டுரை நூல். இதில் பிற் சேர்க்கையாகக் கோயில் மரமல்லிகை இராமாயண சங்கிரகம், விடுகதை வினுக்கள், மலர் மகள் வணக்கம் என்னும் நான்கு பாடல்களும் உள்ளன. viii. 432/1911/I.

**P 31**

**கிருஷ்ணஸ்வாமி அய்யங்ஷார், கே. ஆர்.**

902. i. வியாசக் கோவை (முதற் பாகம்) : முதற் பதிப்பு ; ii. கே. ஆர். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், நாகப்பட்டினம் ; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகப்பட்டினம் ; iii. நவம்பர், 1911 ; iv. உ.ப. 4+107 ; v. 17×11 செ.மீ. ; vi. 0–6–0 ;

vii. ஆங்கில மொழியில் கட்டுரை எழுதுதல் சிறந்து விளங்குதல் போல் தமிழ் மொழியிலும் கட்டுரை எழுதும் பயிற்சி சிறந்து விளங்க வேண்டும் என்பதற்கு ஏற்ப இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. இதில் "விஷப்பூச்சிகளும், தொத்து வியாதிகளும்", "தேகாப்பியாசத்தின் அவசியம்" போன்ற பதினாறு தலைப்புகள் கொண்ட கட்டுரைகள் உள்ளன. இதில் பன்னிரண்டாவது கட்டுரையான "சோழ நாட்டின் தமிழ்பிமானம்" என்பது நாகை "நீலலோசனி" இதழ் ஆசிரியர் ஜீ. சதாசிவம் பிள்ளை என்பவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்து ஆண்டு விழாவில் ஆற்றிய உரையாகும். viii. 543/1911/IV.

**P 31**

**சின்னையா செட்டியார்; மு. மகிபாலன்பட்டி**

903. i. வியாசங்களும் உபந்நியாசங்களும் : முதற் பதிப்பு; ii. பெத்தாச்சி செட்டியார், கானாடுகாத்தான்; விவேகபாநு அச்சியந்திர சாலை, மதுரை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ.ப. 6+192 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. பல்வேறு பொருள்களைப் பற்றி ஆசிரியர் எழுதிய கட்டுரைகளும் பேச்சுக்களும் அமைந்த தொகுப்பு; இவை பொதுவான சில அறங்கள், கல்வி ஒழுக்க சீர்திருத்தம் முதலியன பற்றி அமைந்தனவாம். முக்கியமாக நாட்டுக்கோட்டையர்களைப் பற்றிய வரலாறும் அவர்களுடைய சமுதாயத்தில் காணும் பல நிகழ்ச்சிகளும் அவர்களது முன்னேற்றத்திற்கான அறவுரைகளும் கொண்டது. இதிலுள்ள முப்பத்தாறு கட்டுரைகளில் பத்து கட்டுரைகள் சிறப்பாக நாட்டுக்கோட்டை நகரத்தார் பற்றிய செய்திகள் உரைப்பன. viii. 640/1913/I.

**P 31**

904. i. வியாசங்களும் உபந்நியாசங்களும்: இரண்டாம் பதிப்பு ; ii. ஜி. இராமசந்திரராவ், விவேகபாநு அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மார்ச்சு, 1913 ; iv. உ.ப. 6+192; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. "கடவுளும் அன்பும்" என்னும் சொற்பொழிவை முதலாவதாகவும் "ஆங்கிலேய அரசாட்சியின் மாண்பு" பற்றிய சொற்பொழிவை இரண்டாவதாகவும் அமைத்து, ஏனைய முப்பத்து நான்கு பொருள்களையும் பின்னர் அமைத்துள்ளார். எல்லாக் கட்டுரைகளிலும் நாட்டுக்கோட்டை நகரத்தாரைப் பற்றிய செய்திகளும் பழக்க வழக்கங்களும் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. நாட்டுக்கோட்டை நகரத்தார் முதலில் நாக நாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்கு வந்து குடியேறியவர் ஆவார். viii. 947/1913/I.

**P 31**

**சீனிவாச அய்யர்; எஸ். என்**

905. i. தமிழ் வியாசங்கள் : முதற் பதிப்பு ; ii. எம்.வி. ரெங்கசுவாமி ஐயர், மதுரை; கே. ஆர். ரங்கநாதன் அண்டு பிரதர்ஸ் மதுரை; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ.ப. 4+20+142, v. 21×14;

செ.மீ.; vi. 0–12–0; vii. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பயிலும் மாணவர்களுக்குக் கட்டுரை எழுதுவதற்கு ஏற்றதாய் அமைந்த துணை நூல். முதலில் கட்டுரை எழுதும் முறை, கட்டுரைகளின் உருவகக் குறிப்புகள் ஆகியவை பற்றி விளக்கப் பட்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக இருபது கட்டுரைகள் தரப் பட்டிருக்கின்றன. பிற்சேர்க்கையில் முப்பது கட்டுரை களுக்குரிய குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 591/1911/I.

P 31

906. i. தமிழ் வியாச மஞ்சரி: ii. எஸ். எம். ஸாஹிப் கம்பெனி; எஸ். எச். பிரஸ், சென்னை; iii. 1914; iv. உ.ப. 160; v. 18×12 செ.மீ.; vi. 0–10–0; vii. உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்குப் பல பொருள்களைக் குறித்து எழுதப்பட்ட கட்டுரைத் தொகுதி. 45 கட்டுரைகள் உள. ஒவ்வொரு கட்டுரைக்கும் உரிய பொருட் குறிப்புக்கள் அவ்வக் கட்டுரையின் தொடக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 95/1915/II.

P 31

**நமச்சிவாய முதலியார், கா.**

907. i. கட்டுரைத் தொகுதி: முதற் பதிப்பு; ii. வி, குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. உ.ப. 8+104; v. 18×12 செ.மீ.; vi. 0–8–0; vii. எளிய நடையில் எழுதப்பட்ட எடுத்துக்காட்டு கட்டுரைகளின் தொகுதி, ஈற்றில் கட்டுரை எழுதும் முறைபற்றி விளக்கி எழுதப்பட்டுள்ளது. ஐம்பது எடுத்துக்காட்டு கட்டுரைகள் உள்ளன. பள்ளி இறுதி வகுப்பு மாணவர்களின் கட்டுரைப் பயிற்சிக்கு ஏற்றதொரு நூல். viii. 33/1911/II.

P 31

**பக்தவத்ஸலம், டி.**

908. i. இரண்டு சொற்பொழிவுகள்: முதற் பதிப்பு; ii. டி. பக்த வத்ஸலம்; ஆர். விவேகானந்தா பிரஸ், சென்னை; iii. அக் டோபர், 1911; iv. உ.ப. 23; v. 21×14 செ.மீ. vi. 0–2–0; vii. "செந்தமிழ்ப் புதுவள நந்தன வனவியல் அல்லது செந் தமிழிலக்கியம் செம்மையடைவதெப்படி", "ஸ்ரீசடகோபப் பிரான்" என்னும் தலைப்புகள் பற்றி முறையே சென்னை மாநிலக் கல்லூரியிலும் சென்னை வைணவ மாநாட்டிலும் ஆசிரியரால் நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளின் தொகுப் பாகும். தமிழ் மொழியை வளப்படுத்தக் கையாள வேண்டிய முறைகளைப் பற்றி ஆசிரியர் தமது முதல் சொற்பொழிவில் கூறியுள்ளார். viii. 285/1911/IV.

P 31

**வெங்கிடாஜலமய்யர், எஸ். சைதாப்பேட்டை**

909. i. வியாச இலக்ஷணம், முதற் புத்தகம்: முதற் பதிப்பு; ii. எஸ். வெங்கிடாஜலமய்யர், சைதாப்பேட்டை; பி. ஆர். ராமைய்யர் அண்டு கோ, சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. உ.ப. 12+244 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–0–0; vii. பள்ளியில் பயிலும் மாணவர்களுக்குக் கட்டுரைப் பயிற்சிக்காக அமைந்த நூல். கட்டுரை எழுதும் முறைகள், சொற்றொடர் அமைதி, நிறுத்தக் குறியீடுகள், முதலியவைகள் விவரிக்கப் பட்டுள்ளன. சொற்றொடர் அமைப்பும் அது பற்றிய மரபுகளும் எடுத்துக்காட்டுக்களுடன் காட்டப்பட்டுள்ளன. பல பொருள்களைக் குறித்து கட்டுரைக் குறிப்புகளும் எடுத்துக் காட்டுக்களாக கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1083/1914/I.

P 31

**ஸ்ரீநிவாஆசாரியார், பி. கே வேலூர்**

910. i. வியாசக் கோவை முதற் பாகம்: முதற் பதிப்பு ; ii. பி.கே. ஸ்ரீநிவாசாரியார், வேலூர் விக்டோரியா அச்சியந்திரசாலை, வேலூர் ; iii. மார்ச், 1911 ; iv . உ.ப. 18+121+2; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இந்நூல் கட்டுரை எழுதப் பயிலும் மாணாக்கர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளது. இதன் ஆசிரியர் கட்டுரை எழுதுவதற்குரிய விதிமுறைகளாகிய சொற்கள், சந்தி, நடை அழகுகள், பொதுக் குறிப்புகள், எழுத்துப் பிழையின்மை முதலியன பற்றி விரிவாக விளக்கியுள்ளார். இதில் வாய்மை முதல் நீத்துப் பயிற்சி ஈறாக இருபது எடுத்துக்காட்டு கட்டுரைகளும், அவற்றின் முதலில் கட்டுரைகளுக்கு வேண்டிய குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன vii. 725/1911/I.

P 31

## 494.8112 எழுத்து–சொல் இலக்கணம்

**அகத்தியர் & கழாரம்பர்**

911. i. பேரகத்தியதிரட்டு மூலமும் உரையும்: முதற் பதிப்பு ; ii. ச. பவானந்தம் பிள்ளை ; எஸ். பி. ஷி.கே. அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச்சு, 1912 ; iv. செ.மு. உ.ப. 14+89 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இதில் அகத்தியர் செய்த இலக்கண நூற்பாக்களில் ஆசிரியருக்குக் கிடைத்த நூற்றிஎண்பத்திநான்கு நூற்பாக்கள் உள்ளன. இதைத் தொகுத்து உரை எழுதியவர் சா. பவானந்தம் பிள்ளை. இவர் களத்தூர் வேதகிரி முதலியார் வெளியிட்ட நூற்று அறுபத்தைந்து அகத்திய நூற்பாக்களையும், தொல்காப்பிய நன்னூல் உரைகளிலிருந்து கிடைத்த அகத்திய நூற்பாக்களையும் (19) இதில் தொகுத்துள்ளார். வேதகிரி முதலியார் தம்மிடத்து

மூவாயிரம் நூற்பாக்கள் கிடைத்துள்ளன என்று சொல்லி, நூற்று அறுபத்தைந்து நூற்பாக்களை வெளியிட்டனர் என்று பதிப்பாசிரியர் முகவுரையில் குறித்துள்ளார். இதில் தொகுத்து கொடுத்துள்ள பேரிகை நூற்பாக்கள் அகத்தியர் மாணவருள் ஒருவராகிய கழாரம்பர் இயற்றியது என்று சுட்டியுள்ளார். பதினான்கு நூற்பாக்கள் இதில் உள்ளன. வடமொழி இயல்பை இரு நூற்பாக்களில் பொது வகையாகக் தொல்காப்பியர் குறித்திருக்க, இந் நூலில் "வடமொழிப்படலம்" என்றே ஒன்று தனியாக அமைந்து, தற்சமம், தற்பவம் என்பவை பற்றியெல்லாம் விரிவாக உரைத்திருப்பதினால், இது ஒரு பழைய நூலன்று என்று கொள்ளலாம். எழுத்திலக்கண காண்டத்தில் ஐந்து படலங்கள் உள்ளன. பதிப்பாசிரியர் முகவுரையில் தமிழிலக்கண வரலாற்றை விவரித்துள்ளார். viii. 527/1912/II.

P31, J: 2

## 494.8112 பொருள் இலக்கணம்

**ஐயனாரிதனார்**

912. i. புறப்பொருள் வெண்பாமாலை (மூலமும் உரையும்) : இரண்டாம் பதிப்பு ; ii. உ.வே. சாமிநாதய்யர், உத்தமதான புரம்; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1915; iv. செ.மூ.உ.ப. 215; v. 21×14 செ.மீ.; vi. 1–8–0 ; vii. இந்நூல் எழுத்து, சொற், பொருள், யாப்பு, அணியென்னும் தமிழிலக்கணமைந்தனுள் பொருளின் பகுதியாகிய அகம் புறமென்னுமிரண்டிற் புறத்தின் இலக்கணமாகிய சூத்திரங்களையும் அவற்றின் இலக்கியமாகிய வெண்பாக்களையும், அவ்வெண்பாக்களின் கருத்தைத் தனித்தனியே புலப்படுத்தி ஒவ்வொன்றன் முன்னும் நிற்பனவாகியகொளுக்களையுமுடையது. பன்னிரு படலத்தின் வழி நூலென்பதற்கேற்ப வெட்சி படலம் முதல் பெருந்திணைப் படலமிறுதியாகவுள்ள பன்னிரண்டு படல உறுப்புக்களமைந்துள்ளன. பழைய பொழிப்புரையுடன் கூடியதும் துறையகராதி, அருஞ்சொல் முதலியவற்றின் அகராதி முதலிய அகராதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 855/1915/II.

P31, J: 2

**நாற்கவிராச நம்பி**

913. i. அகப்பொருள் விளக்கம், மூலமும் உரையும்: முதற் பதிப்பு ii. பொ. பாண்டித்துரைத் தேவர் ; தமிழ்ச் சங்க முத்ராசாலை, மதுரை ; iii. மார்ச், 1913 ; iv. செ.மு.உ.எ. 252 ; v. 21×14 செ.மீ ; vi 1–0–0 ; vii. அகப்பொருள் இலக்கண முரைக்கும் நூல். அகத்திணையில், களவியல், வரைவியல் கற்பியல், ஒழிபியல், என ஐந்து பகுதிகளாக இந்நூல்

அமைந்துள்ளது. பழைய உரையுடன் பதிக்கப்பட்டிருக்கிறது. சங்கப் பாடல்களோடு தஞ்சைவாணன் கோவைச் செய்யுட்களே இதில் மிகுதியும் உதாரணமாகக் காட்டப்பட்டிருக்கின்றன. viii. 823/1913/I.

P31,J:2

914. i. அகப் பொருள் விளக்கம்–மூலமும் உரையும்: முதற் பதிப்பு; ii. எஸ். பொன்னம்பலம் பிள்ளை வித்தியாநுபாலன யந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1913; iv. செ.மூ.உ.எ. 131; v. 21×13 செ.மீ; vi. 1–0–0; vii. நாற்கவிராச நம்பியின் அகப் பொருள் இலக்கணத்திற்குப் புதிய உரையுடன் கூடிய ஒரு பதிப்பு. இதன் உரையைத் திருத்தியும் விளக்கியும் புதுக்கியவர்கள் சுன்னுகம் அ. குமாரசாமி பிள்ளையும் திரிக்கோணமலை த. கனகசுந்தரம் பிள்ளையும் ஆவர். இதன் உரையில் காட்டிய மேற்கோள் செய்யுட்களில் பெரும்பாலானவும் தஞ்சைவாணன் கோவைப் பாடல்களாகும். viii. 368/913/II.

P31,J:2

**முத்துசாமி ஐயர், வே**

915. i. தொல்காப்பியம்—பொருளதிகார ஆராய்ச்சி: முதற் பதிப்பு; ii. வே. முத்துசாமி ஐயர், மதுரை; தமிழ்ச் சங்க முத்ராசாலை, மதுரை; iii. ஜூலை, 1914, iv. உ.ப.+செ. மூ. ப. 58; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் கூறப்படும் பொருளிலக்கணச் செய்திகளை நம்பியகப் பொருள், அப்கபொருள், வெண்பா மாலை என்னும் நூல்களைக் கொண்டு ஆராய்ந்து மேற்கோள்களுடன் எழுதப் பட்டது, இவ்வாராய்ச்சி மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பன்னிரண்டாவது ஆண்டு விழாக் கொண்டாட்டத்திற்காகக் கூடிய அவையில் 25—5—1913 அன்று, ஜே. எம். நல்லசாமி பிள்ளை அவர்களின் தலைமையின்கீழ்ப் படிக்கப்பெற்றது. அகப் பொருள், புறப் பொருள் செய்திகள் தனித்தனியாக விளக்கப் பட்டிருக்கின்றன. viii. 368/1914/III.

P.31Dx:1

## 494.812 பட்டியல்

**பரஞ்சோதியார்**

916. i. சிதம்பரப் பாட்டியல் (உரையுடன்): முதற் பதிப்பு; ii. மு. இராகவையங்கார் & திரு நாராயண அய்யங்கார்; தமிழச் சங்க முத்திரா சாலை; iii. எப்ரல், 1911; iv. செ.மூ.உ.எ. 46; v. 21×14 செ.மீ.; vi. 0 6–0; vii. இது யாப்பிலக்கண நூல்; ஆசிரியப் விருத்தப் பாவில் அமைந்தது. உறுப்பியல், செய்யுளியல், ஒழியியல், பொருத்த இயல்என

நான்கு இயல்கள் கொண்டது இதற்குப் பழைய உரையும் உள்ளது. இவ்வுரை ஒழிபியல் மூன்று பாடலுக்கும் பொருத்த இயல் முழுமைக்கும் கிடைக்கவில்லை. viii. 268/1911/II.

P.31 J:2

## 494:8112 அணி இலக்கணம்

917. i. உவமான சங்கிரகம் : முதற் பதிப்பு ; ii. சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மதுரை ; தமிழ்ச் சங்க முத்திரா சாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 37 ; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. பெண்களின் அவயங்கட்கு ஒப்புமையாகக் கூறத்தக்க பொருள்களைத் தொகுத்து உரைப்பது, உள்ளங்கால் தொடங்கி கூந்தல் வரையில் உள்ள ஒவ்வோர் உறுப்பிற்கும் முறையாக உவமைகளைத் தருகிறது. இறுதியில் மன்மதனுடைய தேர், கொடி, அம்பு முதலியனவெல்லாம் விளக்கப்பட்டுள்ளன. திருவேங்கடய்யர் செய்த உவமான சங்கிராத்தினும் அதிகமான உவமானங்களை இந்நூல் தருகிறது. இந்நூல் செய்தார் பெயர், ஊர், காலம் தெரியவில்லை. viii. 860/1914/II.

P31, J:2

918. i. உவமான சங்கிரகமும் இரத்தினச் சுருக்கமும் : முதற் பதிப்பு ; ii. ராமயோகிகள், காஞ்சிபுரம், மதராஸ் ரிப்பன் அச்சியந்திரச்சாலை, சென்னை ; iii. 1914 ; iv. செ.மூ.உ.ப. 15+71 ; v. 16×12 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. .......... ; viii. 653/1915/J1.

P31, J:2

**முத்துசாமி அய்யங்கார், இராமநாதபுரம்**

919. i. சந்திராலோக மூலம் : முதற் பதிப்பு ; ii. திரு நாராயண அய்யங்கார், மதுரை ; தமிழ்ச் சங்க முத்திரா சாலை, மதுரை ; iii. எப்ரல், 1911 ; iv. செ.மூ.எ. 12 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii செய்யுளுக்குரிய அணி இலக்கணம் கூறும் வடமொழி நூலாகிய சந்திராலோகத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு. 'உவமை' முதல் 'ஏது' ஈறாக உள்ள அணிகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 270/1914/II.

P31, J:2

## 494,8113 அகராதி, சொல் மாலை

**இரத்தினவேலு முதலியார் ஈக்காடு (மொ, து.)**

920. i. ஆறு பாஷைகளின் ஒக்கப்பிலரி : முதற் பதிப்பு ; ii. ஆதி மூல முதலியார் பேரம்பாக்கம் ; கோல்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. உ.ப. 50 ; v. 22×14 செ.மீ. ;

vi. 0–4–0 ; vii. தமிழ், தெலுங்கு, கன்னடம், ஆங்கிலம், மஹாராஷ்டிரம், இந்துஸ்தான் என்னும் ஆறு மொழிகளின் சொற்பொருட் கோவை இந்நூல். தமிழ் எழுத்துக்களால் அமைந்தவை இதன் பின்னிணைப்பாக எளிய சொற்கள், உணவுப் பெயர்கள் செடிகளின் பெயர்கள், கணக்குகளின் பெயர்கள்,பழங்களின் பெயர்கள் ஆகியவை தரப்பட்டுள்ளன. தமிழில் ஒற்றெழுத்துக்கள் குறைப்பட்டிருத்தலின் தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளின் ஒலி சரிவரும்படி வாசிப் பவர்கட்க்கு அநுகூலமான சில அடையாளங்களுடன் விளக்கப் பட்டுள்ளன. ஆங்கிலத்தில் **F** என்ற எழுத்திற்கு ப என்ப தாக இதன் ஆசிரியர் காட்டியுள்ளார். viii. 377/1911/1.

P31,J:4

## 494.8114 நிகண்டு

**காங்கேயர்**

**921.** **i.** உரிச் சொல் நிகண்டு : முதற் பதிப்பு ; ii. வீ. ஆறுமுக சேர்வை அண்டு எஸ். சிவசங்கர செட்டி, சென்னை, மதருஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர் 1914 iv. செ.மூ.உ.எ. 285 ; v. 21 × 15 ; செ.மீ. ; v. 0–8–0 ; vii. இந் நூல் இறை பெயர்த் தொகுதி, மக்கட் பெயர்த் தொகுதி விலங்கின் பெயர்த் தொகுதி முதலிய 12 வகைத் தொகுதிகளாக உள்ளது; வெண்பாக்களால் ஆகியது. தமிழின் சொற் பொருள் மரபுகளை விளக்கும் நூல்களில் இது ஒன்று. அகராதி நிலை யில் முன்பு பயன்படுத்தப்பட்ட நூல். பாடல்களுக்கு விளக்க மும் தரப்பட்டிருக்கிறது. viii. 633/1915/I.

P31,J:4

**மண்டலபுருடர்**

**922.** **i.** சூடாமணி நிகண்டு மூலமும் உரையும் : பத்தாம் பதிப்பு ; ii. எஸ். பொன்னம்பலம் பிள்ளை ; வித்யாநுபாலன யந்திர சாலை, சென்னை ; iii. ஜுலை, 1912 ; iv. செ.மூ.எ. 733 + 310 + 153 = 1196 ; v. 21 × 43 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. சிவாகரம், பிங்கலந்தை நிகண்டுகளில் சொல்லப்பெற்ற பொருள்களை ஆராய்ந்து திவாகரத்தைப் போல பன்னிரண்டு தொகுதிகளில் ஆசிரியர் இதனைச் செய்துள்ளார். இது விருத்தப் பாவால் ஆகியது. பாடல்களில் குறித்த சொற் பொருளுக்கு உரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. யாழ்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரால் சோதிக்கப்பட்டது. யாழ்ப் பாணத்துச் கன்ளுகம் அ. குமாரசுவாமிப் புலவர் இயற்றிய முதலிரண்டுத் தொகுதிகளின் சொற் பொருள் விளக்கமும் இதில் உள்ளது. இச்சொற்பொருள் விளக்கம் இதில் ஐந்தாம் பதிப்பாக வெளி வந்துள்ளது. viii. 405/1913/1.

P31,J:4

## 494.8115 இலக்கணப் பாடப் புத்தகம்

**அரசஞ்சண்முகனர், சோழவந்தானூர்**

923. i. அம்பலவாண நாவலர் ரோலியுரை மறுப்பு: முதற் பதிப்பு; ii. அரசஞ் சண்முகனர், சோழவந்தானூர், விவேக பாநு அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஏப்ரல், 1913; iv. உ.ப. 3J; v. 2×4 செ.மீ.; vi. .........; vii. அம்பல வாண நாவலர் என்பார் சோழவந்தானூர் அரசஞ் சண் முகனர் எழுதிய தொல்காப்பியம் பாயிரம் விருத்தியுரையைக் குறை கூறி அரசஞ்சண்முக விருத்தி அனுபத்தி பிரதி பத்தி முதற் பாகம் என்னும் நூல் எழுதினர். இவரது மறுப்புரை உண்மை அன்று என்று ஆசிரியர் பல காரணம் காட்டித் தமது கொள்கையின் உண்மையை வெளிப்படுத்துகிறார். இதன் மொழி நடையும் போக்கும் அக்காலப் புலவர்களின் சிலேடை நடைக்கும் செந்தமிழுக்கும் எடுத்துக்காட்டாக உள்ளன. viii. 335/1913/II.

**P31,J:2**

**கோவிந்தராஜ் முதலியார், கா.ர.**

924. i. வாக்கிய இலக்கண சிந்தாமணி: முதற் பதிப்பு; ii. அ. மகாதேவ செட்டியார், அக்கம்மாள் பேட்டை; கலாரத்னகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1912; iv. உ.ப. 2+53; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0 vii. மாணுக்கர் பொருட்டு எளிய நடையில் எழுதப் பெற்ற இலக்கண நூல். சொற்றொடர்கள் இன்ன வகையில் இருக்க வேண்டும் என்பதை எடுத்துக்காட்டுகளின் வாயிலாக விளக்கி யுள்ளார். தொடர் இலக்கணத்திற்கு உறுப்பாக எழுத்திலக் கணமும் சொல் இலக்கணமும் முதலில் எழுதிச் சேர்த்துள்ளார். இது உரை நடை எழுதுவதற்குத் துணை செய்யும் ஒரு நூல். viii. 829/1912/IV.

**P31,J:2**

**செல்லப்பசாஸ்திரி, டி.வி. சென்னை**

925. i. இளைஞர் சொற்றொடராக்கம்; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி; டி.வி.சி. பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 56; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. சிறுவர் வகுப்பு முதல் உயர்நிலை வகுப்பு வரையில் உள்ள எல்லா வகுப்புகளுக்கும் ஆங்கில மொழியிலுள்ள சொற்றொடராக்க நூல்களின் போக்கைக் கவனித்து, தமிழ் மொழிக்குத் தக்க வாறு, செய்திகளையும் நடையையும் உடையதாய் எழுதப் பட்டுள்ளது. ஒவ்வொரு அத்தியாயத்திலும் முதலில் எடுத் துக்காட்டுகளும், அப்பால் அவை போலப் பல பயிற்சிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. சொற்றொடர்களின் அமைப்பு,

தொடர்களின் சேர்க்கை குறிப்புகளைக் கொண்டு செய்திகளை விவரித்தல் சிறுகதைகள் என நான்கு பெரும் பகுதிகள் கொண்டது. viii. 204/1915/IV.

**P31,J:2**

**926.** i. தமிழ் சொற்றொடர் ஆக்கம் : முதற் பதிப்பு ; டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனியார், சென்னை ; தி இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ;அண்டு பி. ஆர். ராம் அய்யர் அண்டு கோ., சென்னை ; iii. எப்ரல், 1912 ; iv. உ.ப. 6+159 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஆங்கிலத்தி லுள்ள பற்பல சொற்றொடர் ஆக்க நூல்களின் போக்கையும் நன்கு கவனித்து அவற்றுள் தமிழ்மொழி நடைக்கு ஏற்ற வகையாய்ப் பொருளும் அப்பொருளுக்கு ஏற்ற வகையாய்ப் பொருளும் அப்பொருளுக்கு ஏற்ற மொழி நடையும் விரிவாயும் தெளிவாயும் எழுதப்பட்டுள்ளன. ஒவ் வொரு அத்யாயத்திலும் முதலில் எடுத்துக் காட்டும், பின்பு பயிற்சிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலில் நிறுத்தல் குறிகள் , பயிற்சிகள் முதலியவற்றிற்கு மட்டும் சிறப்பு விதிகள் கூறப்பட்டுள்ளன. viii. 489/1912/II.

**P31,J:2**

**சோமசுந்தர உடையார், வி**

**927** i. சோமசுந்தர பஞ்ச இலக்கண விளக்கம் : முதற் பதிப்பு ; ii. வி. சோமசுந்தர உடையார், ஆரியன் அச்சாபீஸ், கும்ப கோணம் ; iii. 1915 ; iv. உ.ப. 8 ; v. 33×25 செ.மீ. ; vi. ................; vii. தமிழ் இலக்கணத்தை விளக்கு வது இந்நூல். இலக்கண விதிகளைப் பாகுபடுத்திப் பட்டிகை யாக விளக்குவது. சஞ்சிகை முறையில் இலக்கண விதிகளை விளக்கும் சிறு வெளியீட்டில் இது முதலாவதாகது. viii. 624/ 1915/II.

**P31,J:2**

**தாமோதர முதலியார்; ஜீ**

**928** i. தமிழ் வசன லக்ஷணம் : முதற் பதிப்பு ; ii. சீனிவாச வரதாச்சாரி அண்டு கம்பெனி, சென்னை ; iii. நவம்பர், 1912 ; iv. உ.ப. 4+169 ; v. 18×13 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. உரைநடை எழுதுவதற்கான விளக்கங்களும் பயிற்சிகளும் கொண்ட நூல். எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், தொடர் இலக்கணம், சந்தி இலக்கணம் நிறுத்தற் குறியீடுகள் ஆகியவற்றைத் தெளிவாக முதற் பகுதியில் விளக்கியுள்ளார். இரண்டாவது பகுதியில் தொடர் அமைப்பு, பத்தி அமைப்பு கட்டுரை எழுதும் முறை ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

பிற்சேர்க்கைப் பகுதியில் திசைச் சொற்களின் (931) வரிசையும் கட்டுரை எழுதுவதற்கு எடுத்துக்காட்டாக வாசிக்கத் தகுந்த நூல்களின் பட்டியலும் (52) கொடுக்கப்பட்டுள்ளன. உயர்நிலைப் பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் இது பயனளிப்பது. viii. 68/1912/IV.

P31 J:2

929. i. தமிழில் எழுது முறையும் உச்சரிப்பு முறையும்: முதற் பதிப்பு; ii. ஜி. தாமோதர முதலி, சென்னை சச்சிதானந்தப் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப. 62; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. தமிழ் மொழியைக் குற்றமொன்றில்லாத வழியில் எழுதுவதிலும் உச்சரிப்பதிலும் அநேக ஐயங்களைப் போக்கிச் சரியான முறையைப் பற்றி இந்நூல் கூறுகிறது. இது சென்னை மாநிலக் கல்லூரி ஒலி இயல் பேராசிரியரும் தலைமை வடமொழி கற்பிப்பவருமான ராவ்பஹதூர் ராகவாசங்கராச் சாரியர் ஆங்கில மொழியில் எழுதி வெளிப்படுத்திய நூலின் மொழி பெயர்ப்பு. தமிழெழுத்துக் களையே துணையாகக் கொண்டு ஒரு புதிய "அக்ஷரமாலையையும்" இதில் ஆசிரியர் வெளியிட்டுள்ளார். vii. 992/194/IV.

P31,J:2

**துரைசாமிப் பிள்ளை, ஞா.சா., பாளையங்கோட்டை**

930. i. தமிழ் இலக்கணம்: முதற் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கோ., சென்னை; iii.. எப்ரல் 1911; iv. உ.ப. 3+124; v. 21×4 செ.மீ.; vi. 0–12–0; vii. உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வுக்குச் செல்லும் மாணவர்களுக்குப் பயன்படும் வகையில் இயற்றப்பட்டது. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், சந்தா விதிகள் 'பிரகரணச் சமைவு' (Structure of paragraph) "நிறுத்தலளவைக் குறிகள்" (Punctuations) வாசக "நடைத்தன்மை" (Litearary Diction in prose) "யாப்பதிகாரம்" என்னும் பொருள்கள் பற்றி விவரித்துள்ளார். viii.. 332/1911/II.

P31,J:2

**நமச்சிவாய முதலியார், கா.**

931. i. சிற்றிலக்கணம் II; ii. சி. குமாரசுவாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட் 1913; iv. உ.ப. 68; v. 19×13 செ.மீ.; vi. 0—2–0; vii. இது முதற் படிவத்திற்குரிய இலக்கண நூல். பொது மைய முறை என்னும் கற்பிக்கும் முறையைப் பின்பற்றி எழுதப்பெற்றது. எழுத்து, சொல், சொற்றொடர் இவற்றின் இயல்புகளை விவரிப்பது இலக்கணப் பயிற்சிகள் இடையிடையே கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 967/1913/III.

P31J,:2

**வாசுதேவ முதலியார், பி.**

932. **i.** இலக்கணச் சுருக்கம்; திருத்திய பெரிய பதிப்பு; **ii.** சி. குமாரசுவாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; **iii.** மே, 1912; **iv.** உ. ப. 3+148; **v.** 18×12 செ.மீ., **vi.** 0–4–0; **vii.** தொடக்க உயர் நிலை வகுப்புக்களுக்கான தமிழ் இலக்கண நூல் எழுத்தியல், பதவியல், பெயரியல், ஆனையியல், இடையியல், உயிரியல், பொதுவியல், சொற்றொடரியல், புணரியல் என ஒன்பது இயலாகப் பாகுபடுத்தி இலக்கணச் செய்திகளை விவரித்துரைக்கிறது. இடையிடையே இலக்கணப் பயிற்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன. சில இலக்கணங்களுக்குரிய நன்னூல் நூற்பாக்கள் அடிக்குறிப்பாக அமைக்கப்பட்டிருக்கின்றன. **viii.** 700/1912/II.

P31,J:2.

**வெங்கடராமய்யா, கே.**

933. **i.** தமிழ் முதல் இலக்கணம்: **ii.** தி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம்; ஸ்ரீ கிருஷ்ண விலாஸ பிரஸ், கும்பகோணம்; **iii.** 1915; **iv.** உ. ப. 46; **v.** 16×11 செ.மீ.; **vi.** 0–2–0; **vii.** ஆங்கில மொழியிலுள்ள முறையை கைக்கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. எடுத்து காட்டுகளெல்லாம் எளிய உரையாடலில் வருகுகின்றன. பிறமொழிச் சொற்களைப் பெரிதும் கொடுக்காமல் தமிழில் அதற்கும் சில விதிகள் கூறப்பட்டுள்ளன. கும்பகோணம் இந்து எடுகேஷனல் டிரேடிங் கம்பெனியாரால் பிரசுரிக்கப்பட்ட தமிழ் நூல்களின் விவர அட்டவணையும் நூல் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. **viii.** 808/1915/IV.

V31,J:2

## 494.8118 தமிழ் கற்க உதவும் நூல்கள்

## 494.81186 பாடப் புத்தகம்

**அனவரத நாயகம் பிள்ளை, எஸ்.**

934. **i.** வாசக பாடத்திரட்டு; திருத்திய பதிப்பு; **ii.** தி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், மதராஸ்; **iii.** செப்டம்பர், 1913; **iv.** உ.ப. 2+154; **v.** 19×13 செ. மீ; **vi.** 0–8–0; **vii.** பள்ளிகளுக்கான வாசக பாடத் திரட்டு செய்யுட் பாடத் திரட்டின் இரண்டாவது புத்தகம். இருபது உரைநடைப் பாடங்கள் உள்ளன. இவற்றுள் ஒன்றான, "தமிழின் தற்கால நிலைமை" என்னும் பாடம் முக்கியமாக வரலாற்று நோக்கில் அமைந்துள்ளது நோக்கத்தக்கது. செய்யுட் பாடத் திரட்டில் நாலடியார் திரிகடுகம் முதலிய அற நூல்களும் குசேலோபாக்கியானம் பகுதியும் தனிப் பாடல்களும் உள்ளன. **viii.** 969/1913/III.

P31,J:9

935. i. வாசக பாடத் திரட்டு : திருந்திய பதிப்பு ; ii. வீ. குமார சாமி நாயுடு அண்டு சன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1914 ; iv. உ.ப. 132 ; v. 18×12 செ.மீ.; vi. 0–6–0 ; vii. இந்நூல் தமிழ் உரை நடைப் பாடங்களையும் பாட்டுக்களையும் கொண்டுள்ளது. பள்ளி மாணவர் களுக்கேற்ற நூல். வாசக பாடத்திரட்டு, செய்யுட் பாடத் திரட்டு என இரு பெரும் பகுதிகள் இதில் உள. செய்யுட் பகுதிக்கு அருஞ் சொல்லுரையும் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 160/1915/I.

P31, 9

**இராமானுஜலு நாயுடு, ஜீ.வி**

936. i. புதிய பாலர் பாடம் ; முதற் பதிப்பு ; ii. சாம மூர்த்தி அண்டு கம்பெனி, சென்னை ; டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப. 32; v. 18×12 செ.மீ ; vi. 0–1–0 ; vii. எளிமையாக எழுதக் கூடிய எழுத்து முறையில் பாடங்கள் முறைப்படுத்தி அமைக்கப்பட்டிருக்கின்றன ; படங்களுடன் கூடியது. viii. 355/1911/III. P31, 9

**இராஜரத்தினம் பிள்ளை; டி.ஏ**

937. i. இரண்டாவது கதா வாசக புஸ்தகம் ; முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்ரேசர் சொசைட்டி, சென்னை சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. சென்னை எப்ரல், 1914 ; iv. உ.ப. 4+84; v. 19×13 செ.மீ.; vi. 0–3–0; vii. இது இரண்டாவது குப்புக்குரிய பாடப் புத்தகம்; பெரும்பாலும் கதைகளாய் இருப்பதால் இதற்குக் "கதா வாச புத்தகம்" என்று பெயர். எளிமையான இசைப்பாட்டுக்களும் இடையிடையே உள்ளன. படங்களுடன் கூடியது. 35 பாடங்கள் உள்ளன. பாடத்தின் பொருள் அட்டவணையில் ஆங்கிலத்திலும் பாடப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 255/1914/II.

P31,9

938. i. எப்.ஏ. தமிழ்ப் பாடப் புத்தகம் இண்டர்மீடியட் தேர்வு 1914–15 பாகம்—2. முதற் பதிப்பு ; ii. இ.மா. கோபால கிருஷ்ண கோன், மதுரை ; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ.மு.உ.ப. 2+56 ; v. 12×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. பாண்டித்துரைத் தேவர் தொகுத்து வெளியிட்ட "பன்னூற்றிரட்டு" என்னும் தொகை நூலிலிருந்து எடுக்கப்பட்ட "ஈகை" என்பதைக் குறித்த பாடல்கள் அடங்கிய நூல். இதற்குக் கோபால கிருஷ்ணய்யர் என்பார் இயற்றிய உரை கொடுக்கப்பட்டுள்ளது. இப்பகுதி தமிழ் இலக்கிய புராணங்களில் இருந்து எடுத்துத் தொகுக்கப்பட்டனவாம். viii. 710/1914/I.

P31,9

939. **i. எப். ஏ. தமிழ்ப் பாடப் புத்தகம்**; முதற் பதிப்பு (1914–15) ; **ii.** இ. மா. கோபால கிருஷ்ண கோன், மதுரை; விவேக பானு பிரஸ், மதுரை ; **iii.** ஜனவரி, 1914 ; **iv.** செ.மூ.உ.எ. 91 ; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–8–0 ; **vii** சென்னைப் பல்கலைக் கழகத்தின் 1914–15ஆம் ஆண்டுகளில் கல்லூரி இடை நிலை வகுப்புக்குப் பாடமாக நியமிக்கப் பட்ட செய்யுட் பாடத்தின் ஒரு பகுதி. பாரதப் போரின் பதினாறும் நாள் போர்ச்சுருக்கப் பகுதி அருஞ்சொற் விளக்கம், உரைக் குறிப்புகள், கதைக் குறிப்புக்கள் முதலியன எல்லாம் விரிவாக எழுதப்பட்டுள்ள ஒரு பகுதி. **viii.** 710/1914/I. P 31,9

940. **i. எப். ஏ. (இண்டர்மீடியட்) தமிழ்பாடப் புத்தகம்** 1914–15 செய்யுட் பகுதி தெளிவுரையுடன் ; முதற் பதிப்பு ; **ii.** சே. கிருஷ்ணமாச்சாரி, சென்னை ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; **iii.** பிப்ரவரி, 1914 ; **iv.** செ.மூ.உ.ப. 60 , **v.** 22×14 செ.மீ ; **vi.** 0–6–0 ; **vii.** கல்லூரி இடைநிலை வகுப்புத் தேர்வுப் பாடப் பகுதியில் உள்ள நாலடியாரில் 34, 35 அதிகாரங்கள் உரையுடனும் பாரதம் பதினாறும் சுருக்கம் மூலப் பாடத்துடனும் அமைந்துள்ளது. இந்த உரை நூலை ஆக்கியவர் சே. கிருஷ்ணமாச்சாரியார் ஆவர். **viii.** 484/1914/I. P 31,9

941. **i. எப். ஏ. (இண்டர்மீடியட்) தமிழ்ப் பாடப் புத்தகம்** ; 1916 (குசேலோ பாக்கியானச் சுருக்கமும். அரிச்சந்திர புராணச் சுருக்கமும்) ; **ii.** டி. செல்வக் கேசவராய முதலியார் ; இ.க.அ. சங்கத்தார் அச்சுக் கூடம், சென்னைப் பட்டினம் ; **iii.** 1915 ; **iv.** செ.மூ.உ.ப. 82 ; **v.** 22×14 செ.மீ.; **vi.** ............; **vii.** குசேலோபாக்கியானம் அரிச்சந்திர புராணம் இவற்றிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட செய்யுளும் உரைநடையுமாக அமைந்துள்ளது. இஃது கல்லூரி இடைநிலை வகுப்பு மாணவர்க்கெனத் தொகுக்கப்பெற்ற நூல் உரை நடைப் பகுதி கதைத் தொடர்பை விளக்கி அமைந்துள்ளது. **viii.** 1038/1915/III.

P 31,9

942. **i. எப். ஏ. தமிழ்ப் பாடப் புத்தகம்—1916** குசேலோ பாக்கியானச் சுருக்கமும், அரிச்சந்திர புராணச் சுருக்கமும் ; முதற் பதிப்பு ; **ii.** டி. செல்வ கேசவராய முதலியார், சென்னை ; இ.அ.க. சங்கத்தார் அச்சுக்கூடம், சென்னைப் பட்டினம் ; **iii.** அக்டோபர், 1914 ; **iv.** செ.மூ.ப. 97 ; **v.** 19×15 செ.மீ ; **vi.** 0–8–0 ; **vii.** சென்னைப் பல்கலைக் கழக 1916 ஆம் ஆண்டு கல்லூரி இடை நிலை வகுப்புத்

தேர்வுக்குப் பயன்படும்படி பதிப்பித்த குசேலோபாக்கியானச் சுருக்கமும் அரிச்சந்திர புராணச் சுருக்கமும் கொண்டது இந்நூல். சில அருஞ் சொற்களுக்குப் பொருளும் தரப் பட்டுள்ளது. இந் நூல்களில் முறையே 150 விருத்தங் களும் 200 விருத்தங்களும் தரப்பட்டுள்ளன. இரு நூல் களின் வரலாறுகளும் ஆசிரியர்க் குறிப்புகளும் தரப் பட்டுள்ளன. viii. 409/1914/IV.

P 31,9

**கிருஷ்ணசாமி அய்யர், வி. எஸ்**

943. i. நவீன போதன முறைப் பாடங்கள்: இரண்டாம் பதிப்பு ; ii வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர் ; விவேகபானு அச்சி யந்திர சாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1914 ; iv. உ.ப. 64 ; v. 17×13 செ.மீ.; vi . 0–3–0 ; vii. நான்காம் வகுப் பிற்கான பாட. நூல். இதில் இயற்கை, உயிர், கனிப் பொருட்களின் இனங்களைப் பற்றி அறிவியற் பாடங்களும் கதைகளும், படங்களும், உள்ளன. கதை வாயிலாக கல்வி புகட்டும் முயற்சியின் தோற்றம் இந்நூல் என்பது ஆசிரி யரின் முகவுரையிலிருந்து தெரிகிறது. viii. 1056/1924/III.

P 31,9

**சுந்தரராஜ் பாரதியார், எஸ். திருநெல்வேலி**

944. i. தொடர்முறை கதா விளக்கம் ; முதற் பதிப்பு ; ii. எஸ். சுந்தரராஜ பாரதியார், திருநெல்வேலி ; ஸ்ரீ காந்திமதி விலாஸம் பிரஸ், திருநெல்வேலி ; iii. மார்ச், 1911 ; iv. உ.ப. 2+26 ; v. 21×13 செ.மீ. vi. 0—2—0 ; vii. கதை வாயிலாக பிற பாடங்களைத் தொடர்புப் படுத்திக் கற்பிக்கும் முறையை விளக்குவது. இது சிறுவர் வகுப்புக் குரிய முதற் புத்தகம். viii. 139/1911/II.

P 31,9

**செல்லப்ப சாஸ்திரியார், டி. வி., சென்னை**

945. i. தமிழ் தொடர்முறை வாசக பாடம், நான்காவது ; ii. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனியார், சென்னை ; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ. சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. உ.ப. + செ.மு.எ. 8+112 ; v. 19×13 செ.மீ ; vi. 0–4–0 ; vii. பற்பல பாடங்களைத் தொடர்பு படுத்திக் கற்பிப்பதற்குத் துணையாக எழுதப்பட்டது இந்நூல் நான்காம் வகுப்பிற்கு உரியது. பாடங்களை எவ் வகையில் கற்பித்தல் வேண்டும் என்பது பற்றி முக வுரையில் ஆசிரியர் விளக்கியுள்ளார். பல படங்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 494/1912/I.

P 31,9

946. i. தொடர்முறை வாசகபாடம்—எண்–1 : முதற் பதிப்பு ; ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனி, சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச்,1914 ; iv. உ.ப. 76 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சிறுவர் வகுப்புக்காக வெளியிடப்பட்ட பாட நூல். முதலில் உரைநடைப் பாடங்களும் பின்பு நீண்ட உரைநடைப் பகுதிகளும் இதில் உள்ளன. பற்பல பாடங்களைப் பாகுபடுத்திக் கற்பிப்பதற்கு ஏற்றது. படங்களுடன் கூடியது. செய்யுட் பாடப் பகுதிகளில் ' உலக நீதி ' வாக்கியங்கள் இருபத்தேழு கொடுக்கப்பட்டுள்ளன. viii. 104/1914/II.

P31,9

947. i. தொடர்முறை வாசக பாடம், எண்–2 : முதற் பதிப்பு; i. டி. வி. செல்லப்ப சாஸ்திரி, அண்டு கம்பெனி சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ. ப. 7+87 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. பற்பல பாடங்களுடன் தொடர்பு படுத்திக் கற்பிக்கும் பாடங்களும் பயிற்சிகளும் உள்ளன. படங்களுடன் கூடியது. சில கதைப் பாட்டுக்களும், நடிப்பியல் பாட்டுக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. செய்யுட் பாடப் பகுதியில் ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், நீதி நூல்களின் சுருக்கங்கள் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 105/1914/II.

P31,9

948. i. தொடர்முறை வாசக பாடம், எண்–3 : முதற்பதிப்பு ii. டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு கம்பெனி, சென்னை ; டி. வி. சி. பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914; iv. உ.ப. 104 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–3–0 ; vii. மூன்றாவது வகுப்புக்குரிய பாடப் புத்தகம். முப்பது பாடங்கள் உள்ளன. பற்பல பாடங்களைத் தொடர்புப் படுத்திக் கற்பிப்பது. படங்களுடன் கூடியது. செய்யுட் பாடப் பகுதியில் வெற்றிவேற்கைச் சுருக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் 'உரையாடற்குரிய கேள்விகள்', 'வாசகக் கட்டு', என இரண்டு பயிற்சிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 106/1914/II.

P31, 9

**செல்வ கேசவராய முதலியார், டி.**

949. i. பால சிட்சை : திருத்தப்பட்ட பதிப்பு : ii. மாக்மில்லன் அண்டு கம்பெனியார், சென்னை ; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1912 ; iv. உ. ப. 40 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. அகர உயிர் தொடங்கி எழுத்துக்களையும் பின் சிறு சிறு சொற்றொடர்களையும் கொண்டு அமைந்தது. தமிழ் நெடுங்கணக்கு வரிசை முழுவதும் கொடுக்கப்பட்டிருக்கிறது, படங்களுடன் கூடியது. viii. 439/1912/IV.

P31,9

950. i. பாலசிட்சை : திருத்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனியார், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ. ப. 40 ; v. 18×12 செ. மீ. ; vi. 0–1–6 ; vii. இது முதல் வகுப்புக்குரிய பாடப்புத்தகம். படங்களுடன் கூடியது. ஒவ்வொரு சொல்லிலும் மாணவர் சிறப்பாக அறியவேண்டிய எழுத்துக்கள் பெரியதாகக் காண்பிக்கப் பட்டிருக்கின்றன. viii. 496/1913/III.

P31,9

951. i. முதலாவது கதாவாசக புஸ்தகம் : திருந்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கோ. லிமிடெட், பம்பாய் ; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ. ப. 68 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–2–0 vii. அறங்களைக் கற்பிக்கும் கதைகளை மிகுதியாகக் கொண்ட பாட நூல் ; படங்களுடன் கூடியது. செய்யுட் பாடப் பகுதியில் 'ஆத்திசூடி', 'உலகநீதி' முதலிய நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட அறத் தொடர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 424/1913/IV.

P31,9

952. i. மூன்றாவது கதாவாசக புஸ்தகம் : முதற்பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, பம்பாய் ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ. ப. 99 ; v. 18×13 செ. மீ. ; vi. 0–3–0 ; பெரும்பாலும் கதைகளைக் கொண்ட பாடபுத்தகம் ; படங்களுடன் கூடியது. 33 பாடங்கள் உள்ளன. viii. 425/1913/IV.

P31,9

953. i. நான்காவது கதாவாசக புஸ்தகம் : திருத்தப்பட்ட பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. டிசம்பர், 1911 ; iv. உ. ப. 125 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஈசாப் என்பவர் கட்டுக் கதைகளிலிருந்தும், பஞ்சதந்திரத்திலிருந்தும், புராண இதிகாசங்களிலிருந்தும் எடுக்கப்பட்ட முப்பத்தேழு சிறு கதைகளின் தொகுதி ; பலவகை உருவப் படங்களும சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 95/1912/I.

P31,9

954. i. நான்காவது கதாவாசக புஸ்தகம் : திருந்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்ட் கம்பெனி, பம்பாய் ; எஸ். பி. சி. கே. பிரஸ், வேப்பேரி, சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 6+132 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. அறங்களைக் கற்பிக்கும் கதைகளைக் கொண்ட பாட நூல். படங்களுடன் கூடியது ; 37 பாடங்கள் உள்ளன. viii. 426/1913/IV.

P31,9

955. i. **தமிழ் முதற்பாடம் :** முப்பத்தைந்தாவது திருந்திய பதிப்பு; ii. கிருஸ்தியன் லிட்ரேசர் சொசைட்டி, சென்னை ; சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ. ப. 24 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-0-6 ; vii. சிறுவர்களுக்குரிய முதல் நூல். எளிதாக எழுதக்கூடிய ட, ப முதலிய வடிவங்களை முதலில் தொடங்கி பாடங்கள் அமைந்துள்ளன உயிர் இனம் மெய்களின் பின்னர் நூல் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. எண் கணக்கு தமிழ் எண்களிலும் உடன் கொடுக்கப்பட்டிருக்கிறது. இறுதியில் கூட்டல் வாய்ப்பாடு உளது; படங்களுடன் கூடியது. viii. 254/1914/II.

P31,9

956. i. **தமிழ் ஜார்ஜ் பாலர் பாடம் :** முதற்பதிப்பு ; ii. ராமமூர்த்தி அண்டு கம்பெனியார், சென்னை ; மதராஸ் டைமண்டு பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914 ; iv. உ. ப. 32 ; v. 18×13 செ. மீ. ; vi. 0-1-0 ; vii. சிறுவருக்குரிய முதற் நூல். எளிதாக எழுதக்கூடிய எழுத்துகளை அறிமுகம் செய்யும் வகையில் பாடங்கள் அமைந்துள்ளன. சொற்றொடர்களும் இடையிடையே கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் எழுத்து வரிசையும் சேர்க்கப்பட்டுள்ளது. viii. 521/1914/II.

P31,9

957. i. தமிழ் ஜார்ஜ் வாசக பாடம்—முதலாவது : முதற் பதிப்பு; ii. ராமமூர்த்தி கம்பனியார், சென்னை ; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை ; iii. செப்டம்பர் 1912 ; iv. உ. ப. 4+72 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-2-0 ; vii. தொடக்கப் பள்ளி மாணவர்களுக்குரிய விதிகளின்படி அமைக்கப்பட்ட நூல். இது சிறுவர்களுக்குரியதாதலால் முதலில் சில சொற்களும், அப்பால் சிறிய தொடர்களும், அதன்பின்னர் சிறிய கதைகளும் பொருட் பாடங்களாக ஒழுங்குபடுத்தித் தரப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பாடத்திற்கும் படமும் கேள்விகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 907/1912/III.

P31 6

958. i. தமிழ் ஜார்ஜ் வாசக பாடம் —இரண்டாவது : முதற்பதிப்பு ; ii. ராமமூர்த்தி அண்டு கோ, சென்னை; பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை ; iii. ஏப்ரல், 1912 ; iv உ. ப. 4+108 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-2-6 ; vii. கீழ்வகுப்பு மாணவர்களுக்காக எழுதப்பெற்றது. பொருட்பாடங்கள், கிண்டர்கார்டன் செய்திகள் முதலியவற்றை உரைநடைப் பாடத்தோடு தொடர்புப் படுத்திக் கற்பிப்பதற்குத் தக்கவண்ணம் எழுதப்பெற்றது. ஒவ்வொரு பாடத்திலும் கட்டுரைப் பயிற்சிகளும் கிண்டர்கார்டன் பயிற்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. படங்களுடன் கூடியது. viii. 595/1912/II.

P31,9

**திம்மைய்ய அய்யர், எஸ். ஆர்.**

959. i. செய்யுட் பாடத்திரட்டு : முதற் பதிப்பு ; ii. திம்மைய்ய அய்யர் ; ஸென்ட்ரல் பிரஸ், ஈரோடு ; iii. 1914 ; iv. செ.மூ.ப. 13 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. முதல் படிவத்திற்கான செய்யுட் தொகுப்பு ; இதில் நளவெண்பா, விவேக சிந்தாமணி, திருவேங்கட சதகம், குமரேச சதகம் போன்ற நூல்களிலிருந்து சில செய்யுட்களும் மற்றும் பல தனிப்பாட்டுகளும் உள்ளன. viii 1131/1914/III.

P31,9

**துரைசாமி அய்யங்கார், டபிள்யூ. & செல்வகேசவராய முதலியார், தி.**

960. i. லாங்கமன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம்—முதல் வகுப்பு : புதிய பதிப்பு ; ii. லாங்க்மன்ஸ் க்ரீன் அண்டு கோ ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. 4+58 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. தொடக்க, உயர்நிலைப்பள்ளிகளின் பொருட்டு சென்னைக் கல்வி ஆய்வாளர்கள் ஏற்படுத்தியுள்ள விதிகளையொட்டி எழுதப்பட்டிருக்கிறது ; படங்களுடன் பாடங்கள் விளக்கப்பட்டிருக்கின்றன. இதில் குழந்தைப் பாட்டுகள் செய்யுட் பாடத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 669/1911/II.

P31,9

961. i. லாங்மன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம்—இரண்டாம் வகுப்பு : புதிய பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனியார் ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ. ப. 4+78 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இக்கால உலக வழக்கையொட்டித் தெளிவான நிலையில் எழுதப்பட்ட நூல் செய்யுட் பாடத்தில் குழந்தைப் பாட்டுக்களும் சேர்க்கப்படடிருக்கின்றன ; விளக்கப் படங்களும் ஆங்காங்கே தரப்பட்டிருக்கின்றன. viii. 316/1911/III.

P31,9

962. i. லாங்மன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம் : நான்காம் பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1912 ; iv. உ. ப. 5+118 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. நான்காம் வகுப்புக்குரிய பாட நூல் ; படங்களுடன் கூடியது. viii. 937/1912/II.

P31,9

963. i. லாங்மன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம் : புதிய பதிப்பு ; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. உ. ப. 5+98 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இக்கால உலக வழக்கை ஒட்டித் தெளிவான நடையில் எழுதப்பெற்றது. வாசகப்பாடங்கள்

அந்தந்த வகுப்புக்குரிய வகையில் தரப்படுத்தபட்டுள்ளன. வட மொழி சொற்களும், வேறு மொழிகளிலிருந்து வந்து வழங்குகிற சொற்களும் அதற்குரிய ஒலிமுறை விளங்கும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. படங்களுடன் கூடியது. பொருள் அட்டவணையில் தமிழோடு ஆங்கிலத்திலும் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 818/1911/III.

P31,9

964. i. லாங்மன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம்—முதற் வகுப்பு: மூன்றும் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட் 1912; iv. உ. ப. 8+60; v. 19×12 செ.மீ.; vi. 0-2-0; vii. இந்த உரைநடை நூல் இக்கால உலக வழக்கையொட்டி தெளிவான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. அந்தந்த வகுப்புக்குரிய நூல்களில் அந்தந்தப் பாடத்தின் நிலைக்கு ஏற்றபடி அமைந்திருக்கும். வடசொற்களும் வேறு மொழி சொற்களிலிருந்து வந்து வழங்குகிற சொற்களும் பெரும்பான்மையாக உள்ளமையால் அவ்வவற்றிற்குரிய ஒலி விளங்கும்படி அமைக்கபபட்டிருக்கிறது. viii. 756/1912/III.

P31,9

965. i. லாங்மன்ஸ் தமிழ் வாசக புஸ்தகம்: மூன்றும் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ, கார்டியன் பிரஸ், சென்னை. iii. செப்டம்பர் 1913, iv. உ. ப. 98, v. 19×13 செ.மீ.; vi. 0-3-0; vii. இது மூன்றும் வகுப்புக்குரிய தமிழ் பாடநூல் படங்களுடன் கூடியது. viii. 327/1913/IV.

P31,9

**நமச்சிவாய முதலியார், கா.**

966. i. இரண்டாம் திராவிட வாசகம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1911; iv. உ. ப. 80+4 (84); v. 18×12 செ.மீ.; vi. 0-2-6; vii. தொடர்முறை கற்பித்தலுக்குப் பயன்படும் வகையில் அமைந்துள்ளது; படங்களுடன் கூடியது. viii. 249/1911/III.

P31,9

967. i. இரண்டாம் பாட புத்தகம்: திருத்தப்பட்ட பதிப்பு; சி. குமாரசாமி நாயுடு சன்ஸ், காக்ஸடன் பிரஸ் சென்னை; iii. ஜனவரி, 1911; iv. உ. ப. 80; v. 19×13 செ.மீ.; vi. 0-2-6; vii. இதில் முப்பத்துநான்கு பாடங்கள் உள்ளன. ஆத்திச்சூடிச் சுருக்கமும் கொடுக்கப்பட்டுள்ளது.

மேலும், இதன் ஆசிரியர் சொல்வதெழுதுதல் பாடத்தில் கைக் கொள்ள வேண்டிய விதிகளையும் கொடுத்துள்ளார். viii. 222/1911/I.

P31,9

968. i. ஏழாம் பாட புத்தகம் : திருந்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1914 ; iv. உ. ப. 140 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. உரைநடைப்பாடங்களும், செய்யுள் திரட்டும் இதில் அடங்கியுள்ளன. 16 உரை நடைப் பாடங்களில் கண்ணகி என்னும் பாடமும், மனோன்மணி என்னும் பாடமும் முறையே, உ. வே. சுவாமிநாதையர் எழுதிய சிலப்பதிகார முகவுரையிலிருந்தும், பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் மனோன் மணிய நாடகத்தின் முகவுரையிலிருந்தும் எடுக்கப்பட்டுள்ளன. படங்களுடன் கூடியது. viii. 384/1914/III.

P31,9

969. i. தமிழ்ப்பாடப் புத்தகம்—(நளன் குசேலன், கம்பன், அரிச்சந்திரன்) : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ. ப. 1+152 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–7–0 ; vii. ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளில் பாடமாக அமைந்த நூல். "பழைய கதை புதிய உரை" என்றும், ஆண் பெண் இருபாலரும் அச்சமின்றி அகமகிழ்ந்து வாசிக்குமாறு இந்நூல் இயற்றப்பட்டது என்றும் ஆசிரியர் கூறுகிறார். viii. 493/1911/II.

P31,9

970. i. திராவிட பால பாடம் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்; சென்னை. காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1911 ; iv. உ. ப. 40 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இது முதல் வகுப்புக்குரியது. ஆசிரியருக்குரிய குறிப்புக்கள் ஆங்காங்கே காட்டப்பட்டிருக்கின்றன. கணக்குப் பாடமும் இப்புத்தகத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 247/1911/III.

P31,9

971. i. நான்காம் திராவிட வாசகம் : முதற் பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1911 ; iv. உ. ப. 120 ; v. 18×12 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. தொடர்முறையில் கற்பித்தலுக்கு ஏற்றவகையில் புதியதோர் முறையில் எழுதப்பெற்றது. பல படங்களுடன் கூடியது. கற்பிக்கும் முறைக் குறிப்புக்களும் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆங்காங்கே பல விளக்கப்

படங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வாக்குண்டாம், நீதி வெண்பா பாடல்கள் சில தெரிந்து கொடுக்கப்பட்டுள்ளன. viii. 950/1911/III.

P31,9

972. i. நான்காம் பாடபுத்தகம்: திருத்தப்பட்ட பதிப்பு, ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ்; iii. ஜனவரி, 1911; iv. உ. ப. 128; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0; vii. இந்நூலில் முப்பத்து ஏழு பாடங்கள் உள்ளன. செய்யுள் பாடங்களில் வாக்குண்டாம், நல்வழி, நீதிவெண்பா ஆகியவை சேர்க்கப்பட்டுள்ளன. கடிதக் கையெழுத்துப் பிரதியும் மாண வர்கள் பழகுவதற்காக அச்சிடப்பட்டுள்ளது. viii. 224/1911/I.

P31,9

973. i. நான்காம் பாடபுத்தகம்: திருந்திய பதிப்பு: ii. சி. குமார சாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1914; iv. உ. ப. 128; v. 18×13; செ.மீ. vi. 0–4–0; vii. இந்நூலில் உள்ள பாடங்களில் ஆங்காங்கு அறத் தொடர்களும், பழமொழிகளும், கட்டுரைச் சொற்களும், மரபுச் சொற்களும் உள்ளன. பட விளக்கங்களும் இடம்பெற்றுள்ளன. viii. 383/1914/III.

P31,9

974. i. நூதன இரண்டாம் வாசக புஸ்தகம்; முதற் பதிப்பு ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ் மதராஸ்; iii. ஆகஸ்டு, 1914; iv. உ.ப. 74; v. 18×13 செ.மீ.; vi. 0–2–6; vii இந்நூல் இரண்டாம் வகுப்பிற்கான பாட நூல். இதில் 25 பாடங்கள் உள்ளன. படங்களுடன் கூடிய இந்நூலில் ஏரி, ஆறு, நமது உடல் போன்ற பொது அறிவு பாடங்களும், அறிவைப் புகட்டும் பல கதைகளும் அமைந்துள்ளன. எலியின் கலியாணம் எனும் கதைப்பாட்டும் உள்ளது. நூலின் ஆசிரியர் 'நல்லாசிரியன்' பத்திரிகையின் ஆசிரியருமாவார். viii. 847/1914/III.

P31,9

975. i. நூதன முதல் வாசக புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், காக்ஸ்டன் பிரஸ், மதராஸ்; iii. ஆகஸ்டு, 1914; iv. உ. ப. 58; v. 18×13 செ. மீ.; vi. 0–2–0; vii. இது முதல் வகுப்பிற்கான பாடநூல். பாடங் களுடன் கூடிய இந்நூலில் 27 உரைநடைப் பாடங்களும் ஒரு செய்யுள் பாடமும் அமைந்துள்ளன. தனித் தொடர்களில் தொடங்கி, 'குரங்கும் மோரும்', 'யார் பூனைக்கு மணி கட்டுவது' போன்ற கதைகளும் இதில் அமைந்துள்ளன. எறும்பைப்

பற்றிய பாடலும் சேர்க்கப்பட்டுள்ளது. viii. 846/1914/III.

P31,9

976. i. நூதன மூன்றும் வாசக புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்; காக்ஸ்டன் பிரஸ், மதறாஸ்; iii. ஆகஸ்டு, 1914; iv. உ.ப. 96; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. படங்களுடன் கூடிய இந்நூலில் 24 பாடங்கள் உள்ளன. மூன்றும் வகுப்பிற்கான இந்த நூலில் பொது அறிவுப் பாடங்களும் கதைகளும் ஒரு கதைப் பாட்டும் உள்ளன viii. 848/1914/III.

P31,9

677. i. முதல் திராவிட வாசகம்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii ஜூன், 1911; iv. உ.ப. 64+4 (68); v. 18×13 செ.மீ.; vi. 0-2-0; vii. தொடர் முறைக் கற்பித்தலுக்குப் பயன்படும் முறையில் செய்யப்பெற்றது. இதில் பெரும்பாலும் அறிவுக் கதைகளும் சிறுபான்மை பொருட் பாடங்களும் இசைப் பாடல்களும் உள்ளன. ஒவ்வொரு பாடத்திற்கும் பல படங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. இந் நூலின் சிறப்புகளும், கற்பிக்கும் முறைகளும் நூல் இறுதியில் 'போதனை முறைக் குறிப்புக்கள்' என்னும் தலைப்பில் எழுதப் பட்டிருக்கின்றன. viii. 248/1911/III.

P31,9

978. i. முதற் பாட புத்தகம்; திருத்தப்பட்ட பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ்; சென்னை, iii. ஜனவரி, 1911; iv. உ.ப. 64; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்நூலில் பாடங்களில் ஆங்காங்கு அறத் தொடர்களும், கட்டுரைச் சொற்களும், மரபுச் சொற்களும் இடம் நோக்கி அமைக்கப்பட்டுள்ளன. கடின சந்திகள் ஒருவாறு நீக்கப் பட்டுள்ளன. செய்யுட்பாடல்கள் முற்றும் அறத்தொடர்களாகவே இருப்பின் மாணக்கர்களுக்கு மன வெறுப்பு உண்டாகுமெனக் கருதி 'அறக் கதைகளை' இனிய செய்யுள் வடிவில் அமைத் திருப்பதாக இதன் ஆசிரியர் கூறுகிறார். இதில் இருபது பாடங்கள் உள்ளன. அறத் தொடர்கள் இருபதும் இறுதியில் உள்ளன. viii. 221/1911/I.

P31,9

979. i. மூன்றும் திராவிட வாசகம்: முதற் பதிப்பு; ii. சி. குமார சாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. உ.ப. 3+96; v. 18×12 செ.மீ.; vi. 0-3-0; vii. தொடர் கற்பிக்கும் முறைக்கு

(Correlative methods of teaching) ஏற்றபடி எழுதப்பட்டது. படங்களுடன் கூடியது. கற்பித்தலுக்குரிய குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 593/1911/III.

P31,9

980. i. மூன்றும் பாட புத்தகம்: திருத்தப்பட்ட பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்ட் சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1911; iv. உ.ப. 102+2; v. 19×13 செ.மீ.; vi. 0–3–0; vii. இதில் முப்பத்தேழு பாடங்கள் அமைக்கப்பட்டுள்ளன. வெற்றிவேற்கைப் பாடல்களும் தரப் பட்டுள்ளன. மாணவர்கட்காகக் கடிதக் கையெழுத்துப் பிரதிகள் அச்சிட்டுக் காட்டப் பெற்றுள்ளன. viii. 223/1911/I.

P31,9

981. i. பாலர் பாடம்: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்ரேச்சர் சொஸைட்டி, சென்னை; ஸி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப. 3+49; v. 18×13 செ மீ.; vi. 0–1–0; vii. கிண்டர் கார்டன் தொழில்களோடு தொடர்புப்படுத்தி எழுதப் பட்ட நூல். படங்களுடன் எழுத்து வரிசையைக் கற்பிப்பது. வரி வடிவங்களின் அமைப்புபற்றியும் குறிப்பு கொடுக்கப் பட்டிருக்கிறது. viii. 525/1913/I.

P31,9

982. i. பி. ஏ. தமிழ்ப் பாடப் புத்தகம் 1911: (புற நானூறு) 51–100 முதற் பதிப்பு; ii. வி. சாமிநாத ஐயர், பிரஸிடென்ஸி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1910; iv. செ.மூ. உ.ப. 2+7+9+78; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இது பழைய உரையும் ஆசிரியர் எழுதியுள்ள புதிய குறிப்புக்களும் அடங்கிய நூலாகும். viii. 156/1911/I.

P31,9

983. i. பி. ஏ. தமிழ்ப் பாடப் புத்தகம் 1912: முதற் பதிப்பு; ii. எஸ். கிருஷ்ணமாசாரியர் & வி. எம். கோபால கிருஷ்ண மாசாரியர், ஸ்ரீநிவாஸவரதாசாரி & கோ. சென்னை; iii. ஜனவரி, 1912; iv. செ. மூ. உ. ப. 197; v. 22×14 செ.மீ.; vi. 1–12–0; vii. பி. ஏ. வகுப்புக்குப் பாடமாக வைக்கப்பட்ட நூல். கம்ப இராமாயணம் கிஷ்கிந்தா காண்டத்தின் இறுதி ஐந்து படலங்களின் உரையுடன் கூடிய பதிப்பு. கம்பர் வரலாறும் இராமாயணத்தைப் பற்றிய குறிப்பும் முதலில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 487/1912/I.

P31,9

**மார்ஸ்டன், இ. (தொ.து.)**

984. i. நான்காம் வாசக புஸ்தகம்: மறு பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிடெட்; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. ஜூன், 1911; iv. உ.ப. 2+124; v. 18×13 செ. மீ.; vi. 0-4-0; vii. இது நான்காம் வகுப்பிற்குரிய நூல். பொருளடக்கத்தில் தமிழ்த் தலைப்புக்களுடன், ஆங்கிலத் தலைப்பும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. விளக்கப் படங்களும் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. செய்யுட் பகுதியில் நல்வழி, நீதி வெண்பா நூல்களிலுள்ள சில செய்யுட்கள் தெரிந்தெடுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 31/1911/III.

P31,9

985. i. முதல் வாசக புஸ்தகம்: திருந்திய பதிப்பு; ii. மாக்மில்லன் அண்டு கோ., லிமிட்டெட், பம்பாய்; எஸ். பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1914; iv. உ. ப. 63; v. 19×13 செ.மீ.; vi. 0-2-0; vii. படங்களுடன் பாடப் பொருளை இயைபுபடுத்தி விளக்கும் நூல். சித்திரம், கைவேலை, எழுத்துப் பயிற்சி ஆகியவை ஒவ்வொரு பாடத்திற்கும் கொடுக்கப்பட்டுள்ளன. பாடம் 14, 17 இவற்றில் காணும் சில படங்கள் தமிழ்நாட்டு மரபோடு இயையாது வடநாட்டுப் பண்போடு ஒத்துள்ளன. viii. 300/1914/I.

P31,9

**முத்துசாமி அய்யர், வி. & சுப்பிரமணிய அய்யர், எ. கே.**

986. i. கதையும் பாட்டும்: முதல் பதிப்பு; ii. வி. முத்துசாமி அய்யர் & எ. கே. சுப்பிரமணிய அய்யர்; தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1915; iv. செ. மு. ப. 39; v 19×13 செ. மீ.; vi. 0-4-0; vii. பள்ளிச் சிறுார்க்கென எழுதப்பட்ட பாட்டும் கதையும் கொண்ட சிறு நூல் viii. 537/1915/III.

P31,9

987. i. **மெட்ரிகுலேஷன் பரிக்ஷை தமிழ்ப் பாடப் புத்தகம் 1912:** முதற் பதிப்பு; ii. சென்னைப் பல்கலைக் கழகம்; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1911; iv. உ. ப. 66; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0; vii. செய்யுட் பாடத் திரட்டும், உரைநடைக் கோவையுமாக அமைந்துள்ளது. viii. 241/1911/I.

P31,9

988. i. **மெட்ரிகுலேஷன் தேர்வு தமிழ்ப் பாடப் புத்தகம் 1913:** முதற் பதிப்பு; ii. எஸ். கிருஷ்ணமாச்சாரியார் & வி. எம். கோபால கிருஷ்ணமாச்சாரியார்; கணேசா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. செ. மு. உ. ப. 58; v. 22×14 செ. மீ.; vi. 0-10-0; vii. குமரேச சதகம், இளையான்குடி மாற

நாயனர் புராணம், நளவெண்பா முதலிய பாடப் பகுதி களுக்கு உரை விளக்கம் தரும் நூல். உரை நடை நூல்களுக்கு (பத்ருஹரி, ஷிம்பலீன் மகாராஜன் கதை). அருஞ்சொற்பொருள் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 704/1912/III.

P31,9

989. i. மெட்ரிகுலேஷன் தமிழ்ப் பாடப் புத்தகம் 1914 : முதற் பதிப்பு; ii. பல்கலைக் கழகம், சென்னை ; எஸ். பி. ஸி. கே. பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. உ.ப. 95 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; பெரும் பள்ளி இறுதித் தேர்வுக்காகத் தேவாரம், பெரிய திருமொழி, ஏரெழுபது, நளவெண்பா, நீதிநெறி விளக்கம், குமரேச சதகம் என்னும் செய்யுள் நூல் களிலிருந்து தெரிந்தெடுத்த கவிதைகள் உள்ளன. உரை நடைப் பகுதியில் சுகிர்லாபம், வெனிஸ் வர்த்தகன், ரோமேனிய நாட்டு இராணியாகிய எலிசபெத்து என்னும் மூன்று பாடங்கள் உள்ளன. viii. 681/1913/I.

P31,9

990. i. மெட்ரிகுலேஷன் தமிழ்ப் பாடப் புத்தகம் 1914 : முதற் பதிப்பு ; ii. எஸ். கிருஷ்ணமாச்சாரியார் & வி. எம். கோபால கிருஷ்ணமாச்சாரியார், கணேசா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1913 ; iv. உ.ப. 122+37 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. 1914 ஆம் ஆண்டு பெரும் பள்ளி இறுதித் தேர்வுக்கு நியமிக்கப்பட்ட செய்யுட் பாடப் பகுதியின் உரை விளக்க நூல். பாடல்களுக்கு உரையும் அதில் குறிப்பிடப்பெறும் தனி வரலாறு களும் பாடல்களை ஆக்கிய புலவர்களின் வரலாறும், கொடுக்கப் பட்டுள்ளன. பஞ்சதந்திரத்தில் சுகிர்லாபம், வெனிஸ் வர்த்தகன் என்னும் உரைநடை நூல்களுக்குரிய அருஞ்சொற்பொருள் களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 284/1913/III.

P31,9

991. i. மெட்ரிகுலேஷன் தேர்வு தமிழ்ப் பாடப் புத்தகம் 1915 : முதற் பதிப்பு ; ii. ரிஜிஸ்ட்ரார், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1914; iv. செ.மூ.ப. 107 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. பெரும் பள்ளி இறுதித் தேர்வுக்குரிய செய்யுட் பாடங்கள், உரை நடைப் பாடங்கள் அடங்கிய பகுதி, கம்பராமாயணம், அற நெறிச்சாரம், தேவாரம் முதலிய நூல்களிலிருந்து தெரிந் தெடுத்த பாடல்கள் உள்ளன. உரைநடை பாடப் பகுதியில் தாண்டவராய முதலியார் எழுதிய பஞ்சதந்திரக் கதையின் சந்தி விக்கிரகம் கதையும், செல்வ கேசவராய முதலியார் தொகுத்து எழுதிய ராபின்சன் குருஸோவில் ஒரு பகுதியும் கொடுக்கப்பட்டுள்ளன. viii 795/1914/I.

P31,9

992. **i. மெட்ரிகுலேஷன் (1915-ம் வருடம்) தேர்விற்கான தமிழ் செய்யுட் பாடப் பகுதி—தெளிவுரைகளுடன் :** **ii.** எஸ். கிருஷ்ண மாசாரி, சென்னை; கணேசா பிரஸ், வேப்பேரி; சென்னை ; **iii.** ஜூலை; 1914 ; **iv.** செ.மூ.உ.ப. 104+16+13 ; **v.** 21×14 செ. மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** 1915-ம் ஆண்டு பெரும் பள்ளி இறுதித் தேர்வுக்குப் பாடமான தமிழ் நூலின் உரை நூல். இந்த உரை நூலை ஆக்கியவர்கள் எஸ். கிருஷ்ணமாச்சாரியும், வி. எம். கோபால கிருஷ்ணமாச்சாரியும் ஆவர். **viii.** **276**/1914/III.

**P31,9**

993. **i. மெட்ரிகுலேஷன் தேர்வு—1915, தமிழ்ப் பாடப் புத்தக உரை நூல் :** முதற் பதிப்பு ; **ii.** சி. ஆர். கோவிந்தராஜ முதலியார், சென்னை ; சச்சிதானந்தா பிரஸ், சென்னை ; **iii.** செப்டம்பர், 1914 ; **iv.** செ.மூ.உ.ப. 176 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 0–8–0 ; **vii.** சென்னைப் பல்கலைக் கழக 1915 ஆம் ஆண்டு பெரும் பள்ளி இறுதித் தேர்விற்காக தமிழ்ப் பாடப் பகுதியும் உரையும் உள்ளது. புத்தகத்தின் இறுதியில் பிழைத் திருத்தப் பகுதி ஒன்றும் உள்ளது. 'பாவியற் சுருக்கமும்' தரப்பட்டிருக் கிறது. **viii.** 36/1914/IV.

**P31,9**

994. **i. மெட்ரிக் தமிழ் பாடப் புத்தகத்திற்குக் குறிப்பு—1916 :** **ii.** இ. எம். கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை, விக்டோரியா பிரஸ்; மதுரை ; **iii.** 1915 ; **iv.** செ.மூ.உ.ப. 48 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0–8–0 ; **vii.** 1916 ஆம் ஆண்டு அரசினரால் பெரும் பள்ளி இறுதித் தேர்வுக்குப் பாடமாகக் குறிப்பிட்ட செய்யுள்களுக்கு உரை. இந்தக் குறிப்புரையை எழுதியோர் கார்மேகக் கோனார், பி. முத்துசாமிக் கவுண்டர், சிதம்பரபுண்ணியநாத முதலியார் முதலியோர் ஆவர். இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனார் ஒத்துழைப்புடன் வெளிவந்தது இந்நூல். **viii.** 203/1915/III.

**P31,9**

995. **i. மெட்ரிகுலேஷன் பரிட்சை—1916, தமிழ் பாடப் புத்தகம் :** முதற் பதிப்பு ; **ii.** சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; **iii.** மார்ச், 1915 ; **iv.** உ.ப. 84 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** 1916 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகப் பெரும் பள்ளி இறுதித் தமிழ்த் தேர்வுக்கான பாடப் புத்தகம். செய்யுள் திரட்டும் உரை நடைக் கோவையும் அமைந்துள்ளது. உரைநடைப் பகுதியில் மனுமுறை கண்ட வாசகம், விநோத ரசமஞ்சரி, பிரதாப முதலி யார் சரித்திரம் என்னும் நூல்களிலிருந்து தெரிந்தெடுத்த பகுதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. **viii.** 1063/1915/I.

**P31,9**

**ராமசாமி சாஸ்திரி, பி. வி.—(தொ.து.)**

996. i. செய்யுட் பாடத்திரட்டு : முதற் பதிப்பு ; ii. பி. வி. ராமசாமி சாஸ்திரி, நித்யகல்யாண சுந்தரம் பிரஸ், ஈரோடு ; iii. ஜூலை, 1912 ; iv. செ.மூ.ப. 17 ; v. 20×15 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இது முதல் படிவத்திற்குரிய செய்யுள் திரட்டு ; ஈரோடு மஹாஜன ஹைஸ்கூலில் பதிப்பிக்கப்பெற்ற நூல். நளவெண்பா, விவேக சிந்தாமணி, அரிச்சந்திரபுராணம், நீதிநூல், தனிப் பாடல்கள், திருவேங்கட சதகம், குமரேசர் சதகம், அறப்பளீசுரர் சதகம் ஆகிய நூல்களிலிருந்து செய்யுட்கள் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 277/1912/III.

P31,9

**ராஜரத்னம் பிள்ளை, டி. ஏ.**

997. i. முதலாவது கதாவாசக புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1913 ; iv. உ.ப. 4+48 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. இளம் பள்ளிப் பிள்ளைகளுக்கு ஏற்ற பாட நூல். பெரும்பாலும் கதைகளையே கொண்டது. சிற்சில பொருட் பாடங்களும் இசைப் பாட்டுகளும் இதில் உள்ளன; viii. 142/1913/III.

P31,9

998. i. இரண்டாவது கதாவாசக புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை ; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ.ப. 4+84 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இரண்டாவது வகுப்புக்குரிய பாடப் புத்தகம். பெரும்பாலான பாடங்கள் கதைகளாக இருப்பதால் இது கதாவாசக புத்தகம் எனப் பெயர் பெற்றது. படங்களுடன் கூடியது. செய்யுட் பாடங்களும் சில உள்ளன; viii. 905/1914/I.

P31,9

999. i. மூன்றாவது கதாவாசக புஸ்தகம் ; புதிய பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை ; சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ.ப. 6+88 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. மூன்றாம் வகுப்புக்குரியது இக் கதாவாசகப் புத்தகம். இதில் பெரும்பாலான பாடங்கள் கதைகளாக உள்ளன. குழந்தைகளுக்கேற்ற அதிசயப் பாடல்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. முப்பத்தேழு பாடங்கள் உள்ளன ; படங்களுடன் கூடியது. பொருள் அட்டவணையில் தமிழோடு ஆங்கிலப் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 427/1914/II.

P31,9

1000. i. நான்காவது கதாவாசக புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்டரேசர் சொஸைட்டி, சென்னை; சி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 5+103; v. 18×13 செ. மீ.; vi. 0–4–0; vii. நான்காம் வகுப்புக்குரிய பாடப் புத்தகம்; 34 பாடங்கள் உள்ளன. இவற்றுள் பெரும் பான்மையும் கதைகளாகும், படங்களுடன் கூடியது. நல்லாதனார் இயற்றிய திரிகடுகம் பாடல்களில் பதின்மூன்று இதில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் வண்ண ஓவியம் முதலில் உள்ளது. நாட்டுப்பற்றை உண்டாக்கத்தக்க சிற்சில கதைகளையும், அரசர் வாழ்த்துப் பாடல்களையும் இதில் சேர்த் துள்ளனர். பாடப் பொருள் அட்டவணையில் ஆங்கிலத்திலும் தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன; viii. 829/1914/II.

**P31,9**

1001. i. ஐந்தாவது கதாவாசக புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்டரேசர் சொஸைட்டி, சென்னை; சி. எல். எஸ். பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. உ.ப. 5+140; v. 18×13 செ. மீ.; vi. 0–4–0; vii. பெரும்பாலும் கதைகளைக் கொண்ட பாடங்களை உடைமையினால் இதற்குக் கதாவாசகப் புத்தகம் என்று பெயரிட்டுள்ளார். 39 பாடங்கள் இதில் உள்ளன. சிறுவர், சிறுமியர் விருப்புடன் பாடத்தக்கச் சந்தப் பாடல்கள் (Nursery rhyms) என்னும் கேளிக்கைப் பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. பெரியோரைப் பேணுதல், அன்புடைமை, உயிர் களிடம் அன்பு, நாட்டுப்பற்று முதலிய அறங்களைப் புலப்படுத்து கின்றன; படங்களுடன் கூடியது. சென்னைக் கிறித்துவ கல்லூரியைத் தோற்றுவித்துச் சிறக்கச் செய்த டாக்டர் மில்லர் துரையின் வாழ்க்கைச் சரித்திரத்தைச் சேர்த்திருப்பதோடு அவரது உருவப்படத்தையும் மேல் அட்டையில் கொடுத்துள்ளார்; viii. 830/1914/II.

**P31,9**

**ரெங்கஸ்வாமி அய்யங்கார், எஸ். வி.**

1002. i. ஆக்ஸ்பர்ட் வாசக புஸ்தகம்: பாலசிக்ஷை; இரண்டாம் பாடம், முதற் பதிப்பு; ii. ஆக்ஸ்போர்ட் யூனிவர்சிடி பிரஸ், சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1914; iv. உ.ப. 30; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0; vii. இரண் டாம் வகுப்புச் சிறுவர்களுக்கேற்ற தமிழ்ப் பாட நூல்; படங் களுடன் கூடியது. 'இரண்டாம் பாலசிக்ஷை' என்றும் இது பெயர் பெறும்; viii. 1010/1914/IV.

**P31,9**

1003. i. ஆக்ஸ்பர்ட் வாசக புஸ்தகம்—இரண்டாம் வாசக புஸ்தகம்: முதற் பதிப்பு; ii. ஆக்ஸ்போர்ட் யூனிவர்ஸிடி பிரஸ், மினர்வா பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1915; iv. உ. ப. 80;

v. 18×13 செ.மீ.; vi. 0–2–6 ; vii. பள்ளி மாணவர்களுக்கான இரண்டாம் வகுப்பு தமிழ்ப் பாடப் புத்தகம். வடமொழிச் சொற்களைத் தமிழ் ஓசைக்கு ஏற்ப மாற்றி பயன்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு பாடத்திற்கும் கேள்விகள், அருஞ்சொற்கள் என இரு பகுதிகள் அவ்வப்பாடங்களின் இறுதியில் சேர்க்கப் பட்டுள்ளன. படங்களுடன் கூடியது; viii. 1151/1915/I.

P31,9

1004. i. ஆக்ஸ்பர்ட் வாசக புஸ்தகம்—பால சிஷை முதல் பாகம் : முதற் பதிப்பு ; ii. ஆக்ஸ்போர்ட் யூனிவர்சிடி பிரஸ், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஆக்டோபர், 1914 ; iv. உ.ப. 28 ; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0 ; vii. தொடக்கக் கல்வி பயிலும் சிறுர்களுக்கு ஏற்ற வகையில் அமைந்த தமிழ்ப் பாட நூல். தமிழ் எழுத்துக்கள், சொற்கள் இவைகளை விளக்கும் படங்கள் இந்நூலில் உண்டு. இந்நூல் முதல் வகுப்பிற்குரியது. 'ஆக்ஸ்பர்ட் முதல் பால சிக்ஷை' என்றும் இது கூறப்படும்; viii. 1002/1914/IV.

P31,9

1005. i. ஆக்ஸ்பர்ட் வாசக புஸ்தகம், மூன்றும் வாசக புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. ஆக்ஸ்போர்ட் யூனிவர்சிடி பிரஸ், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 96 ; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0 ; vii. இந்நூல் மூன்றும் வகுப்பிற்கான தமிழ்ப்பாட நூல். 36 பாடங்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் சில செய்யுட் பாடங்களும் உள; viii. 1152/1915/I.

P31,9

1006. i. ஆக்ஸ்பர்ட் வாசக புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. ஆக்ஸ்போர்டு யூனிவர்சிட்டி பிரஸ், பாம்பே அண்டு மதராஸ் ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1915 ; iv. உ.ப. 68 ; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0 ; vii. இது முதல் வகுப்பு மாணவர்களுக்கானத் தமிழ்ப் பாட நூல். எளிமையான செய்யுட்கள் சிலவும் இடையிடையே சேர்க்கப்பட்டுள்ளன. வட மொழிச் சொற்களை நூலுள் அமைத்துள்ள முறை பற்றியும் முன்னுரையில் ஆசிரியர் விளக்கியுரைத்துள்ளார் ; படங்களுடன் கூடியது; viii. 1150/1915/I.

P31,9

1007. i. **வித்தியா மாலிகை பாலபாடம் :** புதிய பதிப்பு ; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொஸைட்டி, சென்னை ; சி.எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. மே, 1914 ; iv. உ.ப. 35 ; v. 18×13 செ.மீ.; vi. 0–0–9 ; vii. வித்தியா மாலிகை பாட புஸ்தக வரிசையில் இது முதல் வகுப்புக்குரிய சிறுவர் பாட

நூல். படங்களுடன் கூடியது. எழுத்தின் வரிசையும் ஒன்று முதல் இருபது வரை எண் வரிசையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன; **viii.** 768/1914/II.

**P31,9**

1008. **வித்தியா மாலிகை முதற் புத்தகம்:** பதினேழாவது புதிய பதிப்பு; **ii.** தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை; **iii.** மே, 1914; **iv.** உ.ப. 63; **v.** 18×12 செ.மீ.; **vi.** 0–1–9; **vii.** வித்தியா மாலிகை வரிசையில் இது முதல்நூல். சிறுவர் பாடத்தின் தொடர்ச்சியாய் ஓர் எழுத்துச் சொற்கள், ஈரெழுத்துச் சொற்கள் என்று கொடுத்து, ஐந்து எழுத்து சொற்களுக்கு மேற்பட்ட தொடர் மொழி பாடங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. படங்களுடன் கூடியது. 'உலகநீதி' வாக்கியங்கள் ஐம்பது கொடுக்கப்பட்டிருக்கின்றன; **viii.** 769/1914/II.

**P31,9**

**வெங்கட குருமூர்த்தி ஐயர்**

1009. **i.** கிண்டர் கார்டன் முறை வியாசங்களும், அபிநயப் பாட்டுகளும், பிரேயர்களும்: முதற் பதிப்பு; **ii.** வெங்கட குருமூர்த்தி ஐயர், ஸ்ரீ வரலக்ஷ்மி விலாசம் பிரஸ், நெல்லிக்குப்பம்; **iii.** நவம்பர், 1911; **iv.** செ.மூ.உ.ப. 24; **v.** 17×10 செ.மீ.; **vi.** 0–1–6; **vii.** இந்நூலின் ஆசிரியர் சிறு பிள்ளைகள் எளிதில் அறியும்வண்ணம் இராமாயணம், பாரதம், பாகவதம் முதலான இதிகாசங்களிலுள்ள சிற்சில பகுதிகளைச் சுருக்கமாய் வரைந்திருக்கிறார்; கிண்டர்கார்டன் முறையாகிய தொழில்களையும் சொல்லியிருக்கிறார். தொழிலடிப்படையில் கட்டுரை சொல்லும்படியும், பாட்டை மெய்ப்பாடுகளுடன் சொல்லும்படியும் இது தூண்டுகிறது; **viii.** 516/1911/IV.

**P31,9**

**வெங்கட்டராம சாஸ்திரி, திருச்சிறுப்பள்ளி**

1010. **i.** புதிய தமிழ் பால சிக்ஷை: முதற் பதிப்பு; **ii.** ஆர். திருமலை அண்டு கம்பெனி, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; **iii.** ஜனவரி, 1915; **iv.** உ.ப. 38; **v.** 18×13 செ.மீ.; **vi.** 0–1–6; **vii.** இந்நூல் ஆரம்பப் பள்ளிச் சிறார்கள் தமிழ்ப் பயிலும் நோக்கத்துடன் எழுதப்பெற்றது. படங்களுடன் கூடியது. இணைத்துக் கற்பிக்கும் முறைப்படி படம் பார்த்துப் படித்தல், உரையாடல் முதலியன அமைத்து எழுதப்பட்ட நூல்; **viii.** 1130/1915/I.

**P31,9**

**வெங்கடராம சாஸ்திரி, வி. பி.**

1011. **i.** இரண்டாவது புதிய தமிழ் வாசகம: முதற் பதிப்பு; **ii.** திருமலை அண்டு கோ, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; **iii.** அக்டோபர், 1914; **iv.** உ.ப. 85; **v.** 19×13 செ.மீ.; **vi.** 0–2–6; **vii.** இந்நூல் இரண்டாவது வகுப்புத் தமிழ் பயிலும் மாணவருக்கு உரியது. 29 அத்தியாயங்களாகப் பிரித்து வைக்கப்பட்டிருக்கிறது. ஐந்தாம் ஜார்ஜ் அரசரின் படமும், ராணி மேரியின் படமும் முதலில் உள்ளன. படங்களும் ஒரு சில உள. **viii.** 339/1914/IV.

**P31,9**

1012. **i.** புதிய தமிழ் முதல் வாசகம்: முதற் பதிப்பு; **ii.** திருமலை அண்டு கோ, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; **iii.** அக்டோபர், 1914; **iv.** உ.ப. 62; **v.** 19×13 செ.மீ.; **vi.** 0–2–0; **vii.** பள்ளிச் சிறுவர்க்கென இயற்றப்பெற்ற தமிழ் முதல் வாசகம். ஆங்காங்குப் பட விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. இதில் 36 பாடங்கள் அடங்கியுள்ளன. இணைத்துக் கற்பிக்கும் முறைப்படி படம் பார்த்துப் படித்தல், உரையாடல், கதை சொல்லல், சொற்றொடராக்கம், வார்த்தை கட்டுதல், சித்திரம், கைத்தொழில் முதலிய செய்திகள் கற்பிப்பதற்குத் தக்கதாக அமைக்கப்பட்ட நூல். **viii.** 338/1914/IV.

**P31,9**

1013. **i.** மூன்றாவது புதிய தமிழ் வாசகம்: முதற் பதிப்பு; **ii.** ஆர். திருமலை அண்டு கோ, சென்னை; மினர்வா பிரஸ், சென்னை; **iii.** அக்டோபர், 1914; **iv.** உ.ப. 111; **v.** 18×12 செ.மீ.; **vi.** 0–3–0; **vii.** மூன்றாம் வகுப்பு மாணவர்க்கான தமிழ்ப் பாட நூல். ஆங்காங்கே பட விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடத்தின் முதலிலும் 'பீடிகை வாக்கியங்கள்' என்பதும், இறுதியில் பயிற்சியும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இலக்கணம் தனிப் பாடமாயில்லாமல் உரை நடை பாடத்துடன் கலந்து கற்பிக்கவேண்டும் என்னும் விதியைப் பயன்படுத்தி, இந்தப் பயிற்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன. **viii.** 994/1914/IV. **P31,9**

**ஷாகுல்ஹமீத் லெப்பை**

1014. **i.** முஹம்மதிய இரண்டாம் வாசக புஸ்தகம்: **ii.** எம். ஏ. ஷாகுல்ஹமீத் லெப்பை அண்டு சன்ஸ், திருவல்லிக்கேணி; ஷாகுல் ஹமீத்தய்யா பிரஸ், சென்னை; **iii.** 1915; **iv.** உ.ப. 82; **v.** 18×13 செ.மீ.; **vi.** 0–3–0; **vii.** இஃது இசுலாமிய சமய வரலாறு, நடவடிக்கைகள், சமயக் கோட்பாடுகள், ஒழுங்கு முறைகள், அறமொழிக் கொள்கைகள் ஆகியவற்றை அழகிய தமிழ் நடையில் சிறுவர்க்கேற்ற முறையில் தரும் நூல் ஆகும். **viii.** 207/1915/III.

**P31,9**

## 500. விஞ்ஞானம் : பொது

**கஸ்தூரி ரங்கய்யர், ஆ.வி., மைலாப்பூர்**

1015. i. இயற்கை அற்புதங்கள் : முதற் பதிப்பு; ii. ஜனரல் சப்ளைஸ் கம்பெனி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 6+116+7 ; v. 18×13 செ.மீ.; vi 0-8-0 ; vii. இயற்கையின் வியத்தகு நிகழ்ச்சிகளாகிய மழை, எரிமலை, நிலநடுக்கம், வெந்நீர் ஊற்றுக்கள், வானவில், வால் விண்மீன்கள், எரி விண்மீன்கள் முதலியவற்றை விளக்கி உரைப்பது. எல்லோரும் படிக்கத்தக்க வகையில் எளிய நடையை ஆசிரியர் இதில் கையாண்டுள்ளார். இதில் பயன்படுத்திய கலைச் சொற்களுக்கு உரிய தமிழ் மொழி பெயர்ப்பு இறுதியில் தரப்பட்டிருக்கிறது. viii. 548/1911/II.

A

**கோயில்பிள்ளை, வி. சாமுவேல், உத்திரமேரூர்**

1016. i. எலிமெண்டரி பாட இரத்தினங்கள் : இரண்டாம் பதிப்பு; ii. வி. கோயில் பிள்ளை, உத்திரமேரூர் ; கலாரத்நாகரம் பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1912 ; iv உ.ப. 30+272 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. தொடக்கப் பள்ளிகளுக்குப் பாடத்திட்டப்படி எழுதப்பெற்ற ஊராட்சி, இயற்கைப் பாடம், அறிவியல் என்பன பற்றியும், உடலோம்பலும் மதுவிலக்கும் என்பது பற்றியும் விவரிக்கும் நூல். இந்திய அரசாட்சி எவ்வாறு நடத்தப்பட்டு வருகிறதென்றும் விவரித்திருப்பதோடு இயற்கையறிவு, விலங்கு அறிவு பற்றிய செய்திகளும் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. உடலோம்பல் பற்றிய பகுதியில் மக்கள் கவனிக்கத்தக்க பல நல்வழி விதிகளும், நோய்களும் அவற்றினை நீக்கும் முறைகளும் மருந்துகளும் கட்டுப்பாடுகளும் கூறப்பட்டுள்ளன. viii. 371/1912/II.

A

**நாராயணசாமிஅய்யர், பி., கும்பகோணம்**

1017. i. பிராக்டிகல் லெசன்ஸ் இன் சயின்ஸ் அண்டு ஜியாகிராபி முதல் பாகம்: முதற் பதிப்பு ; ii பி. நாராயணசாமி அய்யர், செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1914 : iv. உ.ப. 68 ; v. 18×13 செ.மீ.; vi. 0-6-0 ; vii. தொடக்க வகுப்புக்களுக்கான அறிவியல் நிலவியல் நூல். 8 அத்தியாயங்களில் அமைந்தது. படங்களுடன் கூடிய இந்தப் பாடநூலில் 46 பாடங்கள் உள. குழந்தைகளுக்குப் பட்டறிவு முறையில் அறிவியற் கல்வி புகட்டுவதே இந்நூலின் நோக்கம் என்பது ஆசிரியரின் முகவுரையிலிருந்து தெரிகிறது. viii. 745/1914/III.

A

1018. i. பிராக்டிகல் லெசன்ஸ் இன் சயன்ஸ் அண்டு ஜியாகிரபி (விஞ்ஞானமும் நில நூலும்) ; ii. பி. நாராயணசாமி அய்யர், கும்பகோணம் ; கல்யாண சுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. உ.ப. 128 ; v. 22×14 செ.மீ.; vi. 0–10–0 ; vii. நடைமுறையிலுள்ள அறிவியலும நில இயலும் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. முதல் மூன்று வகுப்புகளுக்கு ஏற்றவண்ணம் எழுதப்பட்டது. இது படங்களுடன் விளக்கம் தரும் நூல். viii. 488/1915/III.

## 5 1 எண் கணிதம்

**இராமானுஜாச்சாரி, டி.**

1019. i. பாலபோதனு கணிதம்; திருந்திய பதிப்பு ; ii. டி. இராமனுஜாச்சாரி, சென்னை ; பி. ஆர் இராமய்யர் & கம்பெனி, சென்னை ; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 5+129+4 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–3–6 ; vii. தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கான கணித நூல். முதற் பகுதியில் பத்து அத்தியாயங்களில் கணித பாடங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. கணிதங்களைக் கற்பிக்கும் முறையும் விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. இறுதியில் தேர்வு வினாக்களும், கணக்குகளுக்குரிய விடைகளும் உள்ளன. இந்நூல் குறித்து திரு. எம். ராமசாமி அய்யங்கார், திரு. எம். சி. எஸ். அனந்தபத்மனுபராவ், திரு. எஸ். வாசுதேவச்சாரியார் ஆகியோரின் கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன. viii. 1152/1914/II.

B1

1020. i. பாலபோதனு கணிதம் ; திருந்திய பதிப்பு; iii. ஜூன், 1914 ; iv. உ.ப. 4+36+4 ; v. 18×12 செ.மீ.; vi. 0–4–6; vii. ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கான கணிதப் புத்தகத்தின் இரண்டாம் பாகம் ; எட்டு அத்தியாயங்கள் உள்ளன. viii. 1153/1914/II.

B1

**உதுமான் அலியார், சாஹிபு, செ.பி.**

1021. எக்சன்ஸ் இஸ்டாண்டு பவுன் புக்கு : முதற் பதிப்பு ; ii. எஸ்.பி. உதுமான் அலியார் சாகிப், இராணிப்பேட்டை ; கார்நேஷன் அச்சியந்திரசாலை, இராணிப்பேட்டை ; iii. ஜூன் 1914 ; iv. உ.ப. 74 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0-0 ; vii. வணிகர்களுக்கு வேண்டுவதாயுள்ள அவசியமான சில கணக்குகளை முயன்று திரட்டி ஆர்க்காடு கோனூர் தெரு, நாராயணசாமி முதலியார் அவர்கள் பொருட்துணையினால் வெளியிடப்பட்டது.

ராத்தலின் பேரில் எடைபோடப்பட்ட சரக்கு அடங்கலுக்கும், ஒரு ராத்தல் முதல் 10,000 ராத்தல் வரைக்கும் அந்தந்த அளவுக்கு ஏற்றபடி நிலை பார்க்கப் பயன்படும். viii. 46/1914/III.

B1

**கந்தசாமி பண்டாரம், தி.**

1022. i. கணித மஞ்சரி : முதற் பதிப்பு ; ; ii. தி. கந்தசாமி பண்டாரம் ; இந்தியன் அச்சுக்கூடம், செங்கல்பட்டு ; iii. ஏப்ரல், 1913 ; iv. உ.ப. 27 ; v. 15×11 செ.மீ. ; vi. 0-1-6 ; vii. கணித அறிவுக்கு இன்றியமையாத பெருக்கல் வாய்பாடுகளைக்கொடுத்துள்ளார். தவிரவும் வணிகர்களுக்கு வேண்டிய கணிதங்களின் எடுத்துக் காட்டுகளையும் இதில் அமைத்துள்ளார். viii. 364/1913/II.

B1

**குமாரசுவாமி முதலியார், கு. & சிற்றம்பலம் பிள்ளை, டி. கே.**

1023. i. பாலர் கணிதம் ; முதற் பதிப்பு ; ii. இராமாநுஜலு நாயுடு ; டைமண்ட் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1911 ; iv. உ.ப. 1+76 ; v. 18×13 செ.மீ.; vi. 0-6-0; vii. தொடக்கப் பள்ளிகளில் பயிலும் முதலிரண்டு வகுப்புகளுக்காக எழுதப் பட்ட கணித நூல். சில படங்களும் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன. viii. 354/1911/III.

B1

1024. i. பாலர் கணிதம்—மூன்றும் வகுப்பு : முதற் பதிப்பு ; ii. ஜி.வி. ராமாநுஜலு நாயுடு ;மதருஸ் டைமண்ட் பிரஸ்; iii. மே, 1912 ; iv. உ.ப. 1+122 ; v. 18×13 செ.மீ.; vi. 0-2-0 ; vii. தொடக்கப்பள்ளிகளின் பயனுக்காக இயற்றப்பட்டது. எண் கணிதமும் க்ஷேத்திர கணிதமும் என இரு பெரும் பகுதிகள் உள்ளன. கணக்குகளுக்குரிய விடைகள் இறுதியில் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 714/1912/II.

B1

**சவுக்கார் அப்துல் லதீப் சாயபு, மேல்விஷாரம்**

1025. i. சூக்ஷ்ம கணிதம் —முதற் பாகம் : முதற் பதிப்பு ; ii. சவுக்கார் அப்துல் லதீப் சாயபு, மேல் விஷாரம் ; விஜய விகடன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1914 ; iv. உ.ப. 45 ; v. 13×10 செ.மீ.; vi. 0-4-0; vii. சுருக்கமான வழியைக்காட்டும் கணக்குப் புத்தகம்—வாய்பாடுகளும் கணக்கை விளக்கிய குறிப்புகளும் அங்கங்கே கொடுக்கப்பட்டுள்ளன. viii. 582/1914/I.

B1

**ராமா அய்யர், எம்.**

1026. i. அனுபவமுறை பால போத கணிதம் : முதற் பதிப்பு; ii. ஆர். திருமலை அண்டு கம்பெனி, சென்னை ; கபாலி பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1912 ; iv. உ.ப. 8+128; v. 18×12 செ.மீ.; vi. 0–6–0 ; vii. தொடக்கப்பள்ளி ஆசிரியர் களுக்கும் குழந்தைகளுக்கும் பயன்படத்தக்க வகையில் அமைக் கப்பட்டுள்ளது. இதில் "அங்க கணிதமும் க்ஷேத்திர கணிதமும்" கொடுக்கப்பட்டிருக்கின்றன. படங்கள் மூலமும் சில எடுத் துக்காட்டுகள் விளக்கப்பட்டிருக்கின்றன. அறுபத்திரண்டு பயிற்சிப் பகுதிகள் இதில் உள்ளன. viii. 281/1912/III.

B1

**சாமிநாத பிள்ளை, எஸ்., பெரியதும்பூர்.**

1027. i. கணித தீப விளக்கம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சாமிநாத பிள்ளை, பெரிய தும்பூர்; நீல லோசனி பிராஞ்சு அச்சியந்திரசாலை, திருவாரூர் ; iii. ஜூன், 1912 ; iv. உ.ப. 40 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இக் கணித தீப விளக்கமானது பள்ளிகளில் கற்கும் மாணாக்கர்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன்படக்கூடியது. இந்நூலில் நாட்டில் வழங்கும் காசை, கலம், மரக்கால், படி, பாரம், மணங்கு, வீசை, பொதி, சோ, பலம, ஆடம், குடம், டின், நெல் வாரம், வட்டிக் கணக்கு, குழி மாறுதல், பாக்கு, வெத்திலை, மூட்டை, வலியன், சம்பளப் பட்டி, முதலாகிய கணக்குகளும் மற்றும் பலவகையான கணக்குகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 156/1912/III.

B1

**சிதம்பரம் பிள்ளை, எஸ். டி. என்.**

1028. i. தமிழ் இலக்க ஆரம்ப விளக்கம் : முதற் பதிப்பு ; ii. வி. கிருஷ்ணசாமி நாயுடு, கும்பகோணம் ; ஸ்ரீ கோபால விலாஸ அச்சுக் கூடம், கும்பகோணம் ; iii. பிப்ரவரி, 1911 ; iv. உ. ப. 1+24 ; v. 14×11 செ. மீ.; vi. 0–1–0 ; vii. இம்மி முதல் கோடி வரையுள்ள இலக்கங்களுக்கு, தமிழ் எண், தமிழ் எழுத்து, ஆங்கில எண், ஆகியவை கொடுக்கப் பட்டிருக்கின்றன. இவையன்றி முகத்தலளவையும் தரப்பட் டிருக்கிறது. இந்தியச் சிறுவர்கள் சிறுமியர்கள் எண்களை எளி தில் உணரும் நிமித்தம் இயற்றப்பட்டது. viii. 376/1911/I.

B1

**சுப்பிரமணிய அய்யர், எம். என்.**

1029. i. தமிழ் நாட்டுக் கணக்கு பதிவு நூல் : ii. சுப்பிரமணிய அய்யர், லாலி எலக்டிரிக் அச்சுக் கூடம், தஞ்சாவூர் ; iii. 1915 ; iv. உ. ப. 239 ; v. 18×12 செ. மீ.; vi. 1–0–0 ;

vii. தமிழ் நாட்டுக் கடைகளில் வேலை பழக வேண்டிய சிறுவர்களுக்கும், தமிழ் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் மாணுக்கர்களுக்கும் உபயோகப்படும்படி நாட்டுக்கோட்டை நகரத்தார்களுடைய வழியைக் கைக்கொண்டு எழுதப்பெற்றுள்ளது. viii. 241/1915/III.

**B1**

**தேவஸஹாய நாடார், ஜே. எஸ்., பாளையங்கோட்டை.**

**1030**. தமிழ் ஸ்கூல் அரித்மெடிக்; முதல் புத்தகம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் & கம்பெனி; எஸ். பி. வி கே. பிரஸ், சென்னை; iii. ஜூன், 1913; iv. உ. ப. 2+76; v. 18×13 செ.மீ.; iv. 0-2-6; vii. சிறுவர்களுக்குரிய கணித பாடமாக அமைந்தது இந்நூல். ஆறு அத்தியாயங்கள் உள்ளன. பயிற்சிகள் பல ஒவ்வொரு வகையிலும் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 775/1913/II.

**B1**

**1031.** i. தமிழ் ஸ்கூல் அரித்மெடிக்; இரண்டாம் புத்தகம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் கம்பெனி; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1913; iv. உ. ப 76; v. 19×13 செ. மீ.; vi. 0-2-6; vii. கணித பாடத்தை எளிய முறையில் அமைத்துக் காட்டுகிறார் இதன் ஆசிரியர். செய்முறைப் பயிற்சிகளை விளக்கியதோடு பயிற்சிகளும் மிகுதியாகக் கொடுத்துள்ளார். viii 694/1913/III.

**B1**

**1032.** i. தமிழ் ஸ்கூல் அரித்மெடிக்—மூன்றும் புத்தகம்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் கம்பெனி லிமிடெட், பம்பாய்; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1914; iv. உ. ப. 2+108; v. 18×13 செ. மீ.; vi. 0-3-6; vii. செய்முறைகளைப் பயன்படுத்தி கணித நூலின் அடிப்படை விதிகளைப் படிப்பிக்கும் வழிகளை விளக்குகிறது. பிள்ளைகளுக்குக் கணிதங்களைக் கற்பிக்கும் வகை பற்றியும் அங்கங்கே விளக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொரு வகைக் கணக்கிலும், எடுத்துக்காட்டு கணக்குகளும் வேறு பல வகை பயிற்சிகளும் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 815/1914/I.

**B1**

**1033.** i தமிழ் ஸ்கூல் அரித்மெடிக்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் & கோ. லிமிடெட், எஸ். பி. வி. கே. பிரஸ்; iii. ஆகஸ்ட், 1914; iv. உ. ப. 160; v. 19×13 செ.மீ.; vi. 0-5-6; vii. நான்காம் வகுப்பிற்கான கணித நூல், பட்டறிவு முறையில் கணிதத்தைக் கற்பிக்கும் வகையில் இந்நூல்

அமைந்துள்ளது. கணித வாய்ப்பாடுகளும் உரிய இடங்களில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு வகைக் கணக்கிலும் பல பயிற்சிகள் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 902/1914/III.

B1

1034. i. லோயர் செகண்டரி அரித்மெடிக்: திருந்திய பதிப்பு; ii. மாக்மில்லன் கம்பெனி லிமிடெட், பம்பாய்; எஸ். பி.வி.கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 4+341; v. 19×13 செ. மீ.; vi. 0-12-0; vii. உயர்நிலை பள்ளியின்கீழ் வகுப்புகளுக்காகச் செய்யப்பட்டது. இது ஆங்கிலத்தின் தமிழ் மொழி பெயர்ப்பு. முப்பத்தொரு அத்தியாயங்கள் உள்ளன. எண் கணிதம், சதுரளவு, கன அளவு முதலிய பலவகைக் கணக்குகளும் இதில் உள்ளன. கணக்குகளுக்குரிய விடைகளும் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன viii. 615/1913/IV.

B1

**நடேசையர், கோ., தஞ்சை.**

1035. i. கணக்குப் பதிவு நூல்: முதற் பதிப்பு; ii. கோ. நடேசையர், தஞ்சை; லாலி எலெக்டிரிக் பிரிண்டிங் பிரஸ் தஞ்சாவூர்; iii. ஏப்ரல், 1914; iv. உ. ப. 359; v. 22×15 செ. மீ.; vi. 3-0-0; vii. இக்கணக்கு நூலில் மேல் நாட்டார் பின்பற்றிவரும் பல கணக்கு முறைகளும் இடம் பெற்றுள்ளன. பம்பாய் திரு. கே. சுப்பிரமணிய அய்யர் இதற்குச் சிறப்புப் பாயிரம் ஆக்கியுள்ளார். இந்நூல் 22 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. வாணிகத் தொடர்பான பல செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 419/1914/IV.

B1

**நமசிவாய முதலியார், கா., சென்னை**

1036. i. புதுச் சட்ட கணிதம்—மூன்றும் வகுப்பு: திருத்தப்பட்ட பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. உ. ப. 2+99; v. 18×12 செ. மீ.; vi. 0-3-0; மூன்றும் வகுப்புக்குரிய எண் கணிதங்கள் அமைந்த நூல். க்ஷேத்திர கணிதம், பின்ன கணிதம் பற்றியும் இறுதியில் பாடங்கள் உள்ளன. ஈற்றில் கணக்குகளுக்குரிய விடைகள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 35/1911/II.

B1

1037. i. புதுச் சட்டக் கணிதம்—நான்காம் வகுப்பு: திருத்தப்பட்ட பதிப்பு; ii. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1911;

i v. உ.ப. 4+149 ; v. 18×12 செ. மீ.; vi. 0–5–0 ; vii. புதுச் சட்டப்படி நாலகாம் வகுப்பிற்கு நன்கு அமைந்த கணித நூல். க்ஷேத்திரக் கணிதமும் இவ்வகுப்பிற்கு வேண்டுமளவு சேர்க்கப் பட்டிருக்கிறது. நூல் இறுதியில் விடைகள் தரப்பட்டுள்ளன. viii. 402/1911/IV. B1

**நாராயண ஸ்வாமி அய்யர், வி. கே.**

1038. i. பால கணிதம்—வால்யூம் ஒன்று: முதற் பதிப்பு: ii. சிவராம அய்யர் அண்டு சன்ஸ், திருச்சிறாப்பள்ளி; இந்தியன் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. மே, 1911; iv. உ. ப. 11+170+1; v. 18×12 செ. மீ.; vi. 0-8-0; vii. இது அனுபவ சித்த க்ஷேத்திர கணிதம் அமைந்த நூல். புதியமுறைப் படி சிறுவர் பள்ளிகளில் கணக்குகளை இடங்களுடன் தொடர்பு படுத்திக் கற்பிக்க வேண்டும் என்னும் கருத்து கொண்டு எழுதப் பெற்றது. viii. 787/1911/III.

B1

**மாணிக்கம், ஜே. பி., சென்னை & மாணிக்கம், எம். டி., கடலூர்**

1039. i. ஜூனியர் ஸ்கூல் அரித்மெட்டிக்—தமிழ்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1914; iv. உ. ப. 326; v. 18×12 செ. மீ.; iv. 0–8–0; vii. கீழ் வகுப்பிற் குரிய கணிதப் புத்தகம். கணித முறையைப் பற்றிச் சொல்லும் அநேக நூல்களையும், பாட நூல்களையும் ஆராய்ந்து இந்நூலை ஆசிரியர்கள் ஆக்கியுள்ளனர். முகவுரையில் கணித முறை தோன்றி வளர்ந்த முறையை விளக்கியுள்ளனர். பதினான்கு அத்தியாயங்கள் உள்ளன. கணக்குகளுக்குரிய விடைகள் இறுதி யில் தரப் பெற்றுள்ளன. viii. 388/1914/III.

B1

**மாணிக்கவாசகர், ஜே. ஐ., பசுமலை**

1040. i. புதிய பயிற்சிக் கணிதம்—நான்காம் வகுப்பு: முதற் பதிப்பு; ii. ஈ. எம். கோபாலகிருஷ்ண கோன், மதுரை; விக்டோரியா பிரஸ், மதுரை; iii. ஜூன், 1914; iv. உ. ப. 190; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. இக்கணித நூல் நான்கா வது வகுப்பிற்கு உரியது. புதிய வழிகளைக் கையாண்டு எடுத்துக் காட்டு கணக்குகள் பயிற்சிகள் ஆகியவற்றைப் படிப்படியாகத் தருவது இந்நூல். viii. 564/1914/IV.

B1

1041. i. மூன்றும் வகுப்புப் பயிற்சிக் கணிதம்: முதற் பதிப்பு; ii. ஜே. ஐ. மாணிக்கவாசகம், எ. எம். மிஷன் பிரஸ், பசுமலை; iii. ஜூன், 1912; iv. உ.ப. 2+136; v. 22×14 செ.மீ.;

vi. 0–3–6; vii. மூன்றும் வகுப்புக்குரிய கணிதப் புத்தகம். எளிமையாக மாணவர்கள் உணர்ந்துகொள்ளும் வகையில் தக்க பயிற்சிகளுடன் கூடியது ; viii. 843/1912/II.

B1

**முகம்மது ஷரீபு சாயபு**

1042. i. மனக் கணக்கு—சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. கா. நமசிவாய முதலியார், பிராக்ரஸிவ் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1913 ; iv. உ.ப. 2+29 ; v. 19×13 செ.மீ.; vi. 0–2–0 ; vii. "மனக்கணக்கு முதற் பாகத்தி" னின்றும் சில கணக்குகளை எடுத்துச் சுருக்கமாக வெளியிட்ட நூல். குழந்தைகளுக்கேற்ற எளிய கணக்குகள் இதில் உள்ளன. நிறைவு அளவு பற்றிய கணக்குகளும், நாணயக் கணக்குகளும் இதில் அடங்கியுள்ளன. viii. 778/1913/IV.

B1

**ராமானுஜாச்சாரி, டி.**

1043. i. பால போதனு கணிதம் : இரண்டாம் பதிப்பு ; ii. டி. ராமானுஜாச்சாரி, பிரம்மவாதினி பிரஸ், மதருஸ் ; iii. ஜூலை, 1912 ; iv. உ.ப. 5+151 ; v. 18×13 செ.மீ.; vi. 0–5–0 ; vii. இது தொடக்கப்பள்ளி மாணவர்களுக்காக இயற்றப்பட்டது. இதில் தேர்வு வினாக்களும், கேள்விகளுக்குரிய விடைப் பகுதியும் நூல் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 311/1912/III.

B1

1044. i. பால போதனு கணிதம்: முதற் பதிப்பு ; ii. டி. ராமானுஜாச்சாரி, கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. மே, 1913 ; iv. உ.ப. 128 ; v. 19×13 செ.மீ.; vi. 0–5–0 ; vii. தொடக்கப்பள்ளிகளுக்காக எழுதப்பெற்ற ஒரு கணித நூல். viii. 587/1913/II.

B1

1045. i. பால போதனு கணிதம் : மூன்றும் பாகம் ; திருந்திய பதிப்பு; ii. டி. ராமானுஜாச்சாரி, சென்னை , பி. ஆர். ராம அய்யர் அண்டு கோ, சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 183+3 ; v. 18×13 செ.மீ : vi. 0–6–0 ; vii. தொடக்கப் பள்ளிகளுக்கான கணக்குகள் இதில் உள்ளன. மனக் கணக்குகள், எடுத்துக்காட்டு கணக்குகள், பயிற்சிகள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் பல்வகைக் கணக்குகளும், தேர்வு வினாக்களும் அமைந்துள்ளன. கணக்குகளின் விடைகளும் புத்தகத்தின் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 62/1914/I.

B1

**ராஜம் முதலியார், ரா.**

1046. i. கணித விளக்கம் : முதற் பதிப்பு ; ii. டபிள்யூ. எச். பாரர், ஆரணி; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 3+119+12 ; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. தொன்று தொட்டு வாய்ப்பாடமாக வழங்கி வரும் கணக்குகளைக் கோவை செய்து ஆசிரியர் இதில் அமைத்துள்ளார். இனம் பிரித்தல் கணக்கு, படி கணக்கு, மரக்கால் கணக்கு, இலைக் கணக்கு முதலியவாக இருபத்திரண்டு வகைக் கணக்குகளின் வாய்பாடும், மன வாய்பாடும் இதில் உள்ளன. திருக்கோவிலூர் ஆதீனம், ஞானியார் மடாலயம், ஸ்ரீமத் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரியார் சுவாமிகளின் ஆணையின்படி இந்நூல் இயற்றப்பட்டது. viii. 989/1913/IV.

B1

**வரதராஜுலு, ஜி., பாளையங்கோட்டை**

1047. i. எண் சுவடி : 7-வது பதிப்பு; ii. ஜி. வரதராஜுலு, பாளையங்கோட்டை ; சி. எம். எஸ். பிரஸ், பாளையங்கோட்டை ; iii. அக்டோபர், 1913 ; iv. உ.ப. 32 ; v. 18×11 செ.மீ.; vi. 0-1-0 ; vii. கணித வாய்பாடுகள் கொண்ட நூல். பெருக்கல் வாய்பாடுகள் இதில் உள்ளன. மாகாணி (1/16) வாய்பாடு தொடங்கி 16 ஆம் வாய்பாடு வரையில் தரப்பட்டிருக்கிறது. தமிழ் எண்களும் உடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நாணய வாய்பாடு, எழுத்தளவை, எண்ணளவை, இரயில் நிறை, முகத்தல் அளவை, சதுர அளவை, கன அளவை முதலிய அளவை வாய்பாடுகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பழமொழிகள், நீதி வாக்கியங்கள் முதலியனவும் அடிக்குறிப்பாக கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது பழமையும், புதுமையும் தழுவியதோர் எண் சுவடி. viii. 281/1913/IV.

B1

1048. i. எண் சுவடி : 8-வது பதிப்பு ; சர்ச் மிஷன் சொசைடி புக் டிப்போ, பாளையங்கோட்டை ; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 32 ; v. 20×12 செ.மீ.; vi. 0-1-0 ; vii ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கேற்ற எண் சுவடி வாய்ப்பாடே இந்நூல். ஆங்கில முறையிலும் கொடுத்துத் தமிழ் முறை அமைப்பும் உடன் தரப்பட்டிருக்கிறது. எண்ணல் அளவை, முகத்தல் அளவை, நிறுத்தல் அளவை முதலியனவும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 521/1915/I.

B1

**வாசுதேவலு நாயுடு, க. & சீனிவாச ஐயங்கார், கு.**

1049. i. **இடமும்** கணக்கும்—பாலர் முதல் **வகுப்புகள் :** முதற் பதிப்பு ; ii. க. வாசுதேவலு நாயுடு & கு. சீனிவாச அய்யங்கார்; ஆனந்தா பிரஸ், சென்னை ; iii. மே, 1911 ; iv. உ.ப. 2+128 ; v. 18×13 செ.மீ. ; vi .0–4–0 ; vii. தொடக்க உயர்நிலைப் பள்ளிகளுக்குப் பயன்படுவகையில் செய்யப்பட்டது. கணக்குகளுக்குரிய விடைகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 44/1911/III .

B1

1050. i. எண் கணிதமும் க்ஷேத்திர கணிதமும்—பாகம் மூன்று: முதற் பதிப்பு; ii. சி. கே. வாசுதேவலு நாயுடு & கே. ஸ்ரீநிவாச அய்யங்கார் ; ஆனந்தா பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1912; iv. உ.ப. 2+111; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0; vii. மூன்றாவது வகுப்புக்குரிய கணித நூல். எண் கணிதமும் க்ஷேத்திர கணிதமும் பல பயிற்சிகளுடன் விளக்கப்பட்டுள்ளன. கணிதங்களுக்குரிய விடைகளும் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. viii . 736/1912/I.

B1

1051. i. **வாய்பாடு** : முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 16 ; v. 18×12 செ.மீ.; vi. 0–0–6 ; vii. கூட்டல், கழித்தல், பெருக்கல் வாய்பாடுகளும், பின்ன வாய்பாடுகளும் இதில் உள்ளன. நாணய முறை, நீட்டல், முகத்தல் முதலிய அளவை வாய்பாடுகளும், கால அளவு வாய்பாடுகளும் இதில் உள்ளன. viii. 1059/1913/IV.

B1

**வைத்தியலிங்கம் பிள்ளை, டி. ஆர்.**

1052. i. நிலக்கடலைப் பருப்பின் விலைவிபர புஸ்தகம் : முதற் பதிப்பு; ii. டி.ஆர். வைத்தியலிங்கம் பிள்ளை ; ஸ்ரீவித்யா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை ; iii ஆகஸ்ட், 1911; iv. உ.ப. 3+80; v. 11×13 செ.மீ.; vi. 0–6–0 ; vii. நிலக்கடலை குறிப்பிட்ட அளவுகளுக்குக் குறிப்பிட்ட விலை விகிதத்தை உடன் கணக்கிடும் ஒரு விலை விபரப் பட்டியல். viii. 353/1911/III.

B1

**ஸ்ரீநிவாச அய்யங்கார், பி. டி., விசாகப்பட்டணம்.**

1053. i. லாங்மன்ஸ் இந்திய பிராக்டிகல் அரித்மெடிக் : முதற் பதிப்பு; லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1912; iv. உ.ப. 170 ; v. 18×12 செ.மீ.; vi. 0–8–0; vii. நான்காம் வகுப்பு வரையில் மாணவர்க்கு வேண்டிய கணித பாடங்கள் விளக்கி உரைக்கப்பட்டுள்ளன. viii. 656/1912/III.

B1

1054. i. லாங்மன்ஸ் இந்திய ப்ராடிகல் அரித்மெடிக்: முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கம்பெனி, லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. உ.ப. 8+308; v. 18×13 செ.மீ.; vi. 1–0–0; vii. ஆசிரியர் புத்தக வரிசையில் இது இரண்டாவது. நான்காவது வகுப்பு வரைக்கும் வேண்டிய செய்திகள் இதில் அடங்கியுள்ளன. ஆறு பாகங்களாக இந்நூல் அமைந்துள்ளது. கணக்குகளுக்கு உரிய விடைகளும் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 351/1913/I.

B1

1055. i. லாங்மன்ஸ் இந்திய பிராக்டிகல் அரித்மெடிக்—முதல் புத்தகம்: இரண்டாம் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ, கார்டியன் பிரஸ், சென்னை; ஜூலை, 1913; iv. உ.ப. 54; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0; vii. தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கான கணித நூல். viii. 611/1913/III.

B1

1056. i. லாங்மன்ஸ் இந்திய பிராக்டிகல் அரித்மெடிக்: இரண்டாம் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ, பம்பாய்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 54; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0; vii. இது கீழ்வகுப்புகளுக்கான கணக்கு நூல் வாய்பாடுகள் அங்கங்கே உரிய இடங்களில் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வகையிலும் பல பயிற்சிகள் உள்ளன.. viii. 883/1913/IV.

B1

1057 i. லாங்மன்ஸ் இந்திய ப்ராக்டிகல் அரித்மெடிக் - பாலர் புஸ்தகம்–2; ii. லாங்மன்ஸ் க்ரீன் அண்டு கம்பெனி, பம்பாய், கல்கத்தா.; கார்டியன் பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1913; iv. உ. ப. 167; v. 18×13 செ. மீ.; vi. 0–8–0; vii. நான்காம் வகுப்பு வரையிலான கணித பாடங்கள் விளக்கப்பட்டுள்ளன. அறுபத்தொன்பது பயிற்சிகளும் பலவகைக் கணிதங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 546/1914/I.

B1

## 510 வானசாஸ்திரம்

**பாலகிருஷ்ண அய்யர், எஸ்.**

1058 i. வான சாஸ்திரம்: முதற் பதிப்பு: ii. டி. கிருஷ்ண சுவாமி அய்யர், ஹிந்து எஜுகேஷனல் டிரேடிங் கம்பெனி, கும்பகோணம்; ஸ்ரீகிருஷ்ண விலாசம் பிரஸ், கும்பகோணம்; iii. டிசம்பர், 1913; iv. உ. ப. 6+199; v. 19×13 செ மீ.; vi. 1–0–0; vii. வானியலைப் பற்றி நம் நாட்டிலும் மேல் நாட்டிலும் உள்ள வானநூ லறிஞர்களின் கருத்துக்களைத்

திரட்டித் தருகிறது. கோள்கள், விண்மீன்கள் முதலியவற்றைப் பற்றிய இடங்களையும், செல்லும் பாதைகளையும் விளக்கும் படங்கள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டு பகுதிகளாக வும், பன்னிரெண்டு அத்தியாயங்களாகவும் இது அமைந் திருக்கிறது. 'பஞ்சாங்கம் என்பதன் விளக்கமும் தரப்பட்டிருக் கிறது. viii. 87/1914/I.

B9:6

## 580 தாவர நூல்

**ராஜா, எம். ஸி.**

1059. i. *இளைஞர் தாவர நூல் : முதற் பதிப்பு* ; ii. கே. டி. முத்தையா ; வேவர்லி பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1911 ; iv. உ. ப. 2+1+48 ; v. 17×12 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. இளைஞர்களுக்கேற்ற முறையில், செடியின் அவசியத்தைப்பற்றி ஆசிரியர் இந்நூலில் விவரிக்கிறார். விதை முளைத்தல், வேர், அடிமரம், இலை, மலர், கனியும் வித்தும், விதைகள் ஆங்காங்குச் பரவி முளைக்கும் வகை மற்றை மரங்களில் தோன்றி வளர்கின்ற செடிகள் முதலியன, செடிகளின் விதை ஆகியவற்றைப் பற்றித் தனித்தனி அத்தியாயங்களில் ஆசிரியர் தெளிவாக விவரிக்கிறார். viii. 179/1911/I.

I

1060. i. *இளைஞர் தாவர நூல்*: ii. எம். சி. ராஜா ; பென்ரோஸ் அண்டு கோ., மதராஸ் ; iii. 1915 ; iv. உ. ப. 48 ; v. 18×13 செ.மீ. ; vi. .... ; vii. இளைஞர்களுக்காக எழுதப் பெற்ற இயற்கை நூல். இயற்கை தொடர்பான செய்திகளை விளக்குவது. படங்களுடன் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. viii. 607/1915/III.

I

**விஸ்வநாதய்யா, ஜே.**

1061. i. *தாவர நூற் சுருக்கம் : முதற் பதிப்பு* ; ii. பரசுராம் அண்டு கம்பெனியர், காஞ்சீபுரம் ; தி இந்தியன் பிரின்டிங் வொர்க்ஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. உ.ப. 1+78 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. இது சிறுவர் வகுப் பிற்காக எழுதப்பட்டது. கின்டர் கார்டன் முறையில் இயற்கைப் பாடம் கற்பிப்பதற்கு இது ஏற்றது. அங்கங்கே பொருத்தமான படங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பள்ளிகளில் தோட்ட வேலை, இயற்கை நூல், வேர், தண்டு, மர உணவு சாரம், இலைகள், புஷ்பங்கள், காய், வித்து, பொது விஷயங்கள் ஆகிய செய்திகளை எட்டு அத்தியாயங்களில் முறையே விளக்குவது. viii. 958/1912/III.

I

## 590 விலங்கியல்

1062. i. அசுவலக்ஷண விளக்கம் : முதற பதிபபு ; ii. தியாகராய முதலியார், ஆரணி ; அமெரிக்கன டைமண்டு பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1913 ; iv. உ. ப. 16 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. சிறந்த குதிரைகளின் உறுப்பிலக்கணங்கள், சுழிகள், குதிரையில் காணும் குற்றங்கள் ஆகியவற்றை எடுத்துரைப்பது. இந்த 'அசுவ லக்ஷணம்' மதுரைச் சொக்க நாதப் பெருமானால் பாண்டிய அரசனுக்கு அருளப் பெற்ற தாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதனோடு காளை, பசு, இலக்கணம் பற்றியும், அவற்றைக் கொள்வது கொடுப்பதற்கு ஏற்ற நாளையும், அவற்றின் சுழி முதலிய உடற் குறிகளையும் விவரித்துரைப்பது. ஏர் உழ, விதை கட்ட, விதை விதைக்க, கதிர் அறுக்க ஆகிய நிகழ்ச்சிகளுக்கு ஏற்ற காலங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. viii. 171/1913/III.

K9

**அப்பாவு பிள்ளை, ம., உடுமலைப்பேட்டை**

1063. i. மாடு : ii. சென்னை ஹோ அண்டு கம்பெனி ; iii. 1419 ; iv. உ. ப. 122; v. 19×13 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. கால்நடைகளைக் கொண்டு பிழைக்கும் உழவர்க்கு உபயோ கமாக இயற்றப்பட்டது. ஆங்கில மொழியிலுள்ள சில நூல்களை யும், பத்திரிகைச் செய்திகளையும் சேர்த்து அனுபவ வாயிலாக எழுதப்பட்ட நூல். மாடுகளின் வளர்ப்பு, அவற்றின் உபயோகம், அவற்றுக்கு நேரும் வியாதிகள் அவற்றை தடுக்கும் முறைகள் முதலியவற்றை விளக்கும் நூல். viii. 961/1915/III.

K9

**சீதாராமய்யா, கே., சென்னை**

1064. i. பிராணி சாஸ்திரம்–பாகம் 1 : முதற் பதிப்பு ; ii. கே. சீதாராமய்யா, சென்னை ; எம்பிரஸ் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1914 ; iv. உ. ப. 5+147 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–9–0 ; vii. மக்கள், விலங்குகள், பறவைகள், மீன்கள், ஊர்வன, பூச்சிகள் முதலியன எல்லாம் விலங்குகள் இனத்தில் சேரும். மக்கள் உடலமைப்புப் பற்றியும் சில விலங்கு, பறவை, பூச்சியினங்கள் பற்றியும் விவரித்துக் கூறுவது ; படங்களுடன் கூடியது. viii. 378/1914/II.

K9

**துரைசாமி சாஸ்திரி, வி. ஆர்.**

1065. i. ஜீவ வர்க்க போதினி–முதற்பாகம் : திருந்திய பதிப்பு ; ii சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ. ப. 6+102 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. பூனை, நாய், நரி, கரடி,

குரங்கு, ஆகியவற்றைப் பற்றிப் படங்களுடன் விவரித்துரைக்கும் ஒரு அறிவியல் நூல். எழுபது பாடங்கள் உள்ளன. viii. 818/1913/IV.

K9

## 600 தொழில் நுட்பமும் பயனுறு கலை

## 610 அகராதிகள், நிகண்டுகள்

ஈஸ்வரம் பிள்ளை, பி. எஸ்.

1066. i. தமிழ் மெட்டீரியா மெடிக்கா: முதற் பதிப்பு; ii. வி. பெருமாள் நாயுடுகாரு; ராமநிலைய விவேகாநந்தா அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1912; iv. உ.ப 2+364+8; v. 22×14 செ.மீ.; vi. 3–0–0; vii. 'தமிழ் மெட்டீரியா மெடிக்கா' என்னும் இந்நூல் ஆங்கில வைத்தியத்தைத் தமிழில் தருவது. ஆங்கில வைத்தியத்தைக் கையாளுகிறவர்களுக்கும், ஆங்கில வைத்தியம் கற்பவர்களுக்கும், ஆங்கில மருந்து கடைகளுக்கும் பயன்படும் நோக்கத்துடன் எழுதப் பெற்றது. நான்கு பகுதிகளாக இது அமைக்கப்பட்டிருக்கிறது. மருந்துகளின் நிறைக் கணக்கு, மருந்துகளின் தனி இயல்புகள், கலவை மருந்துகள் செய்யும் வகை, நோயாளிகட்குக் கொடுக்க வேண்டிய உணவுகள் முதலியவற்றை விவரித்துக் கூறுவது. viii. 333/1912/IV.

Lk

1067. i. பரிபாஷை அகராதி: ii. இ. ராம. குருசாமிக் கோனார்; iii. 1915; iv. உ.ப. 398; v. 22×14 செ.மீ.; vi........; vii. சித்த வைத்திய அகராதி; நோய்களுக்குத் தீர்வுகாண் மூலிகை சிலவற்றையும் நூலில் ஆங்காங்கே காணலாம். அகத்திய முனிவர் அருளிய வைத்திய வாதயோக ஞான சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற பச்சிலை மருந்துகளின் அகராதி, பரிபாஷை 'மறைப்பின் வெளிப்படை அகராதி' கருப்பொருள் அகராதி, பதினெண் சித்தர்கள் அருளிய வைத்திய மூலிகை அகராதி, அரும் பெயர் அனுபந்த அகராதி, தொகையகராதி, அகத்தியர் அருளிய பச்சிலை மூலிகை அகராதி, அகத்தியர் அருளிய பச்சிலை மருந்து பொருட்களின் வைத்திய தனிக்குண அகராதி, மரம், செடி, கொடி, புல் பூண்டு [illegible]லிய பச்சிலை மூலிகைகளின் பெயரும், அவைகள் வளரும் [illegible] சொல்லிய பொருளகராதி முதலியன அடங்கியுள்ளன. [illegible] [illegible]/1915/III.

Le

## 612 மானிட உடலியல்

**சந்திர சேகர், எஸ்.**

**1068.** **i.** மானிட ஜீவிய சிந்தாமணி: முதற் பதிப்பு; **ii.** எஸ். சந்திரசேகர்; கார்டியன் அச்சுக் கூடம், சென்னை; **iii.** ஆகஸ்ட், 1912; **iv.** உ.ப. 324; **v.** 18×12 செ.மீ.; **vi.** 1–8–0; **vii.** உடற் கூற்றிலக்கணம், ரோக உற்பத்தி விவரம், பால்ய விவாகத்தின் கஷ்ட நஷ்டங்கள், தாதுவின் தத்துவங்கள், பல சிகிச்சை முறைகள் முதலியவற்றை எளிய தமிழ் நடையில் உரைப்பது. ஒரு சில படங்களும் கொடுத்து விளக்கம் தரப்பட்டிருக்கிறது. இப்புத்தகத்தைப் பற்பல ஆங்கில நூல்களின் துணை கொண்டும், தமிழில் வெளியான சில வைத்திய நூல்களின் துணை கொண்டும் ஆக்கியுள்ளார். இவர் பயன்படுத்திய தமிழ் நூல்கள் வருமாறு —பைஷஜகல்பம், இங்கிலீஷ் வைத்திய சங்கிரகம், மானிட மர்ம சாஸ்திரம், சந்தான சிந்தாமணி, யுனானி தாது விருத்தி போதினி, வைத்திய சாரசங்கிரகம், ஜீவரக்ஷாமிர்தம் முதலிய புத்தகங்களும், சரகம், சுஷ்ருதம் முதலிய எட்டுப் பிரதிகளுமாம். **viii.** 925/1912/III.

L:3

**சாமிநாத ஐயர், தி.அ., (மொ. து.)**

**1069.** முன்னோரது சுகாதார விதி விளக்கம்: **ii.** வி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; **iii.** 1915; **iv.** உ.ப. 63; **v.** 19×13 செ.மீ.; **vi.** 0–4–0; **vii.** முன்னோரது நல்வழி விதிகள் இந்நூலுள் செவ்வனே விளக்கப்பட்டிருத்தலைப் பரக்கக் காணலாம். சென்னையில் நல்வழி துப்பரவு ஆனையாளராயிருந்த டாக்டர். கில் என்னும் 'ஆரோக்கிய சாஸ்திரி' பண்டைக் காலத்து நல்வழிகளைக் குறித்து 'ஆரியா, என்னும் ஆங்கில மாதப் பத்திரிகையில் எழுதிய கட்டுரையின் தமிழ் மொழி பெயர்ப்பு இந்நூல். **viii.** 1075/1915/III.

L:3

**சால்வாடி அய்யர், டி. எஸ்., ஈரோடு**

**1070.** **i.** நோயற்ற வாழ்வே வாழ்வு: முதற் பதிப்பு; **ii.** டி.எஸ். சால்வாடி அய்யர், ஈரோடு; இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை; **iii.** டிசம்பர், 1911; **iv.** உ.ப. 12+566; **v.** 18×12 செ.மீ.; **vi** 1–10–0; **vii.** நோய்கள் ஏற்படும் காரணங்களும், நோயாளிகளுக்கு நாம் செய்ய வேண்டிய கடமைகளும், மக்களுடைய உடல் அமைப்பும், அதன் தொழில்களும் பற்றி விவரிப்பது. பத்து அத்தியாயங்கள் கொண்டது. 'சரீர வார்ப்பும் அதன் தொழில்களும்'; 'ஆகார

ஜீரணம்' 'இரத்தச் சுழற்சி' 'உணர்ச்சி அங்கங்கள்' 'சுகாதார விளக்கம்' 'பிரசவம்' குழந்தைகள், பிரதம சிகிச்சை, 'சிற்றுயிர்ப் பிணிகள்' என்னும் அத்தியாயங்களைக் கொண்டது. பொருள் அட்டவணை அகராதி அடைவின் முதலில் தரப் பட்டிருக்கிறது. viii. 348/1912/I.

L:i

சீதாராமய்யா, கே., சென்னை.

1071. i. சரீரசாஸ்திரம்—முதல் புத்தகம்: முதற் பதிப்பு; ii. கே. சீதாராமய்யர்; எஸ். மூர்த்தி அண்டு கோ., மதறாஸ்; iii. மே, 1915; iv. உ.ப. 104; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. மனித உடற் கூற்றினை விளக்கும் வைத்திய நூல். படங்களுடன் கூடிய இந்நூலில் மனித உறுப் புக்களின் விவரங்களும் அவை இயங்கும் வகையும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இது தவிர, மனித உடலில் ஏற்படும் வேதியல் மாற்றங்களைப் பற்றியும் இந்நூல் விளக்குகிறது. இதில் பயன்படுத்திய ஆங்கிலக் கலைச் சொற்களுக்கு ஏற்ற தமிழ் சொற்பட்டியல் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. படங் களுடன் கூடியது 'சுஞ்ஞான கிரந்த ரத்னவளி' வரிசையில் இது 2-வது வெளியீடு ஆகும். viii. 523/1915/III.

L:3

சுவாமிநாதன், என்., சென்னை

1072. i. சரீர சாஸ்திரம்: முதற் பதிப்பு; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ் சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1913; iv. உ.ப. 125; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. மனித உடலமைப்பு தொடர்பான செய்திகளை விவரிப்பது. உடலின் அமைப்பு தசை, எலும்பு ஆகியவற்றின் அமைப்பு, இரத்த ஓட்டம், உயிர்ப்பு உறுப்புகள், சீரண உறுப்புக்கள் முதலியவற்றைப் பற்றிப் படங்களுடன் விளக்கும் நூல். நாற்பத்தைந்து பாடங்கள் இதில் உள்ளன. பள்ளிச் சிறுவர்களுக்கு ஏற்றபடி அமைத்து எழுதப்பெற்றது. viii. 398/1913/IV.

L:3

தாவுத்ஸா, பா., நறையூர்

1073 i. சுவாசமே உயிர்: முதற் பதிப்பு; ii. எச்.பி. முகமத் அப்துல்லா சாகிப், சென்னை; எம்.ஏ. பிரஸ், சென்னை; iii. ஜுலை, 1914; iv. உ.ப. 136; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0; vii. உலகத்தில் மக்கள் முதல் மற்ற எல்லா உயிர்களும் பிழைத்திருப்பதற்கு அடிப்படை மூச்சுவிடுதலாதலின் இந்நூலுக்கு இப்பெயர் இடப்பெற்றது. கீழ் நாட்டு முறை களையும் மேல் நாட்டு முறைகளையும் தழுவித் தெளிவான

உண்மைகளுடன் எழுதப்பட்டிருப்பதால் ,மூச்சுப் பயிற்சி முறைகளை எளிதில் தெரிந்து கொள்ளப் பயன்படும். செம்பூர். வி. ஆறு முகஞ் சோவை இதற்கு முகவுரை எழுதியுள்ளார். 16 அதி காரங்களில் விளக்கப்பட்டுள்ளன. viii. 256/1914/III.

L:3

**நெல்லையா, டி.எஸ்., திருநெல்வேலி**

1074. i. அற்புத இயந்திரம்: முதற் பதிப்பு; ii. டி. எஸ். நெல்லையா, திருநெல்வேலி; ஸ்ரீ விஜயலெக்ஷ்மி விலாசம் பிரஸ், பாளையங்கோட்டை; iii பிப்ரவரி, 1914; iv. உ.ப. 1+24; v. 18×11 செ.மீ.; vi. 0-1-6; vii. மக்களுடலின் வியத்தகு அமைப்பையும், அதில் உறுப்புகள் அமைக்கப் பட்டிருக்கும் முறையையும், ஐம்புல நுகாச்சிகளையும் பற்றி விவரிப்பது. ஆன்ம வளாசசிக்கு உடலே நிலைக்களம் என்பதைக் காட்டி, உயிரையும் ஆண்டவனையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிறார். இது 1913-ம் வருடம், டிசம்பர்த் திங்கள், 30-ம் நாளன்று நெல்லை மாணவர் தமிழ்ச் சங்கத்து 3-வது ஆண்டு நிறைவு விழாவில் திரு. எஸ். குமாரசுவாமி ரெட்டியாரவர்கள், பி.ஏ.,பி.எல். தலைமையின்கீழ் படிக்கப் பட்டது. viii. 770/1914/I.

L:3

## 614 சுகாதாரமும் தடுப்புமுறைகளும்

**கோயில் பிள்ளை, எஸ்.வி., உத்திரமேரூர்**

1075. i. சுகாதாரமும் மது விலக்கும்: முதற் பதிப்பு; ii எஸ்.வி. கோயில் பிள்ளை; உத்திரமேரூர்; கலாரத்நாகரம் பிரஸ், சென்னை: iii. எப்ரல், 1912; iv. உ.ப. 1+40; v. 19×13 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்நூலில் மக்கள் கவனிக்கத்தக்க பல நல்வழி விதிகளும், நோய்களும், அவற்றினை நீக்கும் முறைகளும், மருந்துகளும், கட்டுப்பாடுகளும் கூறப் பட்டுள்ளன. தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு ஏற்றவகையில் செய்யப்பட்டது. காற்று, நீர், உணவு, உடை, உடற்பயிற்சி, தூக்கம், வீடுகள் இவைபற்றிய செய்திகளை விளக்கியுரைத்துப் பின்னர் எளிய நோய்களும் அவற்றைத் தடுக்கும் முறைகளும் விளக்கியுள்ளார். குருசாமி நாயுடு என்பார் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 370/1912/II.

L:55

**சந்திரசேகர், எஸ்**

1076. i. நமது சிறிய சத்ருக்கள்: முதற் பதிப்பு; ii. எஸ். சந்திரசேகர்; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1913; iv. உ.ப. 85; v. 19×13 செ.மீ;

vi. 0-6-0 : vii. 'பிளேக்', 'விஷபேதி' 'விஷசுரம்' முதலிய கொள்ளை நோய்கள் தோன்றும் காரணத்தையும், அதிலிருந்து மீள்வதற்குரிய சிகிச்சை முறைகளையும் கூறுவது, தலைவலி, இருமல், முதலிய சிறுநோய்களுக்குரிய மருந்து முறைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மானிட ஜீவிய சிந்தாமணி என்னும் வேறு பெரிய வைத்திய நூலையும் இவர் எழுதி இருக்கிறார் என்று தெரிய வருகிறது. இ . ர் கும்பகோணத்திலிருந்து வெளி வந்த வைத்திய போதனி என்னும் இதழின் ஆசிரியருமாவர் viii. 324/1913/IV.

L:55

## 615 நோய் தீர்க்கும் முறைகள்

**கங்காதர தேவர், பா**

1077. i. கங்காதரீயம் : முதற்பாகம் ; ii. பா. சோமசுந்தர தேவர், கணேசா பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 190 ; v. 24×16 செ.மீ, ; vi. 2-0-0 ; vii. பல நோய்களின் அறிகுறி களும், நோயினையறியும் முறைகளும் இதில் விளக்கப்பட்டிருக் கின்றன. வடமொழி தென்மொழிகளில் உள்ள அரிய வைத்திய நூல்களைப் பயின்று தமது பட்டறிவைக்கொண்டு ஆராய்ந்து ஆசிரியர் இந்நூலைத் தமது பெயரால் 'கங்காதரீயம்' என அழைக்கின்றார். இந்த முதல் பகுதி 'ரோக நிதானம்' பற்றியது. 12 அத்தியாயங்கள் கொண்டது. இதனை நூலாசிரியர் காலத்திற்கு பின்னர் அவர் மகன் பா. சோமசுந்தரம் என்பார் வெளியிட்டுள்ளார். அவரே இதற்கு முகவுரையும் எழுதியுள் ளார். பிற பகுதிகளையும் அச்சிடும் தமது நோக்கத்தையும் இம்முகவுரையில் அவர் வெளிப்படுத்தியுள்ளார். viii. 618/1915/IV.

L:4:6

**குமாரசுவாமி முதலியார், வி.எஸ்**

1078. i. காந்தசக்தி வைத்திய சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. வி. எஸ். குமாரசுவாமி முதலியார் ; கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜுன், 1915 ; iv. உ.ப. 69 ; v. 18×13 செ.மீ.; vi. 2-0-0 ; vii. மருந்தின்றிப் பல நோய்களை நீக்கும் முறைகள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இம்முறைகளை 'காந்த சக்தியினால் வைத்தியம்', 'மனோவசியத்தால் மருத்துவம்', 'பிரபோதம்', 'மனுஷ்ய காந்தப் பிரபாவம்', 'மானிட காந்த சக்தி', 'கையின் பாவனை', 'மன உறுதி', 'ஞான திருஷ்டி', 'டெலிபதி', 'ஜீவாதார காந்த சக்தி' என்று ஆசிரியர் வகைப் படுத்தியுள்ளார். இந்நூல் படங்களுடன் கூடியது. viii. 838/1915/II.

L:4:6

**சுந்தரேச அய்யர், எம். வி.**

1079. **i.** சருமரோக விளக்கம் : முதற் பதிப்பு ; **ii.** ஆதர்ஸ் அண்டு பப்ளிஸர்ஸ் ஏஜன்ஸி, சென்னை ; பி. ஆர். ராமையா அண்டு கோ, சென்னை ; **iii.** பிப்ரவரி, 1912 ; **iv.** உ.ப. 7+56 ; **v.** 18×13 செ.மீ. ; **vi.** 0-4-0 ; **vii.** தேகல் தொடர்பான நோய்களையும் அவற்றை நீக்கும் முறைகளையும் விவரிப்பது. ஆங்கில வைத்தியம், தமிழ் வைத்தியங்களின் முறைகள், வீட்டு வழக்கம் முதலியவைகளை விளக்கமாக எழுதியுள்ளார். பதினைந்து அத்தியாயங்களாகப் பிரித்துத் தேகலைப் பற்றியும் அதில் தோன்றும் நோய்களைப் பற்றியும், சிகிச்சை முறைகளைப் பற்றியும் தக்க தலைப்புகளுடன் விவரித்துள்ளார். இதனை "லோகோபகாரி" என்னும் வார இதழிலும் "ஞானநாயகி" என்னும் திங்கள் இதழிலும் கட்டுரைகளாக வெளியிட்டு அவற்றை இந்த நூல் வடிவில் ஆசிரியர் ஆக்கியுள்ளார். **viii.** 713/1912/I.

**L:4:6**

**துலுக்காணுச்சாரியார், தி., சோளிங்கபுரம்**

1080. **i.** அனுபோக தமிழ் வைத்திய முறைகள் ; **ii.** விக்டோரியா அச்சுக்கூடம், வேலூர் ; **iii.** 1915 ; **iv.** உ.ப. 44 ; **v.** 13×11 செ.மீ.; **vi.** 0–10–0 ; **vii.** பித்த சாந்தி, குளிர் சுரம், சொறி, கட்டி முதலிய நோய்களுக்கு ஏற்ற மருந்து வகைகளை விவரிக்கும், நூல். மருந்துகளைச் செய்யும் முறைகளும் விளக்கப் பட்டிருக்கின்றன. **viii.** 815/1915/IV.

**L:4:6**

**மீனாக்ஷி அண்ணி**

1081. **i.** பத்திய விதிகள் : முதற் பதிப்பு ; **ii.** மீனாக்ஷி அண்ணி ; சம்பகலெட்சுமி விலாச அச்சுக்கூடம், மன்னார்குடி ; **iii** நவம்பர், 1911 ; **iv.** உ.ப. 7 ; **v.** 20×14 செ. மீ ; **vi.** ...... ; **vii.** கட்டுப்பாடு விதிகளும் பால சஞ்சீவி மாத்திரைகளைப் பற்றிய விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன. **viii.** 497/1911/IV.

**L:4:6**

**மூத்தையா பிள்ளை, பொ., தூத்துக்குடி**

1082. **i.** மணி மந்திர ஔடதம், திருக்குறள் மாட்சி : முதற் பதிப்பு ; **ii.** பொ. முத்தையா பிள்ளை, தூத்துக்குடி ; விவேக பாநு பிரஸ், மதுரை ; **iii.** ஜூலை, 1912 ; **iv.** உ.ப. 10+12 ; **v.** 21×14 செ. மீ. ; **vi.** 0–2–0 ; **vii.** சென்னையில் கூடிய சைவ சித்தாந்த மகா சமாஜத்தில் திரு. ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை அவர்களின் தலைமையின்கீழ் பேசிய இரு சொற் பொழிவுகளின் தொகுப்பு. இவற்றுள் 'மணிமந்திர ஔடதம்' என்பது உடற்கூறு நோயையும், உயிர்க்கூறு நோயையும்

எடுத்துக்காட்டி அவற்றை நீக்கும் தக்க வழிகளைக் கூறுவது. திருக்குறள் மாட்சி என்னும் பேச்சில், வள்ளுவர் முப்பாலுடன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு குறிக்கோள்களையும் அடக்கிக் கூறியுள்ளார் என்பதை விளக்கிக் கூறுவது. **viii.** 506/1912/III.

**L:4:6**

**ஜேம்ஸ் காண்ட்லி (தொ. து.)**

**1083. i.** காயம்பட்டவர்களுக்கு முதல் முதல் செய்ய வேண்டிய ஒத்தாசை: முதற் பதிப்பு; **ii.** செயிண்ட் ஜான் ஆம்புலன்ஸ் சங்கம்; லாரன்ஸ் அசைலம் பிரஸ், சென்னை; **iii.** ஜூலை, 1912; **iv.** உ.ப. 220; **v.** 17×13 செ.மீ.; **vi.** 1-0-0; **vii.** செயிண்ட்ஜான் ஆம்புலன்ஸ் சங்கத்தினுடைய முதற் சிகிச்சை படிப்பை ஒத்துப் பார்த்துத் தொகுத்த நூல். தக்க படங்களுடன் முதற் சிகிச்சை செய்யவேண்டிய செயல்கள் விளக்கப்பட்டுள்ளன: பொருளகராதி நூல் இறுதியில் உள்ளது. **viii.** 439/1912/III.

L:46

## 615 [1] ஆயுர்வேதம்

**அகத்தியர்**

**1084. i.** வயித்தியக் கும்மி: முதற் பதிப்பு; **ii.** கே. நாராயணசாமி முதலியார், களத்தூர்; ஆதிகணுதிபதி அச்சுக்கூடம், சென்னை; **iii.** டிசம்பர், 1910; **iv.** செ.மூ.எ. 55; **v.** 18×11 செ.மீ.; **vi.** 0-1-0; **vii.** சிற்சில நோய்களைத் தீர்த்தற்குரிய மருந்துகளையும், அவற்றைச் செய்யும் முறை, உண்ணும் முறை முதலியவற்றையும் கும்மிப் பாடல் மெட்டில் விவரித்துரைப்பது. **viii.** 543/1911/III.

**LB:4:6**

**1085. i.** வைத்திய சதகம்: முதற் பதிப்பு; **ii.** வி. வெங்கடாசல சாஸ்திரி, வித்யா கல்பதரு அச்சுக்கூடம்; **iii.** செப்டம்பர், 1914; **iv.** செ.மூ.எ. 102; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0-1-0; **vii.** இந்து வைத்திய முறைப்படி நோயின் தன்மையையும் நிலையையும் அறிந்துகொள்ளும் வகைகளைப் பாடல்கள் வாயிலாக வெளிப்படுத்தும் நூல். 'வைத்திய சதகநாடி' என்று இதற்குப் பெயர் உண்டு. **viii.** 1162/1914/III.

**LB:4:6**

**1086. i.** வைத்திய ரத்தின சுருக்கம், 360; **ii.** இ ராம. குருசாமிக் கோனார்; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** 1915; **iv.** செ.மூ.எ. 371; **v.** 21×14 செ.மீ; **vi.** 0-8-0; **vii.** மருந்துகள் சிலவற்றைச் செய்யும் முறையினை இந்நூலில்

காணலாம். நாடிநிதானம், சித்தாந்த வைரவம் என்னும் இருபெரும் பகுப்புக்களாக உள்ளன. மதுரை முனிச்சாலைத் தெருவிலிருக்கும் வைத்தியம் பொன்னுசாமி பிள்ளை மகன் சிவராமு பிள்ளையினுடைய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. 'பரிபாஷை', 'மருந்துகளின் அரும்பதவுரை' நூலிறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 554/1915/IV.

**LB:4:6**

1087. i. **ஆயுர்வேத மகத்துவம்**: முதற் பதிப்பு; ii. அமிர்தம் அண்டு கோ., சென்னை; பி ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. டிசம்பர், 1914; iv. உ.ப 22+8; v. 18×12 செ.மீ.; vi. 0-2-0; vii. இது ஆயுர்வேத மருத்துவ முறையினை விளக்கிக் கூறும் நூல். நோய் அணுகாமலும், அணுகின் அதனை நீக்கிக்கொண்டு நலமாய் வாழ்வதற்கும் உரிய விதிகளை விளக்குகிறது. viii. 1017/1914/IV.

**LB:4:6**

**இராம தேவர்**

i. அஷ்டாங்க யோகம் 50 (தொ.எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 50; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii இதில் ஆதிவாலை மனோன்மணி சித்தியும், 'அகார' 'உகார' மூலமும், நந்தி சோதி பிரகாசமும், ஆதியந்த விவாமும், வேதை குருமுடிக்குங் கருமானங்களும், அஷ்டமாசித்தியும், தயிலம், திலதம், ரசமணி கட்டு, முதலிய விவரங்களும் கூறப்பட்டுள்ளன. viii. 322/1914/IV.

**LB:4:6**

i. குரு சூஸ்திரம் (தொ.எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 16; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இந்நூல் வேதைக் குருமுடிக்கும் விவரங்களையும், ஜெயநீர், சுண்ணம் செய்பாக விவரங்களையும் கொண்டுள்ளது. இது திருமங்கலம் அருணசலம் பிள்ளை குமாரர், வைத்தியம் சுப்ரமணிய பிள்ளையிடத்திலிருந்து பெற்ற ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

**LB:4:6**

i. சுத்திமுறை—50 (தொ.எ. 1101 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமசந்திர விலாச அச்சியந்திரசாலை மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 50; v. 22×1 செ.மீ.; vi. 0-12-0; vii. இது வழலை, முப்பூ, குருமுடிக்கு

பாகத்தின் விவரங்களையும், எல்லாப் பொருட்களையும் தூய்மை செய்யும் தன்மைகளையும், வேதையின் விவரங்களையும், ஞான கற்ப முறைகளையும், யோக சாதனத்திற்குரிய உண்மைகளையும் சோதி சொரூப தரிசன விவரங்களையும் விளக்குகிறது. இது மதுரை புது மண்டபம் நூல் வணிகர் மு. கிருஷ்ண பிள்ளையிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. **viii. 322/1914/IV.**

**LB:4:6**

**i.** ஞானத் திறவுகோல்—**16** (தொ.எ. 1101 பார்க்க) ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; **iii.** அக்டோபர், 1914 ; **iv.** செ.மூ.எ. 16 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** இதில் ரசமணிக்கட்டும் விவரங்களும், ஞானகற்ப முறைக்குரிய விவரங்களும் தரப்பட்டுள்ளன. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வணிகர் ந. ரா. ம கணபதியா பிள்ளையிடமிருந்து வாங்கிய ஏட்டு ப்பிரதியின்படி அச்சிடப்பெற்றது. **viii. 322/1914/IV.**

**LB:4:6**

**i.** ஞானம்—5 (தொ.எ. 1101 பார்க்க) : முதற் பதிப்பு; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; **iii.** அக்டோபர், 1914 ; **iv.** செ.மூ.எ. 5 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** இந்நூல் எல்லாம் ஒன்றென்றும், சத்தி சிவம் இரண்டென்றும் அகண்ட வெளி தீபவொளிப் பிரகாச விவரங்களையும் விளக்குகிறது. வில்லிபுத்தூர் வத்திராயிருப்பைச் சேர்ந்த தம்பிபட்டியில் காவல்காரர் அழகு தேவர் குமாரர் பாம்பலையத் தேவரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. **viii. 322/1914/I.**

**LB:4:6**

**i.** தண்டகம்—**110** (தொ.எ. 1101 பார்க்க) : முதற் பதிப்பு; 5. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; **iii.** அக்டோபர், 1914 ; **iv.** செ.மூ.எ. 110; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0 ; **vii.** இந்நூல் ரவிமதி சுழிமுனை, ஆதியந்தம், அண்டம் பிண்டம் என்ற விவரங்களையும், செயநீரால் அறுபத்து நான்குப் பொருட்கள் கட்டும் விவரங்களையும், அறுபத்து நான்கு சித்துக்களின் விவரங்களையும்; முப்பூவின் விவரங்களையும், கெவுனமணிக் குளிகை சித்தியும், துருசுச்சுண்ணம், அறுகோணச் சக்கரம், சிவயோக பூஜை, ஞானகற்ப முறை, நந்தியுட செந்தீ சித்தி, வாத சித்தி வயித்திய முறை முதலிய விவரங்களையும் கொண்டுள்ளது. **viii. 322/1914/IV.**

**LB:4:6**

**i.** பரிபாஷை விளக்கம்—27 (தொ.எ. 1101 பார்க்க): **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமசந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; **iii.** அக்டோபர், 1914; **iv.** செ.மூ.ப. 27; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** இந்நூல் வளர்பிறையில் வாசியோக சித்தியும், வஸ்து சித்தியும், அனுஷ்டான பூசை விதியும், அஷ்டமாசித்தி விவரங்களையும், ஃவதை விவரங்களையும், அண்ட பிண்டமென்ற விவரங்களையும் கொண்டது. **viii.** 322/1914/IV.

LB:4:6

**i.** பூஜா விதி—10 (தொ.எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** அக்டோபர், 1914; **vi** செ.மூ.எ. 10; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** இந்நூல் திரிகோணச் சோதிப் பிரகாச மூலங்களையும், காலப் பிரமாணங்களையும், வளர்பிறையிற் செய்யும் சித்தி விவரங்களையும் கொண்[illegible]. மாவூற்று சாதுக்கள் மடத்திலிருக்கும் துறவியார் இராம[illegible] கோசாமி சுவாமியிடத்திலிருந்து பெற்ற ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. **viii.** 322/1914/IV.

LB:4:6

**i.** முப்பு சூஸ்திரம்—31 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; **ii.** த. குப்புசாமி நாயுடு: மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** அக்டோபர், 1914; **iv.** செ. மூ. எ. 31; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** வேதைக்குரிய குரு முடிக்கும் விவரங்களையும், மனோமணி சித்தியையும், முப்பு விவரங்களையும் கொண்டுள்ளது. **viii.** 322/1914/IV.

LB:4:6

**i.** வைத்திய சூஸ்திரம்–83 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** அக்டோபர், 1914; **iv.** செ.மூ.எ. 83; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** இந்நூல் கல சுண்ணம், காரசாரம், துருசுச் சுண்ணம், செயநீர், செந்தூர முறைகளையும் வைபாகத்துக் குரிய விவரங்களையும், சஞ்சாரமாதி விவரங்களையும், வேதையின் விவரங்களையும், ஞானகற்ப முறையையும், பூரண லேகியம் நிறுவி கற்ப சமாதி விவரங்களையும் கொண்டுள்ளது. இது திருமங்கலம் அருணாசலம் பிள்ளை குமாரர் வைத்தியம் சுப்ரமணிய பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. **viii.** 322/1914/IV.

LB:4:6

**கூர்மானந்தர்**

**i.** ஞான சூஸ்திரம்–50 பாகம் 4 (தொ. எ. 1099 பார்க்க): முதற்பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலே, மதுரை ; **iii.** மே, 1914 ; **iv.** செ.மூ.எ. 50 ; **v.** 22×14 செ. மீ.; **vi.** 0–12–0; **vii.** வாத வயித்தியம், காய சற்ப முறைகளேயும், யோக சாதன மூல மந்திர விவரங்களேயும் இந்நூல் விளக்குகிறது. மதுரை புது மண்டபம் நூல் வ ணிகர் எஸ். முத்தைய பிள்ளையவர்களிட மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது. **viii.** 739/1914/II.

**LB:4:6**

**கோபாலாசாரியர், டி.**

1088. i. ஆயுர் வேதம் : முதற் பதிப்பு; **ii.** டி. கோபாலாசாரியர் ஆயுர்வேத முத்திராக்ஷர சாலே, சென்னே ; **iii.** ஜூலே, 1911; **iv.** உ. ப. 30+8 ; **v.** 18×13 செ.மீ. ; **vi.** 0–4–0 ; **vii.** பம்பாய் இராஜதானியில் பிரசுரமாகும் ஆந்திர பத்திரிகை ஆயுர்வேத சிகித்ஸா நூலின் சிறப்பைக் குறித்து 1910ஆம் ஆண்டு முதல் இதழில் ஆசிரியரால் தெலுங்கில் எழுதப்பட்டது. நமது பண்டைக்காலத்தவர் சாஸ்திர சிகிச்சைகளில் அறிவுள்ள வராயிருந்தனரா என்ற ஐயப்பாட்டை அகற்றும் பொருட்டு ஆயுர் வேத சாஸ்திர சிகிச்சையின் மேன்மையைக் குறித்து விவரிக்கப்பட்டிருக்கிறது. **viii.** 52/1911/III.

**LB:4:6**

**கோரக்கர்**

**i.** கற்ப சூஸ்திரம்–31 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலே, மதுரை : **iii.** அக்டோபர், 1914 ; **iv.** செ.மூ.எ. 31 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 0–12–0 ; **vii.** இந் நூல் கற்பமுறை, வாசி சித்தி, பராபரை சித்தி, சிவயோக சாதனம், சதாசிவ நிலே முதலிய விவரங்களேக் கொண்டுள்ளது. வில்லிபுத்தூர் வித்துவான் பொன்னங்கூடஞ் செட்டியார் அவர்கள் மகன் சுப்ரமணியஞ் செட்டியார் அவர்களிடமிருந்து பெற்ற ஏட்டுப் பிரதிகளின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. **viii.** 322/1914/IV.

**LB:4:6**

**i.** குரு ஜெயநீர்—10 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு ; **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சி யந்திர சாலே, மதுரை ; **iii.** அக்டோபர், 1914; **iv.** செ.மூ.எ. 10; **v.** 12×14 செ.மீ.; **vi.** 0–12–0 ; **vii.** இந்நூல்

குரு செயநீர் விவரங்களையும், அறுவகைச் சுண்ணம், ஜெயநீர் சுண்ணம், மெழுகு வேதை முதலிய விவரங்களையும் கொண்டுள்ளது. வில்லிபுத்தூர் கண்மாய்ப்பட்டி வித்துவான் அருணகிரி நாடார் அவர்கள் குமாரர் தெய்வசிகாமணி நாடார வர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப் பெற்றது viii. 322/1914/IV.

LB:4:6

i. பிர்ம ஞான தெரிசனம்—17 (தொ. எ. 1101 பார்க்க)' முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914; iv. செ. மூ. எ. 17 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் முப்பு, குரு முடிக்கும் விவரங்களையும், வழலை மார்க்கமும், பரிபாஷை நாமங்களையும், நாகக்கட்டு வேதை முறைகளையும், பூரணை அமாவாசியிற் பூசிக்கும் முறைகளையும்' லோகங்கள் குருமுறைக்குரிய விவரங்களையும் கொண்டுள்ளது, வில்லிபுத்தூரைச் சேர்ந்த முகமது சாயாபுரம் திருவேங்கடத் தேவர் அவர்கள் குமாரர் போத்துலிங்கத் தேவர் அவர்களிட மிருந்து பெற்ற ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

i. வகார சூஸ்திரம்—100 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு. மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ.மூ.எ. 100 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூலில் வாசியைப் பஞ்ச பூத ஸ்தானங்களில் நிறுத்திக் கட்டவும், சுண்ண முறை, செந்தூர முறை, குரு முறை, செயநீர் போக்கு, வேதை முறை முதலிய விவரங்களும் சொல்லப் பெற்றிருக்கின்றன. இந்நூல் வில்லிபுத்தூரைச் சேர்ந்த முகமது சாயபுபுரம் அருளானந்தபாடகர் அவர்கள் மகன், சங்கரலிங்க பண்டிதர் அவர்களிடமிருந்து பெற்ற ஏட்டுப் பிரதிகளின்படி அச்சிடப்பெற்றது. ஆசிரியரிடமிருக்கிற 83 பாட்டுகள் போக மீதம் 17 பாட்டுகள் ஆசிரியருக்குக் கிடைக்கவில்லை. viii. 322/1914/IV.

LB:4:6

**சங்க முனிவர்**

i. விஷ நூற் சுருக்கம்—8 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914; iv. செ. மூ. எ. 8 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் எல்லா நஞ்சுகளுக்கும் மருந்து முறிவும், பேதி மருந்தும் தெளிவாக கூறுவதுடன் அதன் விவரங்களையும்

கொண்டுள்ளது. மதுரை பாத்திரக்கடை ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

i. விஷ வயித்திய சூஸ்திரம் (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ. மூ. எ. 16 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல் எல்லா வகை நஞ்சுகளுக்கும் தக்க மருந்து செய்முறை விவரங்களையும் சில வைததிய விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை பாத்திரக்கடை, ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

**சங்கர பாரதி ஸ்வாமி, கோயில்பட்டி**

1089. i. ஜீவ காருண்ய ஔஷதங்கள்: முதற் பதிப்பு ; ii. சங்கரபாரதி ஸ்வாமி, கோயில்பட்டி ; ஆரியப் பிரகாசினி பிரஸ், திருநெல்வேலி பாலம் ; iii. ஜனவரி, 1914 ; iv. உ. ப. 17 ; v. 21×14 செ. மீ. ; vi........ ; vii. மண்டித்தோப்பு என்னும் இடத்தில் அமைந்துள்ள ஜீவகாருண்ய வைத்திய சாலையில் தயாரிக்கப்படும் சில மருந்துகளின் தன்மைகளைப் பற்றி விளக்கும் சிறுநூல். இந்த மருந்துகள் எல்லாம் மூலிகையிருந்து செய்யப்பட்டவை. இதில் குறிப்பிட்டுள்ள மருந்துகளின் தன்மை, அவற்றால் தீரும் நோய்கள், கடைப் பிடிக்கவேண்டிய கட்டுப்பாடுகள் இவற்றை விளக்கும்போது அவற்றின் விலையும் குறிப்பிடப்பட்டுள்ளது. viii. 632/1914/I.

LB: 4:6

**தன்வந்திரி**

i. கலைக்கியானம்–32 (தொ. எ. 1101 பார்க்க) : முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 32 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0; vii. இந்நூல் ஞானம், கற்பம், சூரண முறை விவரங்களையும், பஞ்சபூத வீட்டின் இலக்கணம் அதன் தெய்வம், சித்தி முதலிய விவரங்களையும், வாசிதரானை பழக்க விவரங்களையும், அண்ட வெளி ஒளி உச்சியென்ற விவரங்களையும் கொண்டுள்ளது. viii. 322/1914/IV.

LB

i. ஞான சைதன்யம்—21 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 21; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் சிற்றண்ட வெளி சிற் சொரூப சித்தியும், சிவனிருக்கும் பீடமும், ரேசக பூரக கும்பக விவரங்களையும், யுகாந்த கால சாதனை விவரங்களையும், வாசி சித்தியும், மௌன அட்சரமும் வல்லாதி லேகியம், பத்திய பாகம முதலிய விவரங்களையும் கொண்டுள்ளது. சுந்தர பண்டியர்,சாலி மகாரிஷி கோத்திரம் அண்ணாமலைச் சுவாமிகள் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/1.

LB:4:6

i. ஞானம்—12 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 12; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் காயாதி கற்ப முறை பற்பமுறையையும், சிவயோக மார்க்க வழியையும், மௌன அட்சர விவரங்களையும், முத்தி மோட்ச சொரூப நிலை சித்தி விவரங்களையும், சிவன் இருப்பிடம் சுடர் இரவி மதிசோதி விவரங்களையும், ரேசக பூரக கும்பகத்திலமர்ந்து நின்ற விவரங்களையும், சில வைத்தியத்திற்குரிய விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை உண்கல வணிகர், ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

i. ஞான வெண்பா–6 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 6; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் உந்திக் கமலத்தில் உதிக்கும் பிரமன் விஷ்ணு முதலிய தேவதை சித்தியையும், அதற்குரிய மூல மந்திர சித்தி விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை உண்கல வணிகர் ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

i. தண்டகம்—140 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ. மூ. எ. 140; v. 22×14 செ. மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் சகல கலைக்சியான சித்தியும், குண்டலி சத்தி தீட்சையும், சுப்ரமணியர் தீட்சையும், சிவ தீட்சை சத்தி தீட்சை அஷ்டகர்ம வரிசை சித்தி விவரங்களும், முப்புமுடிக்கும் பாகமும், வல்லாரை கற்ப விவரங்களும், வெண்சாரை

கரு நெல்லி, கற்ப முறை, அண்ட முப்பு சுண்ணம், மெழுகு செய்கிற விவரங்களும், வசியம், நவகோணம், கேவி சக்கரம் முதலிய விவரங்களும் கொண்டுள்ளது. viii. 322/1914/!V.

LB:4:6

i. முப்பு சூஸ்திரம்—48 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்பசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலே, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ. மூ. எ. 48; v. 22×14 செ. மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் அண்ட பிண்டம் ஆதியந்தம் அகாரம் உகாரம் ஒகாரமென்ற விவரங்களேயும், சீவான்மா தோன்றிய வழியையும், மதியமுதம் மூலமுதல் ஆருதார விவரங்களேயும், முப்பூ குரு முறை விவரங்களேயும், சிவ சத்தி ரேசக பூரக கும்பக விவரங்களேயும், வேதை கற்ப முறை முதலிய விவரங்களேயும் கொண்டுள்ளது. viii. 322/1914/IV.

LB:4:6

## தக்ஷிணுமூர்த்தி சுவாமிகள்

1090. i. தக்ஷிணுமூர்த்தி மெய்ஞானம் திருமந்திரம்—1500: இரண்டாம் பதிப்பு; ii. க. வே. கந்தசாமி முதலியார் & டி. ராஜு முதலியார், சென்னே; பரப்பிரம்ஹ அச்சுக்கூடம், சென்னே; iii. செப்டம்பர், 1913; iv. செ. மூ. எ. 1500; v. 22×14 செ. மீ.; vi. 1–4–0; vii. பல்வேறு நோய்களுக்கான மருந்து வகைகளேப் பாட்டில் விவரித்துரைக்கும் நூல். மருந்துப் பெயர்களின் அட்டவணே நூல் இறுதியில் அகராதி வரிசையில் உள்ளது. பல ஏட்டுப் பிரதிகளேக்கொண்டு பதிப்பிக்கப்பட்டது. இதில் மருந்து வகைகளேச் செய்யும் முறை அவற்றை உண்ணும் முறை, அவற்றிற்கான கட்டுப்பாடுகள் முதலியவை விவரிக்கப்பட்டுள்ளன. 'கிழாயத் தொகுப்பு', 'சூரணத் தொகுபபு'. 'செந்தூரத் தொகுப்பு' 'தயிலத் தொகுப்பு', 'எண்ணெய்த் தொகுப்பு', 'திலதத் தொகுப்பு' முதலியன இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 12/1913/IV.

LB:4:6

## திலோத்தமை

i. ஞானச்சுருக்கம்—26 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலே, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ. மூ. எ. 26; v. 22×14 செ. மீ.; vi 0–12–0; vii. இந்நூலில் யோக நெறிக்குரிய பயிற்சி விவரங்களேயும், எழுத்து விவரங்களேயும், மதியமுத விவரங்களேயும், அகர உகர மகர விவரங்களேயும், ரவி மதி சுழி முனே விவரங்களேயும்,

வாசிக்கப்படும் நெறிகளையும், பரஞ்சோதி முதலிய விவரங்களை யும் விளக்கப் பெற்றுள்ளது. திருச்சி மேட்டு சிந்தாமணி வைத்தியம், தி. க. சுப்பிரமணிய பிள்ளையவர்களிடமிருந்து பெற்ற ஏட்டுப் பிரதிகளின்படி இந்த நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LB:4:6

**நந்தீசுர மஹா முனிவர்.**

1091. i. கருக்கிடை—300 : முதற் பதிப்பு ; ii. டி. இராஜு முதலியார், சூளை, சென்னை & பி. மார்க்கலிங்க நாயனுர் ; பரப்பிரம்ஹ அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. எ. 300 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. ஆயூர்வேத மருத்துவ முறைகளை விளக்குவது. சில மருந்து செய் முறைகளும் விளக்கப்பெற்றுள்ளன; 'தீட்சை', யோகம், வசியம், வாசி நிலை முதலிய செய்திகளையும் விவரிக்கிறது. பற்பல ஏட்டுப் பிரதிகளைக் கொண்டு ஆராய்ச்சி செய்த பிரதிக் கிணங்க சில ஆயுர்வேத பண்டிதர்களால் சோதிக்கப்பெற்றபடி இது பதிப்பிக்கப்பட்டுள்ளது. பொருள் அகராதி நூல் இறுதியில் கொடுக்கப்பட்டுளளது. viii. 950/1914/II.

LB:4:6

**நாராயணஜீ கேசவஜீ, ஜாம்நகர், கத்தியவார்**

1092. i. ருது சரியா அல்லது நாம் எப்படி சௌக்கியமாய் இருக்கக் கூடும்? : முதற் பதிப்பு; ii. எம்பிரஸ் ஆப் இண்டியா பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1912 ; iv. உ. ப. 16 ; v. 24×18 செ. மீ. ; vi. இலவசம் ; vii. ஒரு ஆண்டில் மாறி மாறி வரும் ஆறு பருவங்களிலும் ஒரு மனிதன் தன்னுடைய உடலை எவ்வாறு கவனித்துக்கொள்ள வேண்டும் என்றும், தவறினுல் என்ன நோய்கள் உண்டாகும் என்றும் விவரிப்பது. பகற் காலங்களிலும், இரவுக் காலங்களிலும் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்றும் விவரிக்கிறது. ஆயுர்வேதோதய ஔஷதாலயத்து அன்பளிப்பாகக் கொடுக்கப் படும் நூல்களில் இது மூன்ருவது. viii. 1077/1912/III.

LB:4:6

**யூகிமா முனிவர்**

1093. i. வைத்திய சிந்தாமணி—800 : முதற் பதிப்பு ; ii. மார்க்க லிங்க நாயனுர் & டி. ராஜு முதலியார் ; பரப்பிரம்ஹ அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ. மூ. எ. 800 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. தன்வந் திரி சொன்ன ஆயுர்வேத ஆகமத்தைத் தழுவி எழுதப்பட்டது. சதாசிவன், உமாதேவி, நந்தி, தன்வந்திரி, அசுவினி, அகஸ்தி யர், புலஸ்தியர், தேரையர் வழியாக இது யூகி மாமுனிவருக்குக்

கிடைத்தது. இவர் தேரையரின் முதல் மாணாக்கர். முப்பத்திரண்டு அத்தியாயங்களில் பல்வேறு நோய்கள் பற்றியும், அவற்றினைப் போக்கும் மருந்து வகைகள் பற்றியும், பாடலில் விவரித்துள்ளார். இதில் விவரிக்கப்பட்டுள்ள நோயினங்களின் அகராதி இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 320/1914/I.

**LB:4:6**

**வேத முனிவர்**

i. வேத முனிவர் ஞான சூஸ்திரம்—24. பாகம் 4: முதற் பதிப்பு (தொ. எ. 1099 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 24; v. 22×14 செ.மீ. vi. 0–12–0; vii. அடி நடு முடி, பரவெளி, ரசகுளிகை, சூடாமணி, மாத்திரை விவரங்களை இந்நூல் விளக்குகிறது. திருப்பழனிமலையிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீ யோக மகாரிஷீஸ்வர சுவாமியவர்கள் ஆதீன ஆச்சிரமம் மகாகைலாச பரம்பரை 225-வது பட்டம் ஸ்ரீ தெண்டாயுதபாணி ரிஷீஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது. viii. 739/1914/II.

**LB:4:6**

## 615 [1] சித்த வைத்தியம்

**இடைக்காட்டுச் சித்தர்**

i. இடைக்காட்டுச் சித்தர் ஞான சூஸ்திரம்—71 (தொ. எ. 1097 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை, ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ. மூ. எ. 1+70; v 22×14 செ. மீ.; vi. 0–12–0; vii. சிவயோகம், ஜீவன் முத்தி, கற்பம், செயநீர், சுண்ணம், வேதை, செந்தூரம், துருசு, குரு, மெழுகு, வழலை, கெவுன மணி முதலியவைகளின் விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை இராமாயணச்சாவடித் தெரு இருளப்பக் கோனாரவர்கள் மகன் இராமசாமிக் கோனாரவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது. viii. 737/1914/II.

**LC:4:6**

i. கல் நண்டு சூத்திரம்—16 (தொ.எ. 1095 பார்க்க); ii. வி. ஆர். சுந்தரம்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை; iii. 1915; iv. செ. மூ. எ. 16; v. 18×11 செ. மீ.; vi. 0–12–0; vii. இந்நூல் ஸ்ரீ சுப்பிரமணியரால் அகஸ்தியருக்கு உபதேசம்

செய்யப்பெற்றது என்பர். கடலில் பிறக்கும் 'உகிதம்' என்ற கல் நண்டு என்பதனை மருந்தாக பயன்படுத்தும் முறையை விளக்கி உரைப்பது. viii. 384/1915/IV.

LC:4:6

**குதம்பைச் சித்தர்**

i. குதம்பைச் சித்தர் ஞான சூத்திரம்—18 : முதற் பதிப்பு (தொ. எ. 1097 பார்க்க) ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; iii. 1914 ; iv. செ. மூ. எ. 18 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. ஞான சூஸ்திரம் பதினெட்டில் கலைக்கியான உயிரட்சரமும், குளிகை, தைல முறை முதலிய விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை இராமாயணச் சாவடித் தெரு பூசாரி கருப்பணக் கோனாரவர்களிடம் வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது. viii. 737/1914/II.

LC:4:6

**கொங்கண நாயனார்**

1094. i. கொங்கண நாயனார் வாத காவியம் மூவாயிரம் : முதற் பதிப்பு ; ii. இராஜயோகானந்த சுவாமிகள் & ஹகீம் ப. முகமது அப்துல்லா சாயிபு ; முஸ்லிம் அபிமானி பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. செ. மூ. எ. 3000 ; v. 22×14 செ. மீ. ; vi. 1–8–0 ; vii. மருத்துவச் செய்முறைகளைப் பற்றி விளக்கும் மூவாயிரம் பாடல்கள் கொண்ட ஒரு மருத்துவ நூல் விருத்தப் பாவில் அமைந்தது. viii. 514/1913/I.

LC:4:6

**சுந்தரானந்தர்**

i. சுந்தரானந்தர் அதிசய காரணம்—36. பாகம்–5 : முதற் பதிப்பு (தொ. எ. 1100 பார்க்க) ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ. மூ. எ. 36 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–1210 ; vii. பல வகைப் பறவைகளின் கூண்டுகளிலுள்ள சிலவகை வேர்களிற் செய்யத் தகுந்த சித்து விவரங்களை இந்நூல் விளக்குகிறது. வில்லிபுத்தூரைச் சேர்ந்த சுந்தரபாண்டியம் அம்மையப்ப பிள்ளையவர்கள் குமாரர் பொன்னையா பிள்ளையவர்களிடம் வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது. viii. 740/1914/II.

LC:4:6

i. சுந்தரானந்தர் சூஸ்திரச் சுருக்கம்—10 பாகம்–5 முதற்பதிப்பு (தொ. எ. 1100 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை: ஸ்ரீராமச்சந்திர விலாச

அச்சியந்திரசாலே, மதுரை; **iii.** மே, 1914; **iv.** செ.மூ.எ. 10; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** சுழிமுனை, சோதி காட்சி விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு வாசல் யானைக்கல் தெரு வித்துவான் குழந்தைவேலுப் பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது; **viii.** 740/1914/II.

**LC:4:6**

**i.** சுந்தரானந்தர் முப்பு—25, பாகம்–5: முதற் பதிப்பு (தொ.எ. 1100 பார்க்க); **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனர், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சுயந்திர சாலே, மதுரை; **iii.** மே, 1914; **iv.** செ.மூ.எ. 25; **v.** 22×14 செ.மீ. **vi.** 0–12–0; **vii.** செயநீர், சுண்ணம், முப்பு, குரு, வேதை முடிக்கும் விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்த எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடலானது; **viii.** 740/1914/II.

**LC:4:6**

**சுந்தானந்தர் வாக்கிய சூத்திரம்**

**i.** சுந்தரானந்தர் வாக்கிய சூத்திரம்—64 (பாகம் 5): முதற் பதிப்பு (தொ. எ. 1100 பார்க்க); **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமிக் கோனர், மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலே, மதுரை; **iii.** மே, 1914; **iv.** செ. மூ. எ. 64; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** செயநீர் சுண்ணக்கு, செந்தூரம், குரு, தேவை, காயகற்பம் முதலிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. சுந்தரானந்தர் ஞான சாஸ்திரங்கள் இப்பதிப்பாசிரியரிடம் பல எட்டுப் பிரதிகள் இருப்பினும், தற்போது அச்சில் சிலவே அச்சிட்டிருக்கிருர். மற்றவை அடுத்த பாகத்தில் வெளியிடக்கூடும். மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் பாத்திர வியாபாரம் ந. ரா. ம. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்த எட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது; **viii.** 740/1914/II.

**LC:4:6**

**i.** சுந்தரானந்தர் வைத்தியம்—5 பாகம்–5: முதற் பதிப்பு (தொ. எ. 1100 பார்க்க); **ii.** த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனர், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலே, மதுரை; **iii.** மே, 1914; **iv.** செ.மூ.எ. 5; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–12–0; **vii.** மேக வெட்டை முதலிய நோய்களுக்குரிய கட்டுப்பாடு விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்த எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பெற்றது; **viii.** 740/1914/II.

**LC:4**

**சூரியானந்தர்**

i. சூரியானந்தர் கற்பஞான சூஸ்திரம்–25. பாகம்–4: முதற் பதிப்பு (தொ.எ. 1099 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 25; v 22×14 செ மீ.; vi. 0–12–0; vii. காய சித்தியோகப் பயிற்சி, கெவுன குளிகை, முதலிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப்பெற்றது; viii, 739/1914/II.

LC:4:6

**திரிகோணச் சித்தர்**

i. திரிகோணசித்தர் சிவஞான சூஸ்திரம்-52: முதற் பதிப்பு 5-ம் பாகம் (தொ.எ. 1099 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப்.ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 52; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0, vii. அண்டபிண்டம், சுழிமுனை, குரு, வழலை முதலிய விவரங்களை இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு வாசல் யானைக்கல் தெரு முத்தையா பிள்ளையவர்கள் மகன் வித்துவான் குழந்தை வேலுப்பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பெற்றது; viii. 739/1914/II.

LC:4:6

**தேரையர்**

1095. i. தேரையர் கரிசலை-300 [கல்நண்டு சூத்திரம்–16. யூகிமுலி கரிசலை–36]; ii. வி.ஆர். சுந்தரம் & எம். சண்முக முதலி; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. செ. மூ.எ. 300; v. 18×11 செ.மீ.; vi. 0–12–0; vii. தமிழ் மருத்துவ முறைப்படி மருந்து வகைகளைத் தயாரிக்கும் முறைகள் விளக்கப்பட்டிருக்கின்றன. இதில் தேரையர் கரிசலை-300, கல் நண்டு-16, யூகிமுனி கரிசலை-36 அடங்கியுள்ளன. இவற்றுள் தேரையர் கரிசலை என்பது வாதகல்ப முறைகளை வைத்தியர்கள் யாவரும் எளிதில் உணரும் வகையில் விளக்குவது. சிவராமகிருஷ்ண பிள்ளை என்பார் கொடுத்த பழைய அச்சுப் படியையும், தஞ்சை சரஸ்வதிமகாலில் உள்ள ஏட்டுப் பிரதியையும் கொண்டு சோதித்து அச்சிடப்பட்டது. பொருள் அட்டவணையும் நூல் முகப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது; viii. 384/1915/IV.

LC:4:6

i. தேரையர் நவலோக பற்பம்–16 பாகம்—4: முதற் பதிப்பு (தொ.எ. 1099 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை, ஸ்ரீராமச்சந்திர விலாச

அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 16; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இரும்பு, பித்தளை, ஈயம், வெள்வெங்கம், திராவு, வுருக்கு, செம்புடன் நாகம், வெள்ளி, முத்து, வெண்கலம், தங்கம் முதலிய உலோகங்களைத், தூய்மை செய்முறையுடன் பற்பஞ் செய்யும் முறைகளும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்த எட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பெற்றது; viii. 739/1914/II.

LC:4:6

**தேவரிஷி முனி சித்தர்கள்**

1096. i. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு: முதற்பாகம்; [திருமூலர் ஞானமுதல் அகஸ்தியர் ஞானச் சுருக்கம் ஈறாக]; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப்.ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.ப. 8+256+4; v. 22×14 செ.மீ.; vi. . . . . . . .; vii. இத்தொகுதியின்கண் திருமூலர், தெட்சணா மூர்த்தி, கணநாதர், சுப்பிரமணியர், போகர், முதலிய தேவ ரிஷிகள் திருவாய்மலர்ந்தருளிய நாற்பத்தொரு நூல்களின் உண்மையான செய்திகளைக் காணலாம். இவற்றில் பெரும் பாலான சித்தர் இயற்றிய வைத்திய நூல்களும், யோகம், ஞானம், பற்றிய நூல்களும் சில உள; viii. 736/1914/II.

**LC:4:6**

1097. i. வைத்திய வாதயோக ஞானசாஸ்திரத் திரட்டு—இரண்டாம் பாகம் முதற்பதிப்பு: [போகர் உபதேச ஞானம் முதல் வால்மீகர் சுத்த ஞானம் ஈறாக]; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv செ.மூ.ப. 4+256+4; v. 22×14 செ.மீ.; vi. 0—12—0; vii. இரண்டாம் பாகமான இந்நூலில், போகரிஷி, காலங்கி நாதர், கமல மகாமுனிவர், இடைக் காட்டுச் சித்தர், புலஸ்துக்குச் சித்தர், கொங்கணர், குதம்பைச் சித்தர், அம்பிகானந்தர், டமரானந்தர், வால்மீகர் முதலியவர்களால் சொல்லப்பெற்ற இருபத்தாறு நூல்களில் விளங்கவுரைக்கும் செய்திகள் உள்ளன; viii. 737/1914/II.

LC:4:6

1098. i. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டு-மூன்றும் பாகம்: முதற் பதிப்பு ; [கடைப்பிள்ளை ஞான சைதன்யம் முதல் சூதமகாமுனி ஞான சூஸ்திரம் ஈறாக]; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914; iv. உ.ப. 4+256+4 ; v. 22×14 செ.மீ.; vi. 0—12—0; vii. இப்பகுதியில் கடைப்பிள்ளை என்பார் முதல் சூதமா முனிவர் என்பார் ஈறாகப் பல முனிவர்கள் எழுதிய இருபத்தேழு நூல்கள்

iv. செ.மூ.எ. 13; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இந்நூல் மதிகலை தன்மயமாகாமல் ரவிகலையுடன் சேர்க்கும் நடுநிலை ஞான விவரங்களையும், மதிப்பாலமுதம் அருந்தும் விவரங்களையும், வாசிப்பழக்க நெறி விவரங்களையும், அண்டவுச்சி வெளி ஒளி நெறி விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை உண்கலக் கடை வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LC:4:6

i. பிரமஞானம்—36 (தொ.எ. 1101 பார்க்க) முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 36; v. 22×14 செ.மீ., vi 0-12-0; vii. இந்நூல் பெரும் பொருட்களஞ்சும் ஒன்றில் ஒன்று இணையும் வகையையும் ரவிமதி கலை வாசியால் மூச்சுப்பயிற்சி வகையையும், ரேசக, பூரக- கும்பக சக்கரங்களின் விவரங்களையும், பூரணை, அமாவாசையில் பூசாவிதி முறைகளையும், எழுத்து விவரங்களையும், செயநீர், சுண்ணம், செந்தூர, வேதைமுறை முதலிய விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை உண்கலக்கடை வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின் படி இந்த நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LC:4:6

i. மூப்பூதீட்சை—45 (தொ.எ. 1101 பார்க்க) முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 45; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. இந்நூல் 'ஆதி யந்தம்', 'சோதி', 'பூரணம்' 'ஆதித்த மண்டலம்' 'சந்திர மண்டலம்' 'குண்டலி சத்தி' விவரங்களையும், வாசியின் யோக பயிற்சி விவரங்களையும், வேதைக்கு சவுக்கார வைப்புமுறை, தையில முறை, சுண்ணமுறை முதலிய விவரங்களையும் கொண்டுள்ளது. மதுரை வடக்குவாசல் யானைக்கல் தெருவிலிருக்கும் வித்வான் மு. குழந்தை வேலுபிள்ளையிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.

LC:4:6

**புண்ணாக்குச் சித்தர்**

i. புண்ணாக்குச் சித்தர் முப்பூச்சுண்ணச் செயநீர்: முதற் பதிப்பு (தொ.எ. 1097 பார்க்க) ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை & எப்.ஆர். குருசாமி கோனார், மதுரை, ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. மே, 1914; iv. செ.மூ.எ. 45; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. முப்புச்

சுண்ணம், செயநீர், வழலை, வாதம், குரு சரக்கின் கட்டு, கற்பம், வீட்டுப்பேறு முதலிய விவரங்களையும் இந்நூல் விவரிக்கிறது. சிந்துப் பாடல்களில் இச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கலவாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின் படி இந்த நூல் அச்சிடப்பெற்றது. viii. 737/1914/II.

LC:4:6

**பொன்னம்பல பண்டிதர் (தொ.து.)**

**1102.** i. *சித்தர் களஞ்சியம்* : ii. சிவானந்த சாகர யோகீஸ்வரர் ; சுதேசி அச்சியந்திரசாலை, குடந்தை ; iii, 1915 ; iv. உ.ப.+ செ.மூ.ப. 144 ; v. 19×13 செ.மீ.; vi. 1–8–0 ; vii. யோகப் பயிற்சியையும், மருந்து வகைகளையும், விவரிக்கும் நூல், ஆயுர்வேதியருக்கு இந்தச் சித்தர்நூல் அறிவு இன்றியமையாததாகும், ஆயுர்வேதத்தைக் குரு முகத்தால் உணர்ந்து, பொருட்களின் தன்மைகளை அறிந்து, மருந்துகளைச் செய்து, கால வேறுபாடுகளுக்குத் தக்கவாறு பயன் படுத்தி, மக்கள் நன்மையடைய வழிகாட்டுவது. 'சிவானந்த சாகரயோகி' என்பார் இதற்கு நூன்முகம் எழுதியுள்ளார். தவிரவும் இவரும் பிறரும் பாடிய சாத்துக் கவிகளும் முதற்கண் இடம் பெற்றுள்ளன. viii. 327/1915/IV.

LC:4:6

**யாகோபு**

i. *வாத சூஸ்திரம்—57* (தொ.எ. 1101 பார்க்க): ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ.மூ.எ. 57 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இந்நூல் செயநீர், சுண்ணம், வேதை, செந்தூரம், ஞானகற்பமுறை, தயிலம், உருக்கிணங்கள், கால அளவுகள், குரு முடிக்குங் காலம், கட்டுவகை, சரக்கு, முதலிய விவரங்களைக் கொண்டுள்ளது. இது மதுரை வடக்கு பெருமாள் மேஸ்திரி வீதியிலிருக்கும் உலக சுந்தரம் பிள்ளையிடமிருந்து ஏட்டுப் பிரதி பெற்று அச்சிடப்பட்டது. viii. 322/1914/IV.

LC:4:6

**யூகிமுனி**

i. *யூகிமுனி கரிசலை* (தொ.எ. 1095 பார்க்க): ii. வி.ஆர். சுந்தரம் ; சச்சிதானந்தம் அச்சியந்திரசாலை ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 36 ; v. 18×11 செ.மீ.; vi. 0–12–0 ; vii. முன்நூற் பொருள்களைச் சுருக்கிச் நூற்பாக்களில் உரைப்பது. களங்கம், பற்பம், சிந்தூரம், லேகியம், மெழுகு, தைலம் சுண்ணம் ரசதம், பதங்சம், அமிலம் முதலியனபற்றி விளக்கும் நூல்

இந்நூற்பாயிரம், நன்னூலின் சிறப்புப் பாயிரப் பாடலின் அமைப்பை ஒத்துள்ளது. பொதிகைச் சியகங்கன் வேண்டு கோளினால் இந்நூல் இயற்றப்பெற்றதாம். பொருள் அட்டவணை முதற்கண் கொடுக்கப் பெற்றிருக்கிறது. viii. 384/1915/IV.

LC:4:6

**யோக சித்தர்**

i. ஞான சூஸ்திரம்—17 (தொ.எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச் சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 17; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந் நூல் மௌன சிவயோக ஞான விவரங்களையும், சுழிமுனை சோதி வடிவக்காட்சி, மதி அமுதமருந்தும் முறை, ரவிமதி மாறும் விதம், வைத்தியம் முதலிய விவரங்களையும் கொண் டுள்ளது. கோவில்பட்டி தாலூகா இடசெவல் சத்திரப்பட்டி கிராமத்திலிருக்கும் வைத்தியம், வா. அ. சுந்தரலிங்கம் பிள்ளை யவர்களிடமிருந்து பெற்ற ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV. LC:4:6

i. யோகச் சித்தர் பாடல்—42 (தொ. எ. 1101 பார்க்க): முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச் சந்திர விலாச அச்சியந்திர சாலை, மதுரை; iii. அக்டோபர், 1914; iv. செ.மூ.எ. 42; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூல், மனோன்மணி சித்தியும், இடகலை, பிங்கலை, சுழிமுனை, சோதிவடிவக்காட்சியையும், பஞ்சதேவதை சித்தி மூல மந்திரங்களையும், எங்கும் நிறைந்து நின்ற ஒரு மேலான பொருளின் காட்சி விவரங்களையும் கொண்டுள்ளது. கோவில் பட்டி வட்டம் இடசெவல் சத்திரப்பட்டி கிராமத்திலிருக்கும் வைத்தியம் வா.சு. சுந்தரலிங்கம் பிள்ளையவர்களிடமிருந்து பெற்ற ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பெற்றது. viii. 322/1914/IV.
LC:4:6

**யோக முனிவர்**

1103. i. வயித்தியக் கண்ணாடி—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சிறுமணலூர்; தன.லக்ஷ்மி நர்த் தன அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1913; iv. செ.மூ.ப. 12; v. 22×14 செ.மீ.; vi .0–1–0; vii. பதி னெண் சித்தர்களில் ஒருவராகிய யோக முனிவர் செய்தது. இந்த வயித்தியநூல் "பதினெண்பேர் நூல்களைத் திரட்டி தொகுக்கப்பட்ட நூல்". நோய் விவரமும், நோய்களுக்குரிய மருந்தும், கட்டுப்பாடுமுறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. ஆண் மைக்கு மன்மத லேகியம் பற்றிய நொண்டிச் சிந்து ஒன்றும் உள்ளது. 'பிளாஸ்திரி'யைப் பற்றியும் நூல் இறுதியில் பாடி இருப்பது கவனிக்கத்தக்கது; viii. 815/1913/III.

LC:4:6

**வசிஷ்டர்**

i. வசிஷ்டர் ஸ்ரீ ராமருக்குபதேசித்த வைத்திய சூஸ்திரம்—206, பாகம்—4 ; முதற் பதிப்பு (தொ.எ. 1099 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை அண்டு எப். ஆர். குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 206 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. செயநீர், சுண்ணம், செந்தூரம், மெழுகு, தாம்பர, வங்க, தங்க பற்பங்களையும், கிசாயம், லேகியம், சூரணம் முதலிய மருந்துகளைச் செய்யும் முறைகளையும் இந்நூல் விளக்குகிறது. பயித்தியம், பிள்ளை இல்லாதவர், குன்மம், ஆனந்த வாயு, பாரிச வாயு, வாந்திபேதி, வீக்கம் இன்னோரன்ன பல நோய்களுக்குரிய மருந்துகளும், நீக்கும் வழிகளும், அந்நோய்கள் ஏற்படக்காரணங்களும் இந்நூலில் உள்ளன. இல்லறத்தோர்க்கும், துறவறத்தோர்க்கும் ஏற்படும் நோய்களுக்குத் தக்க மருந்துகளும், குருமுடிப்பதற்கு முறையும், யோகம் பயிலுவோருக்குக் கற்பமும் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 739/1914/II.

LC:4:6

**வால்மீகர்**

i. வால்மீகர் ஞானநாடி சாஸ்திரம்—11: முதற் பதிப்பு (தொ.எ. 1097 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை அண்டு எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 11 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. வாதபித்த சிலேற்பன நாடியையும், உடலில் அமைந்துள்ள நோய்களின் விவரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்கு மாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந.ரா.ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்தநூல் அச்சிடப்பெற்றது. viii. 737/1914/II.

LC:4:6

**வியாக்ரம பாதர்**

i. வியாக்ரம பாதர் சூஸ்திரம் : முதற் பதிப்பு ; (தொ. எ. 1100 பார்க்க) ; ii. த. குப்புசாமி நாயுடு; மதுரை & எப். ஆர். குருசாமி கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. மே, 1914 ; iv. செ.மூ.எ. 16; v. 22×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. 'கெற்ப ரோக நிவாரணத் தயில' விவரங்களையும், 'பட்சி தோஷ' பரிகார எந்திர விபரங்களையும் இந்நூல் விளக்குகிறது. மதுரை வடக்குமாசி வீதியிலிருக்கும் உண்கல வாணிகர் ந. ரா. ம. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதியின்படி இந்த நூல் அச்சிடப் பெற்றது. viii. 740/1914/II.

LC:4:6

வீரமாமுனிவர்

1104. i. வீரமாமுனி வாகடத்திரட்டு, முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. ஹகீம் ப. முஹம்மது அப்துல்லா சாஹிபு; முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1912; iv. செ.மூ.உ.ப. 21+242 v. 14×11 செ.மீ.; vi. 1-0-0; vii. இத்தாலி நாட்டிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்த சமயப் பரப்புநராகிய பெஸ்கி என்னும் வீரமாமுனிவர் தமிழ் பயின்று தமிழ் இலக்கண இலக்கிய நூல்களையும், உரைநடை நூல்களையும் ஆக்கியுள்ளார். தவிரவும் வைத்தியம், மாந்திரிகம், சோதிடம் இவற்றையும் ஆராய்ந்து வல்லவராயினர். ஆங்கில வாகட வழியையும், இந்து வாகட வழியையும் ஆராய்ந்து, எளிய நடையில் அமைந்த கவிதைகளில் பல வைத்திய நூல்களை ஆக்கியுள்ளார். இவர் இயற்றிய நூல்களுள் (1) நசகாண்டம், (2) நவரத்தின சுருக்க மாலை, (3) மஹாவீரிய சிந்தாமணி என்னும் மூன்று நூல்கள் இதில் அடங்கியுள்ளன. இவை தவிர குணவாகடம், நிலக்கண்ணுடி முதலிய வைத்திய நூல்களும் இவர் ஆக்கியவையாகும். பாடல்களுக்குப் பதிப்பாசிரியர் விளக்கம் தந்துள்ளார். வீரமாமுனிவரின் தமிழ்த் தொண்டினைப் பற்றி விளக்கமாக முகவுரையில் கூறப்பட்டிருக்கிறது. 7,500 பாடல்கள் கொண்ட 'மகா வீரிய சிந்தாமணியில்' முதல் 317 பாடல்களே இதில் அமைந்துள்ளன. பிற்பகுதியைத் தனியாக வெளியிடுவதாக ஆசிரியர் குறித்திருக்கிறார். viii. 441/1913/I.

LC:4:6

1105. i. வீரமாமுனிவர் வாகடத்திரட்டு, இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. பா. முஹம்மது அப்துல்லா சாஹிபு; முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. அக்டோபர், 1912; iv. செ.மூ.உ.ப 18+228; v. 17×11 செ.மீ.; vi. 1-0-0; vii. இதில் எட்டு வைத்தியச் சிறு நூல்கள் இடம் பெற்றுள்ளன. அவையாவன (1) வைத்திய சிகாமணி, (2) சுரமஞ்சரி, (3) பூவரசங்காய் எண்ணெய்க் கலிவெண்பா, (4) மேகநாதத் தைலம் கலிவெண்பா, (5) பஞ்சாட்சர மூலி எண்ணெய் ஆனந்தக் களிப்பு, (6) சத்துரு சங்கார எண்ணெய் நொண்டிச் சிந்து, (7) வீர மெழுகு விருத்தங்கள், (8) முப்பு சூத்திர நொண்டிச் சிந்து இவற்றுள் முதல் இரண்டும் தவிர ஏனைய ஆறும் தனிமுறை நூல்களாயிருப்பதால் அவற்றிற்குத் தனிமுறைத் திரட்டு என ஒரு பெயரையும் பதிப்பாசிரியர் கொடுத்துள்ளார். முதற் பாகத்தில் சேர்க்க வழி இல்லாமல் விடுத்த வீரிய சிந்தாமணியின் பிற்பாகம் இனி மூன்றும் பாகம் வெளிப்படுத்த நேர்ந்தால், அதனுடன் சேர்த்து வெளியிடுவதாகப் பதிப்பாசிரியர் குறித்துள்ளார். viii. 476/1913/I.

LC:4:6

**வேதாந்த சித்தர்**

i. ஞான சூஸ்திரம்—21: (தொ.எ. 1101 பார்க்க), முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ. மூ.எ. 21 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இந்நூல் ரவிமதி, சுழிமுனை, மதியமுதம், முக்கோண வாலையின் சித்தி, மூல கணேசன் சித்தி, ரோசிசித்தி, நாகரச பற்பம், கைபாகம், செய்பாகம், வைத்தியம் முதலிய விவரங்களை விளக்குவது. viii. 322/1914/IV.

LC:4:6

i. வேதாந்த சித்தர் பாடல்—32: (தொ.எ. 1101 பார்க்க), முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; iii. அக்டோபர், 1914 ; iv. செ.மூ.எ. 32 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. இந்நூல் ஆதியந்தம் சோதிடச் சுடரொளி விவரங்களையும், சுத்த பரப்பிரம்மம், சத்திதரிசன விவரங்களையும், அண்ட பிண்ட விவரங்களையும், பிரபஞ்ச பாசங்கள் அசத்தென்றும், பரமெய்ஞான விளக்கம் மெய்யென்ற விபரங்களையும் தருகின்றது. மதுரை மேலமாசி வீதியிலிருக்கும் ஆர். அரியநாயகம் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இது அச்சிடப் பெற்றது. viii. 322/1914/IV.

LC:4:6

## 615 [1] யுனானி வைத்தியம்

**முகம்மது அப்துல்லா சாயபு, பா., ஹக்கீம்.**

1106. i. அநுபோக வைத்திய நவநீதம்—ஏழாம் பாகம்: முதற் பதிப்பு ; ii. ஹக்கீம் ப. முஹம்மது அப்துல்லா சாஹிபு ; முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1912 ; iv. உ.ப. 18+216 ; v. 18×11 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இந்த ஏழாம் பாகத்தில் நஞ்சுகளின் பிறப்பு, அதன் வகைகள், தன்மை முதலியன பற்றியும், அதிலிருந்து பெறும் மருந்துகளின் விவரங்களும் விளக்கப்பட்டிருக்கின்றன. முந்திய ஆறும் பாகத்தின் தொடர்ச்சியாய் 882-லிருந்து 'பாஷாணக் கட்டு' என்பது தொடங்கி, 1035 'சஞ்சீவி மாத்திரை' என்பது ஈறாக 154 மருந்துச் செய்திகள் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 477/1913/I.

LD:4:6

1107. i. அநுபோக வைத்திய நவநீதம்—எட்டாம் பாகம்: முதற் பதிப்பு ; ii. எச். பி. முஹமது அப்துல்லா சாஹிபு, சென்னை ; முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை : iii. டிசம்பர், 1913 ; iv. உ.ப. 216 ; v. 18×12 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. பல வைத்திய நூல்களிலிருந்து தொகுத்தெழுதப்பட்ட

நூல். முன்பாகத்தின் தொடர்ச்சியாக 1034 நாகராதியுண்டை முதல் 1208 'தேற்றான் லேகியம்' வரை இந்த பாகத்தில் உள்ளன. மருந்துகளைச் செய்யும் முறையும், பயன்படுத்தும் முறையும், கட்டுப்பாடு முதலியனவும் இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்தப் பாகத்தில் விவரிக்கப்பட்ட மருந்துகளின் அகராதி அட்டவணை நூல் முகப்பில் உள்ளது. viii. 386/1914/I. LD:4.6

1108. i. அநுபோக வைத்திய நவநீதம்—ஒன்பதாம் பாகம்: முதற் பதிப்பு; ii. முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை; iii. 1915; iv. உ.ப. 204; v. 18×11 செ.மீ.; vi. 1–0–0; vii. மானிட நோய்களை நீக்கும் மருந்துகளை யுனானி முறையில் செய்யும் முறைகளை விளக்குவது. viii. 356/1915/II.

LD:4:6

1109. i. அநுபோக வைத்திய நவநீதம்—பத்தாம் பாகம்: முதற் பதிப்பு; ii. முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 212; v. 18×11 செ.மீ.; vi. 1–0–0; vii. பல நோய்களைப் போக்கும் மருந்து வகைகளைச் செய்யும் யூனானி வைத்திய முறையை விளக்கும் நூல். viii. 307/1915/III.

LD:4:6

1110. i. சதசுலோகமென்னும் வைத்திய சதகம்: முதற் பதிப்பு; ii. முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப.+செ.மூ.ப. 144; v. 18×11 செ.மீ.; vi. 0–12–0; vii. யூனானி மருந்துகளைத் தயாரிக்கும் முறைகளையும், அதனால் நீங்கும் நோய்களையும் செய்யுள் வடிவமாக இந்நூலில் ஆசிரியர் விளக்குகிறார். viii. 354/1915/III.

LD:4:6

1111. i. யூனானி சூக்ஷ்ம சிகிச்சா போதினி—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. பா. ஹகீம் மஹம்மது அப்துல்லா சாஹிபு; முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஏப்ரல். 1913; iv. உ.ப. 33+180; v. 18×12 செ.மீ.; vi. 1–2–0; vii. அரபி, பார்ஸி, இந்துஸ்தானி மொழிகளில் உள்ள யுனானி வைத்திய நூல்களை வாசித்து எழுதப்பெற்ற ஒரு நூல். மக்களுக்கு தலை முதல் கால் ஈறாக உள்ள நோய்களுக்கு ஆகும் சிகிச்சைகள் 'அற்புத முறைகள்' ஆகியவற்றைத் தொகுத்து வெளியிட்ட நூல். எத்தகையவரும் கையாளும் வகையில் சாதாரண சரக்குகள் சேர்ந்த மருந்து முறைகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாசிரியர் 'யூனானி வைத்திய பால போதினி' என ஒரு நூல் இயற்றி அச்சிட்டு வரும் விவரமும் முகவுரையில் தெரிய வருகிறது. viii. 394/1913/II.

LD:4:6

1112. i. யூநாநி சூக்ஷ்ம சிகிச்சா போதினி—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. பா. முஹம்மது அப்துல்லா சாஹிபு; முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. எப்ரல், 1913; iv. உ.ப. 218; v. 18×11 செ.மீ.; vi. 1–2–0; vii. பல யுனனி வைத்திய நூல்களைப் பின்பற்றிப் பற்பல நோய்களை நீக்கும் மருந்து வகைகளும், அவற்றைச் செய்யும் முறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டாம் பாகத்தில் கண்நோய் சிகிச்சைக்குரிய பல முறைகளைச் சிறப்பாக விவரித்துள்ளார். பொருளட்டவணை அகராதி அடைவில் கொடுக்கப்பட்டிருக்கிறது, இந்நூலாசிரியரிடத்தில் கிடைக்கும் மருத்துவ நூல்களின் விளம்பரமும் முதலில் உள்ளது. சுமார் 50 நூல்களுக்கு மேல் இதில் உள்ளன. viii. 395/1913/II.

LD:4:6

1113. i. யூநாநி சூக்ஷ்ம சிகிச்சா போதினி—மூன்றும் பாகம்; முதற் பதிப்பு; ii. பா. முகம்மது அப்துல்லா சாயபு, முஸ்லீம் அபிமானி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 215; v. 18×11 செ.மீ.; vi. 1–0–0; vii. பல நோய்களின் தன்மைகள், அவைகளை நீக்கும் முறைகளை பற்றியும், யுநாநி முறைப்படி மருந்துகளைச் செய்யும் முறைகளைப் பற்றியும், பயன்படுத்தும் முறையினைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. viii. 392/1915/IV.

LD:4:6

## மௌலவி ஹாஜி முகம்மது இபுருஹிம் ஆலிம் சாகிபு

1114. i. நஜாத்துல் அநாம் பீஇலில்மறும்: முதற் பதிப்பு; ii. தி. ஆ. மு. அப்துர் றஜ்ஜாக்கு ஆலிம் சாகிபு; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திரசாலை, திருவல்லிக்கேணி, சென்னை; iii. 1912; iv. உ.ப. 680; v. . . . . . .; vi. 6–2–0; vii. இந் நூல் மூன்று பாகமும், அறுபத்தொன்பது அத்தியாயங்களும், ஆயிரத்தொரு வகை விடயங்களையும் கொண்டுள்ளது. இதில் நிரம்பியுள்ள பொருள்கள் இல்லறம் துறவறம் என்னும் இரண்டுக்கும் உரியன. இல்லறத்திற்குரிய அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றனோடு வைத்தியத்தைச் சார்ந்த பல சாஸ்திர வகைப்பாடுகளும் அடங்கியுள்ளன. பலவகை அமிழ்தங்கள், அவற்றின் செய்பாகம் முதலியனவும் விவரிக்கப்பட்டுள்ளன நாற்கால் விலங்கினங்கள், பறவைகள், மரஞ்செடி கொடிகள் இவற்றின் தன்மைகளும், பயன்களும் விவரிக்கும் பகுதிகளும் இதில் உள. இரும்பு, பொன் முதலிய பலவகை உலோகங்களின் குணங்களும் கூறப்பட்டிருக்கின்றன. அனுபவ முறையில் ஆராய்ந்து அமைக்கப்பெற்றது இந்த மருத்துவ நூல். viii. 737/1913/I.

LD:4:6

## 615.942 விஷ வைத்தியம்

**முனிசாமி முதலியார், சிறுமணவூர்**

1115. i. விஷ வைத்திய சிந்தாமணி: முதற் பதிப்பு; ii. முனிசாமி முதலியார், சிறுமணவூர், சிவகாமி விலாசம் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1913; iv. உ.ப.+செ.மூ.ப. 104; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. 'பார்வதி பரிணியம்' என்றும் இந் நூற்குப் பெயருண்டு. தேள், பாம்பு, எலி, அரணை, பூரான், நாய் முதலிய நச்சு விலங்குகள் கடிப்பதால் உண்டாகும் நச்சுத் துன்பத்திலிருந்து நீங்குவதற்கேற்ற வைத்திய முறைகள் விவரிக்கப்பட்டுள்ளன. சிற்சில மருந்துகள் செய்யும் முறைகளும் விளக்கப்பட்டிருக்கின்றன. அகஸ்தியர் மூலிகை வண்ணம், அகஸ்தியர் சண்டமாருதச் செந்தூரம் என்னும் இரண்டு பகுதிகள் இதில் உள்ளன. viii. 275/1913/III.

**L: 4: 6**

## 618·2 பிரசவ வைத்தியம்

**முஹம்மது அப்துல்லா சாயபு, பா. ஹக்கீம்**

1116. i. ஸ்திரி வைத்திய போதினி—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. முஸ்லிம் டிபிமாணி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 312; v. 18×11 செ. மீ.; vi. 1–4–0; vii. பெண்களுக்கு உண்டாகும் நோய்களையும், அவற்றின் தன்மைகளையும் யூனானி முறைப்படி மேற்படி நோய்களை எவ்வாறு நீக்குவது என்பதையும் விளக்கும் நூல். 'யூநாநி கெர்ப்ப கோளம்' என்றும் இதற்குப் பெயர் உண்டு. இதில் பெரும்பகுதியும் குழந்தைப் பேறுபற்றிய செய்திகளே விவரிக்கப் பட்டுள்ளன. கருவுற்றோர்களுக்குத்தக்க அறிவுரை தரும் நூல். viii. 393/1915/IV.

**L9F3**

## 618·9 குழந்தை வைத்தியம்

1117. i. **இந்தியாவில் குழந்தைகளைக் காப்பாற்றும் விதம்:** முதற் பதிப்பு; ii. வெல்லின்ஸ் புட் கம்பெனி, இந்தியா; எஸ். பி. வி. கே. பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1912; iv. உ.ப. 3+129; v. 17×12 செ மீ.; vi. இலவசம்; vii. குழந்தை களுக்கு ஏற்ற உணவு ஊட்டுவது பற்றியும். அவர்களுக்கு வரும் நோய்களைப் போக்கும் வகைகளைப் பற்றியும் விவரிப்பது; பதினைந்து அத்தியாயங்களில் தக்க தலைப்புக்களின்கீழ் குழந்தை வளர்ப்புப் பற்றிய செய்திகள் பேசப்பட்டிருக்கின்றன. இந்தியப் பெண்களுக்கும் செவிலிகளுக்கும் பயன்படும் நூல். viii. 866/1912/III.

**L9C:4:6**

**சவரிராய பிள்ளை, எம்., பாளையங்கோட்டை**

**1118.** i. சிசு வைத்தியம் : முதற் பதிப்பு ii. எம். சவுரிராய பிள்ளை; பாளையங்கோட்டை; சர்ச் மிஷன் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. ஆகஸ்ட், 1911 ; iv. உ.ப. 41 ; v. 18×11 செ.மீ.; vi. 0–4–0 , vii. இச்சிறுநூலில் திருமண நிலைமையைப் பற்றியும், கருவுற்ற காலத்தில் ஆண் பெண் நடந்து கொள்ள வேண்டிய முறை பற்றியும், குழந்தைகளுக்குப் பால் முதலிய உணவுகளைக் கொடுத்துக் காக்க வேண்டிய முறைப் பற்றியும், சிறுவர்க் குண்டாகும் நோய்களின் காரணத்தைப் பற்றியும் விளக்கப்பட் டுள்ளது. பதினெண் சித்தர்களில் சிறப்புடைய கும்பமுனி, தேரையர், தன்வந்திரி முதலியோரது நூல்களைப் பின்பற்றி எழுதப்பட்டுள்ளதாக ஆசிரியர் குறிப்பிடுகிருர். viii. 521/1911/III.

L9C:4:6

## 627·825 நீர்முழ்கி

**வைத்தியநாத அய்யர், ஜி.**

1119. i. ஸப்மாரீன் அல்லது சமுத்திரத்திற்குள் செல்லும் கப்பல் : இரண்டாம் பதிப்பு ; ii. செயிண்ட் ஜோசப் இண்டஸ்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சி ; iii. 1915 ; iv. உ.ப. 8 ; v. 17×11 செ.மீ.; vi. 0–0–3 ; vii. நீருக்குள் மூழ்கிச் சென்று எதிரியின் கலங்களைத் தாக்கும் நீர்முழ்கிக் கலத்தின் அமைப்பும், இயங் கும் முறையும், கலங்களைத் தாக்கி அழிக்கும் வகையும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. viii. 129/1915/I.

D,5254

## 630 விவசாயம்

**அப்பாவு பிள்ளை, எம்., உடுமலைப்பேட்டை**

1120. i. சோளம்—அதன் வியாதிகள், வியாதிகள் வராமல் தடுக்கும் முறை : முதற் பதிப்பு ; ii. எம். அப்பாவு பிள்ளை, உடுமலைப் பேட்டை ; "ஹோ" அண்டு கம்பெனி, சென்னை ; iii ஜூலை, 1914 ; iv. உ. ப. 12 ; v. 18×13 செ. மீ.; vi 0–2–0 ; vii. சோளப் பயிருக்கு உண்டாகும் நோய்களும், அவற்றைத் தடுக்கும் முறைகளும் பற்றி விவரிக்கப்பட்டுள்ளன. ஆங்கில நூல்களில் உள்ள பயிர்களின் நோய்களைப் படித்தறிந்து, தமது பட்டறிவின் துணைகொண்டு எழுதிய நூல். இனியாப் புல்லைப் பற்றிய குறிப்பும் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. viii. 327/1914/III.

**ஆபரணம் பிள்ளை, வி. எஸ்.**

1121. **i.** நூதன விவசாய நூல்: முதற் பதிப்பு; **ii.** ஸ்ரீ லட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம்; **iii.** 1915; **iv** உ.ப.+ செ.மூ.ப. 48; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0-8-0; **vii.** தென்னிந்தியாவில் நடைமுறையில் இருந்து வரும் வேளாண்மை முறையையும், புதிய முறையில் சாகுபடி செய்வதனுல் விளையும் பயனையும் விளக்குவது. பயிர்த்தொழிலுக்குத் தொடர்பான சோதியத்திலுள்ள முக்கிய செய்திகளும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. பாட்டும் உரையுமாக இந்நூல் அமைந்துள்ளது. இப்போது இருக்கிற நஞ்சை நிலைமை, ஒற்றை நாற்று நட்ட நடவுக்கும், பத்து நாற்றுக்கள் சேர்த்து நடும் நடவுக்கும் இருக்கிற வேறுபாடு, வேளாண்மை நலம் முதலியன சிறப்பாகக் கவனிக்கத் தக்கவை. இவரது வேளாண்மை முறை பற்றிச் சிலர் எழுதிய பாராட்டு உரைகள் நூல் முதலில் இடம் பெற்றுள்ளன. **viii.** 353/1915/IV.

J

**நடேச பிள்ளை, ஏ., மாயவரம்**

1122. **i.** நெற்பயிர்: முதற் பதிப்பு; **ii.** ஏ. நடேசப் பிள்ளை, மாயவரம்; வாணி பூஷணம் பிரஸ், சென்னை; **iii.** ஏப்ரல்; 1913; **iv.** உ.ப. 1+20; **v.** 18×13 செ.மீ.; **vi.** 0-2-0; **vii.** நெற்பயிரிடுதலில் ஒற்றையலகு நடுதல் நல்ல விளைவைத் தருகின்றமையால் அது பற்றிய தமது அனுபவத்தை இவ்வாசிரியர் எழுதியுள்ளார். உழுதல், எருவிடல், விதைத்தல் நாற்றங்கால், நடுகை, அறுப்பும் கண்டு முதலும் இவ்வாறு பதின்மூன்று தலைப்புக்களில் நெற்பயிரிடுதலை விளக்கியுள்ளார். **viii.** 1/1913/III.

J

**பிரடரிக் நிச்கல்ஸன்**

1122A. **i.** ஜப்பான் தேசத்தில் செய்யப்படுகிற பயிர் வேலையைப் பற்றிச் செய்த பிரசங்கத்திலிருந்து எடுத்துக்கொண்ட குறிப்புக்கள்: முதற் பதிப்பு; **ii.** எச். ஹானிகர்; அமெரிக்கன் ஆர்க்காட்டு மிஷன் பிரஸ், ஆரணி; **iii.** அக்டோபர், 1912; **iv.** உ. ப. 8; **v.** 21×14; செ.மீ. **vi.** ......; **vii.** ஜப்பான் நாட்டில் செய்யப்படும் பயிர் வேலையைப் பற்றி விளக்கும் ஒரு நூல். கொத்துதல், எரு குவிப்புகள், மரங்களை வளர்த்தல், கூட்டுத் தொழில் செய்யும் சங்கங்கள் என நான்கு பகுதியாகப் பிரித்து விளக்கப்பட்டிருக்கிறது. **viii.** 940/1913/I.

J

**வெங்கட்ராமய்யர், டி. கே., பள்ளி அக்ரகாரம்**

1123. i. பூஸ்திதியை ஆளும் வழி: ii. டி. கே. வெங்கட்ட ராமய்யர்; தாரா பிரஸ், தஞ்சாவூர்; iii. 1915; iv. உ.ப. 75; v. 16×13 செ.மீ.; vi. 0–8–0; vii. நிலக்கிழார்கள் கைக்கொள்ள வேண்டிய 'பொது விதிகள்' பல இதில் அடங்கி யுள்ளன. பணியாட்கள், குத்தகைதாரர்கள், வாரச் சாகுபடி, சிற்றூர்கள் முதலிய பல்வேறு செய்திகளை விவரித்து உரைப்பது. viii. 224/1915/IV. J

1124. i. பூஸ்திதியை ஆளும் வழி; ii. டி. கே. வெங்கடராம அய்யர்; தாரா பிரஸ், தஞ்சாவூர்; iii. 1915; iv. உ.ப. 75; v. 17×13 செ. மீ.; vi. 0–8–0; vii. நிலக்கிழார்கள் தங்களுடைய நிலங்களைப் பாதுகாக்கும் வழிகளை இந்நூல் விளக்குகிறது. நிலச் சொத்து உள்ள ஒவ்வொருவரும் தங்கள் மற்ற வேலைகளோடு, தங்களுடைய பூமிகளை நேரில் பார்க்கத் தக்க முறையில் பண்படுத்தலின் இன்றியமையாமையை விளக்கி உரைப்பது. viii. 681/1915/III.

J

## 636 கால்நடை வைத்தியம்

**இராமசாமி ஐயர், டி. எஸ்.**

1125. i. மாட்டு வைத்திய போதினி: முதற் பதிப்பு; ii. டி. எஸ். இராமசாமி ஐயர்; விக்டோரியா அச்சுக்கூடம், மதுரை; iii. ஜூலை 1913; iv. உ. ப. 0; v. 22×14 செ மீ.; vi. 0–1–0; vii. கால்நடைகளுக்கு உண்டாகும் பல்வேறு நோய்களுக்கு ஏற்ற நாட்டு மருந்துகளைக் கூறுவது. பழைய ஏட்டுப் பிரதிகளிலிருந்து ஆராய்ந்து வெளியிடப் பெற்றது. viii. 236/1913/III.

Z311

**நெல்லையப்ப பிள்ளை, திருநெல்வேலி**

1126. i. காலி பரிபாலன சிகிக்ஷா தீபம் என்கிற மாட்டு வாகடம்: முதற் பதிப்பு [அசுவ சாஸ்திரம்]; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஜீவகாருண்ய விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. அக்டோபர் 1913; iv. உ.ப. 176+4; v. 18×11 செ.மீ.; vi. 1–4–0; vii. மாடுகளின் இலக்கணம் பற்றியும், அவற்றைக் காக்கும் முறை பற்றியும் விவரிப்பது. மாடுகளுக்கு உண்டாகும் பலவகை நோய்களையும், அவற்றை நீக்கும் வகைகளையும் விளக்குவது. இந்நூலில் விவரிக்கப்பட்ட பொருள்களின் அட்டவணை இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 456/1913/IV.

KZ442

## 636.1 குதிரைகள்

**நெல்லையப்ப பிள்ளை, திருநெல்வேலி**

i. *அசுவ சாஸ்திரம்* (தொ.எ.1126 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஜீவகாருண்ய விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. அக்டோபர், 1913 ; vi. உ. ப. 152+4 ; v. 18×11 செ. மீ.; vi. 1—4—0 ; vii. குதிரைகள் பிறப்பிடம் பற்றியும், அவற்றின் உறுப்பிலக்கணங்கள் பற்றியும் இந்நூலில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. குதிரைகளுக்கு உளதான நோய்களும் அவற்றிற்கான மருந்து வகைகளும் பொருளட்டவணையாக நூலின் இறுதியில் உள்ளது. "காலி பரிபாலன சிகிக்ஷாதீபம்" என்ற பெயரும் இந்நூலுக்கு உண்டு. viii. 256/1913/ IV.

KZ442

## 641.5 குடும்பக்கலை

**அண்ணுசாமி ஐயர், டி.**

1127. i. *பல ஹாரங்கள் செய்யும் விவரம்* : முதற் பதிப்பு ; ii. பி, அருணசல செட்டியார், சென்னை ; வாணி நிலைய அச்சுக்கூடம். சென்னை ; ii. ஏப்ரல், 1914 ; iv . உ.ப.32 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. "பிராமணர்களுக்கும், வைசியர்களுக்கும், மற்றவர்களுக்கும் திண்பண்டங்கள் செய்வதற்கு வேண்டிய பொருட்களை விவரமாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு அச்சிடப்பட்டிருக்கிறது". என்று நூல் முதலில்குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. காலை உணவுக்கு இனிப்புப் பண்டங்கள் செய்யும் விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் விவரிக்கப்பட்ட பல திண்பண்ட வகைகளின் பெயர்களை வகைப்படுத்தி, தயிரால் செய்யப்படும் பண்டங்கள், கம்மனித் திண்பண்டங்கள், "பஜ்ஜிகள்" "லட்டு" வகைகள்,வடைவகைகள் முதலியனவைகள் செய்முறைகள் அகரவரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 359/1914/II.

M31

**பொன்னல், ஒய். ஜி., சென்னை**

1128. i. *குடும்ப நிர்வாஹ சாஸ்திரம்* : மூன்றும் பதிப்பு ; ii. ஒய். ஜி. பொன்னல், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1913 ; iv . உ.ப. 7+216 ; v. 18×12 செ. மீ.; vi. 0—8—0 ; vii. தொடக்க உயர்நிலைப்பள்ளிகளுக்கும், குடும்

பத்தை நடத்தும் இல்லாளுக்கும், நோயாளிகளையும், குழந்தைகளையும் பேணும் செவிலிகளுக்கும் துணை செய்வதன் பொருட்டு எழுதப்பட்டது. இதற்கு முன் வெளி வந்த இல்லாண்மை என்னும் நூல் எழுதிய பிராண்டர் துரைசாணிக்கும், சுகாதார விளக்கம் எழுதிய டாக்டர் தனக்கோட்டி ராஜூ என்பாருக்கும் ஆசிரியர் நன்றி செலுத்துகிறார். ''ஆரம்பம்'', ''சரீரம்'', ''வீடு'', ''ஆகாயம்'', ''ஜலம்'', ''போஜனம்'', ''போஜனம் சமைத்தல்'' ''சுகாதார விதிகள்'', ''வியாதி'', குழந்தைகளைப் பாதுகாத்தல்,, பிள்ளைகளைப் பயிற்றல், சிக்கனம் என்னும் பொருள்களைப் பத்ததிகாரங்களில் கற்பித்துள்ளார். படங்களுடன் கூடியது. பிற சேர்க்கையில் சில வகைப் திண்பண்டங்களும், உணவுகளும் தயாரிக்கும் வகைகளைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது. தனக்குத் துணை செய்த டாக்டர் ஜான்மர்டாக் என்பவருக்கு நன்றி கூறியுள்ளார். viii. 1062/1913/IV.

**M31**

**ராஜகோபால நாயுடு, பி.என்.**

1129. i. மரக்கறி ஆகாரப் பெருமை : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ கிருஷ்ண லாட்ஜ் தியோசபிகல் சொசைடி, சைதாப்பேட்டை ; விவேகானந்தா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1914 ; iv. உ.ப. 36 ; v. 22×12 செ. மீ.; vi. 0—1—0 ; vii. மரக்கறி உணவினால் ஏற்படும் நன்மைகளை விவரித்து எழுதப்பெற்ற கட்டுரையே இந்நூல். உணவுக்காக உயிர்க்கொலை புரிதல், ஊன் உணவு இரண்டும் கூடாதெனக் கடிந்துரைக்கப்பட்டுள்ளது. பற்பல எடுத்துக் காட்டுக்களுடன் தெளிவான முறையில்பொருளை விளக்குகின்றார் ஆசிரியர். viii. 598/1912/IV.

**M31**

**விஜயசிவசுகாநந்தாஜி சாயேப் (மொ.து.)**

1130. i. சிவேந்திர பாக சாஸ்திரம் ; முதற் பதிப்பு ; ii. டி.ஆர். மஹாதேவ பிள்ளை, தஞ்சை ; ஸ்ரீவித்தியா விநோதினி அச்சுக்கூடம், தஞ்சை ; iii. அக்டோபர், 1914 ; iv. உ.ப. 343 ; v. 22×14 செ. மீ. ; vi. 1—8—0 ; vii. இந்நூல் சமையற்கலையைப் பற்றி விளக்குகிறது. மராட்டிய மொழியினின்றும் மொழி பெயர்க்கப் பெற்றது. நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பெற்று, ஒவ்வொரு பிரிவிலும் ஒவ்வொரு வகைச் சமையலைப் பற்றிக் கூறப்பெற்றிருக்கிறது. தஞ்சை மகாராட்டிர அரச பரம்பரையாரால் கையாளப்பெற்று வந்த உணவு வகைகளை விளக்குகிறது. viii. 445/1914/IV.

**M31**

## 4 .4 தையற்கலை

**கோவிந்தசாமி முதலியார், டி. எம்.**

1131. i. தையற்காரனும் வெட்டுவோனும்: இரண்டாவது பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார் ; ரா. விவேகானந்தா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 29 ; v. 19 × 13 செ.மீ. vi. 0–4–0 ; vii. தையற்காரர்களுக்கு வேண்டிய இன்றியமையாத சில விதிகள் இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 23/1915/III.

M8

**மார்கோஷஸ் ஐயர் (மொ.து.)**

1132. i. ரேந்தாத் தையல்; முதற் பதிப்பு; ii. சி. ஜி. ஸ்டீவன்ஸன் அம்மையார்; சுதேசபிமானி அச்சுக்கூடம், சேலம்; iii. ஜூலை 1912; iv. உ.ப. 413; v. 21 × 14 செ.மீ.; vi............., vii. ஆங்கிலேய பாஷையில் ஈ. எஸ்.பி. ஸ்டீவன்ஸன் துரைசாமி என்பவரால் இயற்றப்பட்ட நூலின் மொழிபெயர்ப்பு. "தலையணைப் பின்னல் அல்லது ரேந்தாத் தையல்" என்பது இதன் முழுப்பெயர். பிறர் துணையின்றி, "சென்னை அரசினர் தலையணைப் பின்னல்" அல்லது "லேஸ்" கைத்தொழிற் தேர்வுகளுக்குப் போகிற மாணுக்கர்களுக்கு ஒரு துணையாக—வழிகாட்டியாயிருக்கத்தக்கதாக இச்சிறிய நூலை ஆக்கியுள்ளதாக ஆசிரியர் கூறுகிருர். viii. 600/1912/III.

M8

## 657.6 : கணிதம்

**நடேச ஐயர், கே.**

1133. i. கணக்குப் பரிசோதனை; ii. ஸ்டாண்டர்டு புக்ஸ் கம்பெனி; தஞ்சை; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர்; iii. 1915; iv. உ.ப. 240; v. 17 × 12 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நூல் எல்லாத் தொழிலிலுமுள்ள கணக்குகளையும், ஆய்வு செய்ய எளிய விதிகளையும், வருமான வரிக்கு வேண்டியவாறு கணக்குகளை எவ்விதம் எழுதவேண்டுமென்பதையும், தொழில் முறைப்படி அந்தக் கணக்கை எவ்வாறு எழுதி வரவேண்டும் என்பதையும் எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகின்றது. நமது நாட்டில் வைத்துவரும் கணக்கு முறையை எவ்வாறு மேனுட்டாருடைய முறைக்கு மாற்றுவது என்பதையும் தெளிவாகச் சொல்லியுள்ளார். நூல்களில் அடக்கக்கூடாத செய்திகளை அப்போதைக்கப்போது வெளியிட "வர்த்தகமித்திரன்" என்னும் பத்திரிகையும் வெளியிட ஏற்பாடு செய்துள்ளார் இந்த ஆசிரியர் என்றும் தெரியவருகிறது. 15 அத்தியாயங்கள் கொண்டது. viii. 617/1915/IV.

X8J

**669.95 உலோகம்**

1134. i. உலோகங்களின் உபயோகம்; ii. என். வெங்கட்டராயலு அண்டு சன்; கே. ஆர். பிரஸ், சென்னை; iii. 1915; vi. உ.ப. 18; v. 19×13 செ.மீ.; vi. 0–1–0; vii. இரும்பு, பொன், வெள்ளி, ஈயம், பாதரஸம் என்னும் உலோகங்களைப் பற்றி உரையாடல் முறையில் அமைந்த நூல். ஆசிரியர் இரு மாணவர்கள் கேட்கும் வினுக்களுக்கு விடை கூறு முகத்தான் உலோகங்களின் தன்மை, பயன் முதலியனவற்றை விளக்குகின்றுர். viii. 626/1915/III.

**E191**

**700 கலை**

**நல்லசுவாமி பிள்ளை, ஜே. எம்.**

1135. i. இந்தியக் கலையின் நோக்கங்கள்: முதற் பதிப்பு; ii. இந்தியன் சொசைடி ஆப் ஓரியண்டல் ஆர்ட், கல்கத்தா மெய்கண்டான் அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூன், 1914; iv. உ.ப. 48; v. 20×13 செ.மீ.; vi. 0–6–0; vii. டாக்டர் ஆர். கே. குமாரசாமி என்பவர் எழுதிய இந்தியக் கலையின் நோக்கங்கள் என்னும் ஆங்கிலப் பத்திரிகையின் தமிழ் மொழி பெயர்ப்பு. இந்தியக் கலையில் இந்தியர்களுக்கு மிக்க ஊக்கம் உண்டாக்கும் பொருட்டுக் கல்கத்தா பூர்வகலை இந்திய சங்கத்தாரின் முயற்சியில் இது எழுதப்பெற்றது. நடராஜர், புத்தர் உருவச் சிலைகளின் படமும் கொடுக்கப்பட்டுள்ளது. viii. 214/1914/III.

**N**

**741.29 சித்திரக் கலை**

**சுப்பிரமணி ஐயர், ஏ.**

1136. i. கரும்பலகைச் சித்திரம்: முதற் பதிப்பு; ii. ஏ. ஆர். நாராயணசாமி அய்யர், இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை iii. ஜூன், 19 1; iv. உ.ப. 8+42+26 படங்கள்; v. 24×18; செ.மீ.; vi. 0–12–0; vii. மாணவர்களுக்குச் சித்திரம் வரைதல் மிகவும் இன்றியமையாதது என்றும், அதனால் அவர்களுக்கு கண்பழக்கம், கைப்பழக்கம், கற்பனை ஆற்றல் முதலியன வளர்ச்சியுறும் என்றும் விளக்கியுள்ளார். பலவகை தொழில்களுக்கும் சித்திர அறிவு அடிப்படையாய் இருத்தலை விளக்கிக் காட்டி இருக்கிறுர். மாணவகர்ளுக்குச் சித்திர பாடத்தில் கற்பிக்க வேண்டிய செய்திகள் எவை என்பது பற்றி முன்னுரையில் விவரித்துள்ளார். பன்னிரண்டு பகுதிகளாக பிரித்து ஒவ்வொர் வகைக்கும் தக்க படங்கள் அமைத்து அவற்றிற்கு விளக்கங்களும் கொடுத்துள்ளார். viii. 746/1911/III.

**NP**

1137. i. கரும்பலகைச் சித்திரம்; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1914; vi. உ.ப. 56; v. 25×19 செ.மீ.; vi. 1-0-0; vii. இந்நூலில் கரும்பலகையில் சித்திரம் வரைவது பற்றி விளக்கப்பட்டுள்ளது. இயற்கைப் பொருள்கள், உயிர்ப்பிராணிகள் நில நூற் படங்கள், அறிவியற் பாட விளக்கப்படங்கள் முதலியன வரைவது பற்றி எடுத்துக் காட்டுகளுடன் விளக்குவது. viii. 474/1915/I.

NF

## 780 இசைக்கலை

### 784.0954 வாய்ப்பாட்டு: கீர்த்தனம்

**அச்சுதாநந்த ஸ்வாமி, எஸ்., சம்பத்சிரி**

1138. i. அத்வைத கீர்த்தனு நந்த லஹரி—இரண்டாம் பாகம்; முதற் பதிப்பு; ii. பி. சி. ஜானகிராம நாயுடு; அமெரிக்கன் டைமண்டு பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.எ. 150;v. 18×11 செ.மீ.; vi. 0-6-0; vii. அத்வைத வேதாந்த தத்துவத்தை விளக்கும் இசைப்பாடல்களின் தொகுதி பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக் கின்றன. மணிமங்கலம் திருவேங்கிட முதலியார், வயலூர் சபாபதி முதலியார் முதலிய பலர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 125/1912/I.

NR44

**அசனுத்தம்பி, மதுரை**

1139. i. மீனுக்ஷி திக்விஜய நாடக ரத்னுவளி: முதற் பதிப்பு; ii. கே. வெங்கடராமய்யர், மாயவரம்; ஸரஸ்வதி விலாஸ் அச்சுக்கூடம், மாயவரம்; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.ப. 136: v. 21×14 செ.மீ.; vi. 0-12-0 vii. இந் நூல் மீனுட்சியம்மை திக்கெட்டும் சென்று வெற்றிக் கொடி நாட்டி வந்ததைக் குறித்துப் பாடப் பெற்ற நாடகப் பாடல்களைக் கொண்டது. இது மதுரையில் மீனுட்சியம்மையார் தடாதகைப் பிராட்டியாராய் தோன்றி முடி சூடி, செங்கோலோச்சி வந் ததை விவரிக்கும் நூல். viii. 45/1915/I.

NR44

**அந்தோணிசாமி பிள்ளை அண்டு வேதமாணிக்கம், எஸ்.சி.**

1140. i. செங்கல்பட்டு சீர்திருத்தப் பாடசாலைப் பாடல்கள்: முதற் பதிப்பு; ii. சூப்பரிண்டெண்ட், ரிபர்மேட்டரிஸ் ஸ்கூல் செங்கல்பட்டு; இந்தியன் பிரஸ், செங்கல்பட்டு; iii. ஜனவரி, 1914; iv . செ.மூ.ப. 104; v. 24×15 செ.மீ.; vi.........;

vii. செங்கல்பட்டிலுள்ள "சீர்திருத்தப் பாடசாலை" மாணவர்கள் பாடுவதற்கு என இயற்றப்பட்டது. பள்ளிக்கூடத்தில் நிகழும் ஆண்டுவிழா, வேறு பல சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும் காலத்தில் பாடுவதற்குப் பயன்படுத்தப்பட்டது. இசைக் கருவிகளுடன் ஒத்திசைத்து பாடுவதற்கு இவை ஏற்றவை. பிள்ளைகளுக்கு எளிதான இராகங்களும், சில இசைப்பாடல்களும் இதில் குறிப்பிடப்பட்டுள்ளன. நூற்றெழுபத்திரண்டு இசைப்பாடல்கள் கொண்டது. ஒவ்வொரு பாடலுக்கும் கீழே இராக தாளக் குறிப்புகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 454/1914/I

NR44

**அப்பாஸாமி அய்யர், டி.எஸ்., திருநெல்வேலி**

1141. i. ஸங்கீத ஸ்வரப்பிரகாசினி: ii. டி. வி. வெங்கடேஸ்வர ஐயர், திருநெல்வேலி; ஸ்ரீ காந்திமதி விலாஸம் அச்சியந்திர சாலை, திருநெல்வேலி; iii. 1911; iv. செ.மூ.ப. 27; v. 24×14 செ.மீ.; vi. 0–5–0; vii. தமிழில் சிறந்த பக்திப் பாடல்களாகிய தேவாரம், திருவாசகம், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளிலிருந்து சில பாடல்களைத் தேர்ந்தெடுத்துச் சுரப்படுத்தி இருக்கிறார் ஆசிரியர். இராக தாளத்தோடு தெளிவாய்ச் சுரப்படுத்தி எழுதியிருப்பதால் 'ஹார்மோனியம்" 'பிடில்" வாசிப்போருக்கும் இது மிகவும் பயன்படும். viii. 304/1911/II.

NR44

**அபூபக்கர் ருவுத்தர், புலவர், புனலூர்**

1142. i. அறிவானந்தக் கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. வ.ச.மூ. மஸ்தான் சாகிபு, பிருநூர்; கோமதி விலாசம் அச்சுக்கூடம், தென்காசி; iii. நவம்பர், 1914; iv. செ.மூ.ப. 49; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; ii. இசுலாமின் பெருமையை விளக்கும் பக்திப் பாடல்கள். நபியின் அருட்செயல்களைப் போற்றிப் புகழ்வது. viii. 691/1914/IV.

NR44

**அருணாசலக் கவிராயர்**

1143. i. இராமாயண கீர்த்தனைகள்: முதற் பதிப்பு; [ஸ்ரீமத் இராமாயணம்–சுந்தர காண்டம்]; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம்; ஸ்ரீ கிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம்; iii. ஜனவரி, 1914 ; iv. செ.மூ.ப. 27; v. 16×11 செ.மீ.; vi. 0–4–0; vii. இராம நாடகம் என்னும் இசைப் பாடல் தொகுதியுள் சுந்தரகாண்டப் பகுதியில் உள்ள சில பாடல்கள் இதில் தெரிந்தெடுத்து கொடுக்கப்பட்டுள்ளன. இவை கம்பராமாயணத்தின் கதைப் போக்கைத் தழுவியவையாம் ஒவ்வொரு

இசைப் பாட்டிற்கும் பொருத்தமான தலைப்பும், இராக தாளக் குறிப்பும் தரப்பட்டுள்ள விருத்தக் கவிகளும் இடையிடையே உள. viii. 470/1914/I.

NR44

**அவரைக்கோட்டை சுவாமிகள்**

i. சங்கரமௌன சுவாமிகள் கீர்த்தனை: (தொ.எ. 1246 பார்க்க, முதற் பதிப்பு; ii. டி. தியாகராஜன்; நல்லோசனி பிராஞ்ச் அச்சுக்கூடம், திருவாரூர்; iii. ஏப்ரல், 1913; iv. செ.மூ.ப. 3 v. 14×11 செ.மீ.; vi. 0–0–3; vii. இவர் தஞ்சையில் பிறந்து கடைசியில் பரங்கி நகரில் பேசர்நோன்புடன் இறந்தவர். இக்குருவைத் துதிக்கும் மூன்று இசைப் பாடல்கள் இதில் உள்ளன. viii. 250/1913/II.

NR44

**அழகியசிங்க ரமனுஜ பாகவதர்**

1144. i. வரதாம்ருத மஞ்சரி: முதற் பதிப்பு; ii. கே. எம். துரைசாமி ரெட்டியார், குச்சிபாளையம், புஷ்பாலயாம்பா விலாஸ அச்சுக்கூடம், திருக்கோவிலூர்; iii ஜூன், 1914; iv. செ.மூ.ப. 16; v. 17×11 செ.மீ.; vi. இலவசம்; vii. வரதராஜ பெருமாளைப் புகழ்ந்து பாடப் பெற்ற துதிப் பாமாலை. இசைப் பாடல்களால் ஆனது. ராக தாளக் குறிப்புகள் ஒவ்வொருபாடலுக்கும்கொடுக்கப்பட்டுள்ளன.viii. 1124/1914/II.

NR44

**அஹமதலிப் புலவர் பி.அ., காயற்பட்டினம்**

i. சங்க சந்தக் கீர்த்தனம்(தொ.எ. 796 பார்க்க), முதற் பதிப்பு: ii செய்யது முகம்மது ஷம்சுத்தீன் சாயபு; ஷாஹுல் ஹமீதய்யா அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. செ.மூ.ப. 5; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. மகமூதுவைப் பற்றியும், முஹியித்தீனுண்வஹப் பற்றியும் காயற்பட்டினம் முத்துவாப்பா ஒலியுல்லாவைப் பற்றியும் புகழும் இசைப் பாடல்கள் கொண்டது. viii 454/1912/III.

NR44

**இராசப்ப முதலியார், சிவ. வா., கரையேறவிட்டநகர்**

1145. i. சுந்தரேஸ்வரர் கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. டி. வி. உலகநாத முதலி, சென்னை; பிரஸிடென்ஸி பிரஸ், சென்னை; iii. மார்ச், 1911; iv. செ.மூ.ப. 2+6; v. 18×13 செ.மீ.; vi. இலவசம்; vii. சென்னை இராயப்பேட்டையில் திருக்கோயில் கொண்டிருக்கும் சுந்தரேஸ்வரரைக் குறித்த பாடல் சாதாரண

ஆண்டு தைத் திங்கள் இருபத்தெட்டாம் நாள் ஷ்டி திருக்கோயில் குடமுழுக்கு திருநாளன்று அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. viii. 835/1911/I.

NR44

**இராமசாமய்யர், என் , மதுரை**

1146 i. சதாசிவநாம சங்கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. மு. சீதாராமய்யர் & இராமசாமய்யர், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. டிசம்பர், 1913; vi. செ.மூ.ப 8; v. 20×14 செ.மீ.; vi. 0–0–6; vii. சதாசிவனைக் குறித்த புகழ்மாலை. பல்வேறு வர்ண மெட்டுகளில் அமைந்தவை இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகளும் அமைந்துள்ளன. viii. 59/1914/I.

NR44

**இராமசாமி பிள்ளை, பி·ஏ., பாம்பூர்**

1147. i. ஹரிராம நாம சங்கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. பி. ஏ., இராமசாமி பிள்ளை, பாம்பூர்; மாணிக்கம் பிரஸ், பரம்பக்குடி iii. பிப்ரவரி, 1913; iv. செ.மூ.ப. 30; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. இதன் ஆசிரியர் இராமநாதபுரம் மாவட்டம் பாம்பூர் எனும் சிற்றூரில் 1896 ஆம் ஆண்டு பிறந்தவர். அவ்வூரில் 1906 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 22 ஆம் நாள் சனிக்கிழமையன்று இவரது மாமனாரால் ''பஜனை'' ஏற்படுத்தப் பெற்று நடந்து வந்தது. இந்த பஜனைகளில் பாடுவதற்காக இயற்றப் பெற்றதே இப்பாடல்கள். விநாயகர், கலைமகள், முருகன், திருமால் முதலியோரைக் குறித்த இசைப் பாடல்கள் இதில் உள்ளன பல வர்ண மெட்டுகளிலும், கண்ணி நாமாவளி என்னும் வகைகளிலும் இசைப் பாடல்கள் இதில் உள்ளன. இராக தாளக் குறிப்புக்கள் பாடல்கள்தோறும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 890/1913/I.

NR44

**இராமதாசர், இ. க.**

1148. i. ருக்மணி கல்யாணம்: முதற் பதிப்பு; ii. இ. க. இராமதாசர், லெக்ஷ்மி விலாச அச்சுக்கூடம், திருச்சி; iii. அக்டோபர், 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 16+79; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. கண்ணன் ருக்மணியைத் திருமணம் செய்து கொள்ளும் நிகழ்ச்சியை விவரிப்பது. இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அகவல், விருத்தம் முதலிய பாடல் வகைகளும் இடையிடையே உள்ளன. viii. 66/1911/IV.

NR44

**இராமலு செட்டி, பி.எஸ்.**

1149. **i.** காந்தர்வ கல்பவல்லி ; முதற் பதிப்பு ; **ii.** சின்ன சிங்களாசாரியார், தச்சூர் ; இந்தியா பிரிண்டிங் ஓர்க்ஸ். சென்னை ; **iii.** அக்டோபர், 1912 ; **iv.** செ.மூ.ப. 16+148 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** 2–0–0 ; **vii.** ஆசிரியரின்றி இசையைக் கற்றுக் கொள்ளுதற்கு இயற்றப்பெற்றது. ஆங்கில, பார்ஸி, ஹிந்துஸ்தானி, ஜாளிகளையும், நந்தனார் வரலாற்று இசைப்பாடல்கள் சிலவற்றையும் இதில் சேர்த்துள்ளார். ஆசிரியர், தமது முகவுரையில் 'ஸ்வரம் ஸ்தாயி இராகம், கமகம், தாளம், தாள ஜதிகள், சாதக போதினி, மேளகர்த்தாக்கள் பார்ஸிப் பாட்டுக்களின் ஸ்வர சங்கேத பத்ததிகள் ஆகியவற்றை விவரித்துள்ளார். பம்மல் சம்மந்த முதலியார் தமது முகவுரையில் இசையின் சிறப்புக்களையும், இந்நூல் பெண்கள் எளிதில் இசை கற்றுக் கொள்ளப் பயன்படும் என்றும் குறிப்பிட்டுள்ளார்.
**viii.** 397/1912/IV. **NR 44**

**எலிபேசர் ஜார்ஜ், டி.**

1150. **i** ஆர்மோனிய சுரஞான சுய போதினி ; முதற் பதிப்பு; **ii.** ஜார்ஜ், டி. எலியேசர், ஸ்ரீ கபாலீஸ்வரர் அச்சுக்கூடம் ; சென்னை ; **iii.** டிசம்பர், 1912 ; **iv.** செ.மூ.ப. 3+62+56 **v.** 25×17 செ.மீ ; **vi.** 2–0–0 ; **vii.** இது பிறர் துணையின்றி ஆர்மோனியம் கற்றுக் கொள்வதற்குத் துணையாக இருக்கும் சுரபேதங்களின் இயல்புகளை முதலில் விளக்கி, பின் ஆர்மோனியத்தின் பற்களை விரலால் அழுத்தி வாசிக்கும் முறைகளையும் விளக்குகிறது. சர வரிசைகள், சப்த தாள அலங்காரம் லக்ஷண கீதங்கள், ஸ்வர ஜதிகள், தாள வர்ணங்கள் ராகமாலிகா வர்ணம் ஆகியவற்றை படம் மூலம் விளக்கியுள்ளார். எடுத்துக்காட்டாக 'எந்த வேடு கொண்டு, முதலிய 30 இசைப் பாடல்கள் சுரப்படுத்திக் காட்டப்பட்டிருக்கின்றன.
**viii.** 168/1913/I.

**NR 44**

**கந்தசாமிப் பிள்ளை, ச.மு.**

1151. **i.** இராமலிங்கசுவாமிகள் திவ்ய பாதார்சனைக் கீர்த்தனைகள் : முதற் பதிப்பு ; **ii.** ஸத்யஞான ஸரஸ்வதி யதிகள் ; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர் ; **iii.** மார்ச், 1912 ; **iv.** செ.மூ.ப. 14 ; **v.** 18×11 செ.மீ ; **vi.** 0–1–0 ; **vii.** திருவருட் பிரகாச வள்ளலார் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளின் துதியாக அமைந்த இசைப் பாடல்களைக் கொண்ட நூல். பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. **viii.** 130/1912/III.

**NR 44**

**க்லியாணசுந்தரம் பிள்ளை**

1152. i. இந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனை—முதற்பாகம் : முதற் பதிப்பு ; ii. இ.மா. கோபால கிருஷ்ணக்கோன். மதுரை ; ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சியந்திரச்சாலை, திருமங்கலம் ; iii. அக்டோபர், 1913 ; iv. செ.மூ.ப. 40 ; v. 21× 14 செ.மீ ; vi. 0–2–0 ; vii. சிவசுப்பிரமணியக் கடவுள் மீது புதுமையாக பாடப்பட்ட பாடல்களின் தொகுதி இந்துஸ்தான் வர்ண மெட்டுக்களில் பஜனைகளுக்குரிய பக்தி சுவைமிகு பாடல்களும், சிறந்த திருப்புகழ்ப் பாடல்களும், பார்ஸி இந்துஸ்தான் பாடல்களும் பல அமைந்துள்ளன. இந்தப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் உள்ளன. viii. /679/I91I.

NR44

1153. i இந்துஸ்தான் பஜனை—இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. கோபாலகிருஷ்ணக்கோன் ; மகமதியன் பிரஸ், மதுரை ; iii. செப்டம்பர் 1914 ; iv. செ.மூ.ப. 52 ; v. 22× 14 செ.மீ ; vi. 0–2—0; vii. சிவசுப்பிரமணியக் கடவுள்மீது சிறப்பான திருப்புகழ்ப் பாடல்களும் பார்ஸி, இந்துஸ்தான் வர்ணமெட்டுகளும் கொண்ட சிறிய நூல். இதில் கண்ட வர்ண மெட்டுக்கள் மதுரை தெய்வேந்திரபட்டர் மீனாட்சிசுந்தரம்மையார் முதலியோர்களிடமிருந்து தெரிந்து கொண்டவையாகும். viii. 1177/1911/III.

NR 44

1154. i. பாசுரசங்கீர்த்தனப் பதங்கள் ; முதற் பதிப்பு ; ii. எம்.கே. சந்தானகிருஷ்ணகோனார், மதுரை ; ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, திருமஙகலம் ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.ப. 40 ; v. 21× 14 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. பரமகுரு பாலஷண்முகக் கடவுள் மீது ‘பார்ஸி நூதன இந்துஸ்தான் திருப்புகழ், சிந்து முதலிய நாடக வர்ண மெட்டுகளடங்கிய பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii 204/1914/II.

NR 44

**கவிகுஞ்சர பாரதி, பெருங்கரை, சிவகங்கை,**

1155. i. பேரின்பக் கீர்த்தனங்களும் பதிகங்களும் : முதற் பதிப்பு ; ii. என் கோடீஸ்வரய்யர், ஸ்காட்டிஷ் பிரஸ் சென்னை ; iii. ஏப்ரல், 1915 ; iv. செ.மூ.ப.117; v. 22× 14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. சைவ வைணவ தெய்வங்களைப் போற்றித் துதித்து வணங்கிடும் பக்திப் பாடல்களின் தொகுப்பு. பாடல்கள் பலவகையான இசை வர்ண மெட்டுகளுக்குப் பொருந்தும் வகையில் அமைக்கப் பட்டுள்ளன. ஒரு சில பதிகங்களும் நூல் இறுதியில் உள. viii. 360/1915/II.

NR 44

1156. i. ஸ்காந்த புராண கீர்த்தனை—முதற்பாகம் (சம்பவ காண்டம்) முதற் பதிப்பு; ii. என். கோடீஸ்வரய்யர், சென்னை; ஸ்காட்டிஷ் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1914; iv. செ.மூ.ப. 3; v. 22×15 செ.மீ.; vi. 0–2–0; vii. வடமொழியியல் வாத ராயணர், சூத் முனி வருக்கு முருகக் கடவுளின் பெருமையை உரைப்பதாகத் தெரியவருகிறது. இவரைப் பின்பற்றிப் கச்சியப்பக் குருக்கள் விருத்தப்பாவில் தமிழ்க் காவியமாய்ச் செய்தார். இப்பெரியார்களின் நூலைத் தழுவியே இசைப் பாடல்கள் இயற்றப் பட்டுள்ளன பாடல்களுக்கு இராகத் தாளக் குறிப்புகள் உள்ளன கதைப் போக்கினை விளக்கும் தலைப்புக்களும், உரைக் குறிப்புகளும் விருத்தப் பாடல்களும் இடையிடையே உள்ளன. viii.601/1914/II.

NR 44

1157. i. ஸ்காந்த புராண கீர்த்தனை 2–ம் பாகம் சம்பவ காண்டம் :—முதற்பதிப்பு; ii. என். கோடீஸ்வரய்யர், சென்னை; ஸ்காட்டிஷ் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1914; iv. செ.மூ.ப. 38; v. 23×15 செ.மீ; vi. 0–2–0; vii. 'சம்பவகாண்ட வரலாறு" இதில் முடிவடைகிறது. viii. 602/1914/II.

NR 44

1158. i. ஸ்காந்த புராண கீர்த்தனை 3–வது 4–வது பாகங்கள் அசுர காண்டம் :—முதற் பதிப்பு; ii. என். கோடீஸ்வரய்யர் சென்னை; ஸகாட்டிஷ் பிரஸ், சென்னை; iii. மார்ச் 1914, iv. செ.மூ.ப. 38 (75–112): v. 23×15 செ.மீ; vi. 0–2–0; vii. முருகனது தோற்றத்தின் பெருமைகளையும், சிறப்புக்களையும் கூறும் ஸ்கந்தபுராண வரலாற்றைப் பாடல்களில் அமைத்துத் தருவது இந்நூல். இடையிடையே கதைத் தொடர்பு விளங்க உரை நடையிலும் குறிப்பு கொடுக்கப் பட்டுள்ளது. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகளும் உள்ளன அசுரகாண்டம் பற்றிய வரலாற்றுப் பகுதி அமைந்துள்ளது. viii. 603/1914/II.

NR 44

1159. i. ஸ்காந்த புராண கீர்த்தனை—5–வது பாகம் : முதற் பதிப்பு; ii. என். கோடீஸ்வரய்யர், சென்னை; ஸ்காட்டிஷ் பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. செ.மூ.ப. 38; (113–150) v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. கந்த புராண வரலாற்றை இசைப் பாடல்கள், விருத்தங்கள், வெண் பாக்கள். ஆகிய பாக்களினுல் தருவது இந்நூல். இந்த 5–வது பகுதியுடன் அசுர காண்ட கதைப் பகுதி முற்றுப் பெறுகிறது. கதைத் தொடர்ச்சி விளங்க பாடல்களுக்கு இடையிடையே உரைநடையிலும் குறிப்பெழுதப்பட்டுள்ளது. viii. 800/1914/II.

NR 44

**காளிந்திதாஸ ஸ்வாமிகள், கோவை.**

1160. i கோவிந்த நாமசங்கீர்த்தனம் முதற் பதிப்பு; ii. ஆர். பூபதி பழனியப்ப நாயகர், கோயமுத்தூர், கிருஷ்ண விலாச அச்சாபீஸ், கோயம்புத்தூர்; iii. அக்டோபர். 1912; iv. செ.மூ.ப. 24; v. 22×14 செ.மீ. vi. 0–1–6; vii. திருப்பதி சீனிவாசப் பெருமாள் பேரில் பாடப்பெற்ற இசைப் பாடல்களின் தொகுதி. இசைப்பாடல்களுடன் சிந்து காவடிச்சிந்து மெட்டுப் பாடல்களும் வேறு சில வர்ண மெட்டுப் பாடல்களும் இதில் உள்ளன. பாடல்களுக்கு இராகதாள குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 256/1953/I. NR 44

**கிருஷ்ணசாமி அய்யங்கார், ஏ. கே.**

1161. i. சீதா கல்யாணமங்களம்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீநிவாஸா சாரியார், திருமலை; லெக்ஷ்மிவிலாசம் பிரஸ், சாத்தூர்; iii. ஜூலை, 1911; iv. செ.மூ.ப. 1+115+1 (117); v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. இராமர் சீதாதேவியை மணந்த நிகழ்ச்சியை விவரிக்கும் நூல் தெலுங்கும் தமிழும் விரவிய நடையில் அமைந்த பாடல்களைக் கொண்டது. viii. 401/1911/III.

NR44

**கிருஷ்ணதாசர், க. வே.**

1162. i. இராமாயணக்கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. க.வே. கிருஷ்ணதாசர்; ஸ்ரீலட்சுமிநாராயண விலாசம் பிரஸ், சென்னை iii நவம்பர், 1911; iv. செ.மூ.ப. 16; v. 14×11 செ.மீ.; vi.................vii. இராமாயணத்தின் கருத்தைத் தெரிந்து கொள்ளவும் பஜனையில் பாடுவதற்குமாக ஒரே பாடலாக ஆசிரியர் செய்துள்ளார். இராக தாளமும் இதற்குக் குறிக்கப்பட்டிருக்கிறது. இராகம் தெரியாதவர்கள் இதனைத் தேவாரமாகவும், அகவலாகவும், விருத்தமாகவும் பாடிக்கொள்ளலாம் என ஆசிரியர் கூறியுள்ளார். இராமாயணக் கதை நிகழ்ச்சிகளெல்லாம் நிரல்பட கூறப்பட்டுள்ளன. இறுதியில் உள்ள 'ஆஞ்சநேயர் இராமாயணம்' என்னும் பாடல் அனுமானது சிறப்புக்களை வெளியிடுகிறது. viii. 902/1911/IV.

NR 44

**கிருஷ்ணம்மாள், கல்லிடைக்குறிச்சி**

1163. i. ஸ்ரீ மஹாபக்த விஜயம்; ii. கிருஷ்ணம்மாள்; வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. செ.மூ.ப. 168; v. 22×14 செ.மீ.; vi. 1–8–0; vii. பல்வேறு பக்தி நெறியைப் பற்றிப் பாடிய தொகுப்பு நூல்; 'ஞானேசுவர சரித்திரக் கீர்த்தனைகளும்" பக்தி வைராக்கிய சித்ஸுகோதய ஸூத் கீர்த்தனைகளும்' இதில் உள்ளன. viii. 103/1915/II.

NR 44

கிருஷ்ணமாச்சாரியர், வி. எம்., கிடாம்பி.

1164. i. ஹரிபஜனை கீர்த்தனை ; முதற்பதிப்பு ii. வி.எம்.கிருஷ்ண மாச்சாரி, கிடாம்பி மணி கேதான அச்சுக்கூடம், வேலூர் ; iii. பிப்ரவரி, 1901 ; iv. செ.மூ.ப. 12 ; v. 14×11செ.மீ. vi. 0-0-6 ; vii. திருமாலைப் பற்றிய பல்வேறு ராகங்களில் பாடித் துதிக்கக்கூடிய பக்திப் பாடல்களைக் கொண்டது இந் நூல்; viii. 570/1911/I.

NR44

கிருஷ்ணவேணி அம்மாள்

1165. i. சாவித்திரி சரித்திர கீர்த்தனம் : முதற் பதிப்பு ; ii. இரத்தினவேலு முதலியார், ஈக்காடு, புஷ்பால அப்பாய் நாயுடு ; பூலோக வியாசன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச்சு, 1912, iv. செ. மூ. ப. 16+83; v. 22×14 செ. மீ. vi. 0-8-0; vii. இந்நூல் சாவித்திரி வரலாற்றை உரையிடையிட்டு இயலிசைத் தமிழால் விரிவாக உரைக்கின்றது. திரி சொற்கள் கலவாமல் இயற்றப்பெற்றது சாவித்திரி என்பாள் தனது கற்பின் பெருமையால் கூற்றுவனை வென்று தனது கணவனை அடைந்தாள். இதனை விரோதிகிருது ஆண்டு பங்குனித்திங்கள் 13-ஆம் நாள் (25—3—1912) திங்கட்கிழமையன்று சென்னையில் அரங்கேற்றம் செய்தார். கிருஷ்ணசுவாமி தொட்டாச்சாரியர், திருமழிசை அப்பளாச்சாரியர் முதலிய பலர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 965/1912/I.

NR44

குருநாத சாஸ்திரி, சா. தம்.

1166. i. திருப்பேரூர் நடன சபாபதி ஸ்தோத்திரரத்தினம் : முதற் பதிப்பு ; ii. சா. தம். குருநாத சாஸ்திரி & கோ., உச்சயகவுடர்; சரஸ்வதி விலாசம் பிரஸ், கோயமுத்தூர் ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 8 ; v. 25×13 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இது கோயம்புத்தூர் அடுத்த பேரூர் என்னுமிடத்தில் விளங்கும் நடனசபாபதியைக் குறித்த துதி. நடேசர் துதியான இசைப் பாடல்கள், ஆனந்தக் களிப்பு ஆகியவை இதில் உள்ளன. viii. 193/1912/I.

NR44

1167. i. மருதமலை சிவசுப்பிரமணியர் மனிதவருள் கீர்த்தனை தோத்திரப் பதிகம் ; முதற் பதிப்பு ; ii. தா. நாராயண கவுடர் ; சரஸ்வதி விலாச பிரஸ், கோயமுத்தூர் ; iii. ஏப்ரல் 1912 ; iv. செ.மூ.ப. 19 ; v. 21×14 ; செ.மீ. vi. 0-2-0 ; vii. மருதமலையில் கோயில் கொண்டு விளங்கும் முருகப்பெரு மானைப் பற்றிய புகழ்ப் பாமாலையின் பாடல்களுக்கு இரா

தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இறுதியில் மருதகரி கந்தசாமி பெயரில் பஞ்சரத்னம் என்னும் சிறு நூலும் உள்ளது. viii. 258/1912/II.

NR44

**கொற்றுள நாடார், கொ. பெ.**

1168. i. கீதப்பிரஞ்ஞாமிர்தம்: முதற் பதிப்பு ii. கொ. பெ. கொற்றுள நாடார், அம்மைய நாயக்கனூர்; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலை மதுரை; iii. டிசம்பர் 1914; iv. செ.மு.ப. 36; v 20×14; செ.மீ.; vi. 0-2-0; vii. வேலாயுதக் கடவுள்மீது புதிய இந்துஸ்தான் இசைகளும் வர்ண இசைகளும். நாடக இசைகளும் ஆக அமைந்தது இந்நூல். ஒவ்வொரு பாடலுக்கும் உரியதாக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 64/1915/1.

NR44

**கோபால உபாத்தியாயர், மு. க.**

i. கதிர் வேலாயுதக் கடவுள் ஓரடிக் கீர்த்தனை; முதற் பதிப்பு; (தொ. எ. 1597 பார்க்க); ii. மு. க. கோபால உபாத்தியாயர்; ராமசந்திர விலாசம் பிரஸ் மதுரை; iii. டிசம்பர் 1911; iv. செ.மு.ப. 5; v. 21×15 செ.மீ.; vi. 0-5-0; vii. கதிர்காமத்தில் விளங்கும் வேலாயுதக் கடவுளை குறித்த துதி. கதிர்காம மலையின் சிறப்பை விளக்கும் பாடல் ஒன்றும் இதனுள் உள்ளது. viii. 2/1912/1.

NR44

**கோபாலகிருஷ்ண பாரதியார்**

1169. i. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை [சிதம்பரக்கும்மி நடராஜப் பத்து பஞ்சாட்சர மகிமை ஜோதிமயம்]; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்ட் கம்பெனி; மினர்வா பிரஸ், சென்னை; iii. 1915; iv. செ.மு.ப. 190; v. 21×15 செ.மீ.; vi............; vii. மாபெரும் சைவ இலக்கியமாகிய பெரிய புராணத்தின்கண் உள்ள நந்தனார் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவது இந்நூல்; லாங்க்மன்ஸ் கம்பெனியார் வெளியிட்ட "கீர்த்தனைக் கொத்து" வரிசையில் இது இரண்டாவது மலர் ஆகும்; சித்திரப்படப் பதிப்பு; நந்தனார் வரலாற்றுத் தொடர்புள்ள ஐந்து படங்கள் இடம் பெற்றுள்ளன. நந்தனார் வரலாறு உரைநடையிலும் தரப்பட்டிருக்கிறது. பாடல்களைப் பாடிய ஆசிரியர் கோபால கிருஷ்ண பாரதியாரின் வரலாறும் இதில் உள்ளது. இந்நூலை ஆசிரியர் வாழ்ந்த காலத்திலேயே சீசய்யா துரை என்பார் அச்சிட்டு வெளிப்படுத்தினர் என்பர். இதன் பின் இணைப்பாக சிதம்பரக் கும்மி நடராஜப் பத்து பஞ்சாட்சர மகிமை ஜோதி மயம் என்னும் சில கவிதைப் பகுதிகளும் உள. viii. 117/1915/IV.

NR44

கோவிந்தசாமி சுவாமிகள், மு.ஆ.வ.

1170. i. உண்மை நிலைக் கீர்த்தனை: இரண்டாம் பதிப்பு; ii மு. ஆ. வ. கோவிந்த சுவாமிகள், நாகப்பட்டினம்; நீல லோசனி பிரான்சு அச்சுக்கூடம் திருவாரூர்; iii. செப்டம்பர் 1913; iv. செ.மூ.ப. 92; v. 19×11 செ.மீ.; vi. 0-2-0; vii. குருவை அடைந்தவர் தன்னை அறிவர் தலைவனை அறிவர், தன்னுள் குருவோடு கூடுவர் என்னும் உண்மையை விளக்கிக் காட்டுவன இப்பாடல்கள். இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இருபத்தொன்றுவதாக அமைந்த புதிய சிந்து மெட்டில் அமைந்த கண்ணிகளும், வேறு சில பாடல்களும், பட்டினத்தார், வரதுங்கராம பண்டிதர் முதலிய முன்னையோரின் கருத்துக்களைப் பின்பற்றியவை. 'பிறக்கும் பொழுது நாம் கொண்டு வந்தது என்ன பேசிடுவோம் நெஞ்சமே' முதலிய கண்ணிகள் உண்மை நிலை உணர்வை வலியுறுத்திக் கூறுகின்றன. மதுரை வர்மா, தி. மு. ஆதமு ஸாஹிப் முதலியோர் பலர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்கள். viii. 76/1913/IV.

**NR44**

கோனையாசெட்டியார், கோ.

1171. i. ஹரிஹரன் பஜனைக் கீர்த்தனை; முதற் பதிப்பு; ii. எஸ். எம். ஷண்முகம் பிள்ளை, மதுரை; ஸ்ரீ சாரதாம்பாள் அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1912; iv. செ. மூ. ப. 39; v. 21×12 செ.மீ.; vi. 0-1-6; vii. வாண மெட்டுக்களமைந்த ஹரிஹர நாம சங்கீர்த்தனம் என்னும் ஹரிஹரன் பஜனைக் கீர்த்தனை என்பது இதன் முழுப்பெயர்.; சிவனையும் விஷ்ணுவையும் துதிக்கும் இசைப் பாடல்கள் இதில் உள்ளன. கண்ணிகளாக அமைந்த பாடல்களும், பிற பாடல்களின் வர்ண மெட்டுகளில் அமைந்த பாடல்களும் இதில் உள்ளன. viii. 28/71912/IV.

**NR44**

கௌரி அம்மாள்

1172. i. வேலவன் கீர்த்தனைகள்; முதற் பதிப்பு; ii. கே. கைலாசம் அய்யர், சென்னை; வாணி பூஷணம் பிரஸ், சென்னை; iii. மே, 1914; iv. செ.மூ.ப. 88; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. திருச்செந்தூர் முருகப் பெருமானைக் குறித்துப் பாடிய துதிப் பாடல்களின் தொகுதி. ஆண்டு தோறும் திருச்செந்தூருக்குச் சென்று வரும் இந்த ஆசிரியை ஒரு சமயம் தமது கனவில் வேலவன் தோன்றி ஆணையிட இப்பாடல்களைத் தாம் பாடியதாக கூறுகிறார். பாடல்களுக்கு இராக தாள குறிப்புக்கள் அங்கங்கே தரப் பெற்றுள்ளன. ஆறுமுகப் பெருமான் திருவுருவப் படமும் இடம் பெற்றிருக்கிறது. viii. 1043/1914/II.

**NR44**

**சண்முகாச்சாரியார், கோ. தா.**

1173. i. அறிவானந்தக் கீர்த்தனும்ர்தம்; முதற் பதிப்பு; ii. கோ. தா. சண்முகாச்சாரியார், சென்னை; ஆர். விவேகானந்தா பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1913; ¼v. செ. மூ.ப. 25+50; v. 18×13 செ.மீ.; vi. 0-8-0; vii. சமயம் வேதாந்தம், அறம் பற்றிய நூற்றைம்பது பாடல்கள் கொண்ட இசைப் பாடலின் தொகுதி. ஒவ்வொரு பாடலுக்கும் அதன் கருத்தை விளக்கும் தலைப்பும், அதற்குரிய இராக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் அடங்கிய இசைப் பாடல்களின் அகராதி அட்டவணை நூல் முதலில் உள்ளது. தி. மு. வைத்தியலிங்க ஆசாரியார், கே. வடிவேலு செட்டியார் முதலியோர் பாடிய சிறப்புக் கவிகளும், வெங்கத்தூர் கணபதி சாஸ்திரியார் இயற்றிய வடமொழி பாடலும் இந்நூலையும் ஆசிரியரையும் புகழ்ந்துரைக்கின்றனர். viii. 21/1913/IV.

NR44

**சந்தியாகு சுவாமி**

1174. i. தேவஸ் தோத்திரக் கீர்த்தனைகள். எட்டாம் பதிப்பு; ii. ஜோசப் அய்யர்; செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரீஸ் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஆகஸ்ட், 1913; iv. செ.மூ.எ. 139; v. 21×12 செ.மீ.; vi. 0-5-0; vii. கிறித்தவர்களுக்குப் பயன்படும்முறையில் எழுதப்பெற்றது. பலர் கூடிக் கோவிலிலும், வீடுகளிலும் பாடிப் புகழ்வதற்குப் பயன்படக் கூடியது. இப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகள் உள்ளன. நான்கு பகுதிகளாக அமைந்துள்ளது இந்நூல். இவற்றுள் முறையே யேசுநாதரின் புகழ் பாடும் பாடல்கள், தேவமாதாவுக்கு ஸ்தோத்திரமான கீர்த்தனைகள், சம்மனசுக்களுக்கும், அர்ச்சியஷ்டவர்களுக்கும் பாடல்கள், கீர்த்தன சங்கீரணம் என்பனவாம். பாடல்களின் அகராதியும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. viii. 774/1913/III.

NR44

**சந்திரசேகரப் பிள்ளை ந.**

1175. i. விநாயகர் பேரில் கீர்த்தனங்கள்: ii. மு. சுந்தர முதலியார், காமக்கூர், முனியன் குடிசைத் தமிழ் பண்டிதர்; வித்தியாரத்திஞகர அச்சியந்திர சாலை, வேலூர்; iii. மார்ச் 1911; iv. செ.மூ.ப. 16; v. 12×11 செ.மி.; vi....... vii. விநாயகரைக் குறித்த துதிப் பாடல். இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சில புலவர்களின் சாத்துக் கவிகள் உள்ளன. viii. 829/1911/I.

NR44

சவுடப்ப செட்டியார், வல்லங்கி மாநகர்

1176. i. பழனி சுப்பிரமணியக் கடவுள் பேரில் சங்கீத ரச மஞ்சரி : முதற் பதிப்பு; ii. சவுடப்ப செட்டியார், வல்லங்கிமாநகர்; விக்டோரியா பிரஸ், பாலக்காடு சுல்தான்பேட்டை; iii. மே., 1914 ; iv. செ.மூ.ப. 1+18; v. 21×14 செ.மீ. vi. 0–1–0; vii. பழனி மலைமேல் விளங்கும் சுப்பிரமணியக் கடவுளைப் பற்றிய துதிப்பாட்டு. கண்ணி, காவடிச் சிந்து, ஆனந்தக் களிப்பு, ஒயில் கும்மி, ஊஞ்சல், தாலாட்டு மெட்டுகளில் அமைந்த பாடல்களும் இதில் உள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. வல்லங்கி சோ. அப்புக்குட்டி செட்டியார் இதற்குச் சாற்றுக் கவி பாடி யுள்ளார்; viii. 781/1914/II.

NR44

சாமிதாஸன், வே. சி., தூத்துக்குடி

1177. i. திருச்செந்தூர் சுப்பிரமணியர் பஜனைக் கீர்த்தனை : முதற் பதிப்பு ; ii. வே. சி. சாமிதாஸன், சச்சிதானந்தம் அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி ; iii. அக்டோபர், 1913 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21×13 செ.மீ.; vi. 0–1–0 ; vii. திருச் செந்தூர் முருகப் பெருமானைப் பற்றிய துதிப் பாடல்கள் அடங்கிய நூல். கண்ணி முறையில் அமைந்தது. பாடல்கள் பல புதிய இந்துஸ்தானி பார்சி முதலிய நாடக வர்ண மெட்டுக்களில் அடங்கியுள்ளன. "சந்தனம் திமிர்ந்தணைந்து" எனத்தொடங்கும் அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழ் பாடலும் இதன் இறுதியில் உள்ளது; viii. 407/1913/IV.

NR44

சிகாமணி, ஞா.

1178. i. இயேசு பகவான் பேரில் இன்பரசக் கீர்த்தனை . முதற் பதிப்பு ; ii. எம். பி. மஸ்கறிஞாஸ், தூத்துக்குடி; எஸ். பி. பிரஸ், தூத்துக்குடி ; iii. டிசம்பர்; 1914 ; iv. செ.மூ.ப. 12 ; v. 21×14 செ.மீ.; vi. . . . . . .; vii. ஏசுவின்மீது பாடப்பெற்ற துதிப்பாடல்களைக் கொண்டது. இந்திரசபா, இந்துஸ் தான் பார்சி முதலிய இசை வகைகளில் அமைந்த பாடல் கள் இதில் உள; viii. 162/1915/I.

NR44

சிவகாமிசுந்தரி அம்மாள்

1179. i. மீனாக்ஷி சுந்தரேசர் பேரில் பாட்டுகள் : முதற் பதிப்பு; ii. சிவகாமி சுந்தரி அம்மாள், தமிழ் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1912 ; iv. செ.மூ.ப. 20 ; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. மதுரை மீனாட்சி சுந்தரேசர் சிறப்புக்களைப் பேசும் இசைப் பாட்டு நூல். கும்மி, தாலாட்டு

கப்பல், காவடிச் சிந்து என்னும் வகைகளில் பாடல்கள் உள்ளன. மீனாக்ஷியம்மன் திக்கு விஜயம், மீனாக்ஷியம்மன் கப்பல், தாருகவனக்கும்மி, மீனாக்ஷியம்மன் தாலாட்டு, சுந்தரேசர் வலையல் விற்றது, நாரைக்கு முத்தி கொடுத்தது, சித்தர் சரித்திரம் என்னும் தலைப்புக்களில் திருவிளையாடல் செய்திகள் இசைப்பாட்டில் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 40/1912/IV.

**NR44**

**இன்னாச்சாமி ஆச்சாரியார், சி.**

1180. i. சிவசுப்பிரமணியக் கடவுள் பேரின்பரசக் கீர்த்தனை : முதற் பதிப்பு (குருபரகண்ணி முதல் நாமாவளித் திரட்டு முடிய ஐந்து நூல்கள்) ; ii. இ. ராம. குருசாமிக் கோனார், ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.எ. 16+100 ; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0 ; vii. திருப்பரங்கிரியில் எழுந்தருளிய சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் பாடப்பட்ட இசைப்பாட்டு. இராக, தாளங்களுடன் கூடியது. முருகனைப் பற்றிய துதி மிகுதியாக உள்ளது. இதனோடு குருபரக் கண்ணி, பஞ்சரத்தினத் திருப்புகழ், பிணி நீங்கு திருப்பதிகம், தோத்திர மஞ்சரி, நாமாவளித் திரட்டு என்னும் நூல்களும் அமைந்துள்ளன; viii. 60/1914/I.

**NR44**

**சீதாராமய்யர், டி. எம்.**

1181. i. கிருஷ்ணநாம சங்கீர்த்தனை — இரண்டாம் பாகம் : முதற் பதிப்பு ; ii. ஜானகிராம வேங்கிடகுப்பு பாகவதர் ; சேதுபதி அச்சுக்கூடம், மதுரை ; iii. டிசம்பர், 1911 ; iv. செ.மூ.எ. 23 ; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. இது திருமால் துதியாக அமைந்த இசைப் பாடல்களின் தொகுப்பு. பல வர்ண மெட்டுகளில் பாடல்கள் உள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் உள்ளன; viii. 486/1912/I.

**NR44**

1182. i. ஞானோதயம், பாகம்—1 : முதற் பதிப்பு ; ii. டி. எம். சீதாராமய்யர், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. மார்ச், 1914 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6 ; vii. இராமாயணக் கதையை உட்கொண்டு அமைந்த துதிப் பாட்டு. இராம மூர்த்தி, ஹனுமத் சங்கினி, கோபால நாயகி சுவாமி, டி. எம். சீதாராம், க. வெ. வெங்கடரமண பாகவதர் ஆகியோரின் இசைப் பாடல்கள் இதில் உள்ளன. இவை சௌராட்டிர மொழியில் அமைந்தனவாகும்; viii. 1115/1914/I.

**NR44**

1183. i. ஞானோதயம்—பாகம்-2: முதற் பதிப்பு; ii. முத்துசாமி பாகவதர் (ஹோசநிறு) வெங்கடராம சாஸ்திரியார் & சாரங்க பாணி பாகவதர்; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. மார்ச், 1914; iv. செ.மூ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. 0-0-6; vii. திருமாலைப் புகழ்ந்து பாடும் பாடலின் தொகுதி. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் அடங்கிய பாடல்கள் யாவும் தெலுங்கு முதலிய பிற மொழிகளில் அமைந்தனவாம்; viii. 1116/1914/I.

NR44

சுந்தர முதலியார், மு.

1184. i. நால்வர்கள் மீது கீர்த்தனங்கள்: திருந்திய 2-ம் பதிப்பு; ii. மு. சுந்தர முதலியார், காமக்கூர், சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர்; iii. நவம்பர், 1914; iv. செ.மூ.எ. 25; v. 22×14 செ.மீ.; vi. 0-2-0; vii. சைவப் பெரியார்கள் நால்வர் மீதும் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது இந்நூல்; viii. 458/1914/IV.

NR44

சுந்தர ராஜஸ்வாமிகள்

1185. i. பரத சங்கீத ஸ்வய போதினி: முதற் பதிப்பு; ii. சுந்தர ராஜ சுவாமிகள்; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1912; iv. உ.ப.+செ.மூ.ப. 5+414; v. 25×19 செ.மீ.; vi. 4-0-0; vii. இசைப் பயிற்சிக்கு முதல் முதல் வேண்டிய நாமக்குறி, ஸ்தாயிகள், ஸ்வரபேதா பேதங்கள், தாளவியல், அலங்கார லக்ஷணங்கள், கீதங்கள், பதவர்ணங்கள், கீர்த்தனங்கள் முதலிய பல செய்திகள் விவரிக்கப் பட்டுள்ளன. மேலும், பிடில் முதலிய எந்த இசைக் கருவிகளையும் வாசிக்க பயில முயல்வோர்க்கு வேண்டிய செய்திகளும் நுட்பமாயும் எளிதில் விளங்கும்படியாகவும் விவரிக்கப் பட்டிருக்கின்றன. இவற்றைப் பல ஆசிரியர்களின் நடையைக் கொண்டும், ஸங்கீத ரத்னாகரம், ஸங்கீத ஸர்வார்த்தஸார சங்கிரகம், இராகதர்ப்பணம், தானமஞ்சரி, வைணீக ராக வர்த்தனி, ஸ்வரமஞ்சரி, ஸ்வராவளி, காயகலோசனி, முதலிய நூல்களையும் தமிழில் பலர் எழுதிய வேறு அருமையான பல நூல்களின் பகுதிகளையும் அடிப்படையாகக் கொண்டு இந்நூல் இயற்றப்பெற்றதென ஆசிரியர் முகவுரையில் குறித்துள்ளார்; viii. 188/1913/I.

NR44

**சுப்பய்யா பாகவதர், பி. ஆர். எஸ்.**

1186. **i.** ஷண்முகாநந்த போதம் என்னும் கீர்த்தனம்: முதற் பதிப்பு ; **ii.** சுப்பராயர் ; ஷண்முக விலாச அச்சுக் கூடம், சேலம் ; **iii.** ஏப்ரல், 1915 ; **iv.** செ.மூ.ப. 16 ; **v.** 21×14 செ.மீ. ; **vi.** 0–2–0 ; **viii.** சுப்பிரமணியக் கடவுளைப் புகழ்ந்து போற்றித் துதித்தெழுதப்பெற்ற பக்திப் பாடல் களின் தொகுப்பு. இப்பாடல்கள் இராக தாளத்திற்கேற்ப அமைக்கப்பெற்றவைகளாகும். ஈரோடு தமிழ்ப் பண்டிதர் சுப்ப ராவ், சேலம் அழகிரிசாமிப் பிள்ளை, ஆகியோர் இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார்; **viii.** 205/1915/II.

**NR44**

**சுப்பிரமணிய சாஸ்திரி, எஸ்.**

1187. **i.** சுருதி நிர்ணயம்: முதற் பதிப்பு ; **ii.** டி. கே. பால சுப்பிரமணிய அய்யர், ஸ்ரீரங்கம், வாணி விலாஸம் பிரஸ், ஸ்ரீரங்கம்; **iii.** ஏப்ரல, 1914 ; **iv.** உ.ப. 30 ; **v.** 22×14 செ.மீ. ; **vi.** இலவசம் ; **vii.** இந்துப் பாடலில் உள்ள இனிமையை வ்விரிக்கும் ஓர் ஆராய்ச்சி உரையாகும். இசை யின் பிறப்பிடம் பற்றியும் இருபத்திரண்டு சுருதிகளைப் பற்றியும் விளக்குகிறது. ஐரோப்பிய இசையுடன் நம்நாட்டு இசையி லுள்ள ஒற்றுமையையும் எடுத்துக்காட்டுகிறது; **viii.**2 94/1914/II.

**NR44**

**சுப்பிரமணிய முதலியார், ஏ.**

1188. **i.** ரங்கநாதஸ்வாமி பேரில் கீர்த்தனையும் பிரமோற்சவச் சிந்தும்: முதற் பதிப்பு ; **ii.** சி. வி. நஞ்சப்ப கவுடர், கோயமுத்தூர், சரஸ்வதி விலாசம் அச்சுக்கூடம், கோயமுத் தூர் ; **iii.** ஜூலை, 1912 ; **iv.** செ.மூ.ப. 2+14 ; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–1–6 ; **vii.** கோயமுத்தூரையடுத்த மேலைத் திருப்பதி என்னும் காரமடை வெங்கடேசராகிய ரங்கநாத சுவாமி பேரில் பாடப்பெற்ற இசைப்பாடல்களைக் கொண்ட நூல். ரங்கசாமித் துதியான சில பாடல்கள் முதலில் உள்ளன. அண்ணாமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்திலிலுள்ள சில பாடல்களின் மெட்டுகளை ஒட்டிப் பாடிய சிந்து பாடல்கள் இதில் உள்ளன. அவ்வூரில் மாசித் திங்களில் நடைபெறும் திருவிழாவைப் பற்றிய செய்திகள் இதில் விவரிக்கப் பட்டுள்ளன; **viii.** 375/1912/III.

**NR44**

செய்யது முகம்மது ஆலிம் புலவர், ஹாபிலு, செ.மு, கீழக்கரை.

1189. i. கீர்த்தன மாலிகை: முதற்பதிப்பு; ii. பி.ச.க. வரிசை இப்ராஹீம், கீழக்கரை; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. மே, 1912; iv. செ.மு.ப. 24; v. 21×14 செ.மீ. vi. 0-3-0; vii. இறைவனைத் துதிக்கும் பல இசைப்பாடல்களின் தொகுதி. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 759/1912/II.

NR44

செல்லம்மாள், திருநெல்வேலி

1190. i. வேதாந்த சித்தாந்த சமரச கீர்த்தனை; முதற் பதிப்பு; ii. ராமலிங்கம் அய்யர், ராஜபாளையம், தாம்ஸன் அண்டு கோ, சென்னை; மினெர்வா அச்சியந்திரசாலை, சென்னை; iii. செப்டம்பர், 1913; iv. செ.மு.ப. 7+532; v. 22×14 செ.மீ.; vi. 2-0-0; vii. சிறுவரும் எளிதில் அறிந்துகொள்ளும்படி இனிய செந்தமிழ் நடையில் அமைந்தது. கும்மி, சிந்து, கீர்த்தனை, கண்ணிகள் என்னும் பாடல் வகைகளைக் கொண்டது. முப்பது ஆண்டு காலமாக வெளிப்படுத்தாமல் இருந்த இக்கவிதைகள் நண்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்கத் தொகுத்துப் பதிப்பிக்கப்பட்டன. தெய்வத் துதிப்பாடல்களே மிகுதியாக உள்ளன. இறுதியில் அமர்நீதி வரலாறு, சோமயாஜி வரலாறு, திருநீலகண்ட வரலாறு, மார்க்கண்டேயர் வரலாறு எனனும் நான்கு வரலாற்று இசைப்பாடல்கள் உள்ளன. எல்லா இசைப் பாடல்களுக்கும் இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 377/1913/IV.

NR44

சேசாச்சலம் நாயுடு, வி.

1191. i. கண்ணபிரான் பிருந்தாவன மஹோற்சவ கீர்த்தனை: முதற்பதிப்பு; ii. வி. சேசாசலம் நாயுடு; உதகமண்டலம்; கமர்ஷியல் பிரஸ், உதகமண்டலம்; iii. அக்டோபர், 1914; iv. செ.மு.ப. 10; v. 23×15 செ.மீ.; vi. இலவசம்; vii. கண்ணனைப் புகழ்ந்து பாடப் பெற்ற பக்திப் பாடல்கள் கொண்டது இந்நூல். viii. 518/1914/IV.

NR44

சையதிமாம் ஸாகிபு, திரிசிரபுரம், உறையூர்

1192. i. பேரின்ப நவரச கீர்த்தனாமிர்தம்: முதற் பதிப்பு; ii. சையதிமாம் ஸாகிபு; காஸ்மாபாலிடன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1911; iv. செ.மு.ப. 1; v. 21×14

செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** குணங்குடி மஸ்தான் ஷாஹிபு பொலியவர்கள் மீது பாடப்பெற்ற இசைப் பாடல்களின் தொகுதி. தனது கடைசிக் காலங்களில் இப்பெரியார் சென்னை இராயபுரத்தில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. **viii.** 656/1911/III.

NR44

**தனசாமி செட்டியார், தி. இரா.**

**1193.** i. தனசாமி பாமஞ்சரி : **ii.** ஞானய்ய செட்டியார், பெங்களூர் ; மெர்குரி பிரஸ், சென்னை ; **iii.** நவம்பர், 1911 ; **iv.** செ.மூ.ப. 4+115+3 ; **v.** 20×13 செ.மீ.; **vi.** இலவசம்; **vii.** இதன் ஆசிரியர் மைசூர் உயர்நீதிமன்றத்தில் துணைப் பதிவாளராக இருந்தவர். இவர் தமிழ்க் கல்வியிலும் இசையிலும் நிரம்ப பற்றுக் கொண்டவர். தமக்குக் கிடைத்தமட்டில் மேற்படி பாடல்களைச் சேகரித்து இத் தொகுப்பில் தந்துள்ளார். ஏசுநாதரின் தோற்றம் பற்றிய பாடல்கள், தேவதாயாரின் பேரில் பாடல்கள், அர்ச். சவேதியார் லாசர், ஆரோக்கிய நாதர், தெரசம்மாள் என்னும் பெரியவர்களின்மீது பாடும் இசைப்பாடல்கள் இதன் முற்பகுதியில் உள்ளன. பிற்பகுதியில் திருமணப் பாக்கள், நலங்குப் பாடல்கள், கொம்மி கோலாட்டப் பாடல்கள், வாழ்த்துப் பாக்கள் ஆகியவை உள்ளன. சில பாடல்களுக்கு ஆசிரியர் பாடிய சூழலும் நாளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இறுதியில் இந்நூலாசிரியரைச் சந்தித்துப் பல வித்வான்கள் கூறிய கவிகள் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன. இவர், 19[illegible]9ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள் 14ஆம் நாள் இறையடி சேர்ந்தார். இவரைப் பற்றிய இரங்கற் பாக்களும் சில உள. **viii.** 469/1911/IV.

NR44

**தக்ஷிணஹிந்தியா ப்ராஹ்ம ஸ்மாஜ்**

1194. i ப்ராஹ்மோபாஸநாபத்ததி, ப்ராஹ்மகீதங்கள், பராமஹம்ஸ தோத்திரமாலை : **ii.** தென் இந்தியா பிரம்ம சமாஜம், பிரசிடென்சி பிரஸ், சென்னை ; **iii.** 1915 ; **iv.** செ.மூ.ப. 80; **v.** 16×12 செ.மீ.; **vi.** 0–1–6 ; **vii** 'ப்ரம்மோஜபங்களும்', மற்றும் பக்திப் பாடல்களும் அடங்கியுள்ளன. கடவுளை உள்ளத்தில் துதிக்கவேண்டும் என்பதே இச்சமாஜத்தின் முக்கிய கோட்பாடு. புகழ், வணக்கம், துதி, உண்மை அறிவுரை முதலிய பொருள்கள் பற்றிய துதிப்பாடல்கள் இதன்கண் உள. **viii.** 99/1915/IV.

NR44

**தியாகராஜ தேசிகர்**

1195. i. பெற்றான் சாம்பனார் சரித்திரக் கீர்த்தனம்; ii. சாம்ப மூர்த்தி அய்யர் அண்டு சி. ஜி. இராமாநுஜம் செட்டியார்; நிரஞ்சன விலாச அச்சியந்திரசாலை, சிதம்பரம்; iii. 1915; iv. செ.மூ.ப. 189; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. சைவப் பெரியார் பெற்றான் சாம்பனார் வரலாற்றை விளக்குவது இந்நூல், பெற்றான் சாம்பனார் தீண்டப்படாதவர் குலத்தினர், உமாபதி சிவாசாரியர் கருணையினால் தீட்டை பெற்று முத்தி பெற்றவர். புராணங்களுக்கும் நாடகத் தமிழுக்கும் பொருந்த நல்ல வர்ண மெட்டுகளுடன் இசைக்கலைப் பாகு பாட்டின்படி செய்யப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் பாடிய வேறு நூல்களைப் பற்றிய குறிப்பு நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. சாம்பமூர்த்தி ஐயர், சண்முகத்தம்பிரான், சோமசுந்தர தேசிகர் முதலியோர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 344/1915/IV.

NR44

**துரைசாமி ஆசாரி, வித்வான்**

1196. i. திருநீலகண்ட நாயனார் சரித்திரக் கீர்த்தனை: இரண்டாம் பதிப்பு; ii. அ. மஹாதேவ செட்டியார்; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1911; iv. செ.மூ.ப. 14; v. 17×13 செ.மீ.; vi. 0–1–0; vii. பெரிய புராணத்தில் வரும் திருநீலகண்ட நாயனார் வரலாறு இசைப்பாடல்களில் உள்ளது, பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 70/1912/I.

NR44

**துரைசுவாமி பிள்ளை, கா. கோ.**

1197. i. லக்ஷ்மி நாராயண ஹனும கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. கா. கோ. துரைசாமிப் பிள்ளை, மதராஸ் டைமண்டு அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூன், 1915; iv. செ.மூ.ப. 62; v. 18×13 செ. மீ.; vi. 0–3–0; vii. ஸ்ரீ இராமன் மீதும், சீதாபிராட்டியார் மீதும், அனுமன் மீதும் பாடப்பெற்ற பக்திப் பாடல்கள். இப்பாடல்களில் இசைக்கு முதலிடம் அளிக்கப்பட்டுள்ளது. பாடல்களுக்கு உரிய இராகத் தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 853/1915/II.

NR44

**தேவநாயக நாயக்கர், கீழமூங்கிலடி**

1198. i. திருமங்கையாழ்வார் வைபவம்: முதற் பதிப்பு; ii. கோவிந்த நாயக்கர் கீழ மூங்கிலடி & தேவநாயக நாயக்கர்; ஸ்ரீ பராங்குச விலாச அச்சுக் கூடம், சிதம்பரம்; iii. ஜனவரி,

1911; iv. செ.மூ.ப. 8; v. 13×11 செ.மீ.; vi. 0-0-3; vii. பன்னிரு ஆழ்வாருள் ஒருவராகிய திருமங்கையாழ்வார் வரலாறு பற்றிய இசைப் பாட்டு. viii. 131/1911/II.

NR44

**நஞ்சுண்ட சாஸ்திரிகள், காவேரிப்பட்டணம்**

1199. i. ஹிந்து பாலிகா கான போதினி: முதற் பதிப்பு; ii. நஞ்சுண்ட சாஸ்திரிகள்; ஷண்முக விலாஸம் பிரஸ், திருச்சி; iii. 1915; iv.....செ.மூ.ப. 105; v. 22×15 செ.மீ.; vi. 1-0-0; vii. தென்னிந்திய இசையின் சிறப்பான விடயங்களை மிகவும் தெளிவுற விளக்குகின்றன. ஆர்மோனியம், பிடில், முதலான இசைக் கருவிகளில் எளிய முறையில் இசை கற்றுக்கொள்வதற்குத் துணையாக ஸ்வரப்படுத்தி விவரிப்பது, 'ஸ்வராவளிகள்', 'தியாகராஜ கீர்த்தனம்' ஜாவளி, தேவாரம், திருப்புகழ், காவடிச்சிந்துப் பாடல்களும் இதில் எழுத்துக்காட்டப் பட்டுள்ளன. viii. 16/1915/III.

NR44

**நஞ்சுண்ட சுப்பு சர்மா, வெ.**

1200. i. குமர கோஷ்டம் பக்தரச மஞ்சரி: முதற் பதிப்பு; ii. தொ. வே. துரைசாமி அய்யர், தொண்டாமுத்தூர்; பாகவத வர்த்திநீ அச்சுக்கூடம், சுண்டப்பாளையம்; iii. நவம்பர், 1911; iv. செ.மூ.ப. 23; v. 21×13 செ.மீ.; vi. 0-2-0; vii. முருகப்பெருமானைப் பற்றிய பல இசைப் பாடல்களின் தொகுதி. கும்மி, ஆனந்தக் களிப்பு, காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து, அக்ஷரமாலை, என்னும் வகைகளில் பாடல்கள் அமைந்துள்ளன, தெலுங்குக் கீர்த்தனமும் ஒருசில உள. viii. 537/1911/IV.

NR44

**நடராஜாசாரியார், எம்.பி., மதுரகவி, புதுவை**

1201. i. கந்தநாதர் தோத்திர விருத்தக் கீர்த்தனப்பா: முதற் பதிப்பு; ii. ச. குருசாமி செட்டியார், சூளை; மஹாலட்சுமி விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1912; iv. செ.மூ. ப. 9; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. சென்னை கந்த நாதரைப்பற்றி முப்பத்து இரண்டு அடி ஆசிரிய விருத்தம் ஒன்று முதலில் உள்ளது; பின்பு முருகனைப் பற்றிய பல இசைப் பாடல்கள் உள்ளண; நொண்டிச் சிந்து, கொம்மிப் பாடல் என்னும் தலைப்புகளுடனும் சில பாடல்கள் உள்ளன. viii. 285/1912/II.

NR44

நடேச நாட்டார், கு.

1202. **i.** முருகக் கடவுள் கீர்த்தனங்கள் : முதற் பதிப்பு ; **ii**. கு. நடேசநாட்டார் ; சுந்தர விநாயகர் அச்சுக்கூடம், வேலூர் ; **iii.** பிப்ரவரி, 1913 ; **iv.** செ.மூ.ப. 11; **v.** 21×14 செ.மீ.; **vi.**..........; **vii.** திருத்தணிகை முருகப் பெருமானைப் பற்றிய இசைப்பாடலின் தொகுதி. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புகள் உள்ளன. இந்நூல் இறுதியில் 'நவக்கிரகப் பதிகம்', என்பது ஒன்றுள்ளது. சூரியன், சந்திரன் முதலிய ஒன்பது கோள்களைப் போற்றிப் பாடுவது. **viii.** 492/1913/I.

**NR44**

நடேசப் பிள்ளை, ஆர்.எஸ்

1203. **i.** இந்துஸ்தான் பஜனை : முதற் பதிப்பு; **ii.** ஆர்.வி.ஜானகிராம் அண்டு கம்பெனி, மதுரை; கிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, திருமங்கலம் ; **iii.** மே, 1914 ; **iv.** செ.மூ.ப. 32; **v.** 21×14 செ.மீ.; **vi.** 0–2–0 ; **vii.** பாலசுப்பிரமணியக் கடவுள்மீது சிறப்பான திருப்புகழ் பாடல்களும், பார்சி, இந்துஸ்தான் வர்ணமெட்டுகளும் அடங்கியுள்ளன. பஜனை பாடல்கள் வரிசையில் இது இரண்டாம் பகுதியாகும். ஒவ்வொரு இசைப் பாட்டுக்கும் உரிய ராக, தாளக் குறிப்புக்கள் சேர்க்கப்படுகின்றன. **viii.** 924/1914/II.

**NR44**

நரசிம்ம செட்டியார்

1204. **i.** மாரியம்மன் கீர்த்தனை : முதற் பதிப்பு ; **ii.** சிவ. நரசிம்ம செட்டியார். நீமா பிரஸ், திருப்பாதிரிப்புலியூர்; **iii.** ஆகஸ்ட், 1913 ; **iv.** செ.மூ.ப. 8 ; **v.** 15×13 செ.மீ ; **vi.** இலவசம்; **vii.** பண்ணுருட்டிக் கடுத்த புதுப்பேட்டை என்று வழங்கும் ரோஜபுரியில் எழுந்தருளியிருக்கும் மாரியம்மனைப்பற்றிய இசைப்பாட்டு ; கும்மி, சிந்து மெட்டுக்களிலும் இதில் பாடல்கள் உள்ளன. **viii.** 638/1913/III.

**NR44**

நவநீத கிருஷ்ணய்யர், என்.எஸ்

1205. **i.** திருச்செந்தூர் முருகன் புகழ் கீர்த்தனம் : முதற் பதிப்பு; **ii.** எஸ். முத்தையாபிள்ளை, மதுரை, ஸ்ரீ சாரதாம்பாள் அச்சியந்திரசாலை, மதுரை; **iii.** மே, 1912; **iv.** செ.மூ.ப. 32; **v.** 22×14 செ.மீ.; **vi.** 0–1–6 ; **vii.** திருச்செந்தூர் முருகனது புகழை இசைப் பாடல்களில் தருவது. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்கள் உள்ளன. கும்மி மெட்டிலும் திருப்புகழ் வர்ண மெட்டிலும் சில பாடல்கள் உள்ளன. **viii.** 728/1912/II.

**NR44**

1206. i. **நாகை ஸ்ரீ அழகுசிங்க சுவாமிகள் மகிமாந்தரிசனம்** (மூன்றும் பாகம்: முதற் பதிப்பு ; ii. தி. ராமையாசித்தாந்தியார், திருத்துறைப்பூண்டி, ஜோதிர் தரங்கிணி பிரஸ், திருத்துறைப்பூண்டி; iii. செப்டம்பர், 1911; iv. செ.மூ.ப. 25; v. 22×17 செ.மீ.; vi. 0–4–0 ; vii. நாகப்பட்டினத்தில் வணங்கப் பெறும் அழகு சிங்க சுவாமிகளைப் பற்றிய நூல். தமிழ் இசைப் பாட்டுகளை விடத் தெலுங்கு இசைப் பாட்டுகளே இதில் அதிகமாக உள்ளன. viii. 482/1912/I.

NR44

**நாச்சாரம்மாள், மணப்பாறை**

1207. i. காத்தவராயசுவாமி பேரில் பாடிய கீர்த்தனங்கள்: முதற் பதிப்பு ; ii. ஜி. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரி. மணப்பாறை, வால்மீகி அச்சுக்கூடம், மாயவரம்; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.ப. 18; v. 23×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. மாயவரம் தாலுக்கா மேலப்பாடியின் கீழ்ப்புறமுள்ள உப்புச் சந்தையில் வழிபடுகின்ற காத்தவராய சுவாமியின் பேரில் பாடிய இசைப் பாடல்கள் கொண்டது இந்நூல். பலவகை மெட்டுகளில் பாடல்கள் அமைந்துள்ளன. viii. 19/1915/I.

NR44

1208. i. மஹாமாயிபேரில் கீர்த்தனங்கள்: முதற் பதிப்பு ; ii. நாச்சாரம்மாள், மணப்பாறை; ஸ்ரீ வித்தியா விநோதினி அச்சுக் கூடம், தஞ்சை; iii. டிசம்பர், 1914 ; iv. செ.மூ.ப. 16 ; v. 23×15 செ.மீ.; vi. 0–1–6 ; vii. மாயவரம் வட்டம் மேலப்பாதி என்னும் நகரச்சுனதலத்தின் கீழ்ப்புறமிருக்கும் உப்புச்சந்தை மஹாமாயிமீது பாடிய இசைப்பாடல்களைக் கொண்டுள்ளது. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப் பட்டுள்ளன. viii. 518/1915/I

NR44

**நாராயணசாமி பிள்ளை, மா**

1209. i. சிவராம நாமமிர்தக் கீர்த்தனைகள் (இரண்டாம் பாகம்): முதற் பதிப்பு ; ii. மா. நாராயணசாமி பிள்ளை ; பிரண்ட்ஸ் அசோஷியேசன் லிமிடெட் அச்சாபீஸ், கோயமுத்தூர் ; iii. ஜனவரி 1913 ; iv. செ.மூ.ப. 6+72 ; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. சிவபெருமான் முருகக்கடவுள் ஆகியோரைப்பற்றிய துதிப்பாட்டு. 'பொதுக்கீர்த்தனைகள்' என்னும் ஒரு தனிப் பகுதியும் உள்ளது. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்பு, மெட்டுகள் பற்றிய குறிப்புகள் அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 353/1913/I

NR44

நாராயணசாமி பிள்ளை, வே., வேலூர்

1210. i. பாலசுப்பிரமணியர் மீது பஜனை கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. கே. எ. கிருஷ்ண முதலியார், சென்னை ; ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் அச்சுக்கூடம், சென்னை; iii. பிப்ரவரி, 1914 ; iv. செ.மூ.ப. 16; v. 22 × 14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. முருகப் பெருமானைப்பற்றிய இசைப் பாடல்களின் தொகுதி. பாடல்களுக் குரிய மெட்டுகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 45/1914/II.

NR44

நாராயண தாஸர், டி.

1211. i. குரு அருள் ஸ்துதி : முதற் பதிப்பு ; ii. எஸ். சுப்பிர மண்ய பிள்ளை; நேஷனல் அச்சுக்கூடம், திருவண்ணாமலை ; iii. ஜனவரி, 1912 ; iv. செ.மூ.ப. 16+5 ; v. 17 × 11 செ. மீ.; vi. இலவசம் ; vii. பார்வதியைத் துதிக்கும் இசைப் பாட்டு. viii. 190/1912/I.

NR44

நெயினா முகம்மது லெப்பை, இ.

1212. i. முஹம்மதியா ஜாவலிக் கீர்த்தனம் : முதற் பதிப்பு ; ii. கே. சிவசூரிய நாராயண பிள்ளை, தூத்துக்குடி ; சுப்பிரமணிய விலாசம் பிரஸ், தூத்துக்குடி; iii. டிசம்பர், 1914; iv. செ.மூ.ப. 6; v. 22 × 14 செ.மீ.; vi. 0—1—0 ; vii. இஸ்லாமிய குருவான முகமது நபி அவர்களைப் புகழ்ந்து பாடப் பெற்ற பாடல்களைக் கொண்ட நூல். viii. 87/1915/I.

NR44

பட்டாணி முஹம்மது அபூபக்கர் நயினாலெப்பை, மு. க. செ., காயற் பட்டணம்.

i. நவரத்தின அலங்கார கீர்த்தனம் (தொ. எ. 796 பார்க்க); ii. செய்யது முகம்மது ஷம்சுத்தீன் சாயபு ; ஷாஹுல் ஹமீதய்யா அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஆகஸ்ட், 1912; iv. செ.மூ.ப. 3; v. 21 × 14 செ. மீ.; vi. 0—4—0 ; vii. நபி மகு மூதைப் பற்றியும் மூகைத்தினைப் பற்றியும் போற்றிப் புகழும் இசைப் பாடல்களைக் கொண்டது. viii. 454/1912/III.

NR44

பத்மாஸனி அம்மாள், கண்ணனூர்

1213. i. அகோபிலர் சரித்திரம்: முதற் பதிப்பு; ii. பத்மாஸனி அம்மாள், கண்ணனூர் ; சண்பகலெக்ஷிமி விலாஸ பிரஸ், ராஜமன்னார்குடி; iii. செப்டம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 20; v. 21 × 14 செ.மீ.; vi. 0—4—0 ; vii. அகோபிலத்தில் நரசிங்கமூர்த்தி கோயில் கொண்டெழுந்தருளியது பற்றிய புராண வரலாறு,

இசைப்பாடல்களால் ஆனது. பாடல்களுக்கு இராகதாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆதிவன் சடகோப யதீந்திர மகாதேசிகர் சுவாமியைப் பற்றியும், அவருக்குப் பின்வந்த 39 வது பட்டம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ பராங்குச யதீந்திர மகாதேசிகர் சுவாமிகளைப் பற்றியும் புகழ்ந்து பேசும் பகுதிகள் நூல் இறுதியில் உள்ளன. viii. 335/1912/IV.

NR44

1214 i. ஆதி சங்கராச்சாரியார் சரித்திரக் கும்மி : முதற் பதிப்பு ; ii. பத்மாஸனி அம்மாள், கண்ணனூர் ; சண்பக லெட்சுமி விலாச பிரஸ், ராஜமன்னார்குடி ; iii. ஆகஸ்ட், 1912 ; iv. செ.மூ.ப. 16; v. 21×14 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. ஆதிசங்கராச்சாரியாரின் தோற்றப் பெருமையையும், அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சிகளையும் முறையாகக் கூறும் ஒரு வரலாற்று நூல். பாடல்களும் விருத்தப்பாட்டுக்களும் இடையிடையே வருகின்றன. சிந்து, கண்ணி பாடல் மெட்டுகள் அமைந்த சில இசைப் பாக்களும் இடையிடையே வருகின்றன. இந்நூல் பரிதாபி ஆண்டு (1912-13) ஆடி மாதம் மூன்றும் தேதி இயற்றியது என்னும் குறிப்பு இதில் உள்ளது. சிருங்கேரி சாரதா சுவாமிகளுக்கு இதில் வாழ்த்து தெரிவிக்கப்பட்டிருக்கிறது. viii. 736/1912/III.

NR44

i. மீனாட்சியம்மன் கீர்த்தனம் (தொ.எ. 1215 பார்க்க): இரண்டாம் பதிப்பு ; ii. வீரராகவய்யங்கார் ; சண்பக லெட்சுமி விலாச பிரஸ், ராஜமன்னார்குடி ; iii. ஜூன், 1913 ; iv. செ.மூ.ப. 14 ; v. 21×14 செ.மீ.; vi. 0—4—0 ; vii. மதுரையில் கோயில் கொண்டருளும் மீனாட்சியம்மையைப் பற்றிய துதி நூல். 31 இசைப் பாடல்கள் உள்ளன. அம்மையின் மகிமை, 'விழாச் சிறப்பு', 'தரிசனச் சிறப்பு', முதலியன பற்றிச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இசைப் பாடல்களுக்கு ராகக் குறிப்பு மட்டும் உள்ளது viii. 164/1913/III.

NR44

1215 i. முரளி சரித்திரம் [மீனாட்சியம்மன் கீர்த்தனம்] : இரண்டாம் பதிப்பு ; ii. எம். கே. வீரராகவய்யங்கார், சண்பக லெட்சுமி விலாஸ பிரஸ், ராஜமன்னார்குடி ; iii. ஜூன், 1913; iv. செ.மூ.ப.16; v. 21×14 செ.மீ.; vi. 0—4—0 ; vii. கண்ணன் கோபிகைகளுடன் கூடி ஆடிய ஆடல்களின் சிறப்பை விளக்கும் இசைப்பாட்டு. இருபத்து ஒன்பது பகுதிகளாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. கண்ணன் குழலூதும் சிறப்பும், சித்தரிக்கப்பட்டிருக்கிறது. viii. 164/1913/III.

NR44

பழனி குமாரு தாசர்

1216. i. பாலகிருஷ்ணன் பேரில் இந்துஸ்தான் பஜனை: முதற் பதிப்பு; ii. மு. கிருஷ்ண பிள்ளை, மதுரை; மஹமதியன் பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1913; iv. செ.மூ.ப. 48; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0; vii. கண்ணன் இளமைப் பருவத்தைத் துதிக்கும் இசைப்பாடல் களின் தொகுதி. பஜனைகளில் பாடுவதற்காக அமைந்தது. ஐம்பது பாடல்கள் உள்ளன. இதன் பின்னர் இந்துப் பாடல்கள் சிலவும் உள்ளன. இதன் இறுதியில் பார்ஸி, இந்துஸ்தான், நடன பதங்களும், மேலும் அரங்கசாமி நாயுடு, பாலாமணி அம்மாள், முதலியோர் புதுமையாகப் பாடி, ஆடி வருகிற பதங் களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 296/1913/IV.

NR44

1217. i. பஜனை உற்சவ முறை: இரண்டாம் பதிப்பு; ii. வாணீ பூஷணம் பிரஸ், சென்னை; iii. 1915; iv. செ.மூ.ப. 64; v. 18×13 செ.மீ.; vi. 0–3–0; vii. பற்பல சிவ துதிப் பாடல்களின் தொகுப்பு நூல். தேவாரம், திருப்புகழ், தாயு மானவர் பாடல், திருவருட்பா, முதலிய நூல்களிலிருந்தும் ஒரு சில பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 674/1912/IV.

NR44

பாலாம்பாள் அம்மாள், எஸ்.

1218. i. ஜயதேவ பத்மாவதி சரித்திர கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. எஸ். பாலாம்பாள் அம்மாள்; சுப்ராம் பிரதர்ஸ், பாலக்காடு; iii. பிப்ரவரி, 1911; iv. செ.மூ.ப. 4+53; v. 22×14 செ.மீ.; vi. 0—4—0; vii. ஜெகநாதபுரியில் வாழ்ந்தவர் ஜெயதேவர், இவர் சிறந்த பக்தர். இவர் பத்மாவதி என்னும் மங்கையை மணந்து, தூய வாழ்வு வாழ்ந்து, உலகிற்கு எடுத்துக்காட்டாக விளங்கினார். இவரது வாழ்க்கையில் நிகழ்ந்த பல சிறந்த நிகழ்ச்சிகள் இதில் இடம் பெற்றுள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்கள் தரப்பட்டிருக்கின்றன. அரி கதை சொல் வோர்க்கு இது மிகவும் பயன்படும். viii. 555/1911/I.

NR44

புருஷோத்தம நாயக்கர், பு.

1219. i. செவ்வேள் கோட்டம் சுப்பிரமணியர் கீர்த்தனை: ii. க. மாணிக்க முதலியார் & செவ்வேள் கோட்டம் சிவனடி யார் திருக்கூட்டம்; தொண்டை மண்டலம் அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. செ.மூ.ப. 12; v. 18×11 செ.மீ.; vi. 0—0—6; vii. சென்னை சூளையின் கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஆறுமுகனைத் துதிக்கும் இசைப்

பாடல்கள் கொண்ட நூல். சென்னை, சூளை சாமிப் பிள்ளை வீதியில் உள்ள செவ்வேள் கோட்டச் சிவனடியார் திருக்கூட்டத்தாரின் வேண்டுகோளினால் செய்யப் பெற்றது. viii. 1084/1915/III.

NR44

**பெத்தண்ண செட்டியார், பூ.**

1220. i. மளனிக் காளியம்மன் தோத்திர பஞ்சரி: முதற் பதிப்பு; ii. பூ. பெத்தண்ண செட்டியார், ரெட்டிப்புதூர், சேலம் ஜில்லா ஷண்முக விலாஸ அச்சியந்திர சாலை, சேலம்; iii. ஜூன், 1914; iv. செ.மூ.ப. 9; v. 21×14 செ.மீ.; vi........; vii. சேலம் மாவட்டத்தில் மளனி என்னும் இடத்தில் விளங்கும் காளியம்மனைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்கள். வ.சுப்பிரமணி பிள்ளை, இரத்தினசலம் பிள்ளை, முதலியோர் இயற்றிய சாற்றுக் கவிகளும், இடம் பெற்றுள்ளன. கும்மி, சிந்து, நொண்டிச் சிந்து முறையில் அமைந்த பாடல்களும் இதில் உள்ளன. இந்துஸ்தானி வர்ணமெட்டு முறையில் அமைந்த இசைப்பாட்டுகளும் உள்ளன. viii. 163/1914/III.

NR44

**பெரி, பி. இ.**

1221. i. கீதங்களும் கீர்த்தனங்களும்: ii. பி. இ. பெரி; கோமதி விலாசம் பிரஸ், தென்காசி; iii. 1915; iv. செ.மூ.எ. 55: v. 13×11 செ.மீ.; vi..........; vii. இயேசு பெருமானின் புகழினைத் துதித்து அவரது அருளை வேண்டும் துதிப் பாடல்களின் தொகுதி, 55 பாடல்கள் இதன் கண் உள. இசைப் பாடல்களின் வாயிலாக ஒருவருக்கொருவர் கற்பித்து, அறவுரைகள் கூறிக் கொண்டு இதயத்திலே இறைவனை வணங்குவதற்குப் பயன்படு முறையில் அமைந்தனவாம் இப்பாடல்கள். viii. 275/1915/IV.

NR44

**பேச்சிமுத்துப் பிள்ளை, சி., பாளையங்கோட்டை**

1222. i. நூதன முறை சங்கீத கதா மஞ்சரி—முதல் பாகம்: முதல் பதிப்பு; ii. ட. பி. எஸ். அருணாசலம் பிள்ளை, பாளையங்கோட்டை; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1911; iv. உ.ப.+செ.மூ.ப. 62; v. 22×14 செ.மீ.; vi. 0—5—0; vii. சிறுவர் வகுப்புகளில் பாடத்தக்க குழந்தைப் பாடல்களைக் கொண்டது. உரை நடையில் கதையைத் தந்து பின் பாடலும் தரப்பட்டிருக்கிறது. சிறுவர் வகுப்பிற்குப் பதினான்கும், முதல் வகுப்பிற்குப் பதினான்குமாக இருபத்தெட்டுக் கதைகள் இதில் உள்ளன. பாடல்களுக்கு இராகக் குறிப்பும் கொடுக்கப் பட்டுள்ளது. viii. 482/1911/I.

NR44

**பொன்னுசாமி செட்டியார், வா. மு., கோயமுத்தூர்**

1223. i. கன்னிகா பரமேஸ்வரி பஜனாமிர்த கீதாநந்தம்: முதற் பதிப்பு; ii. வ. மு. பொன்னுசாமி செட்டியார், கோயமுத்தூர் பிரண்ட்ஸ் அஸோஸியேஷன் லிமிடெட் அச்சாபீஸ், கோயமுத்தூர்; iii. மார்ச், 1913; iv. செ. மூ. ப. 2+12; v. 21×15 செ. மீ.; vi. இலவசம்; vii. கன்னிகாபரமேஸ்வரி மீது பாடப்பெற்ற துதிப்பாடல்களின் தொகுதி. ஒவ்வொரு பாட்டிற்கும் மெட்டும், இராக, தாளக் குறிப்புக்களும் உள்ளன. உடுமலை பூ. ப. முத்துச்சாமிக் கவிராயர், தூத்துக்குடி, தா. சங்கரதாஸ் சுவாமிகள் இருவரும் இந்நூற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 815/1913/I.

**NR44**

**மாம்பழ கவிச்சிங்க நாவலர்**

1224. i. கீதாமிர்த சாரம்: ii. வடிவேலு முதலியார் & சிதம்பர முதலி; வித்யா ரத்நாகர அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. செ. மூ. ப. 60; v. 22×14 செ. மீ.; vi. 0–0–9; vii. இதில் பழனி மாமலையிலெழுந்தருளிய சிவசுப்பிரமணியக் கடவுள் பேரில் பற்பல பசனைக்குரிய இசைப்பாடல்களும், மதுராபுரி மீனாட்சியம்மன் பேரிற் சில பசனைப்பாடல்களும், ஜாவளிகளும் அடங்கியிருக்கின்றன. ஒவ்வொரு பாட்டிற்கும் உரிய இராக தாளக் குறிப்புக்களும் தரப்பட்டுள்ளன. viii. 585/1915/IV.

**NR44**

**மீனாக்ஷியம்மாள், பைங்காநாடு**

1225. i. மஹாபாரத விராட பருவக் கீர்த்தனைகள்: முதற் பதிப்பு; ii. எஸ். எக்ஞயசுவாமி சாஸ்திரி, மன்னார்குடி: பாரதி பிரஸ், மன்னார்குடி; iii. மார்ச், 1914; iv. செ.மூ.ப. 2+30; v. 21×14 செ. மீ. vi. 0–2–0; vii. இந்நாலின் ஆசிரியை எழுதப் படிக்கத் தெரியாதவராக இருந்தபோதிலும், பக்தி மேலீட்டால் இப்பாடலைப் பாடியுள்ளார். விராடநகரத்தில் பாண்டவர்கள் கரவு வாழ்க்கையை மேற்கொண்டபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை விவரிப்பது. இடையிடையே சில விருத்தப் பாடல்களும் உள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக குறிப்புகளும் உண்டு. viii. 1118/1914/I.

**NR44**

**முத்தய்யப் பாவலர்**

i. மயூரகிரி முருகனைப்பற்றிய கீர்த்தனைகள் (தொ. எ. 1912 பார்க்க): முதற் பதிப்பு; ii. மு. கரு. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, ஏரிமாநகரம்; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1913; iv. செ. மூ. எ. 1+102+1;

v. 22×14 செ. மீ.; vi. 1-8-0; vii. முருகப் பெருமானைப் பற்றிய இசைப் பாடல்களின் தொகுதி. இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 310/1913/I.

NR44

**முத்துசாமி கவிராயர், உ. ஆ.**

1226. i. கீதமஞ்சரி : முதற் பதிப்பு; ii. பெண் கல்வி ஆபீஸ், சென்னை; பி. ஆர். ராம அய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஆகஸ்ட், 1914 ; iv. செ. மூ. ப. 38; v. 18×13 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. அரசியல், கல்வி, சமய தொடர்பான உண்மைகளை ஒட்டிப் பாடப் பெற்ற இசைப் பாடல்களின் சிறு தொகுப்பே இந்நூல். பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புகள், மெட்டு முதலியன குறிக்கப் பட்டுள்ளன. ஆசிரியரின் புகைப்படம் ஒன்று உள்ளது. ஹார்டிஞ்சு பிரபு, அவருடைய மனைவி, ஆகியோரின் புகைப்படமும் இடம் பெற்றுள்ளன. ஹார்டிஞ்சு துரையின் மனைவியின் சார்பில் ஆசிரியருக்கு அப்போதைய கர்னல் ஜே. ஆர். ராபர்ட்ஸ் அனுப்பிய கடித நகலொன்றும் உள்ளது. viii. 34/1914/IV.

NR44

**முத்துசுவாமியா பிள்ளை, எஸ்., பாகவதர், ஓட்டப்பிடாரம்**

1227. i. உலகம்மன் கீர்த்தனம் : முதற் பதிப்பு ; ii. டி. தெய்வ நாயகம் பிள்ளை, வேளூர் ; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. எப்ரல், 1912 ; iv. செ.மூ. ப. 16 ; v. 19×11 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. ஓட்டப்பிடாரம் என்னும் அழகிய வீரபாண்டியபுரத்தில் கோயில் கொண்டருளும் உலகம்மனைப் பற்றியது. பதினெட்டு இசைப் பாடல்கள் உள்ளன. இவற்றிற்கு இராக, தாள அமைதியும் சுட்டப்பெற்றிருக்கிறது. viii. 495/1912/II.

NR44

**முத்துராமலிங்கம் சேர்வைகார்**

1228. i. சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமிகள்பேரில் பஜனைக்கீர்த்தனை: முதற் பதிப்பு ; ii. அஷ்டலெக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை ; iii. டிசம்பர், 1913 ; iv. செ.மூ.ப. 36 ; v. 20×14 செ.மீ.; vi. 0-2-0 ; vii. பல வேறு வர்ணமெட்டுகளில் அமைந்த பசனைப் பாடல்களில் இது ஒன்று. சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமிகளின் பெருமைகளை இது பலவாறு விவரித்து உரைக்கின்றது. viii. 946/1913/IV.

NR44

முத்துவீர நாவலர், பூஞ்சோலை

1229. i. திருப்போரூர் சின்மய தேசிகன் (முருகக் கடவுள்) தோத்திரக் கீர்த்தனம் : முதற் பதிப்பு ; ii. முத்துவீர நாவலர், பூஞ்சோலை ; பூலோக வியாஸன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.ப. 8 ; v. 13×11 செ.மீ ; vi. இலவசம் ; vii. திருப்போரூரில் கோயில் கொண்டு விளங்கும் முருகப் பெருமானைக் குறித்துத் துதியாக உள்ள சில இசைப்பாடல்களின் தொகுப்பு. இராக, தாள விளக்கங்கள் தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 824/1912/I.

NR44

முத்தைய பிள்ளை, எஸ்.

1230. i. சுப்பிரமணியர் பஜனைக் கீர்த்தனம் (திருப்புகழ் ஹிந்துஸ்தான் பார்ஸி பதங்கள்) : முதற் பதிப்பு ; ii. எஸ். எம். சண்முகம் பிள்ளை ; மகமதியன் பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1913 ; iv. செ.மூ.ப. 24 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. திருப்பரங்கிரி சுப்பிரமணியக் கடவுள்மீது பாடப்பெற்ற இசைப் பாடல்கள். இவற்றிற்கு இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வேறு சில மெட்டுகளில் அமைந்த பாட்டுகளும் உள. இதனோடு அருணகிரிநாதர் திருப்புகழ் பாடல்கள் சிலவும், இந்துஸ்தான் பதங்கள் சிலவும் சேர்த்து கொடுக்கப்பட்டுள்ளன. viii. 321/1913/III.

NR44

முநிஸ்வாமி முதலியார், கரூர் (மொ.து.)

i. ஹரிநாம சங்கீர்த்தனம் (தொ.எ. 2567 பார்க்க) : மூன்றும் பதிப்பு ; ii. சி. குருஸ்வாமி நாயுடு, கோ. அப்பு முதலியார், வி. உலகநாத முதலியார் & எம். ராமகிருஷ்ண முதலியார் ; வைஜயந்தி பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1911 ; iv. உ.ப. 58 ; v. 22×14 செ.மீ. ; vi. ......; vii. திருமால் துதியாக உள்ள அறுபத்துஐந்து பாடல்கள் கொண்ட தொகுதி. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii 265/1911/II.

NR44

முனிசாமிப் பிள்ளை, களத்தூர்

1231. i. திருப்போரூர் முருகக் கடவுள் கீர்த்தன மஞ்சரியும் தேவாரத் திரட்டும் : முதற் பதிப்பு ; ii. முனிசாமி பிள்ளை, களத்தூர் ; ஜீவரத்ன விநாயக சம்பந்த பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1913 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. திருப்போரூர் முருகனைப் பற்றிப் பாடிய நான்கு பாடல்களைக்

கொண்டது. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வாசிரியரால் தேவாரத்தினின்றும் திரட்டப்பட்ட பாடல்களும் இதில் பின் பகுதியாக உள்ளன. இந்தத தேவாரப் பாடல்களுக்கும் இராக தாளக் குறிப்புக்களை ஆசிரியர் அமைத்துள்ளார். viii. 793/1913/I.

NR44

**ராக்கப்ப அம்பலகாரர், சி. மு., கிரணிப்பட்டி**

1232. i. அரியக்குடி ஸ்ரீநிவாசப் பெருமாள் கீர்த்தனை : முதற் பதிப்பு ; ii. சி. மு. அம்பலகாரர், தேவகோட்டை ; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை ; iii. ஜூன், 1914 ; iv. செ.மூ.ப. 14 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. தென் திருப்பதியென்கிற அரியக்குடி ஸ்ரீநிவாசப் பெருமாள் மீது புனையப்பெற்ற புதிய வர்ணமெட்டுக் கீர்த்தனை. viii. 138/1914/III.

NR44

**ராஜம் நாயுடு, ஆர். டி.**

1233. i. ராமபஜனைக் கீர்த்தனங்கள் : முதற் பதிப்பு ; ii. ஆர். டி. ராஜம் நாயுடு, ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சுக்கூடம், திருப்பாதிரிப் புலியூர் ; iii. ஜனவரி, 1912 ; iv. செ.மூ.ப. 13 ; v. 22×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. புதுவை செய்யாளிலகும் சபைக்காக எழுதப்பெற்ற இசைப் பாடல்கள். இராமர் பேரிலும் சீதாதேவி பேரிலும் இசைப்பாடல்கள் உள. இராக தாளக் குறிப்புக்கள் தரப்பட்டிருக்கின்றன. viii. 639/1912/I.

NR44

**லாம்ப் ஐயர், ஜி. எச்.**

1234. i. கருணாலயன் : முதற் பதிப்பு ; ii. எஸ். பி. ஜி. சுவிசேஷப் பிரசங்கக் கூட்டத்தார், திருநெல்வேலி ; சர்ச் மிஷன் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. பிப்ரவரி, 1912 ; iv. செ.மூ.ப. 29 ; v. 19×11 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. ஏசுநாதர் அறிவுறுத்திய 'நல்ல சமாரித்தன்' என்னும் உவமைக் கதையைப் பாடல்களில் தருவது. வெண்பா, விருத்தம் முதலிய பாடல்களும், பல இசைப்பாடல்களும் கொண்டு அமைந்தது. viii. 656/1912/I.

NR44

**வரதாசாரியார், கெ., முதலியோர்**

1235. i. ஸங்கீத சித்ராம்பரி : முதற் பதிப்பு ; ii. கே. வி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், சென்னை ; சாமராஜா அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 15+112 ; v. 18×12 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. ஹிந்து இசையைப் பிரதிபலிக்கச்

செய்வதற்குத் தந்தி வாக்கியமே ஏற்றதென்றும், ஆர்மோனிய கருவிகள் ஏதோ ஒரு வகையாகக் காட்ட முடியுமே தவிர முழு அளவில் தராது என்றும் முகவுரையில் குறிப்பிடுகின்றார். ஹிந்துஸ்தானி பார்ஸிப் பாட்டுக்களை ஆர்மோனிய இசைக் கருவியில் வாசிப்பது ஓர் அளவு கூட்டும் என்பது கொள்ளத் தகுந்தது. ஹிந்துஸ்தானி பார்ஸிப் பாட்டுகளும், 'இங்கிலீஷ் நோட்டு' முதலியவைகளும் ஆர்மோனிய இசைக் கருவிக்கு இணங்க சுர, தாளங்களுடன் இந்நூலில் அமைத்துள்ளார். அறுபத்தைந்து பாடல்கள் இதில் சுரப்படுத்தப்பட்டுள்ளன. வீணை, ஆர்மோனியம என்னும் இரண்டு இசைக் கருவிகளைப் பற்றியும், அவற்றை வாசிக்கும் முறைகள் பற்றியும் இதில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. viii. 992/1913/IV.

NR44

வாலாம்பாள், வி.எஸ்.

1236. i. பக்தர்கள் ஸ்துதி : முதற் பதிப்பு ; ii. பி. வெங்கடாசல சாஸ்திரி ; வித்யாகல்பதரு அச்சுக்கூடம், பாலக்காடு ; iii. நவம்பர், 1912 ; iv. செ.மூ.ப. 32 ; v. 14×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. இறை அடியார்களின் தொண்டுகளையும், அவர்கள் ஒழுக்கத்தையும் சிறப்பித்துக் கூறுவது. திருமாலின் புகழையும் பேசுவது. இசைப்பாடல்கள் வடிவில் அமைந்திருக்கின்றன. viii. 552/1912/IV.

NR44

வாளாடி சிவகாமு அம்மாள்

1237. i. ஸ்ரீரங்கநாதன் கீர்த்தனைகள்: ii. கே. கைலாஸமய்யர் ; ஸ்ரீ வாணி பூஷணம் அச்சுக்கூடம், iii. 1915 ; iv. செ.மூ.எ. 59; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. திருவரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் அரங்கநாதனைத் துதிக்கும் பாடல்கள்; இசைப் பாடல்களுக்கு இராகக் குறிப்புகள் உள்ளன. viii. 279/1915/III.

NR44

விசாலாட்சியம்மாள், கும்பகோணம்

1238. i. உருக்குமாங்கத சரித்திரக் கீர்த்தனை : முதற் பதிப்பு ; ii. வி. வெங்கடாசல சாஸ்திரி ; வித்தியா கல்பதரு அச்சுக்கூடம், iii. ஜூன், 1915; iv. செ.மூ.ப. 24 ; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. புராணக் கதையான உருக்குமாங்கதன் வரலாறு இசைப்பாடல் வடிவில் இந்நூலில் உள்ளது. பாடல்கள் பலவகையான இராகங்களுக்கு ஏற்றனவாய் அமைந்துள்ளன. இடையிடையே விருத்தப் பாடல்களும் விரவி வருகின்றன. viii. 823/1915/II.

NR44

1239. i. தாயுமானவர் சரித்திரக் கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. பி. முனிசாமி நாயுடு, சென்னை; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1911; iv. செ.மூ.ப. 24; v. 17×11 செ.மீ.; vi. 0-2-0; vii. திருச்சிராப்பள்ளிச் சிவபெருமானுக்குத் தாயுமானவர் என்ற பெயர் வந்த வகையை விளக்கும் வரலாறு. இறைவன் ஒரு பெண்ணின் நிலைக்கு இரங்கி, அப்பெண்ணின் தாயினது உருவம் கொண்டு சென்று, பிள்ளைப்பேறு பார்த்ததாகக் கூறும் வரலாறு. இராக குறிப்புக்கள் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. viii. 13/1911/IV.

**NR44**

**வீராசாமி நாயுடு, என்.**

1240. i. ஹரிபஜனை: முதற் பதிப்பு; ii. என். வீராசாமி நாயுடு; ஆரியன் அச்சாபீஸ், கும்பகோணம்; iii. ஆகஸ்ட், 1914; iv. செ.மூ.ப. 72; v. 20×14 செ.மீ.; vi. 0-4-0; vii. திருமாலைத் துதித்துப்பாடப்பெற்ற பக்தி பாடல்களின் தொகுப்பு. இதில் பார்ஸி ஹிந்துஸ்தான், காவடிச் சிந்து, திருப்புகழ் முதலிய வர்ண மெட்டுகளால் அமைக்கப்பெற்ற பாடல்களும், இராமாயண நொண்டிச் சிந்தும், ஆசாரச் சீர்திருத்தக் கும்மியும், பஞ்ச ரத்னக் காரிகையும், தசாவதாரப் பிராபவமும் அடங்கியிருக்கின்றன. கீர்த்தனைப் பாடல்களுக்கு வர்ணமெட்டு பற்றிய குறிப்பும் தரப்பட்டிருக்கிறது. viii. 537/1914/III.

**NR44**

**வெங்கிடதாஸ், எஸ்.**

i. குமரக் கடவுள் மீது கீர்த்தனங்கள்: (தொ.எ. 1834 பார்க்க); ii. எஸ். கிருஷ்ணசாமி, ஸ்ரீகிருஷ்ண விலாஸம் பிரஸ், திருமங்கலம்; iii. 1915; iv. செ.மூ.ப. (7-16) 10; v. 22×14 செ.மீ.; vi. ......; vii. இவை குமரக் கடவுளின் புகழினை வியந்து பேசுபவை. இசைப் பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. 'காவடிச்சிந்து' மெட்டிலும் ஒரு பாடல் உளது. ராம. சு அரசப்பிள்ளை, சு. ப. மாணிக்கப் பிள்ளை, உமர்ப்புலவர் என்போர், சாத்துக் கவிகள் பாடியுள்ளனர். viii. 424/1915/III.

**NR44**

**வேலாயுத பண்டிதர், இ. (தொ. து.)**

1241. i. திருத்தணிகைத் தியானக் கீர்த்தனங்கள்: முதற் பதிப்பு; ii. இ. தொ. து. வேலாயுத பண்டிதர், பூலோக வியாசன் பிரஸ், சென்னை; iii. ஜூன், 1912; iv. செ.மூ.ப. 4+20; v. 21×14 செ.மீ.; vi. 0-2-0; vii. திருத்தணிகைச் சுப்பிரமணியர் தியானக் கீர்த்தனம் என்பது இதன் முழுப் பெயர். முருகப் பெருமான் புகழைப் பல படியாக ஆசிரியர் இசைப்

பாடல்களுள் புகழ்ந்துள்ளார். இக் கவிதைகளுக்கு இராக தாளக் குறிப்புக்களும் உள்ளன. சிலசமயக் கீர்த்தனங்களின் தலைப்பிலும் நால் இறுதியில் சில பாடல்கள் தரப்பட்டுள்ளன. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் முதலிய பலர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். viii. 142/1912/III.

NR44

**ஜானகி அம்மாள்**

1242. i. கனகவல்லி திருக் கல்யாண கீர்த்தனம் : முதற் பதிப்பு; ii. ஜானகியம்மாள், வாணி நிகேதன் அச்சியந்திரசாலை, வேலூர் ; iii. ஜூன், 1912 ; iv. செ.மூ.ப. 44 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. திரு எவ்வுளூரில் வீரராகவ சுவாமிக்கும் கனகவல்லித் தாயாருக்கும் நடந்த திருக்கல்யாண வரலாற்றைச் சிறப்பித்துப் பாடுவது. நாற்பத்து நான்கு கீர்த்தனைப் பாக்களில் இவ் வரலாறு அமைந்துள்ளது. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 111/1912/III.

NR44

**ஸ்ரீநிவாஸ அய்யங்கார், வி.**

1243. i. நாத வித்யா மர்மம் : முதற் பதிப்பு; ii. வி. சீனுவாச அய்யங்கார், பெருங்குளம், ஸ்ரீ கான வித்யா பிரஸ், பெருங்குளம் ; iii. மார்ச், 1915 ; iv. உ.ப. 40 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. சிலர் இசைக் கருவிகளில் (ஆர்மோனியம், பிடில்) பயிற்சி செய்கையில் தெரிந்து கொள்ள வேண்டிய நுட்பங்களை அறியாமல், அதாவது காகங்களுக்காக வேண்டும் அனுஸ்வரங்களன்னியில் அதற்கேற்பட்ட சுத்த ஸ்வரங்களை மட்டும் பயிற்சி செய்வதால், இராகங்களும் கீர்த்தனங்களும், ஜீவனில்லாமல் வாசிப்பதுபோல் ஆசிரியர்க்குப் புலப்பட, அக்குறைகளை நிவர்த்தி செய்யும் பொருட்டு இந்நூலை இயற்றியுள்ளார். viii. 1123/1915/I.

NR44

**ஸ்ரீநிவாஸ அய்யங்கார், வா., பெருங்குளம்**

1244. i. ஸங்கீதானுபவ ஸார ஸங்கிரகம்—இரண்டாம் பாகம் : இரண்டாம் பதிப்பு ; ii. வா. ஸ்ரீனிவாச அய்யங்கார், கார்டியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1913 ; iv. உ.ப.+செ.மூ.ப. 17+254 ; v. 21×14 செ.மீ. ; vi. 3–8–0 ; vii. இசையில் 'சுருதி' என்றும், 'லயம்' என்றும் இரண்டு கூறுபாடு உண்டு. முதற் பாகத்தில் சுருதியை விளக்கிய இந்த ஆசிரியர் இந்தப் பகுதியில் லயம் என்னும் தாளங்களைப் பற்றி விவரிக்கிறார். தாளத்தின் வகு, திருதம் பிரித்தும் துரித காலம், கமகம்

இவைகளுக்கு அடையாளங்களுடன் பதிப்பிக்கப்பட்டது. தியாகய்யர் கீர்த்தனைகளில் பதினெட்டும், சுப்பிரமணிய அய்யர் கீர்த்தனைகளில் ஏழும் ஆக 25 இசைப் பாடல்கள் இதில் சுரப்படுத்திக் காட்டப்பட்டிருக்கின்றன. viii. 566/1913/I.

NR44

**ஸ்ரீநிவாசலு நாயுடு, க., துறைசைமாநகர்**

1245. i. கோவிந்த நாமகீர்த்தனம் ; ii. நாகலிங்கம் பிள்ளை, துறைசைமாநகர் ; ஸ்ரீ அம்பிகை விலாச பிரஸ், குளித்தலை ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 28 ; v. 22×14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. விஷ்ணு பேரில் பாடப் பெற்ற பக்தி பாமாலை. இத்துடன் ஆன்றோர்களால் செய்யப்பட்ட பல இசைப்பாடல்களும் சேர்க்கப் பட்டுள்ளன. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஒருசில பாடல்கள், நாமாவளியாகவும், வர்ணமெட்டுகளாகவும் அமைந்துள்ளன. viii. 659/1915/IV.

NR44

## 784.0954 வாய்ப்பாட்டு : பதங்கள்

**அவரைக்கோட்டை சுவாமிகள்**

1246. i. தியாகராஜ பதங்கள் (சங்கர மௌன சுவாமிகள் கீர்த்தனை, அவரையானந்தச் சிந்து) : முதற் பதிப்பு ; ii. டி. தியாகராஜன் நீலலோசினி பிராஞ்சு அச்சுக்கூடம், திருவாரூர் ; iii. எப்ரல், 1913 ; iv. செ.மூ.ப. 7 ; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3 ; vii. திருவாரூரில் கோயில் கொண்டருளும் தியாகராஜ சுவாமிகளைப் பற்றிய துதி. எட்டுப் பதங்கள் இதில் உள்ளன. இவற்றிற்கு இராக தாளக் குறிப்பும் உண்டு. viii. 250/1913/II.

NR44

**காதர் மொஹிதீன் ராவுத்தர், ஆழ்வார்தோப்பு**

1247. i. சக்ராத்பதம் : முதற் பதிப்பு ; ii. காதர் மொஹுத்தீன் ராவுத்தர், ஆழ்வார்தோப்பு ; விநாயக சுந்தர விலாச அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. ஜூலை, 1911 ; iv. செ.மூ.ப. 7 ; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3 ; vii. முகம்மது நபியைப் பற்றி எழுதப்பட்ட துதிப் பாடல்கள். viii. 282/1911/III.

NR44

**நாகூர் கோபால நாயகர், நாகையம்பதி**

1248. i. நாகூர் ஷாகுல் ஹமீது ஆண்டவரவர்களின் காரணப் பதங்கள் : முதற் பதிப்பு ; ii. நாகூர் கோபால நாயகர், நீலலோசனி அச்சுக்கூடம், நாகப்பட்டினம் ; iii. எப்ரல், 1915 ;

iv. செ. மூ. ப. 8 ; v. 14×11 செ. மீ. ; vi. 0–0–3 ; vii. நாகூரில் வாழ்ந்து அவ்விடத்தே சமாதியும் அடைந்த முகமதிய ஞானியான ஷாகுல் ஹமீது ஆண்டவரவர்களின் பெருமையையும், புகழினையும் விளக்கும் துதிப்பாடல்கள் கொண்டது. viii. 518/1915/II.

**NR44**

**பகீர்முகம்மது புலவர், திருப்பாதிரிப்புலியூர்**

1249. i. தொழுகை முதலிய பதங்கள் : முதற் பதிப்பு ; ii. பகீர் முகம்மது புலவர், திருப்பாதிரிப்புலியூர் ; ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், திருப்பாதிரிப்புலியூர் ; iii. நவம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 76 ; v. 20×14 செ.மீ.; vi. 0-4–0 ; vii. இஸ்லாம் சமய உண்மை பற்றிய இசைப் பாடல்களின் தொகுதி. இதற்குக் கோபாலசாமி நாயுடு என்பார் இராகத் தாளங்கள் அமைத்துள்ளார். viii. 764/1911/IV.

**NR44**

**முத்துசுப்பையர், பு. வ., புனல்வேலி**

1250. i. தமிழ் பத ஸாகித்தியங்கள்: ii. பு. வ. இராமஸ்வாமி பாரதி & எல். முத்தையா பாகவதர் ; நூருல் இஸ்லாம் பிரஸ் ஆபீஸ், திருநெல்வேலி ; iii. 1911 ; iv. செ.மூ.ப. 2+53 ; v. 22×14 செ. மீ.; vi. ........; vii. இந் நூலாசிரியர் வடமொழி, தென்மொழி புலமை மிக்க மரபைச் சார்ந்தவர். தமிழில் ஜானகி பரிணய நாடகம், சுபத்திரா பரிணயம் என்னும் நூல்களையும் இயற்றியிருக்கிறார். இவர் பாடிய பதங்களில் நாற்பத்தைந்தை முதற் பாகமாக இந்நூலில் அமைத்துள்ளார். பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. துதிப்பாடல்களோடு, இன்பச்சுவை பொருந்திய பாடல்களும் பல உள்ளன. viii. 325/1911/I.

**NR44**

**ரெத்தினசாமி பிள்ளை, எம்., திருவாரூர்**

1251. i. திருவாரூர் பழநியாண்டவர் பேரில் பதங்கள்: முதற் பதிப்பு; ii. ஆர். பொன்னய்யா பண்டாரம்; நீலலோசனி பிராஞ்ச் பிரஸ், திருவாரூர்; iii. பிப்ரவரி, 1915; iv. செ.மூ.ப. 16; v. 16×11 செ.மீ.; vi. 0–1–0; vii. திருவாரூர் வடக்கு ரத வீதியில் எழுந்தருளி இருக்கும் கலியுக வரதராகிய பழனி யாண்டவரைப் போற்றிப் பாடப்பெற்றவை. விஜயபுரம் வி.எஸ். பாப்பு தாசர் முதலியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். கும்மிப் பாடல்களும் பிற்பகுதியில் இடம்பெற்றுள்ளன. viii. 644/1915/I.

**NR44**

i. **ஹிந்துஸ்தான் பார்ஸி பதங்கள்** (தொ.எ. 1230 பார்க்க): முதற் பதிப்பு; ii. எஸ்.எம். சண்முகம் பிள்ளை; மகமதியன் பிரஸ், மதுரை; iii. ஜூலை, 1913; iv. செ.மூ.ப. 60; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. கே.எம். தர்மலிங்கம் பிள்ளை, ஜி.என். சாமிநாத முதலியார், டி.ஜி. ஜெகந்நாத நாயுடு, மனமோகன எம். அரங்கசாமி நாயுடு, பார்ஸி ஜெகந் மோகன், டி.வி. குப்புசாமி முதலியார், கனமோகன டி.எ. இராஜாமணி அம்மாள், அபிநயா அலங்கிருத வி. ஜானகி அம்மாள், இவர்கள் பாடி வருகின்ற பார்ஸி பதங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஹிந்துஸ்தானி மொழியிலேயே உள்ளவை இந்தப் பதங்கள். viii. 321/1913/III.

**NR44**

## 784.0954 வாய்ப்பாட்டு: வழி நடைப்பதம்

**அண்ணாமலை ரெட்டியார், சென்னிகுளம்**

i. சமுகுமலை சுப்பிரமணியர் வழிநடைப் பதம் (தொ.எ. 1625 பார்க்க); ii. க.சு. கதிர்வேல் நாடார் & கே. எ. கிருஷ்ணசாமி முதலியார், சென்னை; விஜய விகடன் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1914; iv. செ.மூ.ப. 5; v. 23×15 செ.மீ; vi. 0–3–0: vii. கழுகுமலைக் கந்தனைக் காணச் சென்ற ஒருவன் தனது காதலிக்கு வழியின் காட்சிகளும், கோயில் சிறப்புக்களும் காட்டியதாகப் பாடப்பட்டுள்ளது. viii. 469/1914/I.

**NR44**

1252. i. தளவா குளம் மாரி அம்மன் வழிநடை பதம், கும்மி முதலியன; முதற் பதிப்பு; ii. பி.என். கன்னையா நாயுடு & பி.ஆர். ராஜமாணிக்க முதலியார்; மநோன்மணி நர்த்தனம் அச்சுக்கூடம், திருவண்ணாமலை; iii. செப்டம்பர், 1913; iv. செ.மூ.ப. 6; v. 22×14 செ.மீ.; vi. 0–0–6; vii. திருவண்ணாமலை அடுத்த தளவா குளம் மாரியம்மனைப் பற்றிய துதி வழிநடைப் பதம். ஒருவன் தன் காதலியோடு சென்று அம்மையை வழிபட்ட நிகழ்ச்சியை விவரிக்கிறது. இம்மாரியம்மையைப் பற்றிய கும்மி, துதிபாடல், பார்ஸி மெட்டுப் பாடல் ஆகியவை இதிலுள்ளன. viii. 252/1913/VI.

**NR44**

**இருவேங்கட பிள்ளை, மாத்தூர் கிராமம்**

1253. i. பெரியபாளையம் மாரியம்மன் வழி நடைப் பதம்; ii. விஜய விகடன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1913; iv. செ.மூ.ப. 10+2; v. 22×14 செ.மீ.; vi.....; vii. பெரியபாளையம் மகமாரியம்மன் விழாவிற்குச் சென்றுவந்ததைப் பற்றிக் கூறுவது இந்நூல். ஒரு காதலன் தனது காதலிக்கு

வழிநடைக் காட்சிகளையும், காளிதேவியின் விழாச் சிறப்புக்களையும் எடுத்துரைப்பதாக அமைந்தது. டெரியபாளையம் அம்மன் மீது நொண்டிச் சிந்து ஒன்று ஈற்றில் உள்ளது; viii. 470/1913/IV.

NR44

**முத்துதாசர், எஸ். வி.**

1254. i. அங்காளம்மன் கோவில் உற்சவ அலங்கார வழி நடைப்பதம் : முதற் பதிப்பு ; ii. டி. எம். கதிர்வேலு பிள்ளை; ரா. விவேகாநந்தர் பிரஸ், மதராஸ் ; iii. மே, 1912 ; iv. செ. மூ. ப. 23 ; v. 18×11 செ. மீ.; vi. 0–1–0; vii. தஞ்சை ஜில்லாவில் உள்ள கங்களாஞ்சேரி என்னும் ஊரில் கோயில் கொண்டருளும் அங்காளம்மன் கோயிற் திருவிழா பற்றிய சிறப்பை விவரிப்பது. கணவனும் மனைவியுமாகத் தஞ்சை நகரத்திலிருந்து பயணப்பட்டு, தஞ்சை நகரச் சிறப்பைச் சுருக்கமாய்ச் மனைவிக்குச் சொல்லி, அங்கிருந்து திருவாரூர் புகை வண்டி நிலையம் வரை ஆங்காங்குள்ள புகைவண்டி நிலையங்களைக் காட்டி, விஜயபுரம், செந்தாமங்கலம், வண்டாம்பாலை, மொம்மா நத்தம், கங்களாஞ்சேரி அங்காளம்மன் கோயில் வரையுள்ள சிறப்புக்களை விவரித்துரைக்கிறார். இதனை 'வழி நடையலங்காரம்' என்றும் ஆசிரியர் கூறுகிறார். viii. 940/1912/II.

NR44

**ரங்கசாமி பிள்ளை, டி. பி., திருவாரூர்**

1255. i. திருவாரூர் பங்குனி உத்திர வழிநடைப் பதம் : முதற் பதிப்பு; ii. டி. பி. ரெங்கசாமி பிள்ளை, திருவாரூர்; எட்வர்ட் அச்சுக்கூடம், திருவாரூர்; iii. ஏப்ரல், 1911 iv. செ.மூ.ப. 1+94+1 ; v. 18×12 செ. மீ. ; vi 0–1–0; vii. திருவாரூரில் நிகழும் பங்குனிப் பெருவிழாவைப் பற்றிய இசைப பாட்டு. ஒருவன் தன் மனையாளுடன் இந்த விழாவிற்காக நாகப்பட்டினத்திலிருந்து சென்றபோது வழியில் காணும் காட்சிகளையும் விழா நிகழ்ச்சிகளையும் இவன் தன் மனைவிக்கு உரைப்பதாகப் பாடியுள்ளார்; viii. 362/1911/II.

NR44

## 784.0954 வாய்ப்பாட்டு : ஜாவளி.

**நாராயணசாமி பிள்ளை, வேலூர்**

1256. i. பார்வதி சரஸ மோஹன ஜாவளி—(முதற் பாகம் முதல் பத்தாம் பாகம் வரையில் ): முதற் பதிப்பு ; ii. ரங்கைய செட்டியார் , சென்னை ; ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்ம விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1911 ; iv. செ.மூ.ப. 160;

v. 21×14 செ.மீ. ; vi. 1-4-0 ; vii. வெங்கடாசல முதலியாரது ஆலந்தூர் ஒரிஜனல் இந்து டிராமடிக் கம்பெனியில் மனமோகன ரஞ்சித அரங்கசாமி நாயுடு, தி. முருகேச நாயக்கர், இராவண கோவிந்தசாமி நாயுடு, பி. எஸ். இராமச்சந்திரம் பிள்ளை, சபா மோஹன சி. வடிவேலு முதலியார், இவர்களால் பாடி வருகின்ற ஜாவளிப் பாட்டுக்களின் தொகுதி. பத்துப் பகுதிகளாக அச்சிடப்பெற்றிருக்கின்றன. பாடல்களுக்கு இராகதாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்துஸ்தானி பாடல்களும், ஆங்கில மெட்டுப் பாடல்களும் ஆங்காங்கே சில உள்ளன; viii. 500/1911/IV.

NR44

**நூறுஸ்மால் கவிராஜர், பி. பு. ச.**

1257. i. கீதரச ஜாவளிகள்: முதற் பதிப்பு ; ii. தி. சபாபதி பிள்ளை, பி. பு. ச. நூறுஸ்மால் கவிராஜர் ; ஸ்ரீ மட்டுவார் குழலாம்பாள் அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. மார்ச், 1911 ; iv. செ. மூ. ப. 16 ; v. 13×10 செ. மீ. ; vi. 0-0-3 ; vii. திருச்சிராப்பள்ளி மருங்காபுரியை ஆளும் கிருஷ்ண விஜய பூச்சேந்திர மஹாராஜ பேரில் பாடிய ஜாவளிப்பாட்டு. அகச்சுவையில் இப்பாடல்கள் அமைந்துள்ளன; viii. 111/1911/II.

NR44

**ராகவதாஸன், கு., தனியாகம்பட்டி**

1258. i. ஸ்ரீராமாநந்த ஜாவளிகள் : முதற் பதிப்பு ; ii. ஆர்.வரதைய நாயுடு ; ஸ்ரீ வரலட்சுமி விலாஸம் பிரஸ், தனியாகம்பட்டி ; iii. ஜூலை, 1914 ; iv. செ. மூ. ப. 24 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. ராமனின் புகழினைப் போற்றிப் பாடும் பக்திப் பாடல்கள். பாடல்கள் கர்நாடக இசைக்கேற்றவையாய் எழுதப்பட்டுள்ளன. சில பாடல்கள் ஹிந்துஸ்தான் இசையமைப்பிலுள்ளன. பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 563/1914/III.

NR44

## 793.72 பழமொழிகள்

**அனவரத விநாயகம் பிள்ளை, எஸ்.**

1259. i. பழமொழி அகராதி : முதற் பதிப்பு ; ii. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. அக்டோபர், 1912 ; iv. பழமொழிகள் 12,270 ; v. 21×13 செ.மீ.; vi. 2-0-0 ; vii. தமிழ்நாட்டில் வழங்கிவரும் 12,270 பழமொழிகள் அகராதி வரிசையாகத் திரட்டிக் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 531/1912/IV.

MY4

**கந்தசாமிப் பிள்ளை, எம்.ஏ., கவிராஜர்**

1260. i. **அகட விகட அமிர்த ரஞ்சினி** : முதற் பதிப்பு ; ii. மாசிலாமணி முதலி, சென்னை ; சுந்தர விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1913 ; iv. உ.ப. 77 ; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0 ; vii. ஒரு பெண்மணி தனது செல்வத்தை நல்ல வழியில் செலவிட்டதை இக்கதை விவரிக்கின்றது. வேடிக்கைப் பாடல்களும், பழமொழிகளும் அதிகமாக எடுத்தாளப் பட்டிருக்கின்றன. viii. 669/1913/IV.

MY4

1261. i. **பழமொழிகள்** : புதிய பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிடரேசர் சொஸைட்டி, சென்னை ; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1914 ; iv. உ.ப. 12 ; v. 18×11 செ. மீ.; vi. 0-0-3 ; vii. நாட்டில் பெரிதும் வழங்கும் தமிழ்ப் பழமொழிகளில் எண்ணூறு பழமொழிகள் தெரிந்தெடுத்து அகராதி அடைவில் கொடுக்கப்பட்டுள்ளன. ர, ற, ள, ழ, ஒற்றுக்களை அடுத்துவரும் பதங்களுக்குப் பொருளும் கொடுக்கப் பட்டுள்ளது. viii. 426/1914/II.

MY4

**சுப்பிரமணிய ஐயர், ஏ.**

1262. i. **அகட விகட ஞான சுந்தரம் என்னும் புதிய விசித்திர விநோத விளையாட்டுக் கவி** : முதற் பதிப்பு ; ii. என். ஆர். ராமச்சந்திர ஐயர், புதுக்குடி ; ஹயவதன விலாஸ பிரஸ், கும்பகோணம் ; iii. ஜனவரி, 1915 ; iv. உ. ப. 24 ; v. 15×12 செ.மீ.; vi. 0-1-0 ; vii. வேடிக்கைப் பாட்டுகளும் விநோதக் கவிகளும் அடங்கியுள்ளன. 'சர்க்கரையாவது, சர்க்கரை நாட்டுச் சர்க்கரை; நாடாவது நாடு, வய நாடு' என்றாற்போல இதன் பாடல் அமைப்பு உள்ளது. 'கலியாண சம்மந்தியம்மாளுடைய போஜன ஓலை சம்பரவம்' என்பது மிக வேடிக்கையானது. viii. 129/1915/II.

MY4

